உ

கடவுள் துணை.

—o—

# அரிச்சந்திரவிலாசம்.

பழவெற்காடு

இரங்கப்பிள்ளைகவிராயரவர்கள்

## பாடியது.

இஃது

திருவெண்காடு

ஆறுமுகசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு,

திருவொற்றியூர்

இருசப்பமுதலியார்-குமாரர்

பரசுராமமுதலியாரது

பரப்பிரமமுத்திராக்ஷரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

௧௮௭௦வரு.

டிசம்பர்மீ.

உ

கடவுள் துணை.

# விளம்பரம்.



இதனால்சகலமானபேர்களுக்கும் தெரிவிப்பதுயாதெனில், சென்னையைச்சார்ந்தகுளை இருங்குன்றம் இலட்சுமிநாராயணபுரத்தில் தொட்டிக்கலை குமரப்பமுதலியார்வீதியில் ௱௬-வது கதவிலக்கமுள்ளகிரகத்தில்ஸ்தாபித்திராநின்றபரப்பிரம முத்திராக்ஷரசாலையில், இதனடியில்கண்டிருக்கப்பட்ட புத்தகங்களல்லாமல், கற்றுணர்ந்தபெரியோர்களால் பிழையறப்பரிசோதித்து அச்சிடப்பட்ட மிகமேலாகிய உபயோகமுள்ள பலவிதவேதாந்தசித்தாந்த கிரந்தங்களும், வயித்தியகிரந்தங்களும், ஜோசியகிரந்தங்களும், மகம்மதமார்க்கக்கிரந்தங்களும், இன்னும் அனேகவிதமான தமிழ்ப்புத்தகங்களும், விலைசரசமாய் விற்கப்படுமாகையால், வேண்டியவர்கள் மேற்படி அச்சுக்கூடத்தலைவராகிய தி.இ. பரசுராமமுதலியாரிடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

ஸ்ரீ மகாபாரதக்கீர்த்தனை காலிகோ பவுண்டுடன் கிரயரூபாய் ௱௨
ஸ்ரீமத்கம்பராமாயணவசனம்
பார்க்கவபுராணமென்னும் விநாயகபுராணவசனம்
ஞானவாசிட்டம் மூலமும்-உரையும்
பிரமோத்தரகாண்டம் மூலமும்-உரையும்
ஸ்ரீவிஷ்ணுபுராணவசனம்
பதார்த்தகுணவயித்திய அரும்பொருளகராதி
சதுரகராதி
ஸ்ரீமகாபாகவதம் லெத்தகிராப்படத்துடன்
ஆத்மாட்சாமிர்தமென்னும் வயித்தியசாரசங்கிரகம்
அகஸ்தியர் ஏமதத்துவமென்னும்பஞ்சகாவியநிகண்டு அா
தக்ஷிணாமூர்த்தி திருமந்திரம் ௩௫ா
மேற்படியார் ஜாலத்திரட்டு ௫ா
தன்வந்திரி வயித்தியசிந்தாமணி ௩உா
மேற்படியார்கலைக்ஞானம் ௫ா
சிமிட்டுரத்தினச்சுருக்கம் ௧௯ய
அகஸ்தியர்ஆயுள்வேதம் ௩உா
மேற்படியார் பாலவாகடம் ௧ா
சிதம்பரபுராணம்
கசுசுல்நபியா
அராபிக்கதை-௧-வாலம்
நளவீமபாகசாஸ்திரம்
வீமேசுரஉள்ளமுடையான்
சூடாமணிஉள்ளமுடையான்
ஐந்துபடைப்போர்
அப்பாசுநாடகம்
பலவித்துவான்கள்பதம்
சீறாபுராணம்.



உ

கடவுள் துணை.

# அரிச்சந்திரவிலாசம்.

விநாயகர்-தோத்திரம்.

வெண்பா.

இராகம்-சங்கராபரணம்.

ஆதித்தன்றன்மரபி லண்ணலரிச்சந்திரன்சீர்
நீதிகதையைத்தமிழால் நீணிலத்தி-லோதுபுகழ்
அறபுதவிலாசமென வாவலுடன்பாடுதற்கே
கற்பகவிநாயகன்றுள் காப்பு.

சுப்பிரமணியர்தோத்திரம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வெள்ளியங்கிரிமிசை விளங்குமெய்ப்பொருள்
கள்ளவிழ்குழலுமை கலந்தபாகனு
ரெள்ளும்பரிவுட னீன்றசோதியாம்
வள்ளிபங்காளனை வணங்கிவாழ்த்துவாம்.

சிவதோத்திரம்-இ-ம்-கண்டா.

அரும்புலிக்கன்றினுக் கமுதமீய்ந்தருட்
பெருமைதங்கியபரன் பிரமன்மாதவ
ராகரவென்றுகொண் டாடுமெய்ப்பொருள்
திருநடனப்பதஞ் சிந்தைசெய்குவாம்.

விஷ்ணுதோத்திரம்-இ-ம்-தோடி.

சங்கொடுசக்காம்வாள்கோதண்டமோங்கிடு
    தழைத்தகதையுடன்பஞ்சாயுதமுந்தாங்கி
பங்கயனைப்படைத்துயிர்களனைத்துமீன்ற
    பரந்தாமன்வசுதேவன்சுதனுய்வந்த
துங்கமுகில்நிறத்தானைக்கமலமேவுந்
    துலங்கரியமார்பிற்றுளபத்தானைப்
பொங்கரவினடித்தோங்குமகிமைபூண்ட
    புகழாதிநாரணன்றுள்போற்றிவாழ்வாம்.

சரஸ்வதி தோத்திரம்-இ-ம்-மூகாரி.

சதுர்மறையோடாகம நூலனைத்தினுள்ளும்
தானாகியுலகமெங்குந் தழைத்துவாழும
புதியவெண்டாமரைமலரின் விளங்குமெய்யாள்
பொன்னலர்மாதினுக்குமரு மகளாய்வந்த
துதிபெறுநறபவளவாயருட்கண்பொன்னின்
றுலங்குகிகரத்தெழுந்த தனத்தாளோங்கு
மதிவதனத்தருங்கொடிபாரதியின்செம்பொன்
மலரடியையநுதினமும் வணங்கிவாழ்வாம்.

இ-ம்-நாட்டை-தாளம்-திரிபுடை.

புவனமோசவைபோகசுந்தா புண்யனரிச்சந்திரசரிதையை
தவறில்லாமல்விலாசமாகவே தமிழினாலுரைசெய்யவே ஆ-ஆ
பவளமால்வரைபோலுபேனியர் பரமனாருளாலுதித்திடுஞ்
சிவகணேசகுஞ்சரனார்பொற்பதந் தினமுந்துணைசெய்துகாக்கவே-ஜெ
(யஜெயா

சீலனினியதிருபாலன் திகழுஞ் செங்கோலினுயர்சிலைவீரனுகிய
கோலவரிச்சந்திரன் கதைவிலாசமாய்க்குறித்துநானுரைசெய்யவே-ஆ ஆ
சூலிகரகபாலி அன்பர்புகழ் விவளர்மறைநாவின்முடிவிலும்
ஏலவளர்மயில்விலாசன் குகன்வடிவேலனுந்துணைசெய்யவே ஜெ! ஜயா

சொல்லும்புவனங்களெங்குந்துதிசெய்யுந்தூயவரிச்சந்திரன்மா சரிதை
யை,வல்லமைத்தமிழால்விலாசமாய்வகுத்துரைத்தசதைப்பாடவே-ஆ ஆ
கல்விநிறைகவிவாணர்நாவிலுங்கருதுபுலவர்கள்பாடுந்தமிழிலும்
எல்லையெங்கினும்வளருங்கலைமகளினியபதந்துணையாகவே ஜெயஜெயா

சீர்பெரும்புகழரிச்சந்திரன்கதை திகழ்விலாசமதாய்விளங்கவே
பாரின்மிசைசெந்தமிழினவிதைபரிந்துமகிழ்வுடன்பாடவே ஆ ஆ
வார்பெறுந்தனமாதுசங்கரிவளருந்திருமகள்பலைபூனிமுதல்
பாரளந்தோராதிநாரணன்பாதமுந்துணைசெய்யவே ஜெயஜெயா

ஜம்பை.

கதிர்குலத்தில்வந்துதித்த காதலரிச்சந்திர மன்னன்
விதிமுறைநடந்தகதை விலாசமெனச்சொல்லவே ஆ ஆ
மதிபுனைந்தவேணியரன் மாமகிழ்வினாலளித்த
துதிதருமைங்கரனார்பதக்கமலமிகத்துணையே ஜெய-ஜெயா

சதிரிலகுசூரியகுலந்தன்னிலரிச்சந்திரன்கதை
அதிபெறுவிலாசமெனச்சுபம்நிலைக்கச்சொல்லவே ஆஆ
புதியமதிவதனவள்ளி போகம்நிறைவாகிமகிழ்
பதியெனுஞ்சண்முகக்குமரன் பாதமலர்த்துணையே ஜெயஜெயா

திருபர்புகழரிச்சந்திர நிபுணன்கதையைத்தமிழால்
அருமைநல்விலாசமதாய் ஆவலுடன்சொல்லவே ஆஆ
திருமகளுமலைமகளுந் திறமிகுதகலைமகளும
பருவரையிற்குறுமுனிவன் பதமலருந்துணையே ஜெயஜெயா

தருநிறைபொன்னுலகுபுகழ் தாமனரிச்சந்திரன்கதை
விருதுளவிலாசமென மேதினியிற்சொல்லவே ஆஆ
கருமுகிலின்மேனியன்பொற் கவுஸ்துவமணியுந்துலங்க
வருதிகிரிசங்கமணி மாயன்பதந்துணையே ஜெயஜெயா

தோடயம்.

இ-ம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

வீரன்கிரிமிசையுலவுமயூரன்திரிபுரையுதவுகுமாரன் ஆறுமுகமிலகுசிங்
காரன்றுணைசெய்யவே ஆஆ

சீர்பெறும்புவியாண்டவரிச்சந்திரதீரன்சரிதையைவிலாசமாகவே பாரி
ன்மிசையருந்தமிழினல்மிகப்பரிந்துமகிழ்வுடன்பாடவே - வீரன்

பலவிதமலைகளின்நிலைபெறுசிறகுகள் படவெறிசார்பதி மடமயில்மரு
விய வீரன்

பணிமணியணிதிகழ்பதுமமென்மலர்முகபவளவிதழினியநவகுறமகள்
புணர் வீரன்

பதறிக்குறலிட்டபயமத்தியிதுசிறபனைதரு பாமர்க்குசவேபழுதுநீறிசெ
கொடுஅசுரனைகிரியொடுபட வெற்றியினயில்விடுமற்புதகா-வீரன்

கிரிமிசையுலவுமயூரன்திரிபுரையுதவுகுமாரன் ஆறுமுகமிலகுசிங்காரன்
றுணைசெய்யவே ஆஆ

மங்களம்-இ-ம்-பந்துவராளி-தாளம்-ஆதி.

மங்களம்ஜெயமங்களம்-மலைமடைச்சிலையென-வளைதரு சிவசுதன்
மருவளர்மலர்நிகர்திருவடிதனக்கினும்-மங்களம்-ஜெயமங்களம்.

எங்கும்நிறைமாமறைபுகழிலகியசெஞ்சுடரொளிதிகழ் சுந்தர னி
ணையறுதவமுனிவர்கள்புகழுமகிமையினிசைபெறுமதிசுபசெயமூலவிய
நலவிங்கிதசங்காசம்புசதாசிவமிதுபொருளலதினியெதுபொருளெனவ

ளரிந்திராதியர்கள்துதிசெய்திதமுறைசந்திரசேகரனெனுமொரு பரமர்க்கும் மங்களம்

சிவகாமிநேசருக்குமங்களம்-அலைகடலினிலொரு சிலையைப்புணையென அப்பர்க்கன்றருள்புரிதருபரமெனும்-சிவகாமநேசருக்கு மங்களம், அடல்கொண்டொருசிலை யடியுண்டமுகிய வபிராமிக்குளமகிழ்வுற விசையனை யங்கைகொடத்தி அணைக்துலகதி லழுத்திதிகழ்கச் சைசையயற்புதமுடன் அகமகிழ்ந்துகண்காணவேன்றருளிய தகைமிகுந்தரண வாதிகிருபாகர-சிவகாமிநேசருக்கு மங்களம்

அத்தியுரித்தவர் சித்தங்டித்தவர் அற்புதசிற்பத வித்தகர் மத்தமொருக்கலர் வைத்ததிருச்சடை பொற்புறுமத்தரனைத்திலும் நற்றுதிபெற்றவர் அரிபவானவரும் அரியமாதவரும் அரகரசிவசிவவென வுரைசெயவளர்சிவ காமிநேசருக்கும் சித்தப்பிரகாசருக்கும் தவறில்விலாசருக்கும் தழைக்குமெய்ப்பாகருக்கும் நவமாங்கருடேசருக்கும் நான்முகவிலாசருக்கும் நாடியதிருமகள் கலைமகள்முதலாம் நங்கையர்புகழ்வளிபங்குறைமுருகர்க்கும் மங்களம்

ஜெயமங்களம்.

அவையடக்கம்-விருத்தம்.

இ-ம்-கும்பகாம்போதி.

தாரணியின்முத்தமிழ்நூலாய்ந்தோர்முன்னே
  தருவரிச்சந்திரன்கதையைத்தமியேனன்பாற்
சீர்பெறவேவிலாசமெனப்பாடலுற்ற
  திறம்விளைந்தவாறதனைதெளிந்துபார்க்கின்
பேர்பெருகுங்கடல்நீரையுண்டமேகம்
  பிறங்குபுவிமேற்பொழிந்துவெள்ளமாக்கி
ஏருறுமக்கடலிநிறைவிபபேனென்ன
  இசைத்தமிழாலிக்கதையையியம்புவேனே.

பொதுவிருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

மருவளர்கடுக்கைதும்பை மலர்நிறைந்திலங்கும்வேணிப்
புரிசடையாளுனீன்ற புனிதவாரங்கரமுநீண்ட
பருவரைமீதிலோங்கும் பாரதமெழுதுங்கோடும்
விரியொளிதிகழ்சித்தி விநாயகர்தாமவந்தாரே.

வசனம்.

அகோகேளுங்கள்சபையோர்களே அயோத்தியாபுரியாளப்பட்டதிரிச்சங்குகுமாரனாகிய சத்தியபாஷி அரிச்சந்திரமகாராசன் கீர்த்திப்பிரதாபங்களைச்சாங்கமாய்க் கல்யாணமுதல் முடிசூட்டுகின்ற வரைக்கும்விலாசமாய்ச்செய்து ஆடுதற்கு விக்கினேஸ்வரர் வருகிற விதங்காண்க.

விக்கினேஸ்வரர்-வருகிற-தரு.

இராகம்-பூரிகல்யாணி-தாளம்-ஆதி.

திச்செணுந்த-தகதத்தக-தத்தக-திச்செணுந்தக-திரித் தில்லாணு-தாம்தாம்-தகதக-தீம்திம-தகதக-தகத்தக-தத்தகதத்தகதக-ததிங்கணத தோம்-சித்திவிநாயகர்வந்தார்-சிவசத்திகிருபாகர நித்தியகல்யாணிப்பிரசிந்த புராதனசித்தமகிழ்ந்தருள் சித்திவிநாயகர்வந்தார்.

எத்திசையும்புகழ் ழவபுரியில்வள ரிக்கிரகரூபவில்லாசவிநோதர்அங்குசபாசமணிந்திடுநாத ரிகபதவமது புரிபவருளமகிழ் நிலைபெறுசுபகர நெறியுடனே திகழ் சித்திவிநாயகர்வந்தார்.

உம்பர்புகழும்வெகுதூய ருலைவில்லாசெங்கனிவாயுர் நம்பினோரிடர்தீர்க்குமு ராயர் குகன்சகாயர் நவில்சதுர்வேதவததியாயர் பம்பிநிறைந்தகுடவயிறுமற்புதமென்ன பருத்தமார்பினில்மன்னுமுப்புரிநூல்மின்ன பரமனல்லடியவரெனுந்திருக்கூட்டம் பாவிவந்தவருள மகிழ்வாநாட்ட சித்திவிநாயகர்வந்தார் சிவசத்திகிருபாகர நித்தியகல்யாணிப்பிரசித்தபுராதனமகிழ்ந்தருள் சித்திவிநாயகர்வந்தார்.

பொதுவிருத்தம்-இ-ம்-இரெகுபதி.

மட்டிலாப்புகழ்பெற்றோங்கி வளமிகுமயோத்திவாழும்
கிட்டியந்தரசொர்க்கத்திற் கிளர்திரிச்சங்குமைந்தன்
ஒட்டியவினைகடந்த வுயரிச்சந்திரன்வாசற்
கட்டியக்காரன்வந்து களமுடன்தோன்றினனே.

வசனம்.

கேளுங்கள் சபையோர்களே அயோத்தியாபுரியாளப்பட்டதிரிச்சங்குமைந்தனுகிய சத்தியபாஷி அரிச்சந்திரமகாராசன்வாசற்கட்டியக்காரன்வருகிறவிதமகாண்க.

கட்டியக்காரன்-தரு-இ-ப்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

கிறதாம்ததிக்குகக்கணக-தக்கஜெம்தரிகுதாம்-தாரிஜெம்-தாரி ஜெம்தாரிததணந்தன ததநீண திததா-திமிதிமிகி-தகக-தத்தெய் தெய்ய தாததெய்-தெய்ய-தகுஜூத்தெய்தெயய-தகுத்தத்தீணுணு திணுண-தாணுதத்திரிணுகரிணுதரிகிததில்ல ணு தில்லில்லாணு தாணுதந்தரிதிம் தாரதணுதரியக்கிரிதித்தில்லான-கிரிணுதரிணுதரி-கட்டியக்காரன்வந்தான் ராசாதனரிச்சந்திரமகாராசன்வாசற்கட்டியக்காரன்வந்தான்.

அஷ்டதிசைகளெங்கெங்குமிகுதவநிஷ்டைபுரிபவர்முதலோர்புகழ்நவஅரசக்கிணேயெதுங்கரெணவுணாசெயஅரசர்கள்சுபகரன்சமூகத்த திசயக்கட்டியக்காரன்வந்தான்.

திருவெண்ணீறதுநுதல்மேலணிந்துசிந்தையிலனுதினம் அரன்பதம்பணிந்து சிரசிறபொனனுருமாலேபுனேந்து செப்புமுலுத்தர்களேவாட்டகினேந்து சுரிகைவலக்கையினிற்றிகழப்பொதி யுறுகரமிலங்கக்கொலுவிற்பனே நற்கலேபெருகச்சைபிலுக்கியிடுக்கி கிகாக்குரலிட்டு மிரட்டியதட்டியு மெதிர்வருக்கண்டகாரஞ்சபைக்குள் சபாசெனக் கண்டவர்கின்றுபதுங்கியொதுங்கவே கலேநிறைந்தசுமுகாதிபர்புகழ்ந்திட வுலகமெங்குமிவன்பேர்சொல்லிமகிழ்ந்திட கட்டியக்காரன்வந்தான்.

அரிச்சந்திரமகாராசன்வருகிற-பொதுவிருத்தம்

இ-ம்-தோடி.

மகிமைசேர்விஸ்வாமித்திரன்வலியினலந்தரத்திற
புகழுநற்சொர்க்கமேவும் புனிதனுநதிரிச்சங்கின்ற
மகிபதியுலகமெல்லாம் வாழ்த்துநல்லயோத்திவாழும்
தருமரிச்சந்திரபூமன் றன்கொலுவினில்வந்தானே.

இராசன்வருகிற-தரு
இராகம்-தோடி-தாளம்-ஆதி.

தத்திமிதிமித்-தகதனுதகஜெனுத்கிமி தாகஜெம்தரி-தகுந்தகுந்தரி-தக்கிடகிட கரிகிடகிடதக தாகிடகிட ஜெகிடஜெஞ்தரி தாகிடஜெஞ்தரிகிடதக திரிக்தில்லானு திரிததில்லானு திரித்தில்லானு வாசவன்புகழ்திவ்விய வுல்லாசனரிச்சந்திர னிதோவந்தான்.

வீசும்புகழ்சேர்நல்ல சூரியகுலந்தன்னில்விளங்குஞ்சோதிப்பிரகாசன் மெய்யனெவர்கருநேசன் வாசவன்புகழ.

ரத்னகிரீடமின்ன கோடிசூரியரென்ன ரஞ்சிதமிகுகர்ணகுண்டலங்களுந்துன்ன முறமுஞ்செயசுருதி முழங்கும்புஜகிரிதி மொய்த்துநித்தியமிலங்க பதக்கங்கள் முத்துவடங்கள்துலங்க வெற்றிவளர்கடமார்பினில் விசயமுன்னுடன் முப்புரிநூலசைய பறறுதசவுபாக்கியமிலசைய பகைவருள்ளமசைய கைகளேப்பிசைய அன்புகசிய சகலவிசய சுகுணாசிதவாசவன்புகழ்திவ்விய.

வட்டவெண்குடைதாங்க வாளைவர்கண்டேங்க கட்டியமதுரோடசுனைநவிதம்பாட கொடியசுரர்வந்து கிலிபிடித்தேபயந்து ஒட்டியெசகரிக்கைசொலவே மந்திரிகளிஷ்டமாய்தொடர்ந்துசெலவே மட்டிலாதவல்லதுஷ்டனாவெல்ல மறையுள்ளோர்கள்நல்ல மனதகோசாலசொல்ல இஷ்டகாமிபப்பிரதிஷ்டை நிறைபப்பட்டவர்த்தனுகிம் தூதசோதிஅரசோ திவரும்பிரகபாதிபிரபலநீதி வாசவன்புகழ்திவ்விய.

மின்னுமிண்டவாள்கட்டி-துன்னலரையகட்டி
கன்னியர்கள்பகட்டி-தன்னியிசைபுகட்டி
முன்னேசாய்நரம்வீச-மன்னரிதங்களேச
நன்னயங்கள்பெருகஅரம்பையர்-நன்னிநெஞ்சமருக
சொன்னமொழிதவராசுவசீரன-கன்னல்நதனைனவழகியவீரன்
பன்னகாதிபதிதுதிசெய்யும்பேற-பகருஞ்சிலவீரதுஷ்டர்நீற
க்கலைமாற-சுருணையீற-தருமந்தீந் (வர்)

## இராசன்-போற்றிகவி-இ-ம்-மத்தியமாவதி.

அருமறைவிளங்கநன்னூலாகமவிதிகளோங்க
தருவளஞ்செழிக்கநீதிதழைக்கமும்மாரிபெய்ய
திருபர்களுலகையாளநிறைதகநற்குலங்கள்வாழத்
திருவளர்மார்பனெங்கள்செங்கண்மால்பாதம்போற்றி.

## முதல்மந்திரிபோற்றி-கவி-இ-ம்-ஆனந்தபைரவி.

மெய்யனேயுலகையாளுந்திறல்மிகுவீராபோற்றி
பொய்யொருக்காலுஞ்சொல்லாபுண்ணியவிரதாபோற்றி
செய்யநல்லயோத்திநாட்டைத்திருத்தியாண்டரசுசெய்யும்
அய்யனேபோற்றியெங்களரிச்சந்திரபூபாபோற்றி.

## இரண்டாவதுமந்திரிபோற்றி-கவி-இ-ம்-ஆனந்தபைரவி.

கதிர்குலத்தரசேபோற்றிகருதியசரயுவென்னும்
நதிவளஞ்சூழநாட்டைநடத்துநல்லரசேபோற்றி
துதிபெறுமொருகுடைக்கீழ்ச்சொல்லுமிவ்வுலகுக்கெல்லாம்
அதிபதியாகவந்தஅரிச்சந்திராபோற்றி.

## கட்டியங்கூறல்-இ-ம்-ஆனந்தபைரவி.

அலைகடலொலியென-அடர்மழைமுழக்கிலென-அரநலசதனி-லதிர்தரு முரசென-அணிமணிமுடிநிறை-அரசர்கள்துதிசெயவருமோசை-நிலைபெறுசமணியம்-நிறைதருபுவிமிசை-நெடியவாமிருபல-குடிகள்வந்தடி தொழ-நெடுமறையவர்விதம்-பரிவுடனெதிரெதிர்-மொழிபசி-யிலகிடவதிரதர்-சமரதர்பரிகரி-யெழிலுறுதிரளொலி-யிசைகொடுலாவர-விளங்கியி லெனமட-வனிதையர்சுரத-நடமாட-வலையமொட்டர்தரு-படைகளணிந்துயர்-வளர்கதிர்குலதி-பதிசுரர் பதியதி-பதியெனவளரரிச்-சந்திரமகிபதி-யிவரென-அறிவீரே.

## கட்டியக்காரன்போற்றி-கவி-இ-ம்-ஆனந்தபைரவி.

சூரவுத்தண்டமார்த்தண்டப்ரசண்டகண்ட
துஷ்டநிக்கிரகமிண்டஅயாபோற்றி

பாரிலண்டாண்டபிர்மாண்டதுர்த்தண்ட
  பகிரண்டநாதாபோற்றி
நீருண்டபுயல்கொண்டதமாமிண்டநவகண்ட
  நிருபர்கள்கண்டர்போற்றி
தாருண்டபுஜகீர்த்திதிகழரிச்சந்திரமா
  சந்திரபதிநின்றாள்போற்றி.

இராசன்-வினா-தேசவிசாரணை-இரட்டைஆசிரியவிருத்தம்-இ-ம்-தோடி.

சீர்கொண்டபுவிமீதுமாதமும்மாரியுஞ் செழிக்கவேபொழிகின்றதா
மந்திரி-விடை.
சித்தத்திலென்றுநன்னீதிவழுவாதுமழை திரட்சியாய்ப்பொழிகின்றது
இராசன்-வினா.
பேர்கொண்டமன்னவர்செலுத்திவருபகுதியும் பிரியமாயச்செல்கின்றதா
மந்திரி-விடை.
தீராதிதிரவுமதாக்கினைசெறிதப்பாதுசெலுத்திவேவருகிறார்கள்
இராசன்-வினா.
ஏர்கொண்டதேவாலயங்களபிர்மாலயமெங்குந்தழைக்கின்றதா
மந்திரி-விடை.
இறைவனேயுமதுகட்டளைப்பொருள்விளங்கல்போ லெங்குந்தழைக்கின்
இராசன்-வினா. (றது
போர்கொண்டநெற்பயிர்க்குடிகளுக்கெட்டிலொருபொன்கடமைசெல்கி
மந்திரி-விடை. (ன்றதா
பூபதியெட்டிலோர்கடமைநீர்கொள்வதால்பூமியுஞ்சுபக்ஷேமமே.

நாடகசாலைப்பெண்கள்-பொதுவிருத்தம்-இ-ம்-தோடி.

ஆடகவுலகுபோற்றுமயோத்திநாடரசுசெய்யும்
நீடகவரிச்சந்திரன்றன்னிறைகொலுவதனைநாடிச்
சூடகமலர்க்கைமின்னத்துன்னுநுண்ணிடைகள்வாய்ந்த
நாடகசாலைமாதர்நடனஞ்செய்திடவந்தாரே.

வசனம்.

அகோதெப்படியென்றால் ராசாதிராசன் ராசமார்த்தாண்டன் ராசகெம்பீரன் ரு

ருத்தண்டன் ராசபரமேஸ்வரனாகிய சத்தியபாஷி அரிச்சந்திரமகாராசன் கொலுவுக்கு நாடகசாலைப்பெணகள் வருகிற விதங்காண்க.

நாடகசாலைப்பெண்கள்வருகிற-தரு
இ-ம் -புன்னாகவராளி-தாளம் - ஆதி.

நடனமாதர்வந்தார்-இதோ-நடனமாதர்வந்தார்

நறைநிகழ்கமலசெம்மலர்முகமொளிர்தர
நிறைகுணவமிநயமியமலெகுவுசித [கூட

தடைபடாதமோகதாபவலைக்குட்சிக்கித்
தயங்கிமயங்கிமிகமுயங்கமனமுவந்து                                    (நடன)

சொல்லுங்கொககோகமெனுஞ்                    சாத்திரம்-நிறை
  துங்கப்பிரவாசமுள்ள                                   பாத்திரம்
வெல்வோமதன்பகையெம்                            மாத்திரம்-என்று
  மிரட்டுங்கூர்வாளெனும்                           நேத்திரம்
வல்லமுனிவர்கண்டுமருளச்செயுஞ்                 சரம்
  வகுத்துரைசெய்துமுகப்பாடமாக்கியக்ஷேத்     திரம்
வானவருருகுறுமேனகைமுதலியர்
  வடிவழகினைக்கண்டு-மறைதரவொளிகண்டு                          (நடன)

பெண்கள்-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

ஓங்குமிந்தப்புவனமெலாமொருகுடைக்கீழரசாட்சி
பாங்குடனேநடத்துகின்றபராக்கிரமவரோதயனே
தீங்கொழித்துநலமேவுந்திரிச்சங்குமகாராசன்
ஈங்களித்தவரிச்சந்திரவிறைவனேசரண்சரணே.

அபிநயபதம்-இ-ம்-பிலகரி-தாளம்-ஆதி.

சமயமீதேதோமோடி-சாமிபாரும்
சமராடல்கொண்டவீரா-தாரரிச்சந்திரதீரா                                    (சமய)

மன்மதன்கைவில்லம்பாலே          வாடுமெந்தன்கொங்கைமேலே
அன்புவைப்பாயொருக்காலே                    ஆசைதிருமதனாலே (சமய)

தென்றல்போலனாடத்                          திகைத்தென்மனதுவாட
என்றுமுண்மேல்மையல்நீட          இங்குஎம்மைச்சேர்ந்துகூட (சமய)

கோவையிதழ்த்தேனூறுதே                    குயிலுமிகோசீறுதே
ஆவலுமிகமீறுதே                      அதிமோகந்தலைக்கேறுதே (சமய)

இராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

தருமநன்னெறியின்மிக்கசத்தியகீர்த்தியென்னும்
பொருவில்லாமந்திரியிந்தபுனிதநன்னடனஞ்செய்த
மருமலர்க்குழலாரானமகிழ்பிரயங்களசெய்யும்
வினைசெறிமாதருக்குவெகுமதிதரச்சொல்வாயே.

வசனம்.

கேளுஞ் சத்தியகீர்த்தியாகிய மந்திரி இகோநம்முடைய ராசசமுகத்திலே நடனஞ்செய்த நாடகசாலைஸ்திரீகளுக்குச் சகலவெகுமதியும் கொடுத்தனுப்பச்சொல்லு மந்திரி.

மந்திரி-விருத்தம்-இ-ர்-தோடி.

மன்னவர்மன்னனாகவளரரிச்சந்திரன்
பொன்னிறைநகமுகந்தாக்கும்புகழ்பெறுகட்டியக்காரா
அன்னமென்னடையாரிங்கேயணிநடம்புரிந்ததாலே
சொர்ணநற்பணியும்வஸ்திரந்துலங்கவீந்தனுப்புவாயே.

வசனம்.

கேளும்பிள்ளாய் ஆசாரவாசல் கட்டியக்காரா நம்முடைய சக்கேஸ்வரனான அரிச்சந்திரமகாராசாவினுடைய சந்நிதானத்திலே இப்போது நடனஞ்செய்தாகளே நாடகசாலைப்பெண்கள் அவர்களுக்கு நவரத்தினங்களிழைத்திழைத்த ஆபரணங்களும் நல்ல பட்டுபட்டாவளியும்வெகுமதிகொடுத்தனுப்பும் பிள்ளாய்.

யாத்திரைப்பிராமணாள்-பொதுவிருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

சாத்திரவிதிகளெல்லாந்தழைத்தறம்விளங்கச்செய்யும்
சூத்திரதாரியெனத்துதியரிச்சந்திரன்வாழ்நாள்
கோதறுசேருலகமெங்குங்கொள்ளுதிர்த்தலங்கள்கண்டே
யாத்திரைசெய்யும்வேதயாகவந்தணர்வந்தாரே.

வசனம்.

ஆகோதெப்படியென்றால் மகாராசராசமார்த்தாண்ட ராசகெம்பீரசூரியவம்ச வுத்தாரகரான அரிச்சந்திரமகாராசாவானவரிவ்விதமாக அரசாட்சி செலுத்திக்கொண்டிருக்குங்காலத்திலே அனேகபுண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து அனேக திவ்யஸ்தலங்களெல்லாங்கண்டு தெரிசித்து யாத்திரை செய்து வரும்படியாகிய பிராமணாள் வருகிறவிதங்காண்க.

யாத்திரைப்பிராமணாள்வருகிற-தரு-இ-ம்-
சௌராஷ்டிரம்-தாளம்-ஆதி.

அரிநாராயணகோவிந்தஅரேஅரிநாராயணகோவிந்த

திருநாராயணபுரமேயஅரிஸ்ரீதரமாதவனேமதுசூதனா (அரி)
உபயகாவேரிமத்தியவாசா-உம்பர்கள்பரவியகருடேசா-ஓ-அரே
செயமிகுமாதவர்விசுவாசா-வேத-சிரத்தினில்நடமிடுந்திவ்வியதேசா (அரி)
பவவினைகெடவரந்தருவாயே-நாங்கள்-பண்ணும் புண்ணியத்தால்முன்வருவாயோ தவறில்லாத்திருக்கண்புரிவாயே-உந்தன்-சரணம்நினைந்திடவருவாயே (அரி)
மஞ்சாரொளிதிகழதூயா-காசிபன் - மகனெனவுதித்துவளர்சேயா
பஞ்சாயுதகரதரநேயா-சொல்லும் - பவழபுரிவாழ்செங்கனிவாயா (அரி)

இராசன்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

சதுமறையவரேபோற்றி தக்ககல்வேள்வியெல்லாம்
விதிமுறைகண்டநீதி யெய்த்தவத்தோரேபோற்றி
புதிநகர்புண்யதீர்த்த முக்கியமாய்த்தோய்ந்தங்குள்ள
பதியெலாங்கண்டுவந்த பாக்கியவந்தரேபோற்றி.

யாத்திரைப்பிராமணன்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

சூரியவம்மிசத்தில்வந்த சுபகரா ஆசீர்வாதகம்
பாரினிலறமுளர்க்கும்பார்த்திபா ஆசீர்வாதம்
தாரணியேந்தும்போற்றுஞ் சக்கிரேசா ஆசீர்வாதம்
சீருறுமரிச்சந்திரோராதிரசிலனே ஆசீர்வாதம்.

இதுவும்-பிராமணன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

சகலசௌபாக்கியசாம்பிராச்சியசித்திரஸ்து
சகம்புகழ்ச்செங்கோலோங்கத்தனதான்யசித்திரஸ்து
நகைச்சதுரங்கசேனைத்தளமெலாஞ்சித்திரஸ்து
மகிழ்மனையோககுசசுவர்ணமலமுங்குதல்சித்திரஸ்து.

ஸதாஸ்து.

இதுவும்-பிராமணன்-விருத்தம்-இ-ம்-சௌராஷ்டகம்.

மகிபதிவாழிவாழிமனுநெறிதழைக்கவந்த
சுகிர்திவாழிவாழிதுலங்குமிவ்வுலகையாளும்
சுருதியவிளங்கவோங்குந்தகுதிரிச்சங்குமைந்தா
அலமீதறம்வளர்க்குமரிச்சந்திராவாழிவாழி.

இராசன்-வசனம்.

தேவரீர்ஆசனத்திலெழுந்தருளுங்கள் சுவாமிகளே.

பிராமணன்-வசனம்.

அப்படியே யிருக்கக்கடவோம் மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

துங்கவந்தணரேயென்றன்றுதிபெறுகுலத்தோரெல்லாம்
பொங்கமாய்ச்செய்தபுண்யம்பூர்த்தியாய்ப்பலித்ததாலே
இங்குவந்தெய்தினீர்களென்சொல்வேனினைதுபுண்யம்
எங்குநின்றெங்கேவந்தீரெனக்கெடுத்துரைசெய்வீரே.

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே எங்கள்வமிசத்தார்செய்தபூஜாபலத்தினாலே உங்களை தரிசனைமனைக்குக்கிடைத்தது அதுதானென்னுடையபுண்ணியவசம்நீங்களிருக்கிறஸ்தலமெதுவோ இப்போதுஎங்கேயிருந்துஎனக்குக்காட்சிதரத்தக்கதாகவந்தீர்கள் சொல்லுங்கள்சுவாமிகளே.

பிராமணன்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

இலகவேகீர்த்திபெற்றவிறலரிச்சந்திரபூபா
தலமெதுவென்றுகேட்டாய்தழைத்தகாம்பீலிநாடு
மலமுடனிப்போதீர்த்தயாத்திரைநாடிவந்தோம்
உலகிலுன்புகழைக்கேட்டுன்னுருவர்த்தத்துக்காணவந்தோமே.

### வசனம்.

கேளுமரிச்சந்திரமகாராசனே நாங்களெப்போதும்வாசஞ்செய்வதுகாம்பீலிதேசம் தீர்த்தயாத்திரையாகவந்தோம் அநேகதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தோம் வெகுதிவ்வியதேசங்களையுங்கண்டுவந்தோம உலகிலெங்குபார்த்தாலும் உமதுகீர்த்தியைப்பிரசயாதியாய்க்கேட்டோம் ஆனதால் இதுவழியாகவந்துநாங்களும்மைக்கண்டுபோகலாமென்றுவந்தோம் மகாராசனே.

### இராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

மண்மிசையுள்ளமுக்கியமகாதலமெல்லாங்கண்டே
யெண்ணருநதிகளாடியிங்குவந்தெய்தினீரே
வண்ணநல்லதிசயங்கள்மகிழ்ச்சிகள்விளைவதாக
கண்ணினாற்கண்டிருந்தாற்கருதிநீருரைசெய்வீரோ.

### வசனம்.

கேளுங்கள்சுவாமிகளேபூமியிலேயுண்டாகிய அநேகசிவவிஷ்ணுஸ்தலங்களெல்லாங்கண்டுதெரிசித்து அங்கங்கேயுள்ளபுண்ணியதீர்த்தங்களில்ஸ்நானஞ்செய்திங்கேவந்தீர்கள்நீங்கள்வருகிறவழிகளில் அங்கங்கேகண்டஅதிசயங்களிலேவிசித்திரங்களாகியதுகளைக்கண்ணினாற்கண்டிருந்தால்நமதுமனம்செருக்குடையும்படிசொல்லுங்கள்சுவாமிகளே.

### பிராமணாள்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

கங்கைதொட்டிதற்குத்தெற்கேகன்னியாகுமரிமட்டும்
பொங்கியதீர்த்தமாடிப்புனிதநற்றலஞ்சேவித்தோம்
துங்ககன்னோசிநாட்டைத்துரைத்தனஞ்செய்யும்வேந்தன்
மங்கையைக்கண்டோமந்தவடிவழகெங்குங்காணோம்.

### வசனம்.

கேளாய்மகாராசனே வடக்கேகங்காநதிமுதல்தெற்கேகன்னியாகுமரிமட்டும் அங்கங்கேயுள்ளதிவ்வியதீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து அந்தந்ததிவ்வியஸ்தலங்களையுந்தெரிசித்துவந்தோம் அவ்விடங்களிலேயுள்ள அதிசயங்களையுங்கண்டோம் கன்னமாபுரியையாளாநின்ற இராசாவினுடையமகளைக்கண்டோம் அவளழகைப்போல்நாங்களெங்கிலுங்கண்டதில்லைமகாராசனே.

### இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

கண்டோமென்றுரைத்தீரந்தக்கன்னியாரவள்பேரென்ன
தெண்டிரைசூழ்புவிக்குட்டிருமணமில்லையோவுண்டோ
ஒண்டொடிதனக்குத்தாயாருற்றதோர்தந்தையாரோ
அண்டியெவ்வாறுகண்டீரவளழகையுஞ்சொல்வீரே.

வசனம்.

நல்லகாரியஞ்சுவாமிகளே அந்தப்பெண்ணுக்கு விவாகமுண்டோவில்லையோ அவளைப்பெற்றதாய்தந்தையாரோநீங்களெப்படிகண்டீர்கள் அவள்அழகெப்படிப்பட்டதோ தெரியச்சொல்லுங்களசுவாமிகளே.

பிராமணாள்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

காசியைவிட்டகன்றுகன்னமாபுரிக்குவந்தோம்
மாசிலக்ககனையாள்வோன்மதிதயனவன்முன்செய்த
பூசிததவத்தால்வந்தபொற்கொடிகன்னிகண்டாய்
ஆசைகூர்மன்னாங்களறிந்தமட்டுரைசெய்வோமே.

வசனம்.

கேளையாமகாராசனேகாசியைவிட்டுக்கன்னமாபுரிக்குப்போனோம்அங்கே கன்னிகாமேடையிற் கன்னியினழகைக்கண்டோம் இன்னம் விவாகமில்லைமதிதயராசன்தபசுசெய்துபெற்றான் அவளழகையெங்களுக்குத்தெரிந்தமாத்திரஞ்சொல்லுகிறோம்கேளாய்மகாராசனே.

பிராமணாள்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

சந்திரமதியாமந்தத்தையல்பேர்விளங்குபூரண
சந்திரன்கண்டுநாணித்தனக்குள்ளகிரணமெல்லாம்
நிந்தனைவருமென்றெண்ணிநிசிதனில்மறைத்துக்காட்டி
சோதிடலுற்றான்வேறேநுவலுதற்குவமையுண்டோ.

வசனம்.

கேளும்சக்கிரேஸ்வராஅந்தமதிதயராசனுடையகுமாரத்தியாகியகன்னிகைக்குச்சந்திரமதியென்றுபெயரிட்டார்களவளழகுக்குத்தகுமானதாய்ப்பொதுவாய் ஒருகோடிசூரியனையொப்பிட்டுச்சொன்னாலுமசகுமா இந்தப்பூரணச்சந்திரனென்றுபெயரிட்டுக்கொண்டு ஆகாசவீதியில்திரிகிறானே இந்தச்சந்திரன் அந்தச்சந்திரமதியினுடையமுகவிம்பத்தைக்கண்டுநாணவெட்கப்பட்டுத் தனக்குள்ளகிரணங்களைக்காட்டுகிறதும் மறைக்கிறதுமாயிராத்திரிகாலங்களிலே கண்டுங்காணாமலுந்திரிகிறான் ஆனதாலந்தச்சுந்தரத்துக்குநாங்களெதைத்தானொப்பென்றுசொல்லப்போகிறோம்மகாராசனே.

இராசன்-வசனம்.

ஆம்-ஆம் நீங்கள்சொல்லுகிற துண்மையேயாகிலும் நன்றாய்விசிதமாய்த்தெரியச்சொல்லுங்கள் சுவாமிகளே.

பிராமணாள்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

மணிமுடி தன்னைவிம்மிவளர்ந்தெழுமுலைக்கொப்பாக்
அணிதருநூலோர்சொல்வா ராதலால்மதனன்கண்டு
தணிவிலாப்புகழ்சேர்கிரீடந்தைப்பல்முன்காட்டநாணி
அனுகவேமனஞ்செல்லாமலரூபியாய்ப்பெயர்ந்திட்டானே.

வசனம்.

கேளுஞ்சக்ரேஸ்வரா அந்தச்சந்திரமதிக்குப்பொருந்திய அவயவங்களுண்டாயிருக்கிற அழகுகளிலே இன்னதுமுக்கியமென்றதைத்தான்யாங்களெடுத்துச்சொல்லப்போகிறோம் ஒன்றுக்கொன்றுகுறைச்சலுண்டா அதெல்லாமப்படியிருக்கட்டும் ஸ்திரீகளுடையஸ்தனங்களுக்கு ஒப்புச்சொல்லவேணுமேயானால் அனேக உவமானங்களுண்டு அதிலே மன்மதனுடையகிரீடத்தை முக்கியமாய்ச்சொல்லுவார்கள் ஆனதால்ஒருவருமிணையில்லாதவழகுபொருந்திய மன்மதன தான்தரித்துக்கொண்டிருக்கிறகிரீடமும் அவளுடையஸ்தனத்துக்கு நிகரல்லவென்றுவெட்கமடைந்து தானேஒளித்துக்கொண்டுஅரூபியாய்த்திரிகிறான் அப்படியிருக்கவேறேயுவமான மெப்படிச்சொல்லப்போகிறோம் சொல்லவேணுமேயானால்வேண்டியதிருக்குமதிலேதெரிந்துகொள்ளலாம் மகாராசனே.

இராசன்-வசனம்.

அப்படியாவிசிதமாய்ச்சொல்லிக்கொண்டுவாருங்கள்சுவாமிகளே.

பிராமணாள்-விருத்தம்-இ-ம்-அடாணா.

சொருகியகொண்டையழகுகண்டாலுஞ்
சுரர்முதல்முனிவர்களெல்லாம்
புரிதவமிழந்துபின்னிலைகுலைந்து
பூவைகளேயடிமையென்றுரைப்பார்
வருமிளநகையாளழகுக்குநீயே
மணமுறுகாதலனாவாய்
இருநிலமீதிலவட்குநீயல்லா
லேற்றவோர்புருஷரில்லையே.

வசனம்.

கேளுஞ்சக்கிரேஸ்வரா அந்த ரூபசௌந்தரியமுள்ள கன்னிகையான சந்திரமதியினுடைய நவரத்தினக்கொப்புக்குச் சமுத்துசுட்டி சந்திரபிறை சூரியபிறைவைத் தலங்கரித்திருக்கின்ற திவ்விய பரிமளம்நிறைந்த புட்பங்களை யடுக்கடுக்காய்க்கட்டிய சொருகுகொண்டையழகைமாத்திரங் கண்டார்களேயானால் தேவர்களும்ரிஷிகளும்தங்கள் தங்கள்தவங்களைவிட்டுமனநிலைகலங்கித்தடுமாறி அவளழகின் இன்பமே பேரின்பமாகநினைத்து அடிமை யாவார்களே யொழிய வேறில்லையாதலா லவளழகுக்கும் இராச சக்கிரேஸ்வரனான உம்முடைய வழகுக்குமேசரி அவளுக்கு நிரேபுருஷன் உமக்கு

மகளே ஸ்திரீயாகவேணுமேயல்லாது அவளுக்குத் தகுமானபுருஷ னுடமையல்லாமல் உலகத்திலேயாரிருக்கிறார்கள்மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-கண்டா.

இந்நறல்லழகுவாய்ந்த வேந்திளழயாளேயெந்தன்
சிந்தையில்நினைத்துவிம்மித் தீமெழுகாகச்செய்தி
ரந்தமின்னாசைநானே யணைவதற்குமையன்றி
தந்திரமறிவாருண்டோ தமியனுக்குரைசெய்வீரோ.

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே இப்போதுநீங்கள்சொல்லிக்கொண்டு வந்தசந்திரமதியினுடையவழகென்கிறஅக்கினியைமூட்டினீர்களதி லே என்மனமொன்றுசொல்லப்பட்ட மெழுகானதுஉருகுதே ஆனதா லப்படிப்பட்ட ஸ்திரீ எனக்குக்கிடைக்கும்படியா கியவுபாயங்களு ங்களேயேயல்லாமலார்செய்யப்போகிறார்கள் சுவாமிகளே.

பிராமணர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

துங்கமாயுலகமோங்கத் துரைத்தனஞ்செய்யுமன்ன
மங்கைமேலுனக்குக்காதல் வளர்ந்ததுநிசமேயானால்
சங்கையேன்மனமுனக்குத் தகுந்தகுமாதலாலே
எங்களாலாகவென்ற இயம்புவாயியமபுவாயே.

வசனம்.

கேளுஞ்சக்ரேஸ்வரா அந்தமதிதயன்மகளான சந்திரமதியின் பேரிலுமக்கு ஆசைகளேகதநிசமேயானால்சங்கையென்னஇருக் கிறது நீரகளேககலியாணஞ்செய்யத்தகும் உமக்கவளேசரிஎங்களா லாகவேண்டியகாரியமேதாகிலுமிருக்குமேயானால்சீக்கிரமாகத்தெ ரியச்சொல்லுமகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

சொல்லுமென்றுரைத்தீர்வேதச் சுருதிநூல்களைகண்டோரே
முல்லைமென்னகையாள்நறுமுகிற்குழல்விளங்குமேனி
வல்லியென்றுதித்தசந்திரமதிதனைப்பெற்றோன்பால்நீர்
ஒல்லையிற்சென்றெனக்கே வுயர்மணமுடிக்கச்செய்வீர்.

வசனம்.

கேளுங்கள் சுவாமிகளே நீங்களெனக்குச் சகாயப்படுகிறது மெய்யேயாகில் அந்தசந்திரமதியைப்பெற்ற மதிதயராசனிடத்திற் குப்போய் எவ்விதமாயாலது உபாயதந்திரங்களைப்பேசி எனக்கவ ளைக்கலியாணஞ்செய்துகொடுக்கும்படி கிட்டப்படுத்திக்கொண்டு வரவேண்டுமிதுதானீங்களெனக்கு செய்கிறசகாயஞ்சுவாமிகளே.

பிராமணாள்-விருத்தம்-இ-ர்-சாவேரி.

அவனியையாளவந்தவரிச்சந்திரபூபாமேளாய்
தவறிலாமதிதயன்றன்றவத்தினாலுதித்தமாதை
யெவர்களுமறியகாளையெழில்மணம்புரியச்செய்வோம்
சகலதீர்ந்திருபயிர்நாங்கள் கடிகிப்போய்வருகுவோமே.

வசனம்.

கேளுஞ்சக்ரேஸ்வரா அந்தமதிதயராசனுடைய குமாரத்தியானசந்திரமதியை நாளையதினம் உமக்ககளை மணமாலைசூட்டத்தக்கதாகச்செய்கிறோம் நீர்வியசனப்படவேண்டியதில்லை நாங்கள்சீக்கிரமாய்ப்போய்வருகிறோம் நாங்களிவ்வளவுபிரயாசைப்படாமலுமக்கு அந்தவிசுவாசந்தெரியாமற்போகிறதா யெங்களுக்குச் செலவுகொடுப்பகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

ஒப்பேதுமில்லாவேதவுசிதவந்தணரேபோற்றி
முப்போதுபஸ்நாநசந்திமுடித்துயர்ந்தோரேபோற்றி
தப்பாதுயனததில்ஞானத்தகையுடையோரேபோற்றி
எப்போதுவருவீரென்றேயெதிர்பார்த்திங்கிருப்பேனானே.

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே நீங்களெப்போதுவருவீர்களென்றுஎதிர்பார்த்துக்கொண்டிருப்பேன் திரிகாலங்களும் ஸ்நாநசெபதபமுதலாகிய யாகாதிகிருதுக்கள்?சகலவேதசாத்திரக்கிரமபண்டிதர்களாகியசுவாமிகளே போய்வாருங்கள்.

பிராமணாள்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

மகாராசராசராச மகிபதிஆசிர்வாதம்
சுகாதிபத்தியங்களோங்குந்தூயனேஆசிர்வாதம்
தகாதவர்க்கடங்காதீர்க்கசார்த்தூலஆசிர்வாதம்
விகாதமில்லாமல்நாளைவிவாகமுப்முடியுந்தானே.

வசனம்.

ஆசிர்வாதம் ஆசிர்வாதம் அனேகமங்களவுசிதகாலங்கிர்த சபாபிரசங்கதுங்கசாரங்க அகளங்க ராசராசமகாராசனே ஆசிர்வாதம்.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

தாணிமேற்புண்ணியதீர்த்தந்தன்னிலேமூழ்கியன்பால்
விரதயாத்திரைகள்செய்யும்வேதியர்போனபின்பு
சுரதவேள்கணையினாலுஞ்சுடர்மதியாலுந்தாவி
அரிதிற்பெய்தென்றலாலு யரிச்சந்திரன்மெலிகின்றானே.

வசனம்.

ஆகோதெப்படியென்றால் யாத்திரைப்பிராமணாள்சந்திரமதியினுடைய அதிரூபலாவண்ய சௌந்தரியங்களையெல்லாம் அரிச்சந்தி

ரமகாரர் சாவுக்குச்சொல்லி அவருக்கு அவளைக் கலிபாணஞ் செய்து வைக்கிறதற்காக மதிதயராசனிடத்திற்குப்போனபின்பு இங்கே அரிச்சந்திரமகாராசன் விரகவேதனையடைகிறவிதங்காண்க.

இராசன்-தரு-இ-ம் - ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

காமவிடாய்தீர்க்க வாராயோ-எந்தன்
கருத்தையுருக்குமாசை தீராயோ

தாமசஞ் செய்யாதே தாவியனல்போல்சீறிச்
சந்திரனிதோ யிப்போதே தகிக்கிறுன்பழிகாரி (காம)
மாரன்கொலுவிருக்கு மதிகோரம்-நான்
வந்தங்காயாசந்தீர்வே னிந்நேரம்
ஆரபாரக்குயில் செய்யுங் கோரங்-கண்டு
அலைகிறேன்வேறிங் கென்ன வுபசாரம்
சேரவா லாகாதோ தூரநிற்பானேனெஞ்சஞ்
சோர்ந்துகூடப் போகாதோ சூழலுகிறதென்னவஞ்சம(கா)
சந்தனமும்பனிநீருஞ் சுடுதையோ-வேத
சாத்திரர்சொன்னசொல் லதுபொய்யோ
சிந்தைநிலைக்குமென் பதுமெய்யோ-என்னைச்
சேர்ந்தணைப்பதுவுந்தன் மலர்க்கையோ
தந்திரவார்த்தைசொல்லித் தள்ளிவிடுவாயோ
சந்ததம்விரகத்தாலேதவிக்கச்செய்திடுவாயோ (காம)
மதியன்பெற்றெடுத்த இளமாதே-இட்ட
வருவாய்நீயென்னெதிரே யிப்போதே
சதிசெய்வாயோவென்னமோ தெரியாதே-மோக
தாபமுன்னைவிட்டினிப் பிரியாதே
கதிநீயல்லதுவேறே கதியேதிதுவேகாலம்
மதிமயங்கினேன்கண்ணே மருவுதற்கென்னசாலம் (காம)

இராசன்-விருத்தம்-இ-ட்-கண்டா.

மன்னியவுலகையாளு மதிதயன்பெற்றெடுத்த
கன்னிநல்லமுதேயின்பக்கரும்பினுமினியதேனே
உன்னழகதனைக்கேட்டேயுளநிலைகைத்துருகினேனே
என்னைவந்தாளாயாகிலெப்படிசகிப்பேனே.

வசனம்.

ஆசாஆகா அதிரூபவிசித்திரமுள்ள பெண்மணிகண்மணி காரூ சமே மதிதயராசன்பெற்றெடுத்த அலங்கிருதாபிம்ஷேமேஉன்னாலு

கையாத்திரைவந்தபிராமணன்சொன்னநாள்முதல் நினைந்துநினைந் துருகி விரகாக்கினியினாலே வருத்தப்படுகிறனே நீவந்தென்னைச் சேராதிருக்கத்தகுமா அரிகரிஅரிகரி.

இராசன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

தத்துறலொழிக்கச்செய்யுந்தக்கநல்லறிவின்மிக்க
சத்தியகீர்த்தியென்னுஞ்சதுருள்ளமந்திரிகேளாய்
முத்தினைப்பழிக்குமின்பமுறுவலன்னமையாள்யானை
மத்தகத்தனத்தாள்சந்திரமதிமுகமென்றுகாண்பேன்

வசனம்,

கேளுமென்புத்திக்கிசைந்த சத்தியகீர்த்தியென்னும் சதுர்த்திரியாகியமந்திரி கேட்கக்கேட்கச் சிரமானந்தமான விலாசவல்லியாகிய சந்திரமதியினுடைய அதிமோகனமான சௌந்தரியஜெகசாலமோகிதப்பிரகாசமுகவிம்பத்தைஎன்றைக்குக்காணப்போகிறேன்மந்திரி.

இராசன்-தரு-இ-ய்-சங்கராபரணம்-அடதாளம்.

என்னால்சகிக்கவசமா-யிந்தமோகம்-என்னால்சகிக்கவசமா
மின்னற்கொடியிடை அன்னநடையெனும்
கன்னிச்சந்திரமதி கட்டழகியாலே நெஞ்சம்
கலங்கிப்பிரமைகொள்ளுஞ்சித்தமுமலைந்துசபலமுந்திட்டபின் (என்)
சித்தப்பயலிந்நா வருகிறான்-என்மேல்
சீறிச்சண்டைசெய்யவே திரிகிறான்
புத்தமபுதுமலர்க ளெறிகிறான்-ஏதோ
போர்க்களம்போலமர் புரிகிறான்
சற்றும்பயமில்லாமற்கையிற்கருப்புவில்லைத்
தாவிவளைக்கிறான்சரமாரிவிளைக்கிறான
தளர்ந்திப்படி வருத்தத்தொடுசரத்தைத்தொடுத்திட்டபின் (என்)
மலர்க்கணையாலுள்ளம் வாடுதே-அந்த
மாருதமனல்போலே சாடுதே
நிலைக்குமாமனதுதன் னாடுதே-இதோ
நெருங்கிக்குயில்கள்போ ராடுதே
சொலச்சொலபிரமைகொண்டு துடிக்குதேயென்னாவி
தலைக்கேறியதிமோக தாபமீறுதேதாவி
தரிக்குந்தா-யெனக்கிப்படி-வருந்தும்மயக்கியருத்திட்டபின் (என்)

மந்திரி விருத்தம் - இ-ம்-தோடி.

மனதுக்குமனதேசாட்சியென்பதுமெய்யேவாய்ந்த
மனநிலைப்படியேசந்திர மதியைநீர்மணமேசெய்வீர்
கனமறையவர்போயந்தக் கன்னமாபுரியாள்மன்னன்
மனதறிந்துற்றசேதி வருமட்டும்பொறுத்திடீரோ

வசனம்.

கேளும்சக்ரேஸ்வரா மனதுக்குமனதேசாட்சி யென்பதுசரியே அப்படிக்கிருந்தாலு மந்தகன்னமாபுரிக்குப்போய் மதிதயமகாராசாவினுடைய மனதையறிந்து அந்தபிராமணாள் வருகிறவரைக்கும் நீர்பொறுத்துக்கொண்டிருக்கவேணும் மகாராசனே.

பொது-சொச்சகர்-இ-ம்-புன்னாகவராளி.

மந்திரிசோற்கேட்டு மயங்கியரிச்சந்திரவள்ளல்
சிந்தைதளர்ந்திருக்கவப்பால் செழுமறையோர்போனதொரு
கந்தமலர்ப்பொழில்சூழ் கன்னமாபுரிகனையாள்
அந்தமதிதயன்செய்கை யறியவுரைசெய்வேனே

வசனம்.

அகோதெப்படியென்றால் அயோத்தியாபுரியையரசாட்சிசெய்யாநின்ற இராசாதிராசனான அரிச்சந்திரமகாராசன் இவ்விதமாகச்சந்திரமதியினுடைய ரூபலாவண்ய சௌந்தரியங்களை யாத்திரைப்பிராமணாள் சொல்லக்கேட்ட நாள்முதற்கொண்டு காமாந்தகாரனாயெண்ணியெண்ணி மெலிந்துகொண்டிருக்கவப்பால்கன்னமாபுரியைத்தேடிப்போன பிராமணாள்கன்னமாபுரிக்குவருமுன்னாக அங்கேயரசாட்சி செய்யாநின்ற மதிதயமகாராசன் பட்டணத்தில் நடக்கிறவிதங்காண்க.

கட்டியக்காரன்-பொது-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

பட்டுடையிடையிற்சாத்திப் பரிவுடன்கச்சைகட்டி
வெட்டுதிக்கெங்குமோங்க விசைபெறுசெங்கோல்வேந்தன்
வட்டவாருலகையாளு மதிதயராசனென்போன்
கட்டளைப்படியேசொல்லுங் கட்டியக்காரனும்வந்தானே

வசனம்.

அகோதெப்படியென்றால் கன்னமாபுரியாளும் மதிதயமகாராசாவினுடைய வாசல்காக்குங்கட்டியக்காரன்வருகிறவிதங்காண்க.

கட்டியக்காரன்வருகிற-தரு-இ-ம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

வந்தான்கட்டியக்காரன் மாசிலாததோர்சுபகுண - மதிதயராசன்வாசல் நேரணிபெருவகைசெய (வந்தா)

செந்தாமரைமகள்வாசஞ்செய்யதிரவுக்கிரதீரனற்புதவீரச்சற்குண
யாபவிற்பனசூரிற்றிகழ்வீரன்மதிதயபதிவருகிறததியிதுமிகுசபை
தனிலுளபிரசைகளேயெனவிதோ (வந்தான்)
மின்னும்பொன்னுருமணிபுனைந்துங்கவிபூதி முகத்திலிலங்கத்
துன்னுஞ்சரப்பளிவாகுவலயத்துடன் சரிகையொருகையிலங்க
பன்னுமிடையிற்கச்சைசெறிந்து மீசைமுறுக்கி
ரவராசசபைதனிலரசர்களையுறுக்கி
மருவலருளமதுபொடிபடவிடதொனி
விரிதரவொலிநிறைவிதரணகுணமணி
வீறிப்புனைந்த மீறிக்கசடனா
சிறித்தகைபுகழ்கூறிச்சபைதனில் (வந்தா)

வசனம்.

பேசாதிருங்கள் பேசாதிருங்கள் சபையார்களே கன்னமாபு
ரியையரசாட்சிசெய்யாநின்ற மதிதயமகாராசன் வருகிறார் எச்சரிக்
கை எச்சரிக்கை.

பொது- விருத்தம் இ-ம்-தோடி.

விதிமுறைதவறாநீதி விளங்குகன்னகிநாட்டைத்
துதிபெறவொருக்குடைக்கீழ் சுபகரமுடனேயாரும்
சதுருளமந்திரிமார்கள் தகும்படைசூழ்வதாக
மதிதயராசதீரன் மணிகொலுவருகின்றானே

வசனம்.

அகோதெப்படியென்றால் கன்னமாபுரியையரசாட்சிசெய்யா
நின்ற மதிதயராசன்கொலுவுக்குவருகிறவிதங்காண்க.

மதிதயராசன்-வருகிற தரு-இ-ம்-பந்துவராளி-ஆதிதாளம்

மதிதயராசன்வந்தான் வளமிகு முலகினிலுளபல மகிபர்கள்
வரிசையுடனே துதி
பதிகுல வதிபதி (மதிதய)
எதிருண்டோவிவற்கிணை யிந்த வுலகிலென்னைத்
துதிய ரசர்கள்புகழ்
சுபசெயமுடன் மகிழ் (மதிதய)
வெற்றிவெண்குடை பிடிக்க அரசரெல்லாம்
விருதுகட்டியம் படிக்க
சிற்றிடையார் நடிக்க நடுநடுங்கிட
திசைத்துப்பனைசவர் துடிக்கச்
சற்றுமிடைவிடாமல்மந்திரிமார்கள்சூழத்

தழைத்துவுலகமெங்குந்தர்மமிகுத்துவாழச்
சதாநந்தியவண்சாமரை போடத்
தவமுனிவர்களிவன்புகழ் கொண்டாட
மதனெனிவன்வடிவைக்கண் டுளம்வாட
வாசுரர்வனிதையர்மயல் கொண்டோட
வலிகடலெலிவியென மணிமுரசதிர்தர
ஒளிதிகழ்நவமணிசுபதரனை (மதிதய)

மதிதயராசன்கடவுள்வணக்கம்.

விருத்தம்-இ-ம். மத்தியமாவதி

அகிலமீதறம்விளங்க வருமறைவிளங்கவோங்க
வகைபெறுவுலகமெங்கும் மாதமும்மாரிபெய்யத்
தொகைபெறுமுயிர்கள்வாழத் துய்யசெங்கோல்தழைக்கத்
தருபஞ்சாயுதமாமாயன் றமலச்சரணம்போற்றி

முதல்மந்திரி-போற்றி-கவி-இ-ம்-ஆனந்தபைரவி.

உலகாளரசர்புகழ்வேந்தே யோதும்புகழ்சேர்மதிகுலத்திற்
சிலைவேளெனவேயர்துதித்த தீரவீரபராக்கிரமனே
விலகாவெதிர்க்குந்தரியலரை வெல்லும்வலியபுயத்தோனே
நலஞ்சேரெங்கள்மதிதயமா ராசதிலகநின்றாள்போற்றி

இரண்டாவதுமந்திரி-போற்றி-கவி-இ-ம்-சாவேரி.

தீரர்கள்தீரா போற்றிச்செப்புநற்புகழைக்கொண்ட
வீரரில்வீரா போற்றி விளங்குமன்னிதியோங்கும்
கார்நிகழ்மதிக்கேளுங்குன்றன்னமாபுரியையாளும்
பாருமெச்சினனவுதித்த மதிதயதீரா போற்றி

கட்டியக்காரன்-போற்றி-கவி-இ-ம்-சாவேரி.

அகட்டுவிகடமபுலிவெனக் குமுறுநலமேலோசையுடனபரிவென்னவீரா போற்றி, வுதட்டுயாலிபரேரைக்கண்டஞ்ச் சினர்களையுகந்தாளவல்லாய்போற்றி, மதிட்டிருநிலச்சி ரப்பொன் மேடைசூழ்கன்னமபுரிக்காக்கபோற்றி, மகட்டமாய்நல்லோர்கள்புகழைப்பழிக்கின்றபகைவர்சிங்கமேபோற்றி.

மதிதயராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

என்னருமந்திரிமாரே யான்செய்தவத்தால்வந்த
அன்னிச்சந்திரமதிக்குக்கதித்தவெவ்வனந்தான்வாய்தநும்
இன்னமுமிவிவாகமில்லாதிருப்பதுசருமந்தானோ
என்னவாறுமோராயரவேப்படிநடத்துவரோ

வசனம்,

கேளும் எனதருமையான மந்திரிமார்களே நான் பரம சிவனை நோக்கித் தவஞ்செய்து பெற்ற என் மகளாகிய சந்திரமதிக் கெவ்வனகாலம் வந்தும் இன்னம் விவாகமில்லாதிருப்பது தருமமா ஈஸ்வரரெத்தனமெப்படி முடியுமோ தெரியாதே என்னசெய்வேன் மந்திரிமார்களே.

மந்திரி-விருத்தம-இ-ம்-சாவேரி

புவிபுகழ்மதிகுலத்திற்புனிதமாய்வந்துதித்த
தலைநிறையரசரேற்றதனழக்கநீபெற்றபுத்திரி
எவ்வனகாலங்கண்டாளெழில்மணங்காணுளென்றும்
கவலைகொண்டிருகலாமோகடுகியேமுடியுமையா

வசனம்.

கேளும் மகாராசனே நீர்தவஞ்செய்து பெற்றவமதுசிரேஷ்டபுத்திரியாகிய சந்திரமதிக் கின்னங்கலியாணமாகவில்லையென்றும் எவ்வனகாலமான பக்குவதியானளென்றும் விசனப்படலாமா நீர்நினைத்தால்கலியாணமுடிப்பிக்கிறதற்குதடையுமுண்டோமகாராசனே

மதிதயராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

மந்திரிநீதான்சொன்னவார்த்தைக்கேமகிழ்ச்சியானேன்
விந்தையொன்றுண்டுகேளென்மிகுதவபுத்திரிக்கேற்ற
சுந்தரபுருஷன்வேணுங்குத்திரவிளைவொன்றுண்டு
அந்தசங்கடத்துக்கல்லோவலைகிறேனென்னசெய்வேன்;

வசனம்.

கேளும் மதிமந்திரி எனதுதவப்புத்திரியாகிய சந்திரமதிக்குத் திருக்கலியாணஞ்செய்யவேணுமேயானாலவளழகுக்குத்தகுமான சுந்தரமுள்ளபுருஷன்வந்துலபிக்கவேணுமல்லவா ஒருவேளைலபித்தாலும் ஈஸ்வரனெனக்குச்சொல்லியிருக்கிறசங்கையொன்றுண்டு அந்தச் சங்கடத்தினாலல்லவா கலியாணமாகிறதற்குத் தடையாயிருக்குதுநானென்னசெய்வேன் மந்திரி.

மந்திரி-விருத்தம்-இ-ம்-கலியாணி.

சங்கையுந்திருநீர்செய்தவத்தினால்வந்துதித்த
மங்கைக்குவிவாகமாகுமகிழ்ச்சியுமடைவீர்பொங்கு
கங்கையைச்சடையில்வைத்தகடவுடன்னருளினாலே
சங்கடமொழியுமுள்ளந்தயங்காமலிருந்திடுமே.

வசனம்;

கேளும்மகாராசனேநீர் நினைத்திருக்கிற சங்கையுந்திரவேபோகுதுநீர்செய்ததவத்துக்கிரங்கி யனுக்கிரகஞ்செய்த பரமசிவனுடையதிருவருளினாலேயுமுமுடைய மனோவியாகூலமொழியத் தக்கதாக

னம்முடையசந்திரமதியம்மனுக்குத்திருக்கலியாணமும் நிறைவேறப் போகுது சஞ்சலப்படாமலிரும் மகாராஜனே.

பொது-விருத்தம்-இ-ம்-சௌராஷ்டகம்.

மதியராசனிந்தவகைமனதினிலேயெண்ணி
மந்திரியுடனேசொல்லி மனத்துயராற்றுநாளில்
புதியபொன்மதிலயோத்திப்புரவலன்றனக்குத்தூதாய்
அதிசயமுடனேசொல்லும்யாத்திரைவேதியர்வந்தாரே

வசனம்.

அப்போதெப்படியென்றால்இவ்விதமாக மதியராசனானவர் தமது குமாரத்தியாகிய சந்திரமதிக்குத் திருக்கலியாணமாகவில்லையென்று மந்திரிகளுடனே விசனப்பட்டுக்கொண்டிருக்கிற தருணத்தில் முன்யாத்திரைபோன பிராமணாள் அரிச்சந்திரமகாராசாவுக்குச் சந்திரமதியைத் திருக்கலியாணம் பண்ணிவைக்கத்தக்கதாகக் கன்னமாபுரியைநாடி பிராமணாள் வருகிறவிதங்காண்க.

கன்னமாபுரிக்குப்பிராமணாள் வருகிற-தரு

இ-ம்-சௌராஷ்டிரம்-தாளம்-ஆதி.

தியானப்பிரமானந்த கோவிந்த கோவிந்த
சிதானந்தவைகுந்த முகுந்த

மோகனாகியர் துதி முக்கியபவபுரி
ஞானகுண நிதி சக்கரதாரகரி(தியா)
கங்கையில்மூழ்கிக்காசியைக் கண்டோம்
கதிதருந்திருப்பதிதலமவலம் வந்தோம்
துங்கபத்திரிகோதாவரி முதலாம்
சுகிர்தநதியில்மூழ்கி வந்தோம்வந்தோம்(தியா
சந்தியாவந்தனஜெபதப ஹோமம்
தப்பாமலோடதிதரித்தோர் சிரேஷ்ட நாமம்
சந்திராதித்தராயுமவரச்செய்வோம்மந்திர நேமம்
தயங்காமலேநிலைத்துத்தடுதோம்கு ஞானமம்(திய
யாகங்கள்செய்யுந்தியாணியெங்களுக் குண்டு
யாவருந்தொழுநாராயணனருள் கொண்டு
வாகாகவேயன்னமயமொழிநகது மூண்டு
மண்டலங்களிலேமயங்கித்திடங்கிக் கொண்டு(தியா

மதிதயாயன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

வந்ததென்பாக்கியஞ்செய்த வல்வினையொழிந்தேநீங்கள்
சேர்ந்தனிர்..ரதமேநாக இவ்வியமாந்தலங்களெல்லாம
விந்தையாய்கண்டவாறுமிகமகிழ்வாகச்சென்றே
எந்தெந்தநதிகள்கண்டீர்அதிசயங்கள்சொல்வீர்.

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே உங்களுடைய தரிசனங்கண்டமாத்திரத்திலே என்ஜென்மசாபல்யமானேன் உங்கள் திருவடிவருந்ததக்கதாக எந்தெந்தஸ்தலங்களைப்போய்க்கண்டீர்களோ எந்தெந்தநதிகளில் ஸ்நானஞ்செய்தீர்களோ அங்கங்கேயுள்ள அதிசயங்களை எனக்குத்தெரியச்சொல்லவேணுமென்சுவாமிகளே.

பிராமணன்-தரு-இ-ம்-நாதநாமக்கிரியை-அடதாளம்.

சொல்லுவோங்கேளீர் அதிசயங்கள்
சொல்லுவோங்கேளீர்
வல்லவிவ்வுலகத்தில்மகிமையிலகியே
வளரும்தல-முழுதும்பல-நதியுங்கண்டுமகிழ்கொண்டதைச் (சொல்)

கங்கையமுனைசரஸ்வதிகாவிரியுங்
கருதுந்துங்கபத்திரிகோதாவரியென்னும்
பொங்குகிருஷ்ணைதாம்ரசரயுசோணநதி
புதியதீர்த்தங்களாடியதன்பின்னும
பங்கயநிறைவேகவதிச்சீரநதியென்னும்
பலசன்னதி-தனிலும்விரி-மலைசிந்துவி-ணிலேகண்டதைச் (சொல்)
பேசுமல்லிகார்ச்சுனங்காசிவளநதி
பேதமில்லாச்சிதம்பரம்பிர்ந்தாவன
மாகிலாவேங்கடங்காளஸ்திரிகாஞ்சியும்
வளருங்காவிரிமத்யவாசர்வாழ்தலமும்
வீசும்புகழ்மதுரையழகர்சோலைமலை
விளங்குஞ்சிவ-தலங்கள்திரு-விளங்கும்அரிதலங்கள்முதல் (சொல்)
பாபநாசமகத்திசரடிபரவிப்
பகரும்பூமியிலுள்ளமகிமைப்பதிகளுடன்
ஆயல்மிகும்யோத்தியரிச்சந்திரமகாராசன்
அழகுஞ்சத்தியதர்மமதிகபராக்கிரம
மேவுமவனைக்கண்டோம்விளங்குமகளுக்கென்று
விரியுந்தட-வளையுஞ்சுழி-சுரமுங்கடந்-திவண்வந்தனம் (சொல்

மதியராசன்-விருத்தம்-இராகம்-ஆனந்தபைரவி.

இயம்பியவேதநாலுமெண்ணருங்கலைகளாறுந்
நயமபெறவோதிக்கொண்டநற்றவத்தோரோகேளீர்
பயனுறுமென்மகட்குப்பதிகிடைத்திட்டாலென்ற
வயணமுழுவோர்போந்தவகையெலாந்தெரியச்சொல்வீர்.

வசனம்.

கேளுங்கள்சகலசாஸ்திரபண்டிதர்களாகிய சுவாமிகளேயெனத ருமையாகியமகள் சந்திரமதிக்குத்தகுமானபுருஷனெங்கேகிடைத்தானென் றுசொன்னீர்களே அந்தப்புருஷனோ அவனிருக்கிறதலமேதுவோ அவர்பெயரென்னமோ அவனென்மகளுக்குப் புருஷனாவானென்கிற தெப்படிநிச்சயித்தீர்களோ அந்தவயணமெல்லாஞ் சொல்லவேண் டும் சுவாமிகளே.

பிராமணர்-விருத்தம்-இராகம்-சுருட்டி.

தாவியவலகையானுந்தகைமதியமன்னாகேள்
தேவர்கள்மகிழுங்கீர்த்திதிகழ்மகத்துவங்கள்வாய்ந்தே
மேவியபுகழயோத்திவிறல்திரிசங்குமைந்தன்
பூவைச்சந்திரமதிக்கேபொருந்தியகணவனாவான்

வசனம்.

கேளும்மகாராசனே அயோத்தியாபுரியையரசாட்சிசெய்யாநி ன்ற சூரியவம்சாதிபதியாகிய திரிசங்குமகாராசாவினுடைய புத்தி ரனானசத்தியவாசகனாகிய அரிச்சந்திரமகாராசா அவன்பெயர் அவ னே தெய்வபத்தியினாலும் அழகினாலுந்தர்மத்தினாலும் பராக்கிரமத் தினாலுந் தனக்கொருவருநிகரில்லாதவன் அப்படிப்பட்ட அரிச்சந் திரமகாராசனே உம்மகள்சந்திரமதிக்குப்புருஷனாகவேண்டும் அத ற்குச்சந்தேகமில்லைமதியமகாராசனே.

மதியன்-விருத்தம்-இராகம்-பியாகடை.

சூரியகுலத்தானென்றுந்துதிபெறுபராக்கிரமத்தின்
மாநிலமுகமென்னுநம்மெல்லிசந்திரமதிக்கே
தாரணிவிவாகஞ்செய்யத்தகுமென்றேயுரைக்கவந்தீர்
பார்வதிபாகனைச்சொன்னபயனுணர்த்திடவல்லானோ.

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே அந்தஅரிச்சந்திரமகாராசன் சூரியவம் சத்தானென்றும் அதிகபுஜபலபராக்கிரமமுள்ள கீர்த்திசாலியென் றும் அவனே யென்மகளுக்கு மாலைசூட்டி விவாகஞ் செய்யத்த

க்கபுருஷனென்றுஞ்சொல்ல வந்தீர்கள் மெய்யே ஆகியிலேபரம சிவனாலே சொல்லப்பட்டிருக்கிற ஒருதேவரகசியமுண்டு அதுதெரிந்துசொல்லவல்லவனு சொன்னாலல்லவோ என்மகளுக்குப்புருஷனாவான் சுவாமிகளே.

பிராமணாள்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

சகர்புகழ்மதிதயேந்திரா தற்பரசிவனார்சொன்ன
மகிமையுமுணரக்கவல்லோன் மகிழ்சந்திரமதியாமுந்தன்
மகளையும்விவாகஞ்செய்ய மணவாளனவனேயாவன்
அகமகிழ்ந்திரியம்வரஞ்செய் தாசனாவரச்செய்வாயே

வசனம்.

கேளும்மதிதயமகாராசனே அந்த அரிச்சந்திர மகாராசனே உன்மகள் சந்திரமதிக்குப் புருஷனாகிறதற்குச் சந்தேகமில்லை பரமசிவனாலேசொல்லியிருக்கப்பட்ட தேவரகசியத்தையுஞ் சொல்லுவான் உன்மகள் சந்திரமதி யவனுக்கே பாரியாவாள் ஆகையால்சுயம்வரஞ்சாட்டிவைக்கதைம்பத்தாறு தேசத்திராசர்களையுமவரவழைத்தால் அதிலே அரிச்சந்திர மகாராசாவும் வருவார் அதற்குச்சந்தேகமில்லைமகாராசனே.

மதிதயராசன்-விருத்தம்-இ-ம்-அடாணா.

உத்தமமறையோரே நீருரைத்தசொற்படியேசெய்வேன்
மெய்த்தவப்புத்திரியான மெல்லிசந்திரமதிக்கே
சத்தியவரிச்சந்த்ரேந்திர சக்ரேசன்புருஷனாக
எத்தனஞ்செய்தேபெந்த வெண்ணமீடேறச்செய்வீர்.

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே என்னருமைமகளாகிய சந்திரமதிக்குச் சக்ரேஸ்வரனான அரிச்சந்திர மகாராசன் புருஷனாகத்தக்கதாகப்பிரயத்தினஞ் செய்வீர்களானால் அதைமுழுதும் நிறைவேறும்படியா யநுக்கிரகஞ் செய்யவேணுஞ் சுவாமிகளே.

பிராமணாள்-விருத்தம்-இ-ம்-சுருட்டி.

பூதலம்புரக்கவந்த புண்ணியமதிதயேந்திரா
சீதரனருளினாலுஞ் சித்தத்தின்படியேயாகும்
ஒரரிச்சந்திரன்சிந்தையுநகாமலெழுப்பிவைப்போம்
நீதள ராதேநாங்கள் நிலைக்குப்போய்வருவோமோ

வசனம்.

கேளும் மகாராசனே ஸ்ரீமந்நாராயணருடைய அநுக்கிரகத்தினாலே நீர்நினைக்கபடியே கைகூடிவரும் விசனப்படவேண்டியதில்லை அந்தஅரிச்சந்திர மகாராசாவுக்கு உன்மகளாகிய சந்திரமதியின்பேரில் அதிமோகத்தைதாம் விளையத்தக்கதாக வேண்டியபக்குவங்களைச்செய்து உமிடத்திற்கேயனுப்பிவிக்கிறோமல்லவா

ருமுன்னமேவருகிறோம் வேண்டியசாக்கிரதைசெய்து கொள்ளும்
திதயமகாராசனே நாங்கள்போய்வருகிறோம்.

இராசன் வசனம்.

அப்படியேபோய் வாருங்கள்சுவாமிகளே.

பிராமணாள்-தரு-இ-ய்-சங்கராபரணம்-அடதாளம்.

பூப்பிரதட்சணயாத்திரைசெய்யப்போவோம் வாருங்கள்
மாப்பிள்ளையையங்காரேநல்லவரதவேங்கடசாஸ்திரிகளே (பூப்)
பேய்ப்பிள்ளாய்சுப்பாசாஸ்திரியேநீபேசாமல்வாடா
ஆப்பிட்டதைசுருட்டிக்கொண்டாய்நீயதிற்பாதிதாடா (பூப்)
ஜண்டிப்பயலேசேஷாசாஸ்திரிசத்தியவாணோடா
மண்டலீசனரிச்சந்திரன்தந்தவஸ்திரத்திற்பாதிதாடா (பூப்)
ஒற்றைக்கண்ணுள்ளகுப்பாசாஸ்திரிநீயாடிநீர்வாரும்
உப்பட்ணுசோமாசிபட்டரேநீருமோடியேவாரும் (பூப்)

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

மதிசானிரு-த்தில்வந்தமறையவர்போனபின்பு
துதிபெறுமவர்சபைக்குருட்சியாய்க்கேட்டிருந்த
மதுரவாய்த்தோழிபோய்மங்கைசந்திரமதிக்கவ்
விதமெலாஞ்சொல்வேனென்றுமிகமகிழ்வுடன்வந்தாளே.

வசனம்.

அசோதெப்படியென்றால் மதிதயராசனிடத்திற்குவந்திருந்த யாத்திரைப்பிராமணாள்போனபின்பு அந்தச்சபையிலேநடந்தவிருத்தாந்தங்களெல்லாமறைவாகக் கேட்டுக்கொண்டிருந்த சந்திரமதியினுடையதோழியானவளதையெல்லாஞ் சந்திரமதிக்குத் தெரியப்படுத்தவேண்டுமென்றுசவுந்தரவதிவருகிறவிதங்காண்க.

தோழி-சௌந்தரவதி-தரு-இ-ய்-புன்னாகவராளி தாளம்-ஆதி.

சரசவிசகுணயமிலகியகுணசௌந்தரவதிவந்தாள்
டரிடளமிகுநகைவிரிமுகபலாநிறை
பைந்தொடிசந்திரவதி ராங்கியெனவிளங்கும் (சரச)
சேலைமுந்தாணியிலிட்டச்சரிகைவர்ணஞ் சிங்காரமதுதுன்னமலைக்
குழலிலலங்காரஞ்சன்முகத்தில்மின்னவளையல்கலகலென்ன
ஆலித்தெழுந்துநலடிசயமதுசொல்ல
வாலைப் ருவநல்ல-மகனசக்குலந்துமெல்ல
மதிபதிசபைதனில்மறையவர்சொல்லிக்கொண்ட
வகைதனிலிவட்டிவன்றவாளவென்றுகண்ட (சரச

தோழி-விருத்தம்-இ-ம்-ஆநந்தபைரவி.

மெல்லியர்க்கரசியாக விளங்குமாமயிலேபோற்றி
வெல்லதோர்மதிதயேந்திரன் மகளெனவுதித்தாய்போற்றி
சொல்லியதேவர்மாதர் துதித்திடுமழகுவாய்ந்த
மல்லற்பூங்குழற்சந்திரமதியெனுந்தாயேபோற்றி

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-சாவேரி.

நினைக்குமென்மனதிற்சேர்ந்தநிலைதெரிந்துரைக்கவல்ல
தனத்தழகுடையாய்ச்சௌந்தரவதிநீவாழி
எனைத்தனியாகவிட்டேயெங்குநீபோய்வந்தாயுந்தன்
மனக்குறையேதோசொல்வாயமற்றொன்றுமயப்படாதே-

வசனம்

வாழிவாழிசௌந்தரவதியே இங்குண்டாகியதோழிமார்களில என்மனதிற்குகந்ததோழியென்றே உன்னைநினைந்திருக்க நீ என்னைத்தனியேவிட்டு எங்கேயோபோனாய் உன்மனக்குறையேதோ தெரியச்சொல்லடிசௌந்தரவதி.

தோழி விருத்தம்-இ-ம்-தோடி.

அன்னையேகேளாய்புந்தனழகுக்குணத்திற்கேற்ற
மன்னவர்மன்னன்வந்துமணமாலைசூட்டுங்காலம
தன்னிச்சையாகவந்துதனக்குக்கானேனடைந்த
நன்னயாறிந்தேசொல்லவானிங்கேயோடிவந்தேன்.

வசனம்.

கேளுமம்மாசந்திரமதித்தாயே உன்ரூபலாவண்ய சௌந்தரியத்திற்கும் உனதுகுணநிசயத்திற்கும் தகுமானபுருஷனாகியஇராசாதிராசனாவந்து மணமாலைசூட்டுங்காலம்வந்துலபித்ததென்கிற சந்தோஷத்தை எண்ணிஎண்ணி யடங்காதமகிழ்ச்சிகொண்டு உனக்குத்தெரியப்படுத்தவேண்டுமென்றோடிவந்தேன்தாயே

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-மோகனம்.

என்னடியம்மாதோழி யெனக்கொருநல்லகாலம்
தன்னிலேவருமோதெய்வந்தனக்குமதனையுண்டாச்சோ
பொன்னலர்மேனியென்பொங்கியபருவமெல்லாம்
இன்னிலமாதர்போலுமென்னனாண்டலன்கண்டேனே.

வசனம்.

ஆகாஆகா கேளாயென்பிராணநாதமானசகியே எனக்குமொரு நல்லகாலமுமவருமா அந்தாபிஷ்டதெய்வத்திற்கு மென்பேரிலேதயவுமுண்டாகுமா இவ்வுலகிலுண்டாகிய ஸ்திரீசாதிகளைப்போலசெ

ணெமெடுத்தற்குண்டாகிய சுகங்களையனுபவிப்பேனோ என்னுடைய எவ்வர்ணகாலமெல்லாம் வீணில்கழிக்கும்படியாகிய என்மனதிற்குரம்மியமான சேதிகளாதாகிலு முண்டானால் தெரியச்சொல்லடிசகியே.

தோழி-சவுந்தரவல்லி-அகவல்-இ-ப்பூதலகாம்போதில்
சொல்லுவேன்கேளாய் தோகையர்க்கரசே
வல்லவுன்பிதாவும் வளமிகுகொலுவில்
மந்திரிமார்கள்மருங்கினிதிருந்தே
தந்திரமுரைக்கத்தகுங்கொலுவிருந்தார்
அந்தவேளையிலேயாத்திரைபோன
மந்திரவேதியர்கள்வந்துகண்டார்கள்
கண்டவர்தம்மைக்கடுகியபணிந்தே
அண்டர்கள்மதிக்குமரியவேதியரோ
எங்கிருந்திங்கேவந்தனீரென்றார்
கங்கைதொட்டுலகில்கனநதியோடி
உலகினிலுள்ளஉம்பர்கள்பரவும்
தலமெலாங்கண்டோஞ்சதிருடனென்றார்
கண்டனமென்றீர்கதித்தநற்றலங்கள்
கண்டதிலதிசயங்கழறுவீரென்றார்
அம்மொழிகேட்ட அருமறையோருஞ்
செம்மைசேரயோத்திதிருச்சங்குமைந்தன்
நலமிகுராசராசனன்னித
னிலகியகீர்த்தியேழுலகெங்கும்
நிறைதருபுசபலநிபுணகெம்பீரன்
அறைதருகதிர்குலத்தரிச்சந்திரன்
வடிவழகதுகண்டுமகிழ்ந்துவந்தோம்
படிமிசையுன்மகன்பருவத்தில்மிகுந்த
சரசவுல்லாசச்சந்திரமதிதன்
சரசசல்லாபசுந்தரமிகுந்த
பொற்கொடிதனக்கவன்புருஷனேயாவன்
மைப்பொருபுயத்தின்மதிப்பியென்றார்
அந்தவுரைகேட்டரசனுமகிழ்ந்தே
யெவ்வகையென்மகட்கிசைந்தோர்கணவன்
அவனெனவுரைத்தீரன்றந்தவரத்தின்
கவலைதீர்ப்பானோகருத்தறிவானோ
எப்படிமுடியுமென்றுரைத்திடவே
தப்பிதமாராதுசட்டமாய்முடியும

சுயவரஞ்செய்யென்று சொல்லியேமறையோர்
நயமிகுமயோத்தி நாடியேயந்த
அரிச்சந்திரற்குன் னழகெலாமுரைத்தே
வரச்செய்வோமென்று மகிழ்வுடன்போனார்

சந்திரமதி-விருத்தம்-இ-ம-தோடி.

சுகுணநற்பாங்கியே நீ சொன்னதோர்மன்னன்மன்னன்
மகிழ்குணவானென்றோதி மறையவர்போனரென்றாய்
தகைபெறும்வீரய்கீர்த்தி சவுந்தர்யபராக்கிரமங்கள்
மகிமையெவ்வாறுள்ளானோ மனக்குறைதீரச்சொல்வாய்

வசனம்.

கேளடியெனதன்புக்கிசைந்தசகியே அந்தமகாராசன் எனக்குப்புருஷனுவாரென்று யாத்திரைபோன பிராமணுள் சொல்லிப்போனார்களென்று சொல்லவந்தாய் அந்தமகாராசன் அழகெப்படிப்பட்டதோ அவர்பராக்கிரம மெப்படிப்பட்டதோ அவர்மகிமை யெப்படிப்பட்டதோ என்மனக்குறை தீரத்தக்கதாகத்தெரியச்சொல்லடி சகியே.

தோழி-சவுந்தரவதி-தரு-இ-ம-தோடி-தாளம்-ஆதி.

அந்தமகாராசன்வடிவழகினைச்சொல்ல- ஆரால்முடியுமம்மா
அறிந்துசொல்ல எவரால்முடியுமம்மா
சுந்தரக்கதிர்குல தோன்றலயோத்திவளர்
சுகநிதி அரிச்சந்திரமகிபதியாகிய (அந்த)
சதகோடிசந்த்ரபிம்பமென்றாலுமவர்முகத்
தனுக்கிணைச்சொல்லக் கூடுமோ - காணுந்
தழைக்குங்கருணாரசவிழிகளுச்செந்தாமரை
தனையொப்பிடஎண்ணம் காடுமோ
மதுரவசனக்கனிவாயிற்புன்சிரிப்பந்த
வானமின்னலைக்கண்டு வாடுமோ - இரண்டு
மலையெனத்திரண்டயாபுயவழகைக்கண்டோர்க்கு
மற்றோரின்பங்களைத் தேடுமோ
புதுமணிவைத்திழைத்தகிரீடம்புச கிரீதி
பூட்டுங்குண்டலங்களைக்கண்டுநாணும் பிரீதி
கதியென்றமுத்தவடாக்காக்குமொரு சமான
கனககாந்திதிகழ்கற்பகவிலாச ஞான (அந்த)
பாருக்கிணையெனலாமார்பின்விலாசமதில்
பதித்தகவசாத்தினஆரமும் நின்று

டள்பளென்ன ஒளிமின்னுமலங்கிர்த
பருமணிமுத்தணிசிலங் காரமும் - நல்ல
மாரமலைமேல்வருப்பொன்னருவியைப்போலும்
பண்பின்முப்புரிநூலங் காரமும் - இந்த
பார்முதலுலகெலாமுண்டதிருநெடுமால்
பாக்யவயிறுஞ்சுகச சீரமும்- அஷ்ட
திரமதகசங்கள் துதிக்கைபோல்நீண்ட கையுஞ்
செப்பும்பிரணவம்போலேஸ்திரமாயுளாக்குமெய்யுஞ்
சிருநூமனுவிக்கியானநெறிகள் பெய்யுஞ்
சிலநெறியாலித்தசாலபுவன முட்டும் (அந்த)
கட்டியவீரகண்டாமணிதாங்கிய
கருதும்பாதாம்புயக்கிரு பாலனும் - வரும்
காமனுடனேயந்தரயுதிந்துதிபாவுங்
காமுசையோகசாத்திர லோலனும் - மிகு
மட்டில்லாதிலநிறைதனதாரதாரனும்
வயங்கும்பிரதாபபுத்ர சீலனும் - நல்ல
மனுவிக்கியானேஸ்லாமுதலாய்விளங்குந்தர்மம்
வளரவந்துதித்தவி சாலனும்- மேலும்
வெட்டியபவவினையொழிக்குஞ்சாமர்த்திய தீரன்
உம்பர்முதலோர்மகிழ்வுசிதாயகெம் பீரன்
துட்டனைவாட்டியசுகுண அசாய சூரன்
தூயரிச்சங்குபெற்றசோபித்திகழ்வ சீரன்
அந்தமகாராசன்வடிவழகினைச்சொல்ல ஆரால்முடியுமம்மா
அறிந்துசொல்ல எவரால்முடியுமம்மா

சந்திரமதி-விருத்தம்- இ-ம-தோடி.

மதுரமென்மொழியாவெந்தன் மனக்குறிப்பறிந்தெந்நாளும்
இதமெடுத்துரைக்கவல்ல வேந்திழையாளேகேளாய்
துதிவெறும்யோத்தியாளுந் துரைதிரிச்சங்குதந்த
அதிபனைச்சேருவேனோ அரிவையேயுனாசெய்வாயோ

வசனம்.

ஆகா ஆகாகேளாயென்பிராணபதமான சகியே அந்த அயோத்திபுரியையாளும்படியாகிய திருச்சங்கு மகாராசாவினுடைய புத்திரனை அந்தமகாராசனை நான் விவாகஞ்செய்து கூடுவேனோ அவருடைய குணநிசயங்களைக் கேட்கக்கேட்க விளைகிறதாயமூந்திருமா என்னசெய் வேண்டுசகியே.

சந்திரமதி-தரு-இ-ம்-தோடி-தாளம்-ஆதி.

என்னமோமனதொருவிதமாய்வருகுதினி
என்னென்றுசொல்வேனடி யன்னமே-இதை
எதென்றுசொல்வேனடி யன்னமே
மன்னர்புகழுமந்தமகாராசன்வடிவெல்லாம்
வடித்துநீசொல்லச்சொல்லமதிமயங்கிறேன்மானே (என்ன)
ஓயாமலிந்தக்குயில்கூவுதுசலம் போலே
வுருகிப்பிரமிக்கத்தென்றலுலவுதேபுலி போலே
மாயமருக்தோகொண்டுவந்தாயென் மேலே
வாதோகீசெய்யுஞ்சூதோவர்மமே தனுலே (என்ன)
நினைக்குமுன்னெதிரொருரூபமுண் டாகுது
நிமிஷத்திற்காமபிஞ்சிநிலேதனர் வாகுது
செனிததுச்சுகசலதிகைதப்பிப் போகுது
திடுக்கென்றுநாணம்வந்துதிகைத்துள்ளம் கோருது (என்ன)
கன்னிகையாமெந்தன்சருக்கையுருக்க லாமோ
கலகம்விளைத்தாலிந்தகாமன்மேற்பழி போமோ
என்னைமயங்கச்செய்தேயவர்மறந்திருக்க லாமோ
இந்தவிரகத்தாலேயென்னென்னவிளை வாமோ (என்ன)

தோழி-சவுந்தரவதி-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

மன்னவர்மன்னன்பெற்றமகிழ்சந்திரமதியேகேளாய்
கன்னிகையானநீதான்காமத்தால்மயங்கலாமோ
அன்னியரறிந்தால்நாணமந்தகல்லயோத்தியாளுந்
மன்னற்கேபாரியாவாய்மனம்பொறுத்திருப்பாயம்மா.

வசனம்.

சேனுமப்மாசந்திரமதி நீசன்னியாமேடையிலேவிவாசமில்லா மலிருக்கிறகாலத்திலே யொருபுருஷனைநினைத்து விரகப்பட்டாக்ஷ பார்த்தபேர்கள் பரிகாசம்பண்ணுவார்கள் அதுமகாநாணம்உன்னு டைய இஷ்டப்பிரகாரமே அந்தஅரிச்சந்திரமகாராசனே புருஷனு வார் திருவுளங்கூட்டிவைக்கும் பதறுமலிருமம்மாதாயே.

சந்திரமதி-சிங்காரபத்யம்-இ-ம்-புன்னாகவராளி.

வளைசோரமதிசோர வளைந்தபட்டுடைசோர
தமிமீறுதென்செய்வேன் சகிக்கவசமோ
அதிமோகசுகபோக ஆரம்பசையோக
தாவமேலிடுதென்னதந்திரவசையோ

நினைக்குமுன்காணுதேநிசமதாயவர்போலு
முருவெளித்தோற்றபோவுண்மைதானோ
சொல்லவென்றால்வெட்கமேலாகுதென்செய்வேன்
வழுத்துநற்பிரமனெழுத்தின்வகையோ
கருதுமுன்னெனதுநெஞ்சுருகுதெனமோ
அறுகில்நின்றுதுதிசொல்லணங்கன்வருவான்
மருமலர்க்கணைவாரிவருசியானோ
அரிவையேயென்செய்வேன் அடக்கவசமா

தோழிவிருத்தம்-இ-ப்-ஆநந்தபைரவி.

பாமினனுங்கிழியாயெங்கள் மதிதயமன்னன்பெற்ற
வானுலகமுதேசந்திர மதியேநான்சொல்லக்கேளாய்
நானிலமுழுதுங்காக்கு நலந்திகழயோத்திமன்னன்
தானுன்னைவிவாகஞ்செய்வார் தையலேவருந்திடாதே

வசனம

கேளுமெங்கள் துரைரத்தினமாகிய சந்திரமதித்தாயே எப்படியும்அந்த அரிச்சந்திரமகாராசனேஉன்னைபணமாலை சூட்டுவார்செல்வசகாயமுனக்குண்டாகும் நீசௌவுத்தமியானதால் உன்மனதிற்குக்குறைவுவராது விசனப்படாமலிரும்மாதாயே

சந்திரமதி-விருத்தம்-இ-ப்-புன்னாகவராளி

பெண்ணிளமயிலேயெந்தன் பிரியமாஞ்சகியேகேளாய்
தண்ணளிக்கயிலைவாசர்தந்தநல்வரத்தினாலே
வண்ணமாய்நான்பிறந்தேவளர்ந்துநற்பருவமானேன்
எண்ணுமென்கருத்திற்கேற்றவிறைவனைக்கூடுவேனோ.

வசனம்.

கேளாயெனதுபிராணபதமானசகியே ஸ்ரீகயிலாசவாசானுக்கிரகத்தினாலேமதிதயராசனுடையவயிற்றிலேநானொருபெண்பிறந்துவளர்ந்து எவ்வனகாலமுமடைந்தேன் இனியெனமனதிற்கிசைந்த இங்கிதமானபுருஷனை விவாகஞ்செய்துகூடுவேனோசகியே.

தோழி-விருத்தம்-இ-ப்-கலியாணி.

மத்தகமிரண்டதென்னவளரிளமுலையினாளே
தத்தைமென்மொழிப ளானசந்திரமதிநீகேளா
யத்தனாருளினாலேயத்தநல்லயோத்திவேந்தன்
பத்தினியாவாயெண்ணம் பலித்திடுஞ்சலித்திடாதே.

வசனம்.

கேளுங்கள் சீலநாயகம்போலும்வளாநின்ற சந்திரமதித்தாயே அந்தக்கயிலாசவாசானுக்கிரகத்தினாலேயுன்னிஷ்டத்திற்கிசை

த சௌந்தராகார சாம்பிராச்ய புருஷனான அந்தஅரிச்சந்திர மகாராசனையே நீவிவாகஞ்செய்து கூடிவாழ்வாய் தாழ்ச்சியென்னவிருக்கின்றது விசனப்படவேண்டாந் தாயே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-தன்னியாசி

காதல்சேரெனதுதூயக் கருத்தெலாமறிந்தெந்நாளும்
குதுரையாதகீதத் தோழியேசொல்லக்கேளாய்
வேதனைமதனம்பாலே விளங்குதேவிரகமந்தப்
பூதலமன்னன்றன்னைப் பொருந்திநான்வாழ்வதென்றே

வசனம்,

கேளாயெனது பிராணபதமான சகியே சும்மா இருக்கவென்று நீ அந்தமகாராசரவினுடையபெயரைச்சொன்னமாத்திரத்திலே விரகதாபமேலிட்டு மன்மதனாலே வருத்தப்படும்படிசெய்தாயே அவர்பேரிலெனக்கு விளைந்த இஷ்டத்தின்படியே அவரைநான்கூடியெப்போது சுகத்தையடைந்திருப்பேன் என்னசெய்வேன் என்னசெய்வேன் சகியே

தோழி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

விரகமேலிடுதேயென்றும் விக்மதன்வருந்துவானேன்
றுருகிநெஞ்சுழலவேண்டா முறுதியாயவரைக்கூ
மருவிவாழ்ந்திடுவாய்வேதவாய்மையந்தணர்போய்ச்சொல்வா
ரரியநல்விவாகஞ்செய்ய வவருமிங்கெய்துவாரே.

வசனம்

கேளு மகாஉத்தமியான சந்திரமதித்தாயே எப்படியும்யாத்திரைபோனபிராமணாள்போய்சொல்லி அழைத்துவருவார்கள் அந்த அரிச்சந்திரமகாராசனையே கூடிவாழ்வாய் சந்தோஷமாகவேயிரும்மாசந்திரமதித்தாயே.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

அந்தணர்சொன்னசொல்லை யன்பினாலறிந்ததோழி
சந்திரமதிக்குச்சொல்ல தனக்கந்தவயோதிமன்னன்
சொந்தநற்கணவனாகச் சோபமுற்றிருந்தாளப்பால்
விர்வைதசேர்மதியன்செய்விதங்கள்யான்புகலுவேனே.

வசனம்.

யாத்திரைவந்தபிராமணர்களாலே சொல்லக்கேட்டிருந்தசவுந்தரவதியென்னுந்தோழியானவள் சந்திரமதிக்குச்சொல்ல அந்தஅரிச்சந்திரமகாராசனே தனக்குப்புருஷனாகவேணுமென்றுவிரகத்தினாலேவிசனப்பட்டுக்கொண்டிருக்க அந்தசந்திரமதியைப்பெற்றமதியராசன்சபையிலேநடக்கிறவிதங்காண்க.

மதிதயராசன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

சொல்லுநல்லறிவின்மிக்கசுபகுணமந்திரிகேளாய்
வல்லதோர்கயிலைவாசர்வரத்தினால்மகளாய்வந்த
மல்லலங்குழலாள்சந்த்ரமதிமணமாலையோலை
எல்லையிலெழுதவேணுமிராயசனைவரச்செய்வாயே.

வசனம்.

சேனும்விவேகமந்திரி ஸ்ரீகயிலாசாவசரனுக்கிரகத்தினாலே என்னக்குமகளாய்வந்தசந்திரமதிக்குத் திருக்கல்யாணவோலை யெழுதவேணும் இராயசக்காரனைவரச்செய்யுமந்திரி.

மந்திரி-வசனம்.

அப்படியே இராயசனைவரச்செய்கிறேன் மகாராசனே.

மந்திரி-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

அடல்கொள்வெம்புலிபோற்சீறுமறியநற்கட்டியக்காரா
திடமிகுமதிதயேந்த்ரதிரன்றன்புதல்விக்கென்று
மடலவிழ்மாலைசூடும்மணவோலையெழுதநீபோய்த்
தடையின்றியிராயசஞ்செய்சதுரனையழைத்துவாடா

வசனம்.

ஆரடா ஆசாரவாசல்காக்குங்கட்டியக்காரா நம்முடைய இராசராசனாமதிதயமகாராசாவினுடைய குமாரத்தியாகியசந்திரமதியம்மனுக்குத் திருக்கல்யாணவோலை யெழுதவேண்டியதால் இராயசக்காரனை அதிசீக்கிரமாக அழைத்துக்கொண்டோடிவாடா கட்டியக்காரா.

கட்டியன்-வசனம்.

அப்படியே அழைத்துக்கொண்டுவருகிறேன் சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

வக்கணைபொருத்தமாகவரிசையாந்திருமுகத்தை
இக்கினிலெதிரில்லாமற்சிறப்புடனெழுதவல்லான்
தக்கமாமதிதயேந்த்ரன்சமுகத்துச்சுகக்ஷேமங்கள்
இக்கணமெழுதுவேனென்றிராயசன்தான்வந்தானே.

வசனம்.

அகோதெப்படியென்றால் சந்திரமதியம்மனுக்குத்திருக் கல்யாணத்திருமுகமெழுதுதற்கு மதிதயராசன்கொலுவுக்கு இராயசக்காரன் வருகிறவிதங்காண்க.

இராயசக்காரன்-வருகிற-தரு-இ-ம்- தோடி-தாளம்-ஆதி.

ராயசக்காரன்வந்தான் - வந்தானிதோ - ராயசக்காரன்வந்தான்.
ராயசமாதானதந்திரன்-நயகுணமதிதயேந்திரன்
நாடியழைத்தசேதியோடியறியநீதி (ராயசக்)

ராசசமுகத்திலோய்யாமலவர்முக்
நாட்டமறியும்நய குணசிலன் - அர்த்த
ராத்ரியானாலுமெந்தநேத்ரம்திமைகொட்டாமல்
நாவசைந்தாற்கண்டெழுதும்வெகுசாலன்
ஆசைவார்த்தைசொல்லியவுசியம்காண்செய்வேனென்று
பூசிதமாய்த்திரிகின்ற
பெயாய்யர்போலேயின்று (ராயசக்கா)

முறுக்கிமுறுக்கிக்கோணப்பாகைசிரசிற்கட்டி
மூக்யவிபூதியைநெற்றியிற்பூசி வெகு
முடுக்காய்பட்டஞ்சிவேஷ்டியிடையிலுடுத்திவல்ல
வாட்டுபோட்டுமுன்கைவீசி
இறுக்கும்வெட்டுடனேகூட்டெழுத்தும்ஆள்மாராட்டக்
குறிப்பெழுதும்வுத்தர்களைக்
குடிகெடுக்குங்கர்ன்னட்ட (ராயசக்கா)

ஓடித்திரவியத்தைத்தேடிவானவர்க்குதவி
யுள்ளபடிபுகழைநாடாமல் வீணாய்
உகிப்பிப்பசப்புகின்றகசனைப்போயடுத்தே
உள்ளமெலிந்துமிகவாடாமல்
கீர்த்தியபுகழ்பெற்றவள்ளல்களாமென்றோர்மேலே
பாடிவருவோர்கள்
பட்டத்திடுமோட்டம்போலே (ராயசக்கார)

கட்டியக்காரன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

தருமுறையரசர்கோக்கத்தானறிந்துலகக்கீதி
வருகெறியுணாக்கவல்லமந்திரியேபோற்றிபோற்றி
இருளறவெழுதியோதவிராயசக்காரன்றன்னை (ஸ்வாமீ.
வருகவென்றுரைத்தீர்நான்போய்வரச்சொன்னேன்வந்தான்சு

வசனம்.

தேவரீருத்தாரப்படிக்கு ராயசக்காரனை யழைத்துக்கொண்டு
வந்தேன்சுவாமி?

ஞ்தன்-வசனம்-அப்படியேயறிவித்துவருகிறேன்சுவாமி

பொது-விருத்தம்-இ-ம-சௌராஷ்டகம்.

செப்புநல்லைம்பத்தாறு தேசமன்னவருகவெல்லா
மைப்படிகண்ணுன்சந்திர மதிமணவோலைதன்னை
ஒப்புடனனுப்பினுர்முன் னுரைத்தயாத்திரையாய்ப்போன
தப்பிலாமறையோரந்த வயோத்தியிற்றுமவந்தாரே

வசனம்.

அகோதெப்படியென்று விந்தப்பிரகாரமாக கன்னயாபுரியி லே சந்திரமதியினது திருக்கல்யாணவோலை யெழுதியனுப்ப ஐம் பத்தாறு தேசத்திராசாக்களும் வருகிறதற்கு முன்னேயாத்திரைவ ந்த வேதப்பிராமணுள் மறுபடியுமயோத்தியாபுரிக்கு வருகிறவிதங் காண்க.

யாத்திரைப்பிராமணுள்- வருகிற-தரு.

இ-ம்.சௌராஷ்டகம்-ரூபகதாளம்.

வேதப்பிராமணர்வந்தார்-யாத்திரைசெய்யும்
வேதப்பிராமணர்வந்தார்
நீதில்லாசந்தியாவந்தனஞ்செய்வோமென்றுமெய்மைபுகன்று(வே)
மலைபிசைவருநல்லஅருவிகளோநாடி தீர்த்தமாடி
வருவோம்போதுபோகுமுன்னேயொருமடங்களைத்தேடி
சலசலவென்றொருசெடியசைந்தாற் கண்டு
தயங்கியிரண்டுமனபயமிடக் கொண்டு
பலபேர்கூடியவிடத்திலே நின்று
பயமொழிந்திருப்போம்காங்களென்று (வேத)
ஆலயந்திருமதிள்கோபுரம்விளங்கிடுமுரைக்காணுமுனி யோரை
யறிந்துசுலோகங்கள்பூரிப்போமதற்குள்ள சீரை
சீலமாக அந்தஆலயம் புகுந்து
சேவிக்குமுன்னேசதாவிர்த்தி யுகத்து
மேலும்பலபலதானங்கள் சொரியும்
வீடுகளெங்கேயெனக்கூடிக்கூடித்திரியும் (வேதப்)
அருமையானபட்டுவஸ்திரங்கிடைத்தாலுமுடுக்கோம் வீணுய்விடு
மண்ணன்தம்பியானபோதிலும்சும்மாய்க்கொடுக்கோம்(க்கோ
ஒருமையாய்ப்பேசுவோம் இனங்களென்றாலு
மொருகாசுவரும்படியா யிருந்தாலும்
திரிவதற்கும்பின்விடுவோமோ சென்று
தீர்த்தயாத்திரைபோவோ மென்று (வேதப்)

அரிச்சந்திரன்போற்றி-விருத்தம்-இ-ப்-மத்தியமாவதி.

அறிவினிலுயர்ந்தெந்நாளு மருமறையோதவல்ல
மறுமைக்குவித்தாய்த்தோன்றி வளருமந்தணரோபோற்றி
இறையுமபொய்நெஞ்சிலெண்ணா திருக்குமெய்த்தவரோபோற்
றுறைமிகுநதிகளாடுந் தூயரோபோற்றிபோற்றி (றி

வசனம்.

சரணஞ்சரணம் ஆதனத்திலெழுந்தருளியிருங்கள் சுவாமி

பிராமணாள்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

மன்னனே ஆசீர்வாதம் மகிபனே ஆசீர்வாதம்
பொன்னணிமுடிதரித்த புண்ணியா ஆசீர்வாதம்
இன்னமுஞ்சர்வாபீஷ்ட மெய்துவாய்ஆசீர்வாதம்
நன்னயவயோத்தியாளு நாதனே ஆசீர்வாதம்

வசனம்.

தனகனவஸ்துவாகனாதியும் சகலசௌபாக்கிய சாம்பிராச்சிய மும் தீர்க்காயுசும் சித்திரஸ்து சீக்ரமேவிவாகபலி சித்திரஸ்து வே தப்பிராமணபரிபாலன சித்திரஸ்து:

கிழக்குப்பட்டணயங்கார்- வசனம்.

நோக்கானபடியேநேக்கு.

கட்டைப்பிராமணன்-வசனம்.

நேக்குமப்படியே.

குருட்டுப்பிராமணன்-வசனம்.

நேக்கேதோகண்ணிருக்கிறதோ மண்ணிருக்கிறதோ அல்ல து ஒருகண்ணாடியாகிலுமிருக்கிறதோ இவாளுக்குற்றபடியே நே க்கும.

நெட்டைப்பிராமணாள்-வசனம்.

நேக்குள்ளகாரியம் நேக்கு நோக்குள்ளகாரியம் நோக்கென் றிராமல் எதுகாணும் பொதிக்களக்கிறத்துக்குமுன்னே சத்தத்து க்களக்கசொல்லுகிறது.

நெட்டைப்பிராமணன்- வசனம்,

அடாய்அடாய் நோக்கென்னரிஷபம்போலே யிருக்கிறுயே நேக்குத்தெரியும மகாராசாவுக்கெப்படியும் விவாகமாகப்போகிற து எதோ நம்முடைய சஷ்டநிஷ்டூரத்தை சொல்லிக்கொள்ளுகி றேன்.

கட்டைப்பிராமணன்-வசனம்.

அந்நதகாணும் நெட்டை சேஷய்யங்காரே எதோவிவளாற்றி லே தான்வந்துவிழுகிறதாய் நினைத்துக்கொண்டு நேக்குங்கூடவெ ன்று குதிக்கிறான் நோக்குத்தெரியும் தான்பட்டபாடு

குருட்டப்பணயங்கார்-வசனம்

அந்நகாணும் கிழக்குப்பணயங்காரே யிவரேதேதோ சம்ப்பத்தியஞ்செய்தார் இவராப்புடையாள் த்ரணமாத்திர மிவர்கண்ணிலே காட்டுவாளா

கிழக்குப்பணயங்கார்- வசனம்.

ஏதோ ஆத்துசாரியம் ஆத்திலே சீக்கிரமாயிந்தகாரியத்தை ஒட்டவைத்துப்போட்டோமானு லிவளாயிலை யிக்களல்லோரும்ள கேவிஷடமாய்க்கொட்டிக்கொள்ளலாம் சட்டமாய்ப்பேசும் சட்டமாய்ப்பேசும் அப்பணயங்காரே,

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்- ஆரபி,

அறுதொழிலாளரான வரியவத்தவமாயோற்றி
மறுகுறுமணிமைடயாள்சந்திர மதிவளர்பதியைநாடி
குறுகிநீர்கண்டவாறும் குறைபொழித்தெனக்கேயந்தப்
பிறைநுதலாளைச்சேரப் பேசியவாறுஞ்சொல்வீர்

வசனம்.

சரணஞ்சரணங் கேளுங்கள் சுவாமிகளே என்னை விரகவேதனையினாலே மயக்கச்செய்யாநின்ற அந்தசந்திரமதியினுடைய பதியாகிய கன்னமாபுரிக்கு நீங்கள்போனதும் அங்கேயந்தமதிதயராசனுடனே பேசினதும் அந்தப்பாரூ அவளிலைய எனக்குவிவாகம் செய்யும்படிதீர்மானம் பண்ணிக்கொண்டு வந்ததும் தெரியச்சொல்லுங்கள் சுவாமிகளே,

பிராமணன் விருத்தம் -இ-ம்-சுருட்டி-
சீர்பெறுதிருச்சங்கின்ற செயவரிச்சந்திரமன்னு
யாரயோகீர்த்தினைத்தால் பவியாதொன்றுலகிலுண்டோ
சூரனுமதிதயேந்திரன் சுயம்வரஞ்சாட்டிவைத்தான்
வார்முலைமாதுனக்கே மணமாலைசூட்டுவாளே

வசனம்

கேளும் அரிச்சந்திரமகாராசனே நீர் ஒருகாரியத்தை நினைத்தால் அதுகைகூடி வராமற்போமா நாங்களந்த கன்னமா புரியைச்சேர்ந்து மதிதயராசனைக்கண்டு உம்முடைய சகலசாம்பிராச்சியகுணநிசயங்களையுந் தெரியப்படுத்தினோமோ அந்தசந்திரமதிக்குந் தகுமானபுருஷனென்று நாங்கள் பூரித்துச்சொன்ன உச்சாகத்திலே யவர் சந்தோஷத்தையடைந்து ஐம்பத்தாறுதேசத் திராசாக்களுக்கும் திருக்கல்யாணவோலை யெழுதிவிட்டு சுயம்வரஞ்சாட்டி வைத்தார் சறப்பமே தடையில்லாமல் முடித்துக்கொண்டு வரலாம் மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-அடாணா.

வேதவந்தணரேங்கள் விரும்பியோர்கருமங்கூடிப்
ம்பாதவேநடந்தாலிந்தப்பூமியில்முடியாதுண்டோ
நிதிலாவெனதுதந்தைசெய்தவப்பலனிதனும்
காதலாய்ப்போவோம்வாரீர்கன்னமாபுரிக்கிப்போதே

வசனம்.

கேளுங்களென்னுதவப்பலன்போலும்வந்தசுவாமிகளே நீங்களொருகாரியத்தை நினைத்துப்போனால் அதுமுடியாதுண்டோ அந்தமகாரூபவதியான சந்திரமதியெனக்கே மாலையிடுகிறேனென்று சொன்னதும் அவளைப்பெற்ற மதிதயமகாராசன்சம்மதித்துச் சுயமவரஞ்சாட்டிவைத்ததும் எங்கள்பெரியோர்களெல்லாஞ்செய்த பூசாபலம் இனிதடையென்னவிருக்கிறது நடக்கலாம்வாருங்கள் சுவாமிகளே.

இராசன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

எதிரொங்குமில்லாவெந்தனெழில்பெறுமரசைச்சார்ந்த
சதுரங்கசேனைக்கெல்லாந்தளபதிசொல்லக்கேளாய்
அதிதங்குமதிரதயேந்திரன் தூயநற்பதிக்கிப்போதே
உதயமிங்கெழச்சேனையுடனும்பயணந்தானே.

வசனம்.

கேளுமகாபராக்கிரமமுள்ள தளபதி நம்முடைய ரதகெசதுரகபதாதிகளாகிய சதுரங்கசேனாசமுத்திரமுமின்று உதயமேபயணப்படுத்திக் கன்னமாபுரியைச்சேரநடத்தும் இதோநாமும்பயணப்படுகிறோம்.

தளபதி-வசனம்.

அப்படியேபயணப்படுத்திநடத்துகிறேன்சுவாமி

இராசன்-வசனம்.

நீங்களுங்கூடவேயெழுந்தருளுங்கள்சுவாமிகளே.

பிராமணாள்-வசனம்.

ததாஸ்து அப்படியேபுறப்படக்கடவோம்மகாராசனே.

நெட்டை-சேவகக்கார்வசனம்.

மகாராசனாகவிருக்கவேண்டுமே ஏதோ நாங்கள்போய் காரியத்தையனுகூலப்படுத்திக்கொண்டுவந்தோம் எனக்கு நான்குபெண்குழந்தைகளிருக்கிறது மூன்றுஆண்குழந்தைகளிருக்கிறது ஆக ஏழுகன்னிகாதானமும்பூதானமுமெனக்கேசெய்யவேண்டும்மறந்துவிட்டுப்போதீர் மகாராசனே கூடவருகிறேன்.

குருட்டு அப்பணயங்கார்-வசனம்-

ஆம் ஆம் நேக்குத்தான் கண்ணொடியில்லாதே இரண்டுகண்ணுந்தெரியாது நோக்கென்னரிஷ்டம்பாலே யிருக்கிறயே நேக்கு நீதான்செய்யவேண்டுமகாராசனே

நெட்டைச்சேஷையங்கார்-வசனம்-

அன்னடா அடாய் குருட்டுத் தேவடியாள் பிள்ளாய் எதுக்கடா நோக்குக்கொட்டுகிறது-

குருட்டு அப்பணயங்கார்வசனம்

பார்த்திரா பார்த்திரா ஓய்கிழக்குப்பணயங்காரே யிவளாம்புடையாள் அண்டைவீட்டு நாமணயங்காரை மாட்டிக்கொண்டாளே அதிலே யிவருக்குச்சம்பாத்தியம்,

கிழக்குப்பணயங்கார்-வசனம்

ஆம் ஆம்-நேக்குத்தெரியு மவளாம்புடையாளைத் தானேசொல்லுகிறாய்,

நெட்டைச்சேஷையங்கார்-வசனம்;

அடாய் கிழத்தேவடியாள் பிள்ளாய் எதடாநோக்குத் தெரிந்தது உன்னம்புடையாள் பூர்வோத்திரம நேக்குத்தெரியாதா-

கட்டைவரதய்யங்கார் வசனம்-ஆம் நேக்குத்தெரியும்

கிழக்குப்பணயங்கார்-வசனம்-ஆம்நேக்குத்தெரியும்

நெட்டைச்சேஷையங்கார்-வசனம்-ஆம்நேக்குத்தெரியும்

குருட்டப்பணயங்கார்வசனம்-ஆம்நேக்குத்தெரியும

குருட்டு அப்பணயங்கார்-வசனம்-

அடாய் நேக்கு ரெண்டுகண்ணுந்தெரியாது நம்முடைய ஆம்புடையாள் ஆத்திலே யிருக்கிறாள் அடாய் நெட்டைசேஷாய் அடா அறுதலைத்தேவடியாள் பிள்ளாய் அடாய் நீதானே யெதுவேளையும் நம்முடைய ஆத்துக்கு வாறதும் போறதும் நேக்கேதோ கண்ணுதெரிகிறதோமண்ணுதெரிகிறதோ அடாய் நீதானே வெளியிலே கொட்டுறையா-

கிழக்குப்பணயங்கார்-வசனம்-

ஓய்-ஓய்-குருட்டு அப்பணயங்காரே யிந்தவார்த்தைகளெல்லாம் மகாராசாவுகளுக்குத்தெரியப்போகிறது காணும் ஏதோநம்முடைய ஆத்துவர்த்தமானம் நாறிருக்கிறது-ஆம்-ஆம்,

இராசன்-விருத்தம்-இம்-அடாணா-

என்னுமென்றமையைத்தீர்க்கவிணையடிவருந்தச்சென்றே
பண்ணிசைமொழியாளந்த மதியவன்பாலைவதன்னை

நண்ணிநான் விவாகஞ்செய்யநாடிப்போய்முடித்துவந்த
புண்ணியமறையோரே நாம் போவோம்நீர்வருகுவீரே.

வசனம்.

வாருங்கள்வாருங்களென் மனக்குறையைத்தீர்க்கவந்தவுத்தம ப்பிராமணர்களே யுங்கள்மனதுக்குச்சந்தோஷம் வரும்படியாய் சகலமும்நடத்திவைப்பேன்கூடவேபுறப்படுங்கள்சுவாமிகளே.

பிராமணாள்-வசனம்.

அப்படியேபுறப்படுகிறோம் மகாராசனே.

அரிச்சந்திரன்- தரு-இ-ம்-அடாணா-தாளம் - ஆதி.

வாரும்வாரும்பெரியோர்களே இப்போதேநீங்கள்
வாரும்வாரும்பெரியோர்களே
சீருலவுங்கன்னமாபுரிதன்னைத்தேடி
தீதிலாத சத்தியனருள் திவ்ய
மாதுசன்னைநான்மணமகிழ்மணஞ் செய்ய(வாரும்)
பெருத்ததேர்மீதி லேறுவோம்-அங்கங்கேநின்று
பேசிப்பேசியேசளை யாறுவோம்
வருத்தந்தோன்றாமல்கூடிமலர்வாவிசோலைநாடி
வழிகடந்துபரியது கொண்டு கல்ல
வளமிருந்தாமிசை கொண்டுசெல்ல வாரும்)
ஆனைசேனைபரிவாரம்வெகு விஸ்தாரம்
அணிகளுடனேபோவோம் சிலதூரம்
சேனைகாவலர்சூழதேசமன்னவர்தாழ
தேவநாயகனுமெனப் புகழ்ந்திட
வேசமாரதமே மகிழ்ந்திட(வாரும்)
பச்சைப்புரவிகளைப்பூட்டி துசத்தைநாட்டி
பசுந்தங்கச்சங்கிலிகளை மாட்டி
அச்சமில்லாதமேருவும் அசையுமேயிந்தப்பாரும்
அவ்வகையழகுள்ள அணிதேர் மீது
திவ்வியமுகூர்த்தம்ஸ்திரமிப் போது(வாரும்)

பிராமணாள்-வசனம்.

சந்தோஷம்சந்தோஷம்மகாசந்தோஷம்வந்தோமிதோவந்தோம் மகாராசனே.

இராசன்-பிராமணருக்குச்சொல்--விருத்தம்-இ-ம்-மோகனம்.

என்னருந்தவத்தால்வந்த வெழிற்பெரியோரேகேளீர்
மன்னுமிப்பாலைவெப்பம்பாருங்களதிலோர்தெய்வ

சந்நிதானத்தைப்பாரீர்சதிருடனேசென்று
தன்மையாகப்போற்றித் தகைபெறவருகுவேனே.

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே இதோ இந்தப்பாலவனத்தினுடைய தீட்சண்யத்தைப்பாருங்கள் அதிலேயொரு தேவாலயந்தோற்றப் படுகிறது அது துர்க்கிகோயிலைப்போலு மிருக்கிறதுநான்போய் அந்த மகாதேவியைக்கண்டு தரிசனஞ்செய்துவருகிறேன் நீங்களிந்தரதத்தின்மேடேரிலேதானேயிருங்கள்சுவாமிகளே.

பிராமணர்கள்-வசனம்.

அப்படியேபோய்த்ரிசனஞ்செய்துவாரும்மகாராசனே

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

ஞாலமேழ்புரக்குமந்தலந்திகழயோத்திமன்னன்
சோலவேதியர்களோடுங்கொடிநெடுந்தேர்மேற்கொண்டு
பாலையில் துர்க்கைகோயில்பரிவுடன்கண்டிறங்கி
காலவேசென்னிதன்னைத்தாழ்த்தியேபணிந்துசொல்வான்.

வசனம்.

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரமாக அரிச்சந்திரமகாராசன் தம்முடையரதகசதுரகபதாதிகளையுங் கன்னமாபுரியைச்சேரவிடுத்திதாமும் யாத்திரைவந்தபிராமணர்களும் வசிஷ்டர்முதலாகிய பெரியோர்களும் ரதத்தின்மேலேறிக்கொண்டுவருகிறவழியிலே மகாதீட்சண்யமான ஒருபாலைவனமும் அந்தப் பாலைவனத்திலொரு துர்க்கிகோயிலையுங்கண்டு ரதத்தைவிட்டிறங்கி அந்த மகாதேவியாகிய துர்க்கியைத் தோத்திரம்பண்ணுகிறவிதங்காண்க.

இராசன்-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

வானளவுமணிமதிலு மதிதவழ்கோபுரநிலையும்
ஞானநிறையோர்தவம்போல்நடுவிளங்குஞ்சத்ரமதும்
வானவரவர்தடிபரவுமகிமையுநானுரைக்கவென்றால்
ஆனதொருமூவுலகு மடங்காதப்புகழிதுவே.

வசனம்.

அரி அரி ஆஆ ஆஆ ஓஓ ஓஓ இதுவென்ன ஆச்சரியம் இந்ததெய்வசந்நிதானத்தினுடையபெருமையும் அழகையும் நானென்னென்றுசொல்லுவேன் அதிவுன்னதமானகோபுரமும் விஸ்தாரமானதிருமதிலும் ஸ்வர்ணதுஜஸ்தம்பமும் நவரத்தினகசிதமான திருப்பட்டணியழகும் பார்க்கப்பார்க்கக்கண்கூசுதே இப்படிப்பட்ட தேவாலயத்துக்குள் எழுந்தருளியிருக்கப்பட்டநின்ற மகாதேவியைக்கண்டு தெரிசிப்போம்.

இராசன்சொல்-தேவாரம்-இ-ம்-சங்கராபரணம்.

சூலமுங்கபாலங்கட்கத்துலங்குவாள்கையிலேந்தி
காலனைநடுங்கச்சீறிகிரிசிங்கத்தின்மீதே
மாலினுக்கிளையாளென்னும் வண்பெயர்தாங்கிநின்ற
நீலமாதிரிகங்காளிநின்மலர்ப்பாதம்போற்றி

இதுவுமது.

மலர்ப்பதசிலம்புகொஞ்ச மருவுதில்லையில்நின்றாடி
நிலைப்பொருட்சிவனோடன்று சேர்ந்துவாதாடுமாதாவே
மலைத்தடுபுவியில்வக்கமாண்டச்சிறுவன்யானுன்
நலத்தையெவ்வாறுபோற்றிநாவினாலுரைக்கவல்லோன்

இதுவுமது.

அன்னைநீதந்தைநீயே அருள்பொருளனைத்துநீயே
பின்னையோர்பரமுங்காணேன் பேதையேனயர்கின்றேனே
தன்னுநின்மகிமைதன்னைத் துதிசெயவறியேனம்மா
என்னைநீயாள்வதற்கேயிறங்கிவந்தருள்செய்வாயே.

பொது-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

அணிதிகழயோத்தியாளுமரிச்சந்திரனிருபனுக்க
மணியொளிதுர்க்கிகோயில்வாயில்நின்றுருகும்போது
டணியணிச்சிவனோடாடிப்பதமிலங்குந்ததுர்க்கி
துணிவொடுசிங்கமீதுதோன்றிமுன்வருகின்றாளே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக அரிச்சந்திரமகாராஜன் மிகுந்தஸ்தோத்திரங்களுடனே உருக்கமாகவேண்டிக்கொள்ள அந்தமகாதேவியாகிய துர்க்கிபரமனுக்குக்கிருபைவந்துபிரத்தியட்சமாகிறவிதங்காண்க.

துர்க்கியம்மன்-வருகிற-தரு

இ-ம்-மத்தியமாவதி-அடதாளம்.

வனதுர்க்கியிதோவருகிறாள்-பாலை-வனதுர்க்கியிதோவந்தாள்
கனமுக்யமாயெங்குங் கண்காட்சியாய்ப்பொங்கும்
அனைவோருளமிலங்குமாதிசத்தியாய்த்தங்கும் (வனதுர்க்கி)
சாகினிடாகினிமோகினியெனுமந்த
சாதகவரிசைப்பசாசுகள்பிரயத்த
வானகோடிதிவ்யபாலர்கள்வாரிசித்த
பணிந்துகொண்டுபுவிதனிலுளமாய்க்காக்கவந்த (வனதுர்க்கி)

மொண்டிப்பசாசுடன்சண்டிப்பசா சொன்று
மூர்க்கமாகலந்துகூத்தாடவெதிர் நின்று
கண்டொருபேயங்கேவபிநயமிது வென்று
கைகொட்டிப்பாடியகணத்தைமிகப் புகன்று(வனது)

கூரியசாத்தனொருதலையைக்கைதனிற் கொண்டு
களித்தொருபேய்கையிலிருக்குந்தலையைக் கண்டு
அருமையாயாடுவோம்வாவா இதோ செண்டு
அவசியம்வாவென்றழைக்குங்கூட்டத்தை விண்டு(வனது)

இராசன்சொல்-தேவாரம்-இ-ம்-சங்காராபரணம்.

அசுரர்கள்மிகநடுங்க அன்றுமாமகிடாசூரன்
மிசைநடந்தமரில்வென்ற வீரிமாதங்கிநீலி
உசிதமாம்பசாசுபூத மொடுங்கிநின்றேவல்கேட்க
வசியவாள்சூலமேந்தும் வனதுர்க்கைத்தாயேபோற்றி.

இதுவுமது.

காலனையுதைத்தபாதன் கயிலைவாழீசனுனை
சீலநற்சிவனோடன்று தில்லையில்நடனஞ்செய்த
கோலசிங்காரிகட்கங் கொடுமழுவாள்வில்லேந்திப்
பாலையாம்வனத்தில்வாழும் மாசத்திநின்றாள்போற்றி,

துர்க்கை-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

கனமதிலயோத்திவாழுங் காதல்சேர்திருச்சங்கின்ற
தினகரன்போலேபொங்கித் திகழரிச்சந்திராவாழி
முனிவர்கள்முதலோர்செய்யு முக்யமாதவங்களோங்க
அனவரதமும்பாலிக்கு மன்புள்ளாய்வாழிவாழி.

இதுவும் துர்க்கை-விருத்தம்-இ-ம்-கேதார கௌளம்.

வளமிகுகதிர்குலத்தின் வந்தவதரித்தமன்னா
உளமகிழ்வானேநீசெய் யுருக்கமாந்தோத்திரத்தால்
தளமெடுத்தெங்கேபோகத் தான்வந்தாயென்னைவேண்டும்
விளைவென்னநீதானந்த விதந்தனைச்சொல்லுவாயே.

வசனம்.

கேளும் அரிச்சந்திராசதுரங்கசேனாசமுத்திரத்துடனே யெங்கே போகப்புறப்பட்டாய் இங்கேயென்னுடைய சந்நிதானத்திலே வந்து நீபிரார்த்திக்கிறகாரியமென்ன உன்னுடைய தோத்திரத்திற்கும் பக்திக்கும்மெச்சினேன் உனக்குவேண்டியவரங்களைத் தெரியச்சொல்லும்பிள்ளாய்.

இராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

மாலினுக்கிளையாளான வனதுர்க்கையுமையேகேளாய்
சீலனுமதிதயன்றன் செல்வியைவிவாகஞ்செய்ய
சாலவேவந்தேனிங்கே தங்குவிற்பரிதேரம்பும்
கோலங்கல்லானதின்று கொழும்பொன்னாய்வாரேதம்மா.

வசனம்.

கேளுமம்மாவன துர்க்காபரமேஸ்வரி கன்னமாபுரியையாளுமதித யராசன்புத்திரியைவிவாகஞ்செய்யவேணுமென்றுபுறப்பட்டுஇதுவழி யாய்வந்தேன் இங்கேயுமதுசந்நிதானத்தைக்கண்டு தரிசித்துப்பிரார்த் திக்கலானேன் ஏதொருஆச்சரியம் இந்ததேர்குதிரை வில்லம்பு இதுக ளெல்லாம்கல்லாயிருந்தது இப்போதென்கண்காணப் பொன்னாகக்கா ணுது அப்படிப்பட்ட மகிமையைத் தெரியச சொல்லவேணுந் தாயே.

துர்க்கை-விருத்தம்-இ-ம்-அடாணா.

கேளரிச்சந்த்ராமுன்னநு கிளர்தருவருணனென்போன்
நீளுலகதனையாண்டு நீங்குநாளொன்பாலிந்தக்
கோள்பரிதேர்வில்லம்பைக் குறித்துக்கல்லாகியித்தை
ஆள்பவர்வந்துகண்டா லாரும்பொன்னாமவர்க்கியென்றான்.

வசனம்.

கேளும்பிள்ளாய் அரிச்சந்தராமுன்னாலே வருணனிந்தத தேர்கு திரைவில்லம்புஇதுகளைக்கல்லாக்கியாருடையகண்ணிற்கண்ட மாத்திர த்தில்பொன்னாகுமோ அவர்களேயிதற்குடையவர்கள் அவர்களுக்கே யிதைக்கொடுக்கிறதென் றென்னிடத்தில்வைத்துப்போனான் அநேக காலமாய்வைத்துக் காத்துக்கொண்டிருக்கிறேன் ஆதலால்நீகண்ட மா த்திரத்திலே பொன்னாகவிளங்கியதால் நீயே வைத்தாண்டு கொள் ளக்கடவாய்.

இராசன்-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

நான்செய்ததவப்பலனோ நானிலஞ்செய்புண்ணியமோ
வான்போல்விழிச்சந்தர மதிதவமோவறியேனே
நான்சேரும்பாலைக் காரணிநீதருமிதனை
பேண்மையுடனசக்கொள்வேன் விரும்பியதையருள்குவையே

வசனம்.

கேளுமம்மாஜெகதயாநிதி இப்படியா இதனுடைய பூர்வோத்திரம் ஆனதால் மகாசந்நிதானமும் உனக்குத்தானேமகிழ்ச்சிவந்து கொடுக்க லானதால் அடியேன் பெற்றுக் கொள்வதற்குத் தடையாதாயே

துர்க்கை-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

இந்தவில்லம்பெடுத்தே யெழில்பெறுமிரதமேறி
விந்தைசேர்குதிரைபூட்டி மிகமகிழ்வாகச்சென்றே
சந்திரமதியைக்கூடித் தனிமணஞ்செய்தேநாளை
வந்தெனைப்பணிந்தயோத்தி மருவிவாழ்ந்திருப்பாயப்பா.

வசனம்.

கேளும்அரிச்சந்திரா இந்தச்சுவர்ணமயமானகுதிரைகள் பூட்டிய பொற்றேரிலேறி இதோஇந்தவில்லையும் அம்பையு மெடுத்துக்கொண்டு கன்னமாபுரிக்குப் போய்ச் சந்திரமதியைத் திருக்கலியாணஞ் செய்து நாளைவரும்போதுஇவ்வழியாகவந்து நம்மைத்தரிசனஞ் செய்துகொண்டு அயோத்தியாபுரியையடைந்து அரசாட்சிசெலுத்தி அதிகசுகமாகவாழ்ந்திரும் மகாராசனே.

இராசன்-வசனம்.

அப்படியேபோய்வரக்கடவேன்தாயே.

பொது கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

பொன்னின்வில்லுமம்பெடுத்தே பொற்பரித்தேர்மிசையேறி
சன்னிதுர்க்கைதனைப்பணிந்து கன்னமாபுரிநாடித்
தன்னுடனேவசிஷ்டர்முதல் தகுமறையோர்புடைசூழ
மன்னனரிச்சந்திர மகிபன்வருகின்றனனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகவன துர்க்கைகொடுத்த பொற்றேர்குதிரைபொன்வில்லம்பு இதுகளைக்கைக்கொண்டு அந்தமகாதேவியை ஸ்தோத்திரஞ்செய்து அப்பால்வசிஷ்டர்முதலாகிய பெரியோர்களுடனே யந்தத்திவ்வியஇரதத்திலறிகன்னமாபுரிக்கு அரிச்சந்திரமகாராசன்வருகிறவிதங்காண்க.

அரிச்சந்திரன்கன்னமாபுரிக்குவருகிற-தரு.
இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

மாசிலாஅரிச்சந்திரமகாராசன்தேரேறிமதிதயன்பதிக்குவந்தானே

பூசிதவசிஷ்டரும்புனிதமறையோர்களும்
புண்யகதைகள்சொல்லப் புகழ்ந்துமகிழ்ந்துநல்ல (மாசிலா)

ஆனைப்படையுடனேகுதிரைப்படை நடக்க
அணியணியாய்ரதசேனைத்திரள் நடக்க
வாளாளாவியமணித்தேர்கள்முன் நடக்க
வகுக்குஞ்சேனைநாயகர்தாங்களுடன் நடக்க

தானவர்கண்டுளந்தயங்கிமிக நடுங்கச்
சதுரர்கண்டுநிலைதளர்ந்துமன மொடுங்க (மாசிலா)

காளமெக்காளங்கைத்தாளஞ்சில்லரி சங்கம்
கடல்போலிரையுந்தாரைபூரிபேரி பொங்கம்
கோளுலாவுமண்டகோளமதிற்பிர சங்கம்
கூறும்பட்டவர்துதிகோஷ்டமகா சங்கம்
நீளும்புவியிலெங்குநெருங்கிப்படர்ந்து வரும்
நிருபர்குடைகொடிகள்நிறைவித்துளங் கவரும் (மாசிலா)

இருபுறங்கவரியாம்வெண்சாமரைகள் போட
யெழில்ரம்பையர்போலினியமாத ராட
தருநற்புகழைச்சொல்லிவானவர்மிகக்கொண் டாட
தழைத்தவிந்திரன்கண்டுதயங்கிமனது வாட
அரிவைசந்திரமதிமேலாசைவெள்ள மோட
அறியுந்தூதர்முன்போயந்தநகரைத் தேட (மாசிலா)

கட்டியன் மதிதயனுக்குச்சொல்-விருத்தம்.

இ-ம்-கும்பகாம்போதி.

கன்னமாபுரியையாளும் கருத்துயர்மதிதயேந்த்ரா
பொன்னடிநாளும்போற்றி புகலும்விண்ணப்பம்கேளும்
மன்னவர்மன்னனான மணிமதிலயோத்தியாளும்
நன்னயஅரிச்சந்திரேந்திர நாதிபர்வந்தார்சுவாமி.

வசனம்.

பறுக்குபறுக்குஎச்சரிக்கைஎச்சரிக்கைமதிதயேந்திரமகாராசனே அயோத்தியாபுரியை அரசாட்சி செய்யாநின்ற அரிச்சந்திர மகாராசன்வந்தார் சுவாமி.

மதிதயன்-அரிச்சந்திரனுக்குச் சொல்-விருத்தம்-

இ-ம்-ஆனந்தபைரவி.

சதிர்பெற்றிடுமணிமாடவயோத்திதயாநிதியேவருக
எதிரட்டதிசைக்குளிலாத விநோதபுயாசலனேவருக
துதிபெற்றதிரிச்சங்குகிரீரவ ஜீரசுதாநிதியேவருக
அதிர்பொற்கழல்வீரவுதாரமகாவாசேவருகவருக

வசனம்.

வாரும்வாரும் மகாராசனே.

பொதுவிருத்தம்-இ-ம்-சங்காபரணம்.

வாசவன்போலயோத்தி மன்னனரிச்சந்திரன்றான்
பூசிதாதத்திலேறிக்கன்னமா புரிக்குவந்தான்

மாசிலாமதிதயன்றன் மகள்மணவோலைகண்ட
தேசதேசத்துமன்னர் சிறப்புடன்வருகின்றரே.

வசனம்.

அகோதெப்படியென்று லரிச்சந்திரமகாராசன் கன்னமாபுரிக்கு வந்தவுடனே மற்றஐம்பத்தாறுதேசத்து ராசாக்களும்வருகிற விதங்காண்க.

தேசாதிபதிகள்-வருகிற-தரு.

இ-ய்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

தேசதேசமகாராசர்கூடிக்கூடித்தீரமுடனேவந்தார்
இதோதீரமுடனேவந்தார்
ஆசைக்கன்னமாபுரிமதிதயன் மகளாலே
அளவிலாநெஞ்சமகிழ்வாகி யொருக்காலே(தேசதேச
கேகயதேசாதிபதிகேரளதேசாதிபதிக்ரவுஞ்சதேசாதிபதியும்-வரு
கேதனநிறைந்திலகுக்ராடதேசாதிபதிகௌடதேசாதிபதியும்- நல்ல
மகததேசாதிபதிமாளுவதேசாதிபதிமச்சதேசாதிபதியும்- நிறைவா
கிராடதேசாதிபதிவங்களதேசாதிபதிவள்ருஞ்சிங்களபதியுஞ்சொல்லு
மோகமுடனேபடையைமுடுக்கிநடத்திக்கொண்டு
தாகமுடன்சந்திரமதிசுயமவரவோலைகண்டு (தேசதேச)

கட்டியன்-வசனம்.

கேகய-கேரள-க்ரவுஞ்ச-மாகத-மாளுவ-மச்ச-கிராட-வங்கள-சிங்கள-முதலாய்ச்சொல்லாநின்ற ஐம்பத்தாறுதேசாதிபதிகளும்வந்தார்கள சுவாமிபராக்கு.

மதிதயன்-மட்டுவிருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அருமணிமுடிசூடுந்-திருவளர்புயவீரா
தருநிறையுலகாளும்-அரசர்களேவாரீர்.

வசனம்.

வாருங்கள் வாருங்கள் தேசாதிபதிகளே.

பொதுவிருத்தம்-இ-ம்-அசாவேரி.

செப்புநல்லைம்பத்தாறு தேசமன்னவர்களோடு
மற்புதமயோத்தியாளும் மகிழரிச்சந்திரமன்னன்
தப்பிலாமதிதயேந்திரன் சபைதனிலிருக்கஆங்கோர்
மைப்படிகண்ணாள்சந்த்ர மதிக்குறைத்திடவந்தாளே.

வசனம்.

அகோதெப்படியென்றால் ஐம்பத்தாறுதேசத்திராசாக்களுடனே கூடமதிதயேந்திரன்சபையில்கொலுவிருக்கிறபோது அந்தஅரிச்சந்திர

ரமகாராசனையும்பார்த்ததோழி சவுந்தரவல்லியானவள் சந்திரமதியம்மனுக்குச்சொல்லவருகிறவிதங்காணக.

தோழிசவுந்தரவல்லி-சந்திரமதியிடத்துவருகிற-தரு.

இ-ம்-சாவேரி-ஆதிதாளம்.

தோழிவந்தாளேசுபசோபனஞ்சொல்லசூட்சமறியவல்ல (தோழி)
ஆழிசூழுலகாள்மதிதயமன்னன்
அழைத்தசேதிசந்திரமதிக்கறிவிக்கத்தந்த (தோழி)
அடங்காமகிழ்ச்சிகொண்டடிக்கடிநின்று நின்று
ஆரொதைக்கேட்டாலுங்கலியாணம்நாளைக் கென்றுங்
தடங்கண்ணுளானசந்திரமதிபேனைப் புகன்றுஞ்
சகலபாக்கியமுங்கிடைத்ததேயெனக் கின்று
நடந்துபோவதென்னமோடிச்செல்வதே யின்று
நன்றெனசுபஞ்சொல்லிநலங்கொள்ளவேமுயன்று (தோ)

தோழிபோற்றி-விருத்தம்-இ-ம்-பியாகடை.

அரிவையர்க்கரசேபோற்றியணிதிகழ்மதிதயேந்திரன்
தருமகனெனவேவகததவப்பலப்பொருளேபோற்றி
மருமலர்க்குழல்சேரின்பமானெனும்விழியாள்போற்றி
வருநிறைசெல்வச்சந்திரமதியெனுமமுதேபோற்றி.

சந்திரமதி-தோழிக்குச்சொல்-வாழ்த்து-விருத்தம்.

இ-ம்-கல்யாணி.

சொற்படியேவல்செய்தேதூயநற்குணத்தின்மிக்க
நற்பயன்போல்விளங்குநங்கையேவாழிவாழி
முற்பயனெய்தினற்போல்முடுகிநீவந்ததேதோ
அற்புதமொளித்திடாமலதிசீக்கிரமுரைசெய்வாயே.

வசனம்.

வாவாளனதுபிராணபதமானசகியேநீஅதிவேகமாகஓடிவாவேண்டியகாரியமென்ன எவ்வளவுமொளிக்காமல்தெரியச்சொல்லடிசகியே.

தோழி-விருத்தம்-இ-ம்-நாட்டை.

சேளம்மாவுனதுபுண்யங்கிடைத்ததுசுகமுங்காண்பாய்
வேள்விசெய்மறையோர்முன்னம்விளம்பியபடியேயந்த
வாளரிச்சந்திரமன்னன்வந்தார்மற்றைம்பத்தாறு
நீள்விலேசதாசர்தாமுநிறைந்தார்நின்மனத்தைநாடி.

வசனம்.

கேளம்மாசந்த்ரமதித்தாயேமுன்னாலேயாத்திரைவந்தபிராமணரைள்சொல்படியடியேஅந்த அரிச்சந்திரமகாராசனும் வந்திருக்கிறாரிஇனி

எப்படி புஞ்சுகத்தையடைவாய் அவருடனே கூட ஐம்பத்தாறுதேசத்திராசாகளும்வந்தார்கள் அவர்களும் உன் திருக்கல்யாணத்தைக்குறித்துவந்திருசகிறார்கள் அதைச்சொல்லவேணுமென்றுவந்தேனம்மா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

அருமைசேர்சகியேசேளாயன்றுதொட்டிந்நாள்மட்டும்
திருகில்லாவயோத்திமன்னன்தேவிநாஞகவென்றே
உருகிநெஞ்சுழன்றேகாமமுபரியாய்வருந்துகின்றேன்
திருவுளச்செயலேதாமோதெய்வமென்செய்யுமோதான்

வசனம்.

கேளாயென துபிராணபதமானசகியே யாத்திரைவந்தபிராமணுள் சொன்னதைக்கேட்டுநீவந்துசொன்னநாள்முதல் இதுவரைக்கும அந்தமகாராசனுக்கேபாரியாளாகவேணுமென்றுநினைந்துநினைந்துவிரகவேதனையினலேவருததப்பட்டுக்கொண்டிருக்கிறேன் திருவுளச்செயலெப்படியாகுமோதேவானுகூலமெப்படியிருக்குமோஎன்னசெய்வேன்சகிய.

தோழி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வானுலகமுதைப்போலும்வளர்சந்திரமதியென்னம்மா
நீநினைந்திருக்குமெண்ணம்நிசமதாய்முடியுங்கண்டாய்
மீன்வளர்கடலுப்புக்குமிகுமலைநாரதனைக்கும்
தானொருசம்பந்தம்போல்தப்பாதுமுடிதயுமாயே.

வசனம்.

கேளுமம்மாசந்திரமதித்தாயே கடலுப்புக்கும்மலைநார்த்தங்காய்க்கும்தொந்தமாய்ச்சம்பந்தப்படுவதுபோல் குணுநுபவமிருந்தால்அந்தமகாராசனுக்கும்உனக்குமேவிவாகசம்பந்தநடக்கவேபோகுதுதடையுண்டோஅம்மா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-காம்போதி.

மயில்போலுமுடையாள்பாகமருவிமான்மழுவுமேந்துங்
கயிலாசர்வரத்தினலேகன்னிநான்பிறந்தேனிந்த
நயமேமவுமெவ்வனத்தில்நாதனைச்சேர்ந்திடாத
துயாமுறதிருமோதான் தோகையேயென்னசெய்வேன்

வசனம்.

கேளாடியென்னருமையானசகியேஸ்ரீகயிலாயவாசருடையவரத்தினலேயொருபெணபிறந்தேன் எனக்குஎவ்வளவுகாலமுமவந்ததுஇ

னியென்மனதுக்கேற்றபுருஷனைக்கூடிப்பின்புசௌக்கியமடைய திரு
க்கிறேனென்மனதுக்கமுந்தீருமாயென்னசெய்வேன்சகியே.

தோழிவிருத்தம்-இ-ம்-தோடி.

சித்திரத்தெழுதவொண்ணாச்சிறப்புள்ளவழகுவாய்ந்த
தத்தையென்மொழியாய்ச்சந்த்ரமதியெனுந்தாயேகேளாய்
சத்துஞ்சஞ்சலப்படாதேதகும்புகழரிச்சந்த்ரற்கே
உத்தமதேவியாகியொருகுறைவின்றிவாழ்வாய்.

வசனம்.

கேளுஞ்சந்த்ரமதித்தாயே உன்னுடையருபாவண்யங்களுக்கிசைந்த அந்தஅரிச்சந்திரமகாராசனுக்கு மணமாலைசூட்டிசகலசௌக்கியங்களுமடையப்போகிறாய்தாழ்ச்சியென்னவிருக்கின்றதம்மா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

தினகரன்குலத்தில்வந்ததிசமூநல்லயோத்திவேந்தன்
கனமிகுகணவனாகக்கருத்தினிலாசைகொண்டேன்
தினந்தினமவரால்நெஞ்சந்திகைத்துமன்மதன்கைவாளி
கனலெனவெதும்பச்செய்யுங்கலக்கமெவ்வாறுதீரும்.

வசனம்.

கேளாயென்னருமையானசகியேசூரியகுலோத்துங்கனான அயோத்திபுரியரசாட்சிசெய்யாநின்ற அந்தமகாராசனைக்கூடும்படியாகவெண்ணங்கொண்டுயாத்திரைப்பிராமணாள்சொன்னநாள எண்ணியெண்ணி காமகணையினால்வருத்தப்படச்செய்கின்றார்என்னசெய்வேனடிசகியே.

சந்திரமதி-விரகதரு-இ-ம்-நவரோஸ்-அடதாளம்.

விரகலாகிரிசகிமாதே-யிள-மெல்லியென்னுள்ளஞ்சகியாதே
சரசலலிதமிகுமோகத்தையலென்செய்குவன்வையமீதிந்த (விர)
அந்திமதியனலாய்த்தாவுதே-தென்றலம்புலிபோலவந்துதாவுதே
சிந்தையொருவகையாய்நாடித்தேடிமதிமிகவாடித்தள்ளாடுதே-திவ்விய
காவிக்கருங்குயில்கள் பாடுதே-யின்பக்
காமரசவெள்ளமிகுந் தேடுதே
ஆவிக்குரியமானேயென
தங்கம்புளகிக்கப் பொங்குங்கடலொலிக்க (விர)
மாரன்கணைகளுந்தும் பாயுதே-யன்றில்
மாறுபாடாகநின்று மேயுதே

யாரைவெறுப்பேனினிநடையன்னமே　　
சொர்ணமேநன்னயமாயிந்த　　(விரகலா)
கொந்தார்தனங்கள்விம்மி　　மீறுதே-யிளங்
கொவ்வைச்செவ்வாயிதழிற்றே　　னூறுதே
அந்தணர்கள்சொல்லியவிதி
யறிந்துதெரியாதிருநதிருப்பதேனிவ்　　(விரகலா
அன்னம்பால்பழம்கசப்　　பானேனே-கிளி
யன்னம்பூவையினுற்பசப்　　பானேனே
இன்னம்தாமச　　மேதோ-மன
திட்டமுடனெனைக்கட்டியணைந்திட　　(விரகலா)
சப்ரமஞ்சமீதிலென்னைக்　　கூடவே-நல்ல
தருணங்கருணைகூர்ந்துற　　வாடவே
இப்ரபஞ்சமதிக்கும்போக
விச்சையரிச்சந்த்ரசெல்வமதன்　　(விரகலா)
இந்திராதிதேவரனு　　கூலனே-கதி
ரிலங்குந்துதித்தவி　　சாலனே
சந்தனக்கந்தசுகவரிச்
சந்திரமகாராசனிந்தவேளைதந்த　　(விரகலா)

தோழி-விருத்தம்-இ-ம்-நாட்டை.

மதுரமென்மொழிவிளங்கு மகிழசந்த்ரமதியேகேளாய்
மதனன்கைக்கணையினலு மலயமாருதத்தினலும்
விதவிதவிரகமேறி மெலிந்திடாதிருப்பாயம்மா
சிதைவிலாவுனதுபங்கில் தெய்வமுஞ்சகாயமாமே.

வசனம்.

கேளுமம்மா சந்திரமதியே இப்படிப்பட்ட விரகவேதனையினலே விருதாவாய்நொந்து வருத்தப்படுத்திக்சொள்ள வேண்டாமுன்மனதின்படியே தெய்வசகாயமுண்டாகும் விசனப்படவேண்டாம் விசனப்படவேண்டாம் தாயே.

பொதுவிருத்தம்-இ-ம்-தோடி.

சந்திரமதியைத்தேற்றித் தகுமுபசாரஞ்செய்தே
சுந்தரத்தோழிமார்கள் சூழ்ந்துகொண்டிருக்கவப்பால்
மந்திரிமுதலாயந்த மன்னர்சூழ்சபையிலிந்த
தந்திரம்திதயேந்த்ரன் தான்செய்யும்விதஞ்சொல்வேனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச் சந்திரமதியம்மனுக்குச் சைத்தியவுபசாரஞ் செய்துகொண்டிருக்க அங்கே மகிதபராசன் சமுகத்தில் ஐம்ப

த்தாறு தேசத்திராசாக்களும் வந்திருக்கிறர்களே இனி அங்கேதடக்கிற விதங்காண்க.

மதிதயராசன்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

அறிவினிலுயர்ந்தமந்திரி யைம்பத்தாறுனதேசத்
திறைவர்களெல்லாம்வந்தா ரென்மகள்மணத்தைநாடி
நிறைதருகுடைக்கீழின்ப நேயமாயெனதுபுத்ரி
பொறையுடன்வருகஆங்கோர் பூவையையனுப்புவாயே.

வசனம்.

கேளும் விவேகமந்திரி நாம்நாட்டியிருக்கிற சுயமவரத்தைக் குறித்துஐம்பத்தாறுதேசத்திராசாக்களும்வந்திருக்கிறர்களே இனி நம்முடைய புத்திரியாகிய சந்திரமதியம்மனை முத்துக்குடை நிழலிலேஇராசசபைக்குஅழைத்துக்கொண்டு வரும்படியாக ஒருதோழியை யனுப்பு மந்திரி.

மந்திரி வசனம்.

அப்படியே யனுப்பி வைக்கிறேன்சுவாமி.

மந்திரி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வாளெனும்விழியாள்சந்த்ர மதிதனைப்பருவமாக
நாளொருமேனியாக நலமுடன்வளர்த்ததோழி
கேளிந்தசமுகந்தன்னிற் கிளிமொழியானமாதை
நீளிசைக்குடைக்கீழ்ந்த நிமிஷத்திலழைத்துவாராய்.

வசனம்.

கேளாய் சந்திரமதி யம்மனுடைய அன்புக்கிசைந்த தோழிப்பெண்ணே நம்முடைய ஆண்டவராகிய மதிதயராசாவின் உத்தாரப்படிக்கு இந்த சுயம்வரச்சாலைக்கு நம்முடைய சந்திரமதி யம்மாளைமுத்துக்குடைநிழலிலழைத்துவாதோழிப்பெண்ணே.

தோழி-வசனம்.

அப்படியேயழைத்துக்கொண்டுவருகிறேன்சுவாமி.

தோழி-விருத்தம்-இ-ம் - காம்போதி.

மாரனையுருக்குங் கண்ணின்மணிச் சந்திரமதியேபோற்றி
பார்புகழுனது தந்தை பண்புறுசபையின்மன்னர்
சீருடனிருக்கின்றுருன் சித்தத்திற்கிசைந்தோர்தம்மை
நேர்பெறுமாலைசூட்ட நீயெழுந்தருளுவாயே.

வசனம்.

கேளுஞ் சந்திரமதித்தாயே எங்களாண்டவராகியும் உன்னுடையபிதாவாகியுமெழுந்தருளியிராநின்றமதிதயமகாராசன்சமுகத்திலே ஐம்பாத்தாறு தேசத்திராசாக்களும் வந்திருக்கிறர்கள் உன் பி

தாவின் உத்தாரப்படியே யுன்சித்தத்திற்குச்சம்மதமான புருஷனைகீ மணமாலை சூட்டிவிவாகஞ்செய்து கொள்ளத்தக்கதாக இந்தமுத்துக் குடைநிழலில் எழுந்தருளும் அம்மணி.

சந்திரமதியம்மன்வசனம்.

ஆனாலப்படியேபோவோம் என்னருமையுள்ளசகியே
சந்திரமதியம்மன் சுயம்வரச்சாலைக்கு-வருகிற-தரு.
இராகம்-சாவேரி - தாளம்-ஆதி.

மாதுசந்திரமதிவந்தாள் மாசிலாதகனபூசிதமணியென (மாதுச)
பூதலமீதென்னமாதவஞ்செய்ததென்று
பொன்னுலகோர்மதிக்க நன்னயமாய்த்துதிக்க (மாதுசந்)
குவிந்துதிரண்டுவளர் மேகம்போல்நிறைந்த
கொண்டைக்சொருகழகுந் துன்னவேவைத்த
கோதிலாச்சந்திரப்பிறை சூரியபிறைரத்னக்
குப்பிதளதளென்ன மின்னவே-நல்ல
தவளநிறமாமுத்துச்சுட்டிநுதலழகுந்
தாமரைமலர்முக மென்னவே-மதன்
தநுசேர்புருவமவன் கைக்கணையோகண்கள்
தகுந்ததுமென்றுலகோர் பன்னவே-வள
ருவமைமிகுத்தகுமிழ் மூக்கும்பவளவாயும்
உசிதகண்ணாடியேபோலுங் கன்னமும்வள்ளைக்காதுந்
தவறில்லாதவிந்த வனிதையழகைசொல்லச்
சதுர்முகனால்வசமோ தவஞ்செய்துவந்து-நல்ல

தகைபெறு செப்பினை யொப்பிடச்செப்பருமற்புத வற்புத மெய்ப் பொருளொப்பெறு விற்படை கைப்படு பற்பல விற்பனர் முற்பல னிதுவெனபொற்புறு மொளியென விசயசுந்தர திருமகளிவளென வுசிதசொர்ணமணி வுருவெனவழகிய! (மாதுசந்)

சந்திரமதி-கொச்சகம் - இ-ம்-புன்னாகவராளி.

அருமையாய்த்தவஞ்செய்தே யன்புடனேயெனையளித்த
பெருமைநிறைவேந்த பிரபலனேசரணமையா,
தருமமுறைநின்சமுகந் தன்னிலென்னைவரவழைத்த
கருமமெனக்கறியக் கருதியுரைசெய்வாயே.

வசனம்.

சரணஞ்சரணமையா என்னையீன்ற பிதாவே யென்னைவரவழைத்தகாரியம் அருளிச்செய்யவேணும் எனதுபிதாவே.

மதிதயன்-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

அந்தசிவனருளாலருமைமகளெனவே
விந்தையுடன்வந்துதித்த மின்னேநீவாழிகண்டாய்

தோழி-வசனம்.

மகாசந்தோஷம் அப்படியேசெய்யலாம்தாயே

அரிச்சந்திரன்-விருத்தம்-இராகம் - கும்பகாம்போதி.

திறமிகுமைம்பத்தாறுதேசமன்னவரோகேளீர்
மறுமணமாலைசூட்டமன்னர்க்குமுறைதானுண்டோ
பிறைநுதலிவள்கழுத்திற்பிறக்கும்மங்கலியங்கண்டோம்
மறமிகுமதிதயன்செய்வஞ்சனையறிகிலீரோ.

வசனம்.

கேளுங்கள் ஐம்பத்தாறு தேசத்திராசவர்க்கங்களே இதோ ஆச்சரியம் சந்திரவம்சத்திலேயாவது சூரியவம்சத்திலேயாவது ஒருதரம் விவாகம்பண்ணிக்கொண்ட ஸ்திரீயைமறுபடியும் அவள்மாலைசூட்டினால் அதைபெற்றுக்கொண்டு விவாகஞ்செய்து கொள்ளுகிறது தர்மமாஅதுமுறைமையா க்ஷத்திரியருக்கு அதுதகுமாஇதோ இந்தமதிதயராசன் நம்மையெல்லாம் பங்கம்பண்ணத் தக்கதாகச்செய்தகபடைக்கண்டீர்களா அரி அரி.

கேகயராசன்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

மற்புயவரிச்சந்த்ரேந்த்ராமகிபமாமணிநீர்கேளுங்
கற்புயர்ந்தமாதைக்கண்டுநிந்திப்பதேதோ
விற்பொலிமதிதயன்சொல்விளங்குமிச்சுயம்வரத்தைச்
சற்பனைசெய்தானென்றுசலித்திடுவகையேதையா.

வசனம்.

கேளும் சக்ரேஸ்வரனாகிய அரிச்சந்திரமகாராசனே இந்தக்கன்னிகையாகிய சந்திரமதிமகாபதிவிரதையாச்சுதே இந்தம்மாளைப்பார்த்து நீரிந்தப்படிநிந்திக்கலாமா அவள்முன்னே ஒருபுருஷனுக்குவாழ்க்கைப்பட்டு மறுபடியுமாலைசூட்டவந்தாளென்றும் இந்தமதிதயராசன் ஏதோமோசஞ்செய்தானென்றும் மறுபடியுஞ்சுயம்வரமுண்டாக்கினனென்றும் அந்தம்மாள்கழுத்திலே திருமங்கிலியமிருக்குதென்று மேகமாகச்சபையிலே இப்படிப்பங்கமாய்ப்பேசத்தகுமோ அதுதெரியச்சொல்லவேணும்மகாராசனே.

மகததேசாதிபதி-விருத்தம்-இ - ம்-அடாணா.

நீரினிலாழங்காண்பார் நெடுங்கனல்கடந்துசெல்வார்
பாரினில்மாதர்நெஞ்சைப் பகர்ந்திடவெவராலாகும்
தீரனும்மதிதயேந்த்ரன் செய்கையேயலதுவேறே
சாருமித்திரபேதத்தின் தகைமையோ அறிகிலோமே.

வசனம்.

கேளும் சக்ரேஸ்வரனாகிய அரிச்சந்திரமகாராசனே யோசித

துப்பார்த்தால் லோகத்திலே சத்தசமுத்திரத்தினது சலத்தினுடைய ஆழங்களை தீர்மானித்து இவ்வளவென்று ஆழங்காணலாம் ஆகாசவளா க்கும் பற்றி யெரிந்துவாநின்ற அக்கினியிலேயும் நுழைந்துவரலாம் பெண்களுடையமனதை இன்னதென்று ஒருவராலுங் காணக்கூடா னஆனதாலிந்தமதிதயராசனுடைய மித்திரபேதமோ அல்லது என் னவிதமாகவிளைந்ததோ நாம் எப்படிசொல்லலாகும் அரிச்சந்திர ம்காராசனே.

மதிதயராசன்-அரிச்சந்திரனுக்குச்சொல்- விருத்தம்.

இராகம் - சௌராஷ்டிரம்.

தருமம்போல்விளங்கவந்த தகைபெறுமரிச்சந்திரேந்திரா
நிருபமாமணியேகேளாய் நேரிழையிவள்தன்சேதி
திருநிறைமங்கல்யந்தான் திகழ்கழுத்துடனேயந்த
பரனருள்வரத்தின்வாய்மைப் பண்பெலாமறிகிலாயோ.

வசனம்.

கோபமில்லாமற் கேளும் ராசசக்ரேஸ்வரனாகிய அரிச்சந்திரம காராசனே இந்த உத்தமியினுடைய சேதியைநீர்விசாரித்ததில்லையோ ஆதியிலே நான்பரமசிவனை நோக்கித்தவஞ்செய்து பெற்றேன் அவ ர்கடாட்சித்தவரமிவள்கழுத்திலே தனக்குத்தானே ஒருதிருமங்கலிய ம்விளங்கும் அதேனென்றாலிவள்மகாசத்தியவதி ஆகையால் அந்த திருமங்கலியம் எவர்கள் கண்ணிலே காணப்படுதோ அவர்களேஇ ந்தவுத்தமிக்குப்புருஷனாவார்களென்று அனுக்கிரகஞ்செய்திருக்கிறா ர் அரிச்சந்திரமகாராசனே.

இதுவும்-மதிதயன்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

இன்னமுஞ்சொல்வேன்கேளா யெழில்பெறுமரிச்சந்த்ரேந்திரா
கன்னிகையிவட்குத்தோன்றுதிருப்பதுமன்றிகண்டாய்
மன்னவருளரேயிந்த மகாசபைதனிலுள்ளோரே
பன்னியகண்ணுற்கண்டாற்பகர்ந்தினியுரைசெய்வீரே.

வசனம்.

இன்னமொன்றுசொல்லுகிறேன்கேளும் அரிச்சந்திர மகாராச னே ஆதியிலேபரமசிவனாலேகடாட்சித்த வரத்துக்கொரு மாறுபாடி ல்லாமல் அவளுக்குப்புருஷனாக லபிக்கிறவனுடைய கண்ணுக்குத் தெரிகிறதேயல்லது அவள்தன் கண்ணுக்குத்தெரியாமல் மற்றவர்க ளுடையகண்ணுக்குத்தெரியாமலிருக்கிறது ஒருதிருஷ்டாந்திரம்இதோ இந்த மகாராசசபையிலே இருக்கிறராச ராசமன்னர் மண்டலீகர் பெரியோர்கள் முதலாய்சகலத்திராளுக்குந் தெரிந்திருக்குமே யானு ந்சொல்லலாம்.

நெட்டைச்சேஷையங்கார்-வசனம்.

ஆம் ஆம் அதுவேசரி அதுவேசரி நேக்கேதாகிலுங் கொடுக்க வேணுமகாராசனே.

கட்டைவரதையங்கார்-வசனம்.

அடாய் அறுதலைப்பெட்டிமகனே நோக்கேதுக்கடா கொடுக்கிறது ஓய்மகாராசனே நேக்கேதாகிலுஞ் சமர்ப்பியுங் கண்ணுலேகண்டாலுமில்லையென்றுசொல்லிவிடுகிறோம்.

குறுட்டுஅப்பணையங்கார் - வசனம்.

அடாநேக்குத்தெரியும் நீமாத்திரமன்னு உம்முடைய தம்பிஉங்கள்தகப்பனார் உங்கள்பாட்டனார் உம்முடையமருமகன் நீங்களெல்லோரும்அபத்தப்பட்டிமக்கள்தானே.

கிழக்குப்பணையங்கார்-வசனம்.

அன்னுடாசீஷா ஏதோ உதரநிமித்தியம் ப்ரகிருதிவேஷம்எப்படியாகிலும் நம்முடைய அரிச்சந்திரமகாராசனுக்கு விவாகம் நடந்தால் நமக்குவேண்டியதெல்லாங் கொடுப்பார்அபத்தம் ஏதுக்கடா அவள்மகாபதிவிரதையாச்சுதே அப்படியிருக்குமா.

பிராமணாள்-வசனம்-சதாஸ்து-சதாஸ்து:

கேகயன்மந்தரதேசாபதிமுதலாகியதேசாதிபதிகள்- விருத்தம்.

இராகம்-பைரவி.

சீரபெறுமரிச்சந்த்ரேந்திர திரமாமணியேகேளாய்
ஆரவேநீதான்சொன்ன தபத்தமேயாகுமிந்த
நேரிழைமீதிற்குற்ற நினைந்திடிற்பாபஞ்சேரும்
தார்குழலிவளைவாழ்த்திச் சந்ததந்துதிக்கலாமே.

வசனம்.

கேளும் ராசசக்ரேஸ்வரஸ்வரனாகிய அரிச்சந்திரமகாராசனே நீர் சொன்னவார்த்தையைப்பார்க்குமிடத்தில் அது அபத்தமாகக்காணப்படுகுது இந்தமகாவுத்தமியைப்பார்த்தால் குற்றம்சொன்னவர்களுக்குப்பாபம்வந்துலபிக்கும் எப்போதும் நாமெல்லோரும் மகாபதிவிரதையென்று தோத்திரம்பண்ணுகிறதற்குத் தடையுண்டோ குறைவில்லை அரிச்சந்திரமகாராசனே.

அசரீரி-ஆகாசவாணி-விருத்தம்-இ-ம-மத்தியமாவதி.

மணிமுடிதிரிச்சங்கின்ற மைந்தனேயரிச்சந்திராகேள்
அணிகுலாமதிதயேந்திராணருந்தவப்பலனால்வந்த
தணிவில்லாவழகுவாய்ந்த சந்திரமதியென்பாளை
பணிதிகழானார்சொன்ன படிமணம்புரிகுவாயே.

வசனம்.

கேளப்பா அரிச்சந்திரமகாராசனே பரமசிவனுடைய வரத்தினாலேவந்த சுயம்பாகிய திருமங்கலியத்தோடுங்கூடிய இந்தசந்திரமதியம்மாளை நீ மணமாலைசூட்டிக்கொள்ளுகிறதற்கு யாதொருசந்தேகப்படவேண்டியதில்லை இதோசத்தியமாகநானே சொல்லுகிறேன் நான் தருமதேவதையாகியஆகாசவாணி இவள்கன்னிகையென்கிறதற்கெவ்வளவும்யோசனைபண்ணவேண்டியதில்லை அரிச்சந்திரமகாராசனே.

சந்திரமதி-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

இந்தமன்னர்சபைதனிலே யினப்பிசகாய்மதித்துரைத்து
சுந்தரஞ்சேர்திரிச்சங்கு சுதனெனவாழ்மதனுகேள்
அந்தசிவனளித்தவரம் அவப்படுமோநிஜமாகில்
வந்துவிழுமுன்கழுத்தில் மணமாலையெனவிதுவே.

வசனம்.

ஆனால்நானொன்றுசொல்லுகிறேன்கேளும் மகாராசனே ஆதியிலேபரமசிவன்கொடுத்தவரப்படியே என்கழுத்திலுண்டாகிய திருமங்கலியத்தைக்கண்டவரே எனக்குப்புருஷனாகவேண்டியது யாத்திரைவந்தபிராமணாள் இவர்பேரைச் சொன்ன மாத்திரத்தில் சத்தியமாயிவர்பேரிலெனக்கு விளைந்தஆசையும் அந்தப்பரமசிவன் கடாட்சித்த வரமேயல்லாமல்வேறில்லையென்பதுநிசமேயானால் இதோ வெண்கையிலிருக்கிறமாலையானது உம்முடையகழுத்திலே மணமாலையாய் விழக்கடவது.

பிராமணாள்-வசனம்-சதாஸ்து.

பொதுகொச்சகம்--இ-ம்-புன்னாகவராளி.

போதவசரீரி புகன்றவதனாலரசரெல்லாம்
ஈதுநிசமென்றுரைத்தாரிப்பால்மதியன்றன்
மாதுவிடுத்த மணமாலையரிச்சந்திர
நீதன்கழுத்தில் நிலவாமாய்விழுந்ததுவே.

வசனம்.

இந்தப்பிரகாரம் சந்திரமதியம்மன் அந்தச்சபையிலே சத்தியத்தைக் குறித்துத் தன்சுயமங்கலியத்தைக் கண்டவரே தனக்குப் புருஷனாவாரென்று ஈஸ்வரர்கொடுத்தவரத்தை நினைத்து மாலையை ஆகாசவீதியில் எறிய அது அரிச்சந்திரமகாராசன் கழுத்தில் வந்து விழுந்ததென்றறிக.

மதிதயாசன்-மந்திரிக்குச்சொல்-விருத்தம்--இ-ம்.தோடி.

புகழ்பெறுமந்திரிகேளென் புண்ணியபலனைக்கண்டேன்
மகிழ்சல்லைம்பத்தாறு மண்டலாதிபர்களான

மகளெனவெனக்குவாய்த்த மாதுபுண்ணியமுங்கண்டேன்
சகதலந்தனிலென்போலுந்தவஞ்செய்தோரார்சொல்வாயே.

வசனம்.

சேனும்விவேகமந்திரி ஆஆஆ ஓஓஓகோ எனக்குமகளாகவந்து பிறந்த இந்தமகாவுத்தமியினுடைய புண்ணியவசத்தையுங் கண்டேன் நான்செய்தபுண்ணியத்தையும் இதோபிரத்தியட்சமாகக்கண்டேன் என்னைப்போல யார்தான் தபோபலன் அனுபவிக்கப்போகிறார்கள் நான்செய்தபாக்கியமே பாக்கியம்.

மந்திரி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

பார்புகழ்மதிதயேந்திர பார்த்திபரேகீர்கேளும்
ஏர்பெறுமுனதுபுத்ரி யெணணமீடேறுங்காலம்
சேரவேமுடிந்துதப்பால் திருக்கல்யாணச்சாங்கியம்
சீர்பெறுவசிஷ்டராலே திருத்தமாய்முடிக்கச்செய்வீர்.

வசனம்.

மேனும்எங்களாண்டவனாகிய மதிதயமகாராசனே தேவரீருடைய திருக்குமாரத்தியாகிய சந்திரமதியம்மன்செய்த தபோபலம் நிறைவேறுங்காலம் வந்தது ஆகையால் ராசசக்ரேஸ்வரனாகிய இந்த அரிச்சந்திரமகாராசன் உமக்குமருமகனானார் இனி திருமங்கலிய தாரணமுதலாகிய கலியாணச்சடங்குநடத்தி வைக்கும்படியாக இதோ எழுந்தருளியிருக்கிறாரே வசிஷ்டமகாமுனி யிவருடன்சொல்லியிவரா லேநடக்கும்படிசெய்யவேணு மகாராசனே.

மதிதயராசன்-வசனம்.

அப்படியேசெய்வோம்விவேகமந்திரி.

மதிதயன்-விருத்தம்-இ-ம்-சுருட்டி.

கணமெனும்பிரமரிஷடை கலந்திடாமுனிவர்போற்றும்
குணநிதிவசிட்டநாத குருவேநின்மலர்த்தாள்போற்றி
மணமாலேகுட்டிகிற்கு மகட்குமாங்கல்யசாங்கம்
தணிவரநடத்திவாழ்த்தித் தகைமெறமுடிப்பாய்சுவாமி.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமி வசிஷ்டமகாமுனிவரே இதோஇந்த அரிச்சந்திர மகாராசனுடைய திருக்கழுத்திலே அடியேன்செய்த புண்ணியவசத்தினாலேயுந் தேவரீருடைய கடாட்சத்தினாலேயும் அடியேனுடைய குமாரத்தி பதிவிரதாதர்மம் நிலைக்கத்தக்கதாக மணமாலேகுட்டிகிற்கிறாளே இனிதிருமங்கலியச்சாங்கியம் நடத்திவைக்கத்தக்கதா

கமணவறை செய்திருக்கின்ற கல்யாணமண்டபத்திற்கு எழுந்தருளும் சுவாமி வசிட்டமகாமுனிவே.

வசிட்டர்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

மந்தரத்தோளாய்மிக்க மதிதயமன்னுகேளாய்
சுந்தரவரிச்சந்திரர்க்குன் தோகையேபாரியாளுள்
மந்திரவோமசாங்கியம் வகையெலாமுடித்துத்தானே
இந்திரனிந்திராணிபோலு மென்றும்வாழ்ந்திடச்செய்வேனே.

வசனம்.

கேளும் மதிதயமகாராசனே உம்முடையகுமாரத்தியாகிய சந்திரமதியம்மன் நம்முடையசீஷனுகிய இந்தஅரிச்சந்திரமகாராசனுக்கேபாரியாளுள் இதற்கினிச்சந்தேகமா இந்தத்திருக்கல்யாணச்சடங்கெல்லாம் நானேசெய்விக்கிறேன் இதோகல்யாணமண்டபத்திற்கு வருகிறேன் நடவுங்கள்.

மதிதயராசன்-வசனம்.

அப்படியேயெல்லோருந் திருக்கல்யாணமண்டபத்திற்கு வரக்கடவோம் சுவாமி.

பொதுவிருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

மாதெறிந்திட்டமாலை மன்னவன்கழுத்திலாழச்
சூதில்லாமதிதயன்செய் தோத்திரத்தாலேயந்த
கோதில்கல்யாணசாங்கியங் குறித்தமண்டபத்தைநாடி
மாதவமிகுவசிட்டர் மகிழ்வுடன்வருகின்றாரே.

வசனம்.

அகோதெப்படியென்றால் சந்திரமதியம்மனுனவள் தன்னுடைய பதிவிரதாதர்மத்தை நிலைநிறுத்திஆகாசத்திலே விட்டெறிந்த மாலையானது அந்த அரிச்சந்திரமகாராசன் கழுத்திலே விழுந்த பிற்பாடு அந்தச்சந்திரமதியம்மனைப் பெற்ற மதிதயராசன் கல்யாணசாங்கியம் நடத்தும்படி வசிட்டரைப்பிரார்த்திக்கக் கலியாணமண்டபத்திற்குவசிட்டர் வருகிறவிதங்காண்க.

வசிட்டர்-கலியாணமண்டபத்திற்குவருகிற-தரு
இ-ம்-மத்தியமாவதி-அடதாளம்.

பிர்மரிஷிவசிட்டரிதோவந்தாரே-தவறிலாநெறிதவநிலையறி (பிர்ம)
தர்மார்த்தகாமமோட்ச சதுர்விதமுறைதிகழ்கடாட்ச
தயாரசமிகுத்தசோதி சகலநீதிவெகுபிரக்யாதி (பிர்ம)
துங்கமிகுசடைமுடிமின்றுதுலங்கமகமேருவின்மிசைமேவியமதி
போல்சுடர்திகழும்படாத்-துங்கமிகுசடைமுடிமின்றுதுலங்க
பொன்னுல்வீடுவிழுதென்றிடப் புவியோர்முதலெவருந்துதி
புகழ்தற்பாவேணிமிதென்றிடமகிழ்சிற்குணநீதர்புகன்றிடத் (துங்)

பண்ணுந்தவநிலைபெற்றவர் பாவுங்கதிதனையுற்றவர்
நண்ணுஞ்சுரர்முதல்மற்றவர் நயமாம்பலகலைகற்றவர்
நாடிநிலைதேடியிசைபாடிகொண்டாடிவரு
நாககீதவேதமோத நயமொடுவிதியொரு பயமெனவளர்தரு (து)

பிரணவாகாரசொருபமிதுவென்னவேமெய்யிலங்கத்
தங்குங்காதில்குண்டலந்தரித்துத்நகைபெறுதிநயமந்த்ரமுச்சரித்து
பொங்கும்பாதனைதயனுசரிதநுப்போதசாரகலைகள்விரிதநுப்
புகழ்ந்துமனமகிழ்ந்துநலபுனிதத்திருத்தண்டொடுநூலணி
கனைநற்றவமானசிரோன்மணிப்பிரம [illegible] (து)

வசிட்டர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

பார்புகழ்மதிதயேந்திர பார்த்திபாவுனதுபுதரி
சீர்தருமரிச்சந்திரற்குத் திகழ்மாலைசூட்டினளே
ஏர்தருவிவாகசாங்கிய மெழிலுடனடத்துதற்கே
சார்தருதிரவ்யவோமஞ் சமித்தெல்லாம்வரச்செய்வாயே.

வசனம்.

கேளாய்மதிதயமகாராசனே யுனதுபுத்ரியாகிய இந்தச்சந்திரமதியம்மன் நம்முடைய அரிச்சந்திரமகாராசனுக்கு மணமாலை சூட்டினளே அதுவேசரி ஆகிலுந்திருமங்கலிய சாங்கியநடத்துதற்கு வேண்டியஓமத்திரவியமுதலாகிய சமித்துகளும் சீக்கிரமாயழைப்பியும் மகாராசனே.

மதிதயன்-வசனம்.

அப்படியேவேண்டிய ஓமத்திரவியங்களும் சமித்துகளும் சகல சாமக்கிரியைகளும் இதோவரவழைத்தேன் கல்யாணசாங்கியம் சம்பிரமமாகநடக்கட்டுஞ் சுவாமி.

வசிட்டர்-வசனம்.

ஓய்கேகயமகாராசனே நம்முடைய அரிச்சந்திரமகாராசனைமணக்கோலமாகஅலங்காரஞ்செய்து இந்தத்திருமணவறையில் இந்த ஆசனத்தின்பேரில்இருக்கச்செய்யும்.

கேகயராசன்-வசனம்.

அப்படியேசெய்கிறேன் சுவாமி வசிட்டமகரிஷியே.

வசிட்டர்-வசனம்.

ஓய்மதிதயமகாராசனே உம்முடையகுமாரத்தியாகிய சந்திரமதியம்மனை மணக்கோலமாக அலங்கிரதஞ்செய்து இந்தத்திருமணவறையில் அரிச்சந்திரமகாராசனுடனேகூட இவ்வாசனத்தின்பேரிலிருக்கச்செய்யும் இதுமகாசுபலக்கினம்.

மதிதயராசன்- வசனம்.

அப்படியே அலங்காரஞ்செய்துளனதுதவப்புத்திரியாகியசந்திரம தியம்மனே இதோ ஆசனத்திலிருக்கச்செய்தேன் சுவாமி.

வசிஷ்டர்-வசனம்.

ஓய்பிராமணஸ்வாமிகளே வேதபாராயணஞ்செய்யுங்கள்நவக்ரகபூசைசெய்யுங்கள் நவக்கிரகஹோமஞ்செயயுங்கள் இந்தாநாமே புரோகிதராகவிருந்து திருமங்கல்யதாரணஞ் செய்விக்கிறோம.

பிராமணாள்-வசனம்.

சதாஸ்து அப்படியேசெய்கிறோம் ஓய் வசிஷ்டமகாரிஷியே யேதோ ஏழைப்பிராமணாள் உமக்கொருவாயவிசேஷம எங்களுககொருதலேமுட்டை.

நெட்டைச்சேஷையங்கார்-வசனம்-நேக்குமப்படியே.

குருட்டுஅப்பணையங்கார்-வசனம்-நேக்குமப்படியே.

கிழக்குப்பனையங்கார்-வசனம்-நேக்குமப்படியே.

நத்திவாதையங்கார்-வசனம்-நேக்குமப்படியே.

நெட்டைச்சேஷையங்கார்வசனம்.

ஏதுக்கடாநோக்குமப்படியேகொடுக்கிறது.

கிழக்குப்பணையங்கார்- வசனம்.

அடாநெட்டைச்சேஷா யறுதலேத்தேவடியாள்பிள்ளாய் சமயத்திலேயாவாதாடுகிறாய் நேக்குத்தான்கிடைக்கடடுமே.

குருட்டுஅப்பணையங்கார்-வசனம்.

அடாநேக்குரெண்டுகண்ணுந்தெரியாது நோக்குக்கண்ணிருக்கிறது அடாயெவாளெப்படிசொல்லுகிறார்களோ அப்படிகேட்கிறதுதான் நேக்கேகிடைக்கவேணும்.

நத்திவாதையங்கார்-வசனம்.

நேக்கில்லாதசுதந்திரம் நோக்கெல்லாமெப்படியுண்டாச்சுது

வசிஷடர்-வசனம்.

ஓய்பிராமணாளே மகாராசனுங்களுக்கெல்லாம் குறைவில்லாமல்நடப்பிப்பார் சண்டைபோடாமலிருஞ் சுவாமிகளே.

பிராமணாள்-வசனம்

அப்படியேயிருக்கக்கடவோம் சுவாமிவசிஷடமகாரிஷியே.

வசிஷடர்-வசனம.

சங்கீதமேளவாத்தியமுழங்கச்செய்யுமதிதயமகாராசனே

மதிதயன்-வசனம்.

அப்படியேசகலவாத்தியங்களுமுழங்கச்செய்விக்கிறேனசுவாமி

வசிஷ்டர்-ஆசிவிருத்தம்-இ-ம்-தோடி.

அருந்ததிக்கற்பினளிவ்வருஞ் சந்த்ரமதியைக்கூடிப்
பெருந்தகையரிச்சந்த்ராபிரியமாய்வாழிவாழி
திருந்தியவுலகந்தன்னிறறிகழுமெய்வசனங்கொண்டே
பொருந்தியபுத்ரரோடும்புகழெலாம்பெற்றுவாழி.

பிராமணாள்-வசனம்.

சதாஸ்து சகலபாக்கியமுஞ்சித்திரஸ்துதீர்க்காயசுஞ்சகலதனகனவஸ்துவாகனவெகுபுத்திரலாபஞ் சித்திரஸ்து சுபமஸ்து.

மதிதயராசன்-கட்டியனுக்குச்சொல்-விருத்தம்.

இ-ம்-நாட்டை.

புனிதநற்சபையில்காக்கும்புகழ்பெறுகட்டியக்காரா
வனிதையாமெனதுபுத்திரிமணக்கோலமகிட்சிகொண்டேன்
முனிவர்கள்முதலாய்மற்றமுழுமறைவேதியர்க்கு
கனகநன்மாரிபெய்துகளிப்புறச்செய்குவாயே.

வசனம்

கேளடா ஆசாரவாசற்கட்டியக்காரா நான்செய்தபூர்வபுண்ணியத்தினலெனதுதவப்புத்திரியாகிய சந்திரமதியமமனுக்குத்திருக்கல்யாணஞ்சம்பிரமமாகவேநிறைவேறியாச்சுதே இனிகுறைவென்னவிருக்குது இங்கேயிதோவந்திருக்கிற மகாரிஷிகள்பிராமணாள் பெரியோர்கள்சர்வத்திராளுக்கும் அவாளவாளுடைய அபேட்சை நிறைவேறத்தக்கதாக சொர்னவருஷமாக வருஷித்து வேண்டியதெல்லாம் எஷ்டமாகக் கொடுத்தனுப்பிவையும்பிள்ளாய்.

கட்டியக்காரன்-வசனம்.

அப்படியேசெய்கிறேன்சுவாமி,

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னுகவராளி.

சந்த்ரமதிதன்னேயரிச்சந்த்ரமன்னன்மணஞ்செய்து
சிந்தைமகிழ்வானபின்புகிருந்தமிர்தபோசனங்கள்
விந்தையுடனுண்டிருக்கவிறல்மறையோர்போனபின்பு
அந்தவசிஷ்டமுனியகமகிழ்ந்தேதுணைப்பார்.

வசிஷ்டர்-மதிதயனுக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

மலையெனத்திரண்டதோளாய்மதிதயமன்னகேளாய
நிலைபெறுமனதெண்ணந்தான் நிறைவேறிமகிழ்ச்சிகண்டாய்
நலமிகுமரிச்சந்த்ரேந்த்ரநாதனுன்புத்ரியோடும்
கலைநிறைவயோத்திக்கேகக்கனிவுடனனுப்புவாயே

வசனம்.

கேளும்மதிதயமகாராசனே உம்முடையஎண்ணத்தின்படியே யுமதுதவப்புத்ரியாகிய இந்தசந்திரமதியம்மனுக்குத்திருக்கல்யாணம்நிறை

யேறிமுடிந்ததே இனியுமக்குமருமகனாகவந்த இந்தஅரிச்சந்திரமகாராசனையுமு முடையகுமாரத்திலையு மற்றுமுள்ள ராசவர்க்கங்களையும் ப்ராயணசந்நாகம்பண்ணி அயோத்திக்குப்போய்ச்சேர வுததிரவுகொடு மதிதயமகாராசனே வந்துவெகுநாளாச்சுதே.

மதிதயராசன்-வசனம்.

அப்படியேபோய்வரலாஞ் சம்பூரணமாக கிருபையிருக்கட்டுஞ்சுவாமிவசிஷ்டமகாமுனியே.

சந்திரமதியம்மன்- மதிதயராசனுக்குச்சொல்-கொச்சகம்.

இ-ம்-புந்நாகவராளி.

எந்தையேயெனையளித்த இனியதநைத்தால்மிக்க
மநதிரஞ்சோப் புயமேவளாமணிநின்றருள்போற்றி
இந்தவயதளவு மெனைவளர்த்தேயிவறகியந்தீர்
சொந்தமனைகமெய்திவிட நான்தொழுதேன்விடைதரவே

வசனம்.

கேளுமெனதருமையாகியபிதாவே ஈஸ்வரானுக்கிரகத்தினாலே என்னைப்பெற்று இதுவரைக்கும்வளர்த்து இந்தமகாராசனுக்கென்னைவிவாகஞ்செய்துகொடுத்தீர் நானெத்தனைகால மிங்கேயிருந்தாலும் புருஷன்வீடுசொந்தமேயல்லதுவேறில்லை ஆகையாலுத்தாவுகொடும்போய் வருகிறேனெனதுபிதாவே.

மதிதயராசன்-வசனம்.

நல்லது அப்படியேபோய்வாலாமெனதுதவப்புத்திரியாகிய சந்திரமதியே.

அரிச்சந்திரன்-வசனம்.

நானும்போய்வருகிறேன்செலவுகொடும்மதிதயமகாராசனே.

அப்படியேபோய்வாலாமிராசசக்ரேஸ்வானாகிய அரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

தருக்குள்ளபுவிபுகழரிச்சந்திரமகாராசன்தன்நிருநகர்க்குவந்தான்

செருக்குள்ளமந்திரிமாருஞ்சேனைத்திரளனைவோருஞ்
சோநடந்துபுகழ்தேவிசந்திரமதிமகிழ்
மதிதயராசனன்பாய்வாழ்த்திவிடைகொடுக்க
மங்கையராலாத்திமாணிக்கத்தாலெடுக்கத்
துதிபெறுமெச்சரிக்கைசொல்லியிசைதொடுக்கத்
துந்துமியென்றபேரிதொனிகளெங்குமுழங்க

சதுர்மறையோர்களுந்தவமிகுவசிஷ்டருஞ்
சனுமயபார்த்துநல்லசமையமிதென்றுசொல்ல (தருக்ரு)

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

திகழுங்கன்னோசிநாட்டைத்திறமுடனரசுசெய்து
பகிழவுறுமதிதயன்றன்மகள்தனைமணஞ்செய்தந்தப்
புகழ்பெறுநகரைநீங்கிப்புனிதநல்லயோத்திநாடித்
தகைபெறவந்துசேர்ந்துசதிருடன்வாழ்ந்திட்டாரே

வசனம்.

இந்தப்பிரகாரமாக மதிதயராசன்குமாரத்தியாகிய சந்திரமதியம்மாணைச்சுயம்வரச்சாலையிலேன்பத்தாறுதேசததிராசாக்களும் அறியத்தக்கதாகமணமாலைசூட்டி விவாகஞ்செயதுகொண்டு அரிச்சந்திரமகாராசாவானவர் அயோத்தியாபுரியேவந்துசேர்ந்தாரென்றறிக.

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

துங்ககதிர்குலதீபசுகுணவரிச்சந்திரனைச்
சங்கையின்றிப்பஞ்சணைமேற்றழுவிமிகவாழ்நாளில்
இங்கிதமாஞ்சந்திரமதிக்கிசைந்தகெர்ப்பந்தரித்துவளர்
திங்களொருபத்துஞ்செழிக்கநிறைந்ததுவே.

சந்திரமதி-தோழிக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-பியாகடை.

அன்பினிலுயர்ந்தவெந்தனமுகுள்ளசகியேகேளாய்
இன்பம்போல்வந்தகெர்ப்பமெனக்கிதுநிறைந்ததாலே
என்பதிக்குரைப்பாய்கைதேர்ந்திடுமருத்துவச்சியேனும்
பின்பொருவலிகண்டால்நான் பேதையெனென்செய்வேனே.

வசனம்,

கேளாயெனதுபிராணபதமானசகியே யெனக்கானல்போதுகாலநிறைந்துவருகுது கெர்ப்பவேதனையெடுக்குமுன்னமே என்பிராணநாட்சகரான அரிச்சந்திரமகாராசாவுக்குச்சொல்லி ஒருமருத்துவககிழவியை அதிசீக்கிரத்துக்கு அழைத்துவாடிசகியே.

தோழி-விருத்தம்-இ-ம்-காம்போதி.

வாரணிதனத்தாய்சந்திரமதியெனுந்தாயேகேளாய்
பார்மிசைப்பெண்சென்மங்கள் படைத்துதித்தவர்கட்கெல்லாஞ்
சீர்பெறுகணவரோடேசேர்தலுங்கெர்ப்பமாகி
ஏர்பெறுமைந்தர்தம்மையீன்றிடல்கடமைதானே.

வசனம்.

கேளுமம்மா சந்திரமதித்தாயே பூமியிலே பெண்ணாகங்களாய்ப் பிறந்தோர்களெல்லாம் புருஷரைக்கூடி யின்பசவுக்கியங்களை

யடைகிறதும் அதனாலே பிள்ளைகளைப்பெறுகிறதும் சவுக்கியமாயிருக்கிறதுதானே அதைக்குறித்து விசனப்படவேண்டியதில்லை நான்போய் நாமுடையஇராசாவுக்குச்சொல்லி மருத்துவக் கிழவியையழைத்துக்கொண்டுவருகிறேன் அம்மா.

தோழி-இராசாவுக்குச்சொல்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

உலகெலாமதிக்குங்கீர்த்தி யுயரிச்சந்திரமன்னா
மலர்நிறைமுகத்தாள்சந்திர மதியெனுமுனதுதேவி
நலனுறுகெர்ப்பமாகி நாள்நிறைந்திறக்கமுற்றாள்
வலனுறுமருத்துவச்சி வரச்செய்யவேணுமையா.

வசனம்.

கேளும் மகாராசசக்ரேஸ்வரா உமதுபிராணபதமாகிய சந்திரமதியம்மனுக்குப் பூர்ணகெர்ப்பமானதால்கெர்ப்பவேதனைகாணுமுன்னமே ஒருமருத்துவககிழவியை வரவழைததனுப்பவேணும் சுவாமி.

இராசன்-வசனம்.

மகாசந்தோஷம்மகாசந்தோஷம்இதோஅழைப்பிக்கிறேன்.

இராசன்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

ஆசாரவாசல்காக்கு மரியகட் டியக்காராகேள்
தேசாருமெனதுதேவி திகழ்கெர்ப்பவாதையானாள்
கூசாமல்மருத்துவஞ்செய் குறிதெரிகிழவிதன்னை
நீசோம்பலிராமற்சென்றே நிமிஷத்திலழைத்துவாடா.

வசனம்.

ஆரடாஆசாரவாசற்கட்டியக்காரா எனதுபிராணபதமானசந்திரமதிதேவி கெர்ப்பவேதனைபடுகிறாளாம் அதிசீக்கிரத்திலேயோடி மருத்துவக்கிழவியையழைத்துவாடா.

கட்டியன்-வசனம்.

அப்படியேபோயழைத்துவருகிறேன்சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

மாதருமணியாஞ்சந்திர மதிகெர்ப்பவாதைதீர்க்க
கோதிலாமந்த்ரதந்த்ர குறிதெரியனைத்துந்தோந்து
சாதகமிகுத்தவித்தை தன்னிலேசிலாக்கியமான
மூதுயர்மருத்துவச்சி முணகிக்கொண்டிதோவந்தாளே.

வசனம்.

அகோதெப்படியென்றால் மருத்துவக்கிழவி வருகிற விதங்காண்க.

மருத்துவச்சிவருகிற-தரு-இ-ம்-பந்துவாளி-ஆதிதாளம்.

வங்கணமாகவேதள்ளாடிமருத்துவக்கிழவிவந்தாள்
கூனிமிர்ந்துமருத்துவக்கிழவிவந்தாள்
சங்கையில்லாமலேநான்கைதொட்டவிடமெல்லாம்
தழைத்துப்பிள்ளைபெற்றுப்பிழைத்துநன்றுப்பிலேத்து
சதிருடன்வாழ்வரென்றுசாமர்த்தியமேபுகன்று (வங்கணம்)

எடுத்தடிவைக்குமுன்னே யிளைத்திரைத்தேநடுங்கி
யெத்தனை தூரமென்றேயெண்ணிக்கொண்டேயொடுங்கிக்
கடுத்தமாகவேபேசிக் கோலையுமூன்றிக்கொண்டு
கண்ணைமுழித்துப்பார்த்து அவிழும்பீதகக்
கலையையிடையிற்சேர்த்துகருடிக்கைபோல்வாயிற்பொங்கி
கோடுவாய்வழிந்தொழுகக்கொறட்டையிழுக்கநீண்ட
அருத்திபோல்முலைநழுகக்குந்தியிருந்துஎழுந்திருந்து
குணகிக்குணகிமெள்ளமுணமுணவென்றுகள்ளக்
கொழுத்தசிறுக்கிகளென்னைபழிக்கவொட்டார்களென்ன (வ

வசனம்.

வண்டிசக்களத்திமகளே யென்னையேண்டியலட்டுகிறாய் எனக்கென்னகண்ணுதெரியுதாமணணுதெரியுதா நடக்ககூடுதா அடிசும்மாயிருந்தாலுமிருக்கவொட்டவில்லையேநல்ல ஆண்பிள்ளையைப்பெறுவாய்பயப்படாதேயம்மா.

சந்திரமதி-விருத்தம்--இ-ம்-கண்டா.

மந்த்ரதந்த்ரத்தின்மிக்க மருத்துவமாதேகேளாய்
இந்தவேதனையின்கோர மென்னென்றுசொல்வேனம்மா
மைந்தனைப்பெறுதல்வேண்டி மாதவஞ்செய்குவார்கள்
சிந்தைதான்கலங்குதென்ன செய்குவேன்கிட்டேவாடி.

வசனம்.

கேளாயம்மாமருத்துவச்சிபுத்திரவாஞ்சையினாலேதபசு பண்ணிப்பிள்ளைகளைப்பெறநினைப்பார்கள் அதைநினைக்கும்போதேயென்மனதுகலங்குதே என்னசெய்வேனென்னசெய்வேனிப்படிசற்றே யென்கிட்டேவாடியம்மா.

மருத்துவச்சி-வசனம்.

பயப்படாதே பயப்படாதே நான் கிட்டவே யிருக்கிறேனடி அம்மா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

காணமேவிடுதேசொல்ல நானென்னசொல்வேனம்மா
சாணல்லோவயிறென்பார்கள் சதுர்முகன்விதித்தவாறே

காணுமிப்பிண்டம்நின்று கலக்குதேயடிவயிற்றை
வீணல்லோபெண்செனனந்தான்மேதினிகெடுத்திடாதே.

வசனம்.

ஐயையோபிரமதேவர்கட்டளைப்படியேயென் சாணுடம்புள்ளமனிதருக்குஒருநசாண்வயிறென்றுசொல்லுவார்கள் அதிலேநான்படுகிற அகோரத்தையென்னென்றுசொல்லுவேன் ஆ அதோ அடிவயிற்றிலே நின்று அந்தப்பிண்டம் கலக்குதே அதிலுள்ளவருத்தத்தை,யெல்லாம சொல்லவென்றாலும்வெட்கமாயிருக்குதேபூமியிலே பெண்செனனமெடுக்கிறது விருதாவேயல்லது இது அடுக்குமாவென்னசெய்வேனடி மருததுவச்சி.

மருத்துவச்சி-வசனம்.

அம்மாவுன்னைப்பார்ததால் மகாசவுந்தரவதியாகக்காணுதே உனக்குஇந்தவிளமையில்தானேபுத்திரபாக்கியமகிடைத்ததேமகா சந்தோஷம் மகாசந்தோஷமஉன்னைப்பெறறதாய்தந்தையார் இவருக்குநீயெப்படிபாரியாளானாய் இந்தப்பிள்ளையெப்படிவந்தது இநதவரலாறெல்லாம் எனக்குததெரியச்சொல்லடியம்மா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-முகாரி.

மன்னுமென்னுயிர்போல்வந்த மருத்துவமாதேகேளாய்
கன்னமாபுரியையாள்வோன் காதல்சேரெனதுதந்தை
அன்னிலைகலைவாச ரருட்படிசுயம்வரத்தில்
நன்னெறிமெய்மையோதி நான்மணமாலையிட்டேன்.

வசனம்.

கேளுமம்மாமருத்துவமாதே கன்னமாபுரியையாளு மதிதயமகாராசனென்னைப்பெற்றதகப்பனார் அவருக்குஆதியிலே கயிலாசவாசர் கொடுத்தவரத்தின்படியேஎன்கழுத்திலிருக்கின்றசுவயதிருமங்கிலியத்தைக்கண்டவரேயெனக்குப் புருஷனாவாரென்று அருளியதால் என்தக கப்பனார்உண்டுபண்ணினசுயம்வரச்சாலையிலே நானேயிந்தஅரிச்சந்திரமகாராசன்கழுத்தில்மாலையிட்டுப்பாரியாளானேன் இதுதானென்னிடவரலாறம்மா.

மருத்துவச்சிசொல்-வசனம்.

அப்படியாஅப்படியா மகாபாக்கியம் ஆனால் பயப்படாமலிருந்தாயே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

எப்படிபயப்படாமலிருப்பதென்செய்வேனம்மா
குப்புறக்கவிழொண்ணாது குனிந்துமேனிமிரொண்ணாது
தப்பிலாக்கைகால்சோர்ந்து தளருதேநாவுலர்ந்து
செப்பமாய்நிற்கொணாது திரண்டிதோவருதேதம்மா.

வசனம்.

ஆஆ கேளடியம்மா மருத்துவமாதே எப்படி நான் பொறுத்திருப்பேன் கைகால்சோருது நாவுலர்ந்துபோகுது குனியவும்கூடாது நிமிரவுங்கூடாது ஆஅதோ திரண்டேதோ வொருவிதமாய்வருகுதே என்னசெய்வேன் என்னசெய்வேனடியம்மா.

சந்திரமதி-தரு-இ-ம்-கண்டா-ஆதிதாளம்.

ஈதென்னவேதனை-அம்மா-அம்மா-அம்மா-அம்மா-ஓகோ - ஈதென்ன
சோதிக்குதேதெய்வம்பொதுவென்பதில்லையோ
தோகையேயெனக்கொருதேறுதல்சொல்லையோசூட்சுமம்
அம்மாஇதுசூட்சுமம்புத்திரசோபத்தினாலிது தாபத்துயராகுது
ஆபத்தென்றாலது அனைவர்க்குமேபோதும் ஈதென்ன
சென்மங்களபலகோடியே பெண்சென்மமுமதைநாடியே
முன்சென்மந்தனிற்செய்த பூசாபலமுக்யமோ
இனியென்னால்சக்கியமோஐயையோமோகமேஅதுவெகுதாபமே
இந்தமுதிர்ந்தவலியெடுக்கபிதிர்ந்தென்னுளம்நடுக்க
சிதைந்திவ்வுயிரடுக்கதிரேகந்தனையொடுக்கச்செய்யுதேபங்கம்
நிலைகுலைந்துநையுதென்னங்கம்போதும்போதும் ஈதென்ன

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

மன்னனரிச்சந்திரன்றன் மனைவிசந்திரமதிதானோர்
நன்னயஞ்சேர்மலர்க்கொடிபோல்நயந்தகெர்ப்பத்துயர்நீங்கிப்
பொன்னுலகோர்மகிழ்வாகப் புவனியுள்ளோர்தவந்தழைக்க
அந்நிலையாணபுதல்வனையே யகமகிழ்வாய்ப்பயின்றனளே.

வசனம்.

அகோதெப்படியென்றால் அயோத்தியாபுரியையரசாளும் அரிச்சந்திரமகாராசாவின்மனைவியாகிய சந்திரமதியம்மன் கெர்ப்பவேதனையைநீங்கி ஆண்பிள்ளையைப்பயின்றாளென்றறிக.

தோழிவிருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

மன்னர்கள்மன்னாபோற்றி மனைவியாயுனக்குவாய்த்த
மன்னுதேன்மொழியாள்சந்திர மதிகெர்ப்பத்துயரம்நீங்கி
பொன்னுலகாளுமிந்திரன் புகழ்ந்திடும்புத்ரன்றன்னை
இந்நிலம்புகழப்பெற்றா ளிணையடிபோற்றிபோற்றி.

வசனம்.

கேளும் இராசசக்ரேஸ்வரா உமதுபத்தினியாகிய சந்திரமதியம்

மன் கெர்ப்பவேதனைநீங்கி இந்தபூலோகமெல்லாம் ஒருகுடையின்கீழா ளத்தக்கதாக ஆண்பிள்ளையைப்பெற்றாள்சுவாமி.

இராசன்-வசனம்.

அப்படியே மகாசந்தோஷம் மகாசந்தோஷம் ஆண்சிங்கத்தைப் போல் நமக்கொருபிள்ளையும்பிறந்ததா மகாபாக்கியம் மகாபாக்கியம்.

இராசன்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

வீரர்கள்புகழுமெய்மை மிகுசத்யகீர்த்திமந்திரி
தார்பெறுமெனக்குப்புத்ர சந்தானமுண்டாச்சென்று
சீருடன்சொன்னளிந்த சேயிழைக்கனேகரத்ந
ஆரமும்பணிகள்வஸ்திர மடைவுடன்தரச்செய்வாயே.

வசனம்.

கேளும்சத்தியகீர்த்தியாகியமந்திரி பகவத்கடாட்சத்தின லெனக் குப்புத்திரோச்சவமுண்டாச்சென்று வந்துசொன்னளே இந்த தோழி ப்பெண் இவளுக்கனேகரத்நாபரணங்கள் பட்டுபட்டாவளிகள்முதலா கியதுகளும் வெகுமதிகொடுத்தனுப்பச்சொல்லு மந்திரி.

சத்தியகீர்த்தி-வசனம்.

மகாபாக்கியமப்படியேகொடுத்தனுப்பச்சொல்லுகிறேன் சுவாமி.

மந்திரி-விருத்தம்-இ-ம்-தோடி.

திக்கெல்லாம்புகழுங்கீர்த்தி அரிச்சந்தர மன்னன்
முக்கியமாம்வாசற்காக்குமுனைபெறுகட்டியக்கார
தக்கம்மாசனுக்கேதனைபன் வந்துரித்ததாலே
மிக்கயாமணியாடைப்பொன் வெகுமதியிவட்கீவாயே.

வசனம்

கேளும்பிள்ளாய் ஆசாரவாசற்காக்குங்கட்டியக்கார நம்முடைய ஆண்டவராகிய இராசசக்ரேஸ்வரனுக்குப்புத்ரோச்சவமுண்டானதால் அந்தசேதிசொல்லவந்த இந்தத்தோழிப்பெண்ணுக்கு இரத்நாபரணங்க ளசொானங்கள் பட்டுபட்டாவளிமுதலாகியதும வெகுமதிகொடுத்தனு ப்பும்பிள்ளாய் கட்டியக்கார.

கட்டியன்-வசனம்.

அப்படியேகொடுத்தனுப்புகிறேன்சுவாமி.

இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

சேளறிவுபர்ந்தசத்ய கீர்த்தியாகியதோர்மந்திரி
ஆளுமென்னரசைத்தாங்கஆண்பிள்ளைபிறந்ததாலே
நீள்புவிமறையோருக்குநிறையுகல்யாசகர்க்கும்
நாளெட்டுவரைக்கும்சுவர்ணநன்மழைபொழிவிப்பாயே.

வசனம்.

கேளுஞ்சத்தியகீர்த்திநமக்குப்புத்திரோச்சவமுண்டானசந்தோஷத்து க்காக இந்தப்பூமியிலேயுள்ளவேதப்பிராமணுள் யாசகாள்சர்வத்திராளு

க்கும் எட்டுநாள்வரைக்கும் வந்தவர்களுக்கில்லையென்று சொல்லாமல் சுவாணவருஷமாகக்கொடுக்கச்செய்யும் மந்திரி.

மந்திரி-வசனம்.

அப்படியேகொடுக்கச்செய்கிறேன் சுவாமி.

இராசன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

நானிலம்புகழ்ந்து சொல்லும்நலமிகுசத்யகீர்த்தி
ஆனதோர்மறையோருக்குமரியநல்முனிவோருக்குந்
தானத்திலுயர்ந்திடும்பூதானங்கோதானமெல்லாம்
யானைமேல்முரசமேறறியறைவித்தேதருவிப்பாயே

வசனம்.

கேளுஞ்சத்தியகீர்த்தியாகியமந்திரி யாகாதிகிருதுக்கள்செய்யும்படியாகியரிஷிகள்முதலாகியபிராமணாள் பெரியோர்களெல்லோருக்கும் பூதானங்கோதானம் அன்னதானவஸ்திரதானமுதலாகியதுகளும்யானையின்பேரில்முரசறைவித்து அவாளவாளுக்குவேண்டியபடியேயதேஷ்டமாய்க்கொடுத்தனுப்பச்சொல்லுமந்திரி.

மந்திரி-வசனம்

அப்படியேசெய்கிறேன்மகாராசனே.

சத்தியகீர்த்தி-விருத்தம்.இ-ம்-நாட்டை.

புனிதநல்லறிவின்மிக்க புளகிதகட்டியக்காரா
கனமிகுமறையோர்யாசகர்முதலெல்லோருக்கும்
மனமிகுபூதானங்கள்மறறுங்கோதானமெல்லாந்
தனியானைமுரசிற்சாறறித்தகைபெறத்தருகுவாயே.

வசனம்,

கேளும்பிள்ளாய்கட்டியக்காரா நம்முடைய ஆண்டவனுத்தாரப்படியே யானையின்பேரில்முரசறைவித்துபிராமணாள்முதலாய்யாகாதிகிருதுக்கள்செய்யத்தக்கவாகளாகிய ரிஷிகளுக்குமமற்றுமுள்ள பெரியோர்களுக்கும்வேண்டியபடியே கோதானமபூதானம்வஸ்திரதானமுதலாகியதுகளெல்லாங்கொடுத்தனுப்பும்பிள்ளாய்.

கட்டியன்-வசனம்.

அப்படியேசெய்கிறேன் சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-சாவேரி.

பொன்மணிவஸ்திரமற்றும்பூதானங்கோதானங்கள்
நன்னயமுடனேயீந்துநாதனுமரிச்சந்திரேந்திரன்
தன்னிலேமகிழ்ச்சிபாரு ளதையலார்நன்னீராட்டிப்
பொன்னணிதொட்டிலேற்றப்புதல்வனைக் கொடுவர்தாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக அரிச்சந்திரமகாராசன் புத்திரன்பிறந்தசந்தோ தோஷத்தினால் சகலதானங்களும்வழங்கிமகிழ்ச்சியடைந்திருக்கவப்பால் அங்குள்ளதோழிப்பெண்கள் அந்தப்பிள்ளைக்குத்திருமஞ்சனமாட்டி சர்வாலங்காரத்துடனே நவரத்நகசிதமானதொட்டிலிலேற்றி தாலாட்டுகிறவிதங்காண்க.

தாலாட்டு-தரு-இ-ம்-நீலாம்புரி- ஆதிதாளம்.

ஆராரோ- ஆராரோ-ஆராரோ-ஆராரோ
தாரார்கதிர்குலத்தோன் தவமேயநுபவமே ஆராரோ
தேனூறல்பாயுஞ் செழுமாங்கனியமுதே
வானோர்புகழவந்த வள்ளலேகண்வளரீர் ஆராரோ
செங்கரும்பின் பாகுஞ் செழுமாமலர்த்தேனும்
பொங்குபசும்பாலிலிடும்புத்தமுதேகண்வளரீர் ஆராரோ
பத்தரைமாற்றுள்ளதங்கப்பதுமைமிகநிறைத்த
சித்திரப்பொற்றொட்டிலிலேசீராகக்கண்வளரீர் ஆராரோ
திங்களணிஈசர்திருவடியைத்தான்றொழுதே
கங்கைகொணர்ந்தோன்குலத்தின் கண்மணியே ஆராரோ
இகத்திற்குகம்வாய்ந்தேயிவ்வுலகோர்கொண்டாட
மிகுத்தபரத்திலுறும்வேல்மன்னர்போரேறே ஆராரோ
அங்கதிரிசங்குமன்னன் சுதனாகவிளங்கவந்த
எங்களரிச்சந்திரற்கே யிசையுந்தவப்பலனே ஆராரோ

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

இந்தவகைச்சந்திரமதியீன்றெடுத்தபாலனுக்கே
சந்ததமும்புகழ்தேவதாசனென் றுபேருமிட்டே
சிந்தைமகிழ்வாயிருக்கத்திசழுமிந்திரன் கொலுச்சபையிற்
சுந்தரக்கட்டியக்காரன் றுலங்கவருகின்றனனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச்சந்திரமதியம்மனும் அரிச்சந்திரமகாராசனும்மகா தேவர்கடாட்சத்தினாலே தங்களுக்குப்பிறந்தபிள்ளைக்குத்தேவதாசனென் றுபேரிட்டுச்சந்தோஷமாகவாழ்ந்திருக்கின்றநாளில்தெய்வலோகத்திலே தேவேந்திரன்சபையில்கட்டியக்காரன் வருகிற விதங்காண்க.

கட்டியக்காரன் வருகிற - தரு - இ-ம் - பந்துவராளி - தாளம் - ஆதி.

கட்டியக்காரன் வந்தான் - வந்தானிதோ - கட்டியக்காரன் வந்தான்.

கந்தூ - அதிசுபகுணமொடு - குதிகுதித்து
நல அலங்காதமிகுகெட்டி கட்டியக்காரன் வந்தான்

கிட்டியஷ்டதிசைகளேபுமெட்டிமிரட்டிய தட்டிப்புளகிதமுறு
கிரணசந்திர மணியணியொளி பெறுபருவ இந்திரசபைதனில்வளமுறு-க
விரிந்தசுடரொணநவமணியிலகுறு மாலைசிரசிற்புனைந்துநல
விசித்திரமுறைமுறைகளெலவர்களுமகிசயமிதுவெனமனதில்நினைந்து
பொருந்துமார்பிலாரமணிந்துபூநலமளந்தான்பாதம்பணிந்து
புனிதபுசகிரிச்சுரிகைத்திகழ் புவனததாசரு மெச்சியநற்புகழ்புளகித
மொடுதட்டிசல்லடமுந்தொட்டுப்
பொலிதருவல்லவாட்டதை வொயிலாய்விட்டுப்
பொங்கமாகவேமீசையைமுறுக்கிப்புரவலன்வருத்திபாக்கென்றுருக்கி
புருவம்நெரித்துநெரித்துசிரித்துசிரித்து (ப்
புகுமணஉலிமிறைதகுமசுரர்களுமறை
பொருதலமொடு அலபுவிமுதலெலவர்களும்
புகழ்ந்துபுகழ்ந்துகுணசாலியென்றுசொல்ல
மகிழ்ந்துமகிழ்ந்துசெயசீலனென்றுநல்ல கட்டியக்

வசனம்.

அகோகேளுங்கள்சபையோர்களே அதிகதபோபல இதிகாசகாருண்யாசமகப்ரகாச விஸ்வாசவெகுநேசசரசவல்லாசத்ரேக தேவதேவமகாராசனாகிய மகபதிசுரபதிகசபதிசுவர்க்காதிபதி அஷ்டதிக்காதிபதி அதல-விதல-சுதல-ரிதல-தராதல-மகாதல-பாதாள-புவலோக- புவலோக சுவர்லோகசனர்லோகமகாலோக சத்தியலோகம்வரைக்குள் கீர்த்திப்பிரதாபங்களுடைய யிந்திராணிசமேதனாகிய ஐராவதங்கற்பகதருகாமதேனுசீவசிந்தாமணி சங்கநிதிபதுமநிதிவச்சிராயுதம்ஸ்வேதமென்கிற குடைமுதலாகிய சகலசௌபாக்கியங்களும்பொருந்தியதேவேந்திரமகாராசாவானவர் சுவர்க்காபுரியிற்கொலுவுகதுவருகிறார் வெகுபராக்குவெகுபராக்கு எச்சரிக்கை எச்சரிக்கை.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

அரம்பைமென்மாதராடவமரர்கள்முனிவர்சூழ
விரம்பியமதுராகிதம்நிறைந்துபல்லாண்டுகூறச்
சுரும்பமர்மாலைசூடித்துலங்கவெண்கவரிவீச
விரும்புதேவேந்திரமன்னன்மிகமகிழ்வுடன்வந்தானே.

வசனம்.

அகோதெப்படியென்றால்தேவேந்திரமகாராசன் கொலுவுக்குவருகிறவிதங்காண்க.

தேவேந்திரன்வருகிற-தரு

இ-ம்-தோடி-தாளம்-ஆதி.

திரணதிவ்வுல்லாசதேவேந்திரமகாராசகெம்பீரனிதோவந்தானே
மாரன்கண்டுபணியும்வடிவினிலுயர்தருமணியெனவளர்திரு
மாணபூஷணசுவர்க்கவாசமருவிவரு மன்னியநிதிபதி
பொன்னுலகதிபதி-நன்னயமகிபதி துன்னியகசபதி(திர)
சந்த்ரவட்ட வெண்குடைபிடிக்கமாதர் நடிக்க
சதுர்வேதாகமமுனிவர்கள் படிக்க
சிந்தைநடுங்கியந்தவசுரர்துடி துடிக்க
செப்பும்பிரதாபகட்டியவோசையாற்றிசை வெடிக்க
துந்துபிபேரிகைசில்லரிசல்லரிதொந்தொம்மெனப்பல்லியமல்லரி
தொனிகள்முழங்கிடநவமணியணி திகழ்
புனிதவலங்கிர்தசுபமுடனே மகிழ்(திர)

தேவேந்திரன்போற்றி-விருத்தம்

இ-ம்-மத்தியமாவதி.

உலகெலாம்வாழ்கவந்த வுயிர்களுமுறையேவாழ்க
இலகியவேதமோங்க வெண்ணீங்கலைகள்வாழ்க
நலமிகுவானோர்வாழ்க நற்றவந்தழைத்தேயோங்கி
மலர்விழிநெடுமாற்பாதம் வணங்கியெந்நாளும்வாழ்வாம்.

முதல்மந்திரிபோற்றி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வெள்ளையானையின்மேற்கொண்டே விண்ணுலகாளவந்த
கிள்ளைமென்மொழியிந்த்ராணிக் கேள்வனேபோற்றிபோற்றி
எள்ளரும்புகழ்கைக்கொண்டே யெங்களையாளவந்த
வள்ளலேமகிழுதேவேந்த்ர மகபதிபோற்றிபோற்றி.

இரண்டாவதுமந்திரி-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

ஐந்தருநிழற்கீழ்நின்றே யமரர்நாடாளவந்த
சுந்தரக்கிரீடாதார சுபகராபோற்றிபோற்றி
சந்ததமரக்கர்தம்மைச் சதைத்துவென்றிட்டவீரா
எந்தைதேவேந்திரமன்னா வினைபடிபோற்றிபோற்றி.

கட்டியக்காரன்போற்றி-விருத்தம்

இ-ம்-ஆனந்தபைரவி.

சொல்லரியசொர்க்கமொடுமத்யபாதாளமுந்துதித்திடுவீராபோற்றி
எல்லையில்லாதபுகழ்கொண்டவச்ராயுதமிலங்குகெம்பீராபோற்றி

பொல்லாதவசுரரைக்குலைகுலைந்திட வென்ற புசபலசிரேஷ்டாபோற்றி
நல்லவானவர்பரவுந்தேவேந்த்ரமகாராசநாதனேநின்றருள்போற்றி

பொதுவிருத்தம்-இ-ம்-தோடி.

தருக்கள்சூழ்சுரர்பொன்னாட்டைத் தருக்குடனாளவந்த
திருக்கில்லாவிந்திரமன்னன் திகழ்கொலுவிருக்கவாங்கே
வருக்கமாமறைகள்போற்று மாதவந்தன்னில்மிக்கோர்
மருக்கமழுவனத்தில்வாழு மாமுனியோர்வந்தாரே.

வசனம்.

தேவேந்திரன்சபைக்குமகாரிஷிகள்வருகிறவிதங்காண்க.

மகாரிஷிகள்வருகிற-தரு

இ-ம்-தேசிகதோடி-ரூபகதாளம்.

மகாரிஷிகள்வந்தாரிதோமகாரிஷிகள்வந்தார்

மூசமுகமாய்ப்பரத்தைநாடி மோனமாம்நன்னெறியிற்கூடி
மதிரும்பலவிதகன்மமுஞ் சிதறும்வகையிதமொன்றறிய (மகா)
விரிந்தசடைகள்பளபளென்றுமின்ன-நித்யவிபூதி
விளங்கப்ராணவமந்த்ரமயங்கள் மன்ன
புரிந்ததவங்கள்நிறைந்துபெருகப்-பூர்வபுண்யபலனும்வருகப்
புணரும்பலவுணருஞ்சிவ-கணரும்-அந்தணரும்துதி (மகா)
நாடுமனத்தைப்பூரணத்திலேநிறைத்துக்குறைவில்லாமல்
நண்ணுங்கன்மவிடரைஞானத்தால்மறைத்துத்
தேடும்பரத்தைச்சொந்தமாக்கிச்சிக்கும்பந்தபாசத்தைப்போக்கிச்
செழுமைமபுலனுடனைம்பொறி சிதறும்படிசெபமொன்றிய
காதலங்களில்தெண்டிகமண்டலம்துலங்கசதானந்தக்
கருணைச்சோதிச்சின்மயச்சுடர்விளங்க
வாதமூர்த்திகளிவரெனச்சொல்ல வானுளோர்களும்துதிக்கநல்ல
மலருஞ்சாணிலகுந்திறல் வலிதங்கியநிலைபொங்கிய (மகா)

தேவேந்திரன்போற்றி-விருத்தம்-இ-ம்-அடாணா.

மூவர்கள்நிற்கும்நல்ல மோனமாம்நிலையைநாடிக
தாவரும்பிரணவத்தின் தகையறிந்தோரேபோற்றி
மேவுசிற்குணத்தின்மிக்க விறல்கொள்மாதவரேபோற்றி
ஆவலாய்க்காணப்பெற்றே னருளுடன்வருகுவீரே.

வசனம்.

சாணஞ்சாணம் வாருங்கள் வாருங்கள் மகாரிஷிகளே ஆசனத்தி லெழுந்தருளியிருங்கள் சுவாமிகளே.

மகாரிஷிகள்-ஆசிவிருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

பொன்னுலகரசேவாழி புனிதவானவர்கள்போற்ற
மன்னுமிந்த்ராணிபாகா வளமுடனூளும்வாழி
துன்னியகற்பகத்தின் சுபநிழற்கீழிருந்த
நன்னயமாகவாழும் நாததேவேந்த்ராவாழி.

வசனம்.

வாழிவாழிதேவேந்திரமகாராசனேவாழி.

பொதுவிருத்தம்-இ-ம்-சாவேரி.

இந்திரன்கொலுவிற்கூடி யிருக்குமா தவத்தோரெல்லாம்
வந்தங்கேசிரம்பிவேத வாய்மைகள்புகன்றுதத்தம்
சிந்தையில்மகிழ்ச்சியாகிச் செழிப்புடனிருக்கவாங்கே
மந்திரமூர்த்தியான வசிட்டர்தாம்வருகின்றாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகதேவேந்திரமகாராசனுடைய சபையில்ரிஷிகளு ம்தேவர்களும்கூடிக் கொலுவாயிருக்க அந்தச்சபையில்வசிட்ட மகாரிஷிவருகிறவிதங்காண்க.

வசிட்டர்வருகிற-தரு-இ-ம்-புன்னுகவாளி-ஆதிதாளம்.

வசிட்டமுனிவர்வந்தார்-மகாதவவசிட்டமுனிவர்வந்தார்
கசட்டுக்குணமொழித்துக் கன்மந்தனைப்பழித்துக்
கருதியபிரமநிஷ்டை கைவல்யமாம்பிரதிஷ்டை
கரைகண்டிடுதவநெறிதனில் மணமுறு
கதிகொண்டுயர்பரமிதுவென நிலைபெறு (வசி)

பசும்பொற்குண்டலம்துலங்க
பணபளென்னவொளிதிகழலங்கிர்த
வளமிருந்தசவமணியிதெனவுசித (பசும்)

பதுமமலரினிருபுறமிருகதிரெனஉருவமதியினிருபுறமிருசுடரென
பகருமறைநுழைதருசெவிகளின்மகிழுமொருபாமிருவடிவென
பவளக்கொடியைச்சொலுமற்புதசடை (பசும்)

திவளச்செழுநற்றனிமெய்ப்பொருள்நடை
பகரிற்சிவனரியயனும்மகிழ்பெறு
மிதுபொற்பிலகியமகிமைப்புகழுறு (பசும்)

பிரணவாகாரபாத்துவம்வாயினிலிலங்க
விசும்பிற்புடைபரவும்-விண்ணவரும்பரவும்
மெய்த்தவத்தோர்களெல்லாம்-விரும்புஅருள்நிரம்பும் (வசி)

போற்றிவிருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

விசிட்டநல்லறிவின்மிக்க மெய்ப்பொருளதிந்துகாமக்
கசட்டினையறுத்தோர்வாழ்த்துங் கருணையங்கடலேநாளும்

அசட்டுளத்தவனுமென்னை யாதரித்திதம்பாராட்டும்
வசிட்டமாமுனிமையுன் றன் மருமலர்ப்பதங்கள்போற்றி.

வாழ்த்துவிருத்தம்-இ-ம்-மோகனம்.

சங்கநிதிநற்பதுமநிதி தழைக்குஞ்சிந்தாமணியுடனே
தங்குபுகழ்சேர்கற்பகப்பூந் தருவுந்தழைத்துமிகவாழி
எங்கள்மனதுக்கிடர்வாரா திருக்கவசுரர்தமைவென்றே
துங்கமுடன்வாழ்தேவேந்த்ர சுகுணநாளுமிகவாழி.

பொதுவிருத்தம்-இ-ம்-தோடி.

இத்தகமுனிவரெல்லா மிசைபெறுவசிட்டரோடும்
உத்தமவிந்திரன்வாழு முயர்ந்தநற்சபையிற்கூடி
சித்தமுற்றிருக்கவாங்கே திரிச்சங்குசுவர்க்கஞ்செய்த
வித்தகவிஸ்வாமித்திரன் விரைவுடன்வருகின்றாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச்சகலரிஷிகளும்தேவர்களுங் கூடியிருக்கிறதேவேந்திரன் சபையை நாடி விஸ்வாமித்திரமகாரிஷிவருகிற விதங்காண்க.

விஸ்வாமித்திரர்வருகிற-தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

மஹாதவங்கள்நிறை சுகானுபவமுறை வளரும்விஸ்வாமித்திர னனே
சோதிமயமாய்வளரும் விஸ்வாமித்திரனனே
தகாதவையென்றாலுஞ் சாதிக்கவே துணிந்தேன்
தற்பரமானதொருசிற்பரத்தைப்பணிந்தேன்
விகாதமெனக்கெதிர் செய்வாருண்டோ சொல்லு
மேவுமெனதுசாபம் லோகமனைத்தும் வெல்லும்
விரிகடல்புடைபரவியபல வுலகிலும்
விறல்மிகுசுரர்முனி வாருறையுலகிலு
மிகுதவநெறிமுறை யெனையலதெவருளர்
விளையுநல்லதிசய விசயவலுமைபெறு
வீரதத்துவமேமுதலாய்தரு தீரநித்யபராக்கிரமமாய்வரு (மக)

அஷ்டதிசையுமற்ற வண்டப்ரமாண்டமு
மனைத்தும்பொடியாகச் சாடுவேன்-மேலும்
அரியயன்சிவனென் றுசொல்லுமூவர்களையு
மசையாமலேநிறுத்திப் போடுவேன்
நிஷ்டூரக்கோபம்வந்தால் சண்ப்ரசண்டமாக
நிமைக்குள்ளேலோகங்களை மூடுவேன்-என்னை
நிந்திதவர்களைநான்விழித்துச்சாம்பலாய்ப்போக்கி
நிக்ரகஞ்செய்துவிளை யாடுவேன்

இஷ்டமொருவர்மீதில்வைத்தால்வருமோ திங்கு
எந்நாளுமவர்களைக்காப்பாற்றுவதே பாங்கு
துட்டர்களானுலுமென்சிஷ்டர்களாகவேவந்தால்
கஷ்டங்களையகற்றிக்காட்டுவேன்மோட்சப்ரசித்தி
கலக்கமுண்டோவதிஷ்டர்க்கென்போல் துலக்கமுண்டோநடுநடுக்கங்
ககனமுதலகிஜபுவனஅசாசர
மகிமையெவையுமொருவனசயினிகரில்லென
முகிலினிய.சிறு முருவலொடுவெருவ
புகையினிமிருமனல் புகவுமகிமைபுரி
பூதநாதபுராரியுமஞ்சுந் திதிலாதமனோகதிமிஞ்சும் (மகாதவ)

தேவேந்திரன்போற்றி-விருத்தம்-இ-ம்- மத்தியமாவதி.

மும்மலக்குறும்பைநீக்கிமுப்பாம்பொருளைநாடி
இம்மையைவெறுத்துமேலாமின்பத்தைக்கண்டாய்போற்றி
செம்மைசேர்தவங்கள்செயயுந்திறத்துளோர்புகழ்போற்பொங்கி
விம்முநல்லறிவின்விஸ்வாமித்திரமாமுனியேவாராய்.

வசனம்.

வாரும்வாரும் விசுவாமித்திரமகாரிஷியே ஆசனத்திலெழுந்தருளியிரும்.

விசுவாமித்திரர்-ஆசிவிருத்தம்-இ-ம்-நாட்டை.

அயிராவதத்தின்மிசையிருநதேஅமராபுரியையாசாளும்
மயில்போற்சாயலிந்திராணிமகிழ்நாளுமிகவாழி
செயிர்சோசுரர்தமைவென்றேகிறததின்மிகுந்தோய்முனிவர்புகழ்
பயிர்போலோங்குமகபதியேபரிவாயமைந்தேநிதம்வாழி

தேவேந்திரன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

சீர்பெறுதவத்திலோங்கித்திகழ்கிரிபுவனமெங்கும்
மோர்நொடிக்குள்ளேநாடியுலாவியேசஞ்சரிக்கும்
பேர்பெறுமுனிவரோநீள்பெரும்புவிபரசர்தம்மிற்
சார்புறுகீர்த்திமெய்மைத்தருமவான்யார்சொல்வீரே.

வசனம்.

கேளுங்கள்மகாரிஷிகளே பிரம்மரிஷிகளே உங்கள்தபோபலத்தினுடையமகிமையினுலே சுவர்க்கமத்தியபாதாளமென்று சொல்லும்படியாகிய திரிலோகங்களிலேயும் ஒருநொடிக்குள்ளேசஞ்சரித்துவரும்படியாகிய வல்லமையுடையவர்களாகவிருக்கிறீர்களே ஆனதால்நீங்கள திரிபாதகாரியமொன்றிருக்கின்றதா பூலோகத்திலேக்ஷத்திரியருக்குள் ச

ந்திரவம்சம்சூரியவம்சமாகிய இருதிறவரில்-சத்தியம் - கீர்த்தி-தருமம்-இதுமுதலாகியசகலநீதிகளிலேயு ம்வழுவாமல்செங்கோல்செலுத்தி அரசாளப்பட்ட இராசனெவனோஅவனைதெரியச்சொல்லவேணும்சுவாமி

வசிட்டர்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

கேள்சுரர்பதிநீகேட்குமிவ்வாய்மை கிளர்தருபூதலந்தனிலே
நீள்கதிர்குலத்திலிலிதிரிச்சங்கு நேர்தவத்தோங்கியபுதல்வன்
வாள்பெருவீரந்தருமநன்னீதி வாய்மைசத்தியநிறைகீர்த்தி
நாளுமெய்தவருணயோத்தியையாள்வோனல்லரிசசந்திரனென்பவனே

வசனம்.

கேளுந்தேவேந்திரமகாராசனே நீகேட்டவதிசயத்தையெனக்குத்தெரிந்தமாத்திரஞ்சொல்லுகிறேன் பூலோகத்திலுள்ள இராசாக்களில் சூரியவம்சாதிபதியாகிய திரிச்சங்குமகாராசாவினுடையபுத்திரனாகிய அரிச்சந்திர மகாராசனென்றொருவ னயோத்திநாட்டை யரசாட்சிசெலுத்தாநின்றவன் சத்தியத்திலுந்தருமத்திலும்கீர்த்தியிலும்பொய்சொலலாமையிலும் வீரதருமத்திலேயுமவனேசிலாக்கியன் அவனேசிரேஷ்டன் அவனேயோக்கியன் மற்றொருவனையும்யான்கண்டதில்லை தேவேந்திர மகாராசனே.

தேவேந்திரன்-வசனம்.

அப்படியா அப்படியா மகாசந்தோஷம் மகாசந்தோஷம்.

வசிட்டர்-விருத்தம்-இ-ம்-ஆரபி.

இன்னமும்புகல்வே னிமையவர்க்கரசே
 யெழிலுறுபூதலந்தனிலே
மன்னவர்மன்னன் பிறர்மகள்விரும்பான்
 மனுநெறியாதினும்பிசகான்
பன்னியவேள்வியந்தணர்க்குதவும்
 பரிவுளான்யாசகரெவர்க்கும
சொன்னமாமழையெப்பொழிகுவன்சொன்ன
 சொல்லையுமறுத்திடானவனே.

வசனம்,

இன்னமுமவனுடையகுணநிச்சயத்தைச் சொல்லுகிறேன்கேளும் பாதாரவர்ச்சிதன்வேதாகமசாத்திரங்களிலேசொல்லபபட்ட நீதிமார்க்கங்களிலணுமாத்திரம்பிசகான் யாகாதிகிரமங்களசெய்யும்படியாகிய ரிஷிகள்பிராமணர்முதலானபேருக்குந் தேகியென்கிறவர்களுக்கு மில்லையென்றுசொல்லாமல் கொடுக்கப்பட்டவன்பொய்சொல்லாதவன் சொன்னசொற்பிசகாமல்நடக்கப்பட்டவன் அந்த அரிச்சந்திரமகாராசனேயன்றி வேறொருவருங்கிடையாதுதேவேந்திரமகாராசனே.

இதுவும்-வசிட்டர்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

சொல்லியவிந்தவறநெறிதவறான் சுபகுணஞகியவேந்தன்
வில்வலிமிகுத்தோனென தருஞ்சிஷயன் விளங்குநற்பூதலமீனத்தும்
வல்லமைமிகுத்தேயாசுசெயகின்றானவன் புகழமிக்கவேபடைத்தோன்
எல்லையிலவனுக்கிணையெவருண்டோவென்சொல்வேனவன் திறமையா

வசனம்

ஆஆ ஆ அவனுடையபிரதாபங்களை நானென்னென்றுதான்சொல்லுவேன் வில்லின்வலிமையிலே புகழுடைகிறநேர்ப்பிலே மற்றுமுள்ளசகலகுணநிசயங்களிலே எதைப்பெரிதென்றுசொல்லுவேன் ஒன்றற்கொன்றுபெரிதேயல்லதுகுறைவில்லை இப்படிப்பட்ட அரிச்சந்திரமகாராசன் அவன்தானென்னுடையசிஷயன் அவனைப்போலொப்புச்சொல்லஉலகத்திலேவேறொருவருண்டோதேவேந்திரமகாராசனே.

தேவேந்திரன்-வசனம்.

ஆ அப்படியாசகலகருமத்திலேயும்பிசகில்லாமலுந்தேவரீருக்குச்சிஷயனுகவுமவிளங்காநின்றஅந்த அரிச்சந்திரமகாராசனுடையகீர்த்திப்பிரதாபங்களைக்கேட்ககக்கேட்கச் சந்தோஷபேலிடுகுதே வசிட்டமகாரிஷியே.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

கப்டன்கசடன் அதன்மகுரூரகாலன்
கருதும்பொய்வார்த்தைக்கொருகப்பலனையான்
நிபய்வைத்திடுவான்பிறர்மேல்பாதார விருப்பம்
நிலையைமினெஞ்சமோர்நிமிஷநிலைத்திடாணவனே
சபைபெச்சிடச்சுரர்கள்மகிழ்ந்திடவிந்திரன்சபாசெனச்
சத்துமஞ்சாமலேயுஙாத்தனையிதென்னதருமோ
செபமுந்தபமுமகிமையிதெல்லாநதிரண்டபொய்
சொல்லவோதெரிந்ததுவசிட்டமாமுனியே.

வசனம்.

ஓ ஓ ஓகோ அடடா ஆச்சர்ய மாச்சர்யம் அப்ரயோசனஞன அக்கஅரிச்சந்திரன்-கபடம்-சூது-அதர்மம்-காதகம்-இவைகளெல்லாமவனிடத்தில் குடிகொண்டிருக்கின்றதுமல்லாமல்பொய்யென்கிறஒருசரக்குகளைவாரிநிறைக்கும்படியானவொருகப்பலுக்குச்சமதையாகியஅபத்தப்பெட்டிமகன் ஒருவர்பேரிலேஅபாண்டம்வைப்பதற்கு முதற்பாதம்பாதாரத்துரோகி நிசமென்கிறவார்த்தையிலே ஒருக்ஷணப்பொழுதாகிலும் நிலைத்திருக்கின்றவனேயல்ல அப்படிப் பட்டவனையா இந்ததே

வேந்திரமகாராசா சபாசுசபாசென்றுபுகழத்தக்கதாகவும் சொல்லவந்தி
ரிகிலேதெரியவந்தது நீசெயகிறசெபதபங்களுடையயோக்கியம் நன்று
ய்ச்சொன்னீர் வசிட்டமகாரிஷியே.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

கல்லாதமூடனன்னெறியுணரான்கற்றவர்நேசமேயறிகிலான்வீணன்
காதகத்தொழிலெல்லாந்தெரிந்தோன்
பொல்லாததீர்க்கப்பாவமேகுடியாய்ப்பொருந்தியமனத்தினேன்
சற்சனர்சொல்லுநபோதனையாகிலும்விரும்பான்
அல்லதுசீலவொழுக்கந்தானுண்டோ அரிகரிபவனுக்கரிச்சந்
திரனென்றுபேர்யாரிட்டார்குருவும்நீதானே
நல்லதுபோபோமீதொருபயித்தியமோசொன்னநாவுக்கே
சிரேஷ்டமோவிதைநகைப்பார்கள்கேட்டவர்தாமே.

வசனம்.

ஐயா சாஸ்திரங்களேதாகினும்படித்தவனா நன்மார்க்கங்களை யறிந்
தவனா அல்லதுபடித்தவர்களுடையநேசமுண்டா பொல்லாங்கென்று
சொல்லாநின்ற மகாபாதகங்களுக்கு அஞ்சுகிறவனா சற்சனர்சொல்லுகி
றஞானபோதங்களையிச்சிக்கிறவனா அல்லதுபரிசுத்தமுண்டாபெரியோ
ர்களென்கிற இடத்திலொழுக்கமுண்டா இத்தியாதி குணங்களோடுங்
கூடியதுர்மார்க்கனுக்கு ஹரிஹரி அரிச்சந்திரனென்றுபார்தான் பேரி
ட்டார்களோ அவனுக்குத்தேவரீர்தானோ ஆசாரியர் ஆ ஆ தகும் தகும்
நல்லதுபோம்போம் உம்முடையசிஷ்யனென்கிறதை இந்ததேவசபை
யிலே சிலாக்கியமாகச்சொல்லவந்தீரே அதைக்குறித்துபொய்சொல்லு
ம்படியாகியநாவுக்கு ஏதாகிலும் சிரேஷ்டமுண்டோ இதைக்கேட்டவ
ர்கள்நகைப்பார்கள் வாயைமூடும்வாயைமூடும் வசிட்டமகாரிஷியே.

வசிட்டர்-விருத்தம்-இ-ம்-பைரவி.

தெய்வமுமில்லையோசத்தியமுமில்லையோ செப்பியவேதநூல்பொய்யோ
கைகண்டதவத்தின்பலனைப்பாலறிவேன் கருதுநல்லரிச்சந்திரன்கீர்த்
தி, ஐயையோமற்றதிருக்கட்டுஞ்சற்றுமபத்தமென்றறிகிலானவனை
பொய்யனென்றுரைததவாயதுவெந்துபுழுக்குமோகோசிகமுனியே.

வசனம்.

அரிகரியான்முன்னாலேசொல்லிக்கொண்டுவந்த சர்வசிலாக்கிய
ங்களிலேயும் நன்றாயறிவேன் அவனுடைய கீர்த்திப் பிரதாபங்களெ
ல்லாம் நீரிப்போது இந்த தெய்வ மகாசபையிலே அவனை நிந்தித்து

சொல்லவந்தீர் அவனுடையகீர்த்தியெல்லாமப்படியிருக்கட்டும் நீரென்னைகாணப்போகிறீரவனைப்பொய்யனென்றுசொன்னீரே அந்தச்சொல்லுக்காகச்சொன்னநாவும்வெந்துபோம் வாயும்புழுக்களைச்சொரியும் ஐயையோதெய்வமில்லையா சத்தியமில்லையா வேதசாஸ்திரங்கள் பொய்யா இப்படியும்சொல்லலாமா ஓபவிஸ்வாமித்திரமகாரிஷியே.

இதுவும்-வசிட்டர்சொல்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

நன்னெறியுணராளென்றும் நவிலுங்காதகத்தானென்றும்
என்னருஞ்சிஷ்யனென்று மிரங்கினான்புகழ்ந்தேனென்றும
மன்னுமவ்வரிச்சந்திரன்றன் மனதறியா மற்சொன்னீர்
சொன்னதென்குற்றமென்று துதிசெய்துமகிழ்தல்நன்றே.

வசனம்.

இன்னமுஞ்சொல்லுகிறேன்கேளும் ஓய் விஸ்வாமித்திரமகாரிஷியே அந்தஅரிச்சந்திரமகாராசன் நல்லநீதிமான்களையறியாதவனாகவும்மகாகாதகத்தொழிலைச் செய்கிறவனாகவுஞ் சொன்னதுமல்லாமலவனென்னுடையசிஷ்யனென்கிறதினாலேயு மவனுக்கொருஇழிவுவாராமல்புகழ்ந்துசொன்னதாகவு மவனுடையமனோதர்மமெவ்வளவுமறியாமல் பதறிச்சொல்லிவிட்டீர் இப்போதும்மனதறிந்து மெய்யைப்பொய்யென்றதுபோல அவனையிகழ்ந்தபாவநீர்த்தக்கதாக இந்தத்தெய்வசபையிலே இகழ்ந்திலாயினாலேபுகழ்ந்துசொல்லுவீரானால் மிகவும்நன்மையாயிருக்குமபோம் வாயைமூடுமவிஸ்வாமித்திரமகாரிஷியே.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

தருமம்நொந்திடுமோசத்தியம்வீணாமோ தவங்களுமவதவமாய்விடுமோ
பாவியவுலகிலரிச்சந்திரன்செய்யும பாவமாமுறைகளைச்சொன்னால்
உருகிறாய்போபோவின்னமும்பொய்யை யுறுதியாய்நினைக்கிறவனை
மருவியமெய்யனென்றுரைசெய்யும் வாயும்வேம்நாவும்வேம்வசிஷ்டா.

வசனம்.

அடடா மெய்யனைப் பொய்யனென்று சொன்னால் தர்மமும் இளைத்துப்போம் சத்தியமும் வீணாப்போம் தவசுகளும் அழிந்துபோம அல்லவா சிஷ்யனென்கின்ற வுருக்கத்தினாலே பொய்யைப் பேசப்பேசவுனக்கும் இதமாயிருக்கின்றதே அந்த மகாபாதகனை மெய்யனென்றுசொல்லுகிற உன்வாயும் வெந்துபோம் நாவும்வெந்துபோம்மனதும் வெந்துபோம் இந்தமட்டு மடக்குங்காணும்வசிஷ்டா.

வசிட்டர்--விருத்தம்-இ-ம்-பைரவி.

ஆமிதுசரிதானந்த அரிச்சந்திரமன்னனென்பேரன்
மாமறைபொய்த்திட்டாலு மதிகதிர்மாறினாலும்
பூமியுள்ளளவுமோர்பொய் புகன்றிடான்புகல்வானென்றே
நீமனமவாய்நாவெந்து நெருப்பாவாய்விஸ்வாமித்ரா.

வசனம்.

ஆம்ஆம் நன்றாயச்சொன்னாய் சந்திரசூரியர்கள்தெற்குவடக்கானாலும் வேதங்கள்பொய்த்துப்போனாலுமிந்தப்பூமியுள்ளளவு மொருபொயசொல்லமாட்டானென்று நானேசொல்லுகிறேனென்னுடையநாவும மனமும்வாயும் ஒருக்காலும்வேகமாட்டாதுநீவீணாக அவனைப்பொயயன்பொய்யனென்ற உன்னுடை வாயும் நாவும் மனமும வெந்து நீயும் வெந்துசாம்பலாய்ப் போகப்போகிறாய் விஸ்வாமித்திரா.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

எத்தனைவிதத்திலேநீ யிரக்கமாயவனுக்காகச்
சித்திரக்கதைசொன்னாலுந் திரணமுநம்புவேனோ
சத்தியமாகச்சொல்வேன் தப்பாதுபொய்யன்பொய்யன்
வித்தகவசிட்டாநீதான் வெட்கங்கெட்டிடுவாய்போபோ.

வசனம்.

இன்னமுஞ்சொல்லுகிறேன்கேளும் அந்தஅரிச்சந்திரனுக்காகஎத்தனை சித்திரக்கதைகள்பேசினாலு மவன்பொய்யன் பொய்யனென்று சத்தியமாகச்சொல்லுவேன் இனிமேல் பேசினாலிந்தத் தெய்வசபையிலேவெட்கங்கெட்டுப்போவாய் இந்தமட்டோடே பேசாமற்போய்விடுமவசிட்டா.

வசிஷ்டர்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

பேசாமற்போகவோவுன் பெருமைநானறிவேனே
மாசிலாவரசைவிட்டு மாதவமென்கைக்[illegible]
ஈசனையறிந்தும்ஞான மில்லாமலதர்மம்பேசக்
கூசாமற்றுணிந்துவீணாய்க் கூவாதேவிஸ்வாமித்ரா.

வசனம்.

அறிவேனறிவேன் உன்பெருமையெல்லாம்எப்போதும்வீண்பெருமைக்காரன்தானே நீஇராசாங்கஞ்செய்துகொண்டிருந்ததைவிட்டுத் தவசுக்கேன்வந்தாய் தவஞ்செய்துபாத்தையறிந்தும் உனக்கு ஞானவுதயமில்லாமல் பாவமென்கிற அதர்மத்துக்குள்ளாகி இப்படிப்பேசுகிறாய் யோக்கியந்தான் யோக்கியந்தான் போபோவிஸ்வாமித்திரா.

விசுவாமித்திருக்கும்-வசிஷ்டருக்கும்-வாது-தரு
இ-ம் - சங்கராபரணம் - அடதாளம்-

தனக்குத்தானேமகா தவத்தைக்கைக்கொண்டாயே சார்வதாநீயி ங்கேசாதித்ததென்னே-யடவஸிஷ்டா- சப்பறைவார்த்தை பிதற்றுவதென்ன.

எனக்குநிகராவாயோமும்மூர்த்திகளாலேயிரங்கிப்பிரமரிஷியென் றேனே-விஸ்வாமித்திரா- இயங்குப்பாவங்களெல்லாம்வென்றேனே,

வென்றதுமெய்யானாலொருநூறுமைந்தரை வென்றபோதெவ்விடம்போனாயோ-அடவஸிஷ்டா-வீண்வார்த்தைபேசஆளானாயோ.

அன்றுந்தன்மைந்தருஞ்சதுரங்கசேனையும் அக்கினிப்பொறிபோலேயெரித்தேனே-விஸ்வாமித்ரா-அதிகசிரேஷ்டநாமந்தரித்தேனே.

தரித்தாயேசக்கிலிப்பெண்ணைப் பெண்சாதியாய்த் தழைக்கும்பிரமரிஷிதானோ-அடவஸிஷ்டா-சண்டிப்போலென்னுடன்வாதேனோ.

வாதுக்குஞ்சூதுக்குங்காதகனீயல்லால் மனையாளருந்ததியென்றறியாயோ-விஸ்வாமித்ரா-வளருமென்பலத்தைக்குறியாயோ.

அறிவேனறிவேனந்தத்திரிச்சங்குவனைநம்பி அலைந்தபோதவனைநீகாத்தாயோ-அடவஸிஷ்டா-அந்தஅரிச்சந்திரன்மனதைப் போய்ப்பார்த்தாயோ.

பார்த்தேன்பரிசோதித்தேன் பாரிலவனுக்கிணைபடைக்கப்ரமாவாலுங்கூடுமோ-விஸ்வாமித்திரா-பஞ்சையுன்வாதுமேலாடுமோ.

ஆடுகிறாய்தெய்வ சபையிலேவாதாடி அஞ்சாமல்பேசிக்குதிக்காதே-அடவஸிஷ்டா-அவனைமெய்யனென்றுமதிக்காதே.

மெய்யனென்பதற்குச்சந்தேகமோபோபோ மிரட்டுயோநரிக்குட்டிசிங்கந்தன்னை-விஸ்வாமித்ரா - விருதாவாய்க்கொள்ளாதேபங்கந்தன்னை.

பங்கப்படுவதுண்டோ அண்ட ரண்ட ப்ரமாண்ட பகிரண்டமும் பொடியாக்கேனோ-அடவஸிஷ்டா-பரிந்தால்மூவரையும்போய்த் தாக்கேனோ.

தாக்குந்திறக்காலேசிர்ப்பாக்கியனீயல்லால் சாதிக்கவொருவராலாகுமோ-விஸ்வாமித்ரா-சத்யவியர்த்தம்விட்டுப்போகுமோ.

போகுங்கதியைநீக்கிநட்சத்திரமைந்தையும் பகுந்துதெற்குத்திசையில்காட்டினேன்-அடவஸிஷ்டா - புண்ணியத்திரிச்சங்குக்குக் காட்டினேன்.

காட்டினது மெய்யே யருந்தவஞ் செய்தர்தைக் காதல் மேனகையா லிழந்தாயே-விஸ்வாமித்திரா-கைதப்பிப்போச் சென்று குழைந்தாயே.

குழைந்து குழைந்து நொந்து தவித்தாயே அன்றுந்தன் கொடிய தவமகிமையைக் கண்டேனே-அடவதிஷ்டா-கோரத்தவப்பலன்கைக்கொண்டேனே.

கொண்ட பெண்சாதியைப் பூமியிற்கைவிட்டுக் குருடன்போல் தவசுக்குவந்தாயே-விஸ்வாமித்ரா-கூறுப்பொய்சொல்லநினைந்தாயே.

தேவேந்திரன்-தரு-இ-ம்-சங்கராபரணம்-ஆதி.

நில்லுங்கள் நில்லுங்கள் சுவாமிகளிங்கே
நேர்ந்தவகையதனைச் சொல்லுங்கள்.

வல்லவசிட்ட விஸ்வாமித்திரமாதவர்களே
வானுலகோர்பழியாரோ-வசைவெங்குமொழியாரோ (நில்)

இந்திரியக்குறும்புகளெல்லா மடக்கிவிடும்
ஏகாந்தமாய் திவ்யபூரணநிலைக்குட்படும்
இந்தவெகுளியின்னமிருககலா மோ ஆகட்டும்
ஈஸ்வரரொத்தனந்தானோவிருக்கட்டுமிந்தமட்டும் (நில்)

அடங்காதகோபமுங்களிருவர்க்குமேவிட்டா
லாரெதிர்ப்பார்நீங்களாகங்கரித்துப்புறப்பட்டால்
நடுங்காதோபிரம்மாண்டம்சிறுவிரலாலேதொட்டால்
நாஞ்சொல்வதென்ன வேதந்தான்சொல்லுமுங்களைவிட்டால்

தடுக்கத்தடுக்கக்கோபமேலிடுவதென்னமாயஞ்
சற்றுமென்சொற்கிரங்காதிருப்பதிதென்னஞாயம்
அடுக்காதென்றுரைக்கநான்பாத்ரனோபரியாயம
அணுமாத்ரமாகிலுமென்சொலங்கிகரிக்கவேண்டுநேயம் (நில்)

தேவேந்திரன்-விருத்தம்-இ-ம்-சங்காபரணம்.

பொறுத்தருள்வீர்களனைல்ல புண்ணியதவங்கைக்கொண்ட
திறத்திணிலுயர்ந்தஞான தீபநல்லொளிபோல்வந்த
அறுத்துயர்வசிஷ்ட விஸ்வா மித்திரரேயமார்காட்டில்
மறத்துயர்சண்டைசெயதாரென்னில்வீண்வசையாகாதோ.

வசனம்.

பொறுத்தருளுங்கள்சுவாமிகளே நீங்களிப்படி வசைக்கஞ்சாமல்

சண்டைசெய்தால்தேவலோகத்திலே வசிஷ்ட-விஸ்வாமித்திரர்கள் சச்சரவுபட்டார்களென்று மற்றவுலகத்தாரறிந்தால் பழியாகளாகில்லுங்கள் நில்லுங்கள் வசிஷ்ட-விஸ்வாமித்திரர்களே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை

பழிக்குநாணஞ்சேன்பொல்லாப் பாவமென்றாலுங்கேளேன்
முழுப்பொய்யனவனையிந்த முனிவன்மெய்யனென்றால்
வழிவருமாட்டுக்கஞ்சி வல்புலியொதுங்குமோதான்
செழிக்குமிந்தாணிபோக தேவதேவேந்த்ரமன்னா.

வசனம்.

ஏதோஒருஆட்டைக்கண்டு புலிபயப்படுமா இந்தவசிஷ்டன்மகா பொய்யனாகிய அந்தஅரிச்சந்திரனை மெய்யனென்று சொன்னால் அவனைநான் பொய்யனென்று சொல்லுகிறதினாலே பாவம்வருகிறதும்பழி வருகிறதும் அதற்குநான்பயப்படுகிறதுமா தேவேந்திர மகாராசனே.

தேவேந்திரன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

இருவரில்யார்தான்பொய்ய ரெவர்களுங்களுக்குமேலோர்
நரபதியரிச்சந்திரன் நன்னிலையறியவேண்டும்
விரிவினிப்பேசவேண்டாம் விளங்குபந்தயங்கள்பேசி
சரிசொன்னோர்செலிக்கவேணும் தவறினோர்தோற்கவேணும்.

வசனம்.

சேளுங்கள்சுவாமிகளேயுங்களிருவரில்யார்தான்பொய்யனென்று சொல்லக்கூடும் உங்களுக்குமேலானவர்கள் யாரிருக்கிறார்கள் ஆனதால்நீங்களிப்படியொருவனையொருவா தூஷிக்கிறதில் காரியமில்லை நிச்சயமாகவொருபந்தயம்பேசிக்கொள்ளவேண்டும் அதன்பேரிலந்தஅரிச்சந்திரனுடையபொய்மெய்யைப்பரிசோதிக்கவேண்டும் பிற்பாடுதோற்றவர்க்குள்ளபிராயச்சித்தமும் செலித்தவர்களுக்குள்ளசிலாக்கியமு மடையவேண்டும் அதுகாரியமேயல்லது இனிநீங்கள் வீண்சண்டைசெய்யவேண்டியதில்லை முனிவர்களே.

வசிஷ்டர்.விருத்தம்-இ-ம்-தோடி.

விண்ணவர்க்கரசேநீசொன்னவார்த்தைவீணல்லசரிசரியெனது, தண்ணளிசிஷ்யன்வாயிலோர்பொய்யைத் தன்னையிக்கோசிகன்காட்டில், பண்ணுமென்தவமுங்கைவிட்டேகள்ளுப்பாண்டமுந்தலைமிசையெடுத்தே, திண்ணமாய்த்தெற்குத்திசைதனிற் செல்வேன் செப்புமென் வார்த்தைசத்தியமே.

வசனம்.

அதுவேசரிஅதுவேசரி தேவேந்திரமகாராசனே இந்தவிஸ்வாமித்திரன் என்னுடையசிஷ்யனாகிய அரிச்சந்திரன்வாயிலே யொருபொய் வார்த்தைமாத்திரம் பிறக்கச்செய்வானேயாகில் அதற்குநானே[illegible]

னுகிறேன் பந்தயம் நான்பண்ணமகாதவத்தைதயெல்லாங்கைவிட்டுகள் ளுப்பாண்டத்தையும தலைமேல்வைத்துக்கொண்டு தெற்குமுகமாய்ப் போய்விடுகிறேன் இதுதானென்னுடையபந்தயம்.

நாரதர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

மன்னர்முன் விருதுகூறி வந்தொருபுதருக்குள்ளே
பின்னமாயொளித்துக்கொண்ட பேதைபோலிருக்கலாமோ
என்னகாண்விஸ்வாமித்திரா விந்தவசிஷ்டர்தாமுந்
சொன்னதையறிந்தாய்நீயுஞ் சொல்லொருசபதந்தானே.

வசனம்.

சபாசுசபாசுகாணும் விஸ்வாமித்திரமகாரிஷியே உம்மையுமும்மு டையசொல்லையும் யோசனைபண்ணிப்பார்த்தால் ஒருமகாராசசபையி லேயொருகொஞ்சமனுஷனை வன்சமுத்திரம்போலவருகிறதுக்கு அ ணைசெய்து வருகிறேனென்று மகததாகியவிருதாவளியெல்லாஞ்சொ ல்லிக்கொண்டுஓட்டமாயோடி யொருசெடிக்குள் தலையைத்துருத்து க்கொண்டதுபோலிருக்குது இப்போதல்லவோ நம்முடையசபதவார் த்தைகளைப்பேசவேண்டும விஸ்வாமித்திரரிஷியே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

குண்டுணிவார்த்தைசொல்லிக் குடிகெடுத்துலகமெங்கும்
வண்டுழன்றாற்போலோடி வளரும்நாரதரேகேளும்
திண்டிறலெனைக்கோரிட்டா செப்புமிவ்வசிஷ்டனைப்போல்
மிண்டுவீண்வார்த்தைபேசேன் விருதுநான்புகல்வேன்பாரீர்.

வசனம்.

கேளும்கேளும் ஓய்நாரதரே உம்மைப்போல்குண்டுணியார்த்தை சொல்லி அங்கங்கேகுடிகெடுத்துக்கொண்டு சுழல்காற்றிலகப்பட்ட வ ண்டைப்போலத்திரிகிறவனல்ல இந்தவசிஷ்டனைப்போலத்திண்டு முண்டாய்வாயிலேவந்ததைப் பிதற்றமாட்டேன் நான்சொல்லுகிறே னெல்லாருமென்சபதத்தைக்கேளுங்கள்.

தேவேந்திரன்-வசனம்.

தடையில்லாமற்சொல்லுமையா விஸ்வாமித்திரமகாமுனிவே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

தக்கவெந்தீயபாதகனைத்தச் சபலனைமரிச்சந்திரன்வாயிற்
பக்குவமாயநேரம்பொய்வார்த்தை பாரிலுண்டாக்கிடே னாகில்

அக்கினிநடுவிலிருந்துமுக்குறும்பையகற்றியைம்புலனையுமொடுக்கி
மிககவேசெய்ததவத்தினிற்பாதிவினைவுடனவனுக்கேகொடுப்பேன்

வசனம்.

கேளுந்தேவேந்திரமகாராசனே அந்தப்பொல்லாதமகாபாதகனாகி
ய அரிச்சந்திரன்வாயினால் அனேகம்பொய்வார்த்தைகளைச்சொல்லிவை
க்காமற்போவேனேயாகில் பஞ்சாக்கினிமத்தியில் நின்றுமும்மலங்க
ளையுமொழித்து ஐம்புலன்களையுமொடுக்கி அனேககாலமகோர தவசு
களைச்செய்து நான்பெற்றதவப்பலன்களிலே பாதியவனுக்கேகொடுத்
துவிடுகிறேன் இதுதானென்னுடையசபதம்.

மகாரிஷிகள்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

விளங்குநல்வசிஷ்டவிஸ்வாமித்திரரேநீங்கள்சொன்ன
களங்கமில்லாதகோபக் கடுஞ்சபதங்கள்மெய்யே
வளங்கெழுமுங்களைப்போல் வாதுகளெவருங்கூறார்
உளங்கனிவாகேளுமின்ன முறுதியாய்ச்சாதிப்பீரே.

வசனம்.

கேளுங்கள்வசிஷ்டவிஸ்வாமித்திரர்களே இப்போதுநீங்களிருவ
ரும்பேசிக்கொண்டசபதம் அதுசீவசரிஉங்களைப்போல்யார்தா
ன்வாதுசெய்யப்போகிறார்கள் நாங்களமகாசநதோஷத்தையடைந்தோ
ம் வசிஷ்டவிசுவாமித்திரர்களே.

வசிஷ்டர்-விருத்தம்-இ-ம்-எதுகுலகாம்போதி.

இந்திரனேயிதற்குச்சாட்சி யிமையவர்மூவர்மற்ற
சந்திரவர்களேசாட்சி கருதுமாதேவர்சாட்சி
தந்திரவிசுவாமித்திரன் சபதமும்நான்தான்சொன்ன
மந்திரசபதவார்த்தை முறையறிவீர்கள்சாட்சி.

வசனம்.

கேளுந்தேவேந்திரமகாராசனே நானுமிந்தவிசுவாமித்திரனும் பே
சிக்கொண்டசபதத்திற்கு நீசாட்சி இந்தத்தேவர்கள்சாட்சி இந்தரிஷி
கள்சாட்சி இந்தசக்கிருவர்சாட்சி இந்தவார்த்தைகளைக் கேட்டவர்க
ளெல்லாருமசாட்சி.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

சத்தியமாகநீங்கள்சாட்சியாயிருக்கவேண்டும்
பித்தன்போலபிதற்றிவிட்டான் பேதையிவ்வசிட்டன்கண்டீர்
தத்துவந்தாலுமிந்தச்சண்டிபோற்குளறமாட்டேன்
மத்தனுமரிச்சந்திரன் வாயமைமையக்காண்பேனுனே.

வசனம்.

கேளுங்கள் கேளுங்கள்சகலதேவர்களேரிஷிகளே யட்சகின்னரகிம்புருஷகருடகாந்தருவசித்தவித்தியாதரர்களே இந்தப்பயித்தியம்பிடித்தவசிட்டனைப்போலவாயில்வந்ததைப் பிதற்றமாட்டேன் நான்சொன்னசபதமேசரிஅதுவேசத்தியம் அதற்குநீங்களனைவரும் சாட்சிஇதோபுறப்படுகிறேன் அந்தஅசட்டுப்பட்டிமகன்சத்தியத்தையுந்தருமத்தையும் பொய்சொல்லாதகெட்டித்தனத்தையும் அறிகிறேன்நீங்களுங்காணப்போகிறீர்கள்.

வசிட்டர்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

உன்னாலேயானமட்டு மோர்திரணமுமொளித்திடாமல்
என்னைவாறுகச்சோதித் திழிவுறச்செய்திட்டாலும்
என்னென்னுமேகேளினிங்கே யிமையவர்சபைக்குள்நானே
மன்னியகாவலனேன் வஞ்சகாநடத்திடாயே.

வசனம்.

நல்லகாரியம்நல்லகாரியம் அந்தசத்தியமூர்த்தியாகிய அரிச்சந்திரமகாராசனை நீகூதுகபடமாய்கை இவைகளிலென்னென்னவிளைவித்தாலும் ஏனிப்படிசெய்தாயென்றுகேட்பதில்லை நானேயிந்தத்தெய்வச்சபையைவிட்டுநீங்காமல் காவலுக்குள்ளாகயிருக்கிறேன் இப்போதே எழுந்திருந்துநடவும்.

தேவேந்திரன்-விருத்தம்-இ-ம்-தோடி.

போதுநீயிதற்குமேலே புகல்வதொன்றில்லையந்தப்
பூதலத்தரிச்சந்திரன்பால போயுன்றன்வலிமையெல்லாம்
ஏதுதானுங்குறைவில்லாம விசைத்துப்பொய்மெய்மைகண்டே
ஓதுநீயுரைக்கவேண்டா முடனேபோய்வருகுவாயே.

வசனம்.

போதும்போதுமிந்தமட்டுடனேநிறுத்துங்கள் ஓய்விசுவாமித்திரமகாரிஷியேநீர்சொன்ன சபதப்படிக்கே இப்போது பூலோகத்துக்குப்போய் அந்தஅரிச்சந்திரமகாராசனையெப்படியெப்படி சோதிக்கவேணுமோவப்படிக்கெல்லாஞ்சோதித்துப்பொய்யனென்றாவது அல்லதுமெய்யனென்றாவதுஏற்படுத்திக்கொண்டுவரவேண்டியதுஉமதுகடனேயல்லதுவேறேபேசவேண்டியதில்லைநடவும்நடவும்.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

பொய்யையுஞ்சொல்லச்செய்வேன் பொருந்திய அசத்யமெல்லாம்
வையமீதனேகஞ்செய்ய மன்னனைச்சபிப்பேன்பாரில்
ஐயுமிவ்வசிட்டன்சொல்லும் நான்சொன்னசொல்லுங்காண்பாய
மெய்திகழமரர்வேந்தே விடைகொண்டேவருகுவேனே.

வசனம்.

கேளும் தேவேந்திரமகாராசனே அந்தஅப்ரயோசகனை அரிச்சந்திரனைப் பொய்சொல்லுவிக்கிறத்துக்கும் அசத்யம்பண்ணசசெய்கிறதற்கும் வெகுநேரமுடையா இந்தவசிஷ்டன்வாயிலே வந்தசாமார்த்தியமும் என்னுடையதிராணியும் இதோகாணப்போகிறீர் இதோநான் உத்தரவு பெற்றுக்கொண்டேன் பூலோகத்துக்குப் போய்வருகிறேன்.

தேவேந்திரன்-வசனம்.

அப்படியேசெய்யலாஞ்சுவாமி.

தேவேந்திரனுடைய கட்டியக்காரன்-வசனம்.

ஆரையாசுவாமிவசிஷ்டரே எங்கேயசைத்துக்கொண்டெழுந்திருக்கிறீர் எங்கும் அசையக்கூடாது இங்கேதானேகாவலி லிருக்கவேணும்.

வசிஷ்டர்-வசனம்.

ஆமப்பாஆம் எனக்கும்நினைவிருக்கிறது நான் எங்கேயும்போகவில்லை இங்கேதானேயிருக்கிறேன்.

பொதுகொச்சகம் இ-ம்-புன்னாகவராளி.

ஆயபொழுதிந்திரன்றன் அருஞ்சபையில்வந்திருந்த
சேயமுனிவோர்முதலோர் நிலைசாடிப்போனபின்பு
தூயவசிஷ்டருடன் துடுக்குகள்பேசியகோப
மாயவிஸ்வாமித்திரன்றுன்வந்தான் றவநிலைக்கே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக தேவேந்திரனுடைய சபையிலே வந்திருந்த தேவர்கள்ரிஷிகள்முதலாகியபேர்களுந்தங்கள் தங்களிருப்பிடமேபோனார்கள் அப்பால்வசிஷ்டருடனே வாதுபேசிய விஸ்வாமித்திரமகாரிஷி தாம்தவஞ்செய்கிறஇமோர்கிரிச்சாரலுக்குவருகிறவிதங்காண்க.

விஸ்வாமித்திரர்-தரு இ-ம்-மோகனம்-தாளம்-ஆதி.

தவத்தினிலுயர்ந்தவிஸ்வாமித்திரன்நானே
தவத்தினிலுயர்ந்தவிஸ்வாமித்திரன்நானே
பர்வத்தைமொழித்துப்பரத்தைவிழித்துப்
பார்த்துநிலைசேர்ந்த மனபயமிகுந்தவசிஷ்டனேடுங்கவே
சுயமகந்வசிநடுங்கவே (தவத்தி)
கோபம்விளைந்துகண்ணைவிழித்துப்பார்ப்பேன் - நான்
குறிக்கும்மூவர்களொளிக்கவேநிலைசேர்ப்பேன்
சாபத்தாலண்டபிரமாண்டத்தையும்பேர்ப்பேன் - எந்தன்
சாமர்த்தியந்தனக்கெதிருண்டோவென்றுதீர்ப்பேன்

தீபதனைச்சின்னஈய்கள்மொய்க்குமோ
திகழரிச்சந்திரன்செருக்குநிலைக்குமோ
தேடிநிலைநாடியொரு சிறுவிரலாலெத்திச்
சிதறுவேன்பார்யுத்தி (தவத்தி)

வசனம்.

ஆரடா அடாசிஷ்யா டகாமாயசித்தா சுவாமி ஆரடா அடாசிஷ்யா மகாமாயசாலி ஐயா.

மகாமாயசித்தன்-வசனம்.

தம்பிமகாமாயசாலி ஐயருடைய கண்ணுக்குப்பார்வைமட்டார் ரூற்போல்காணுது.

மகாமாயசாலி-வசனம்.

அண்ணேமகாமாயசித்தா அதுவொன்றுமல்ல மெய்யானசத்தியத்தையுடையஅந்தஅரிச்சந்திரமகாராசனைப்பொய்யனாகவுற்படுத்துகிறேனென்று அனியாயவார்த்தைசொல்லிவந்தார் அந்ததோஷந்தான்போலேகாணுது அந்தமயக்கம்.

விஸ்வாமித்திரர்-வசனம்.

என்னடாதுஷ்டப்பயலே அடா ஆசனங்கொண்டுவந்துபோடும்பிள்ளாய்.

சிஷ்யன்-வசனம்.

அப்படியேஆசனங்கொண்டுவந்து போட்டேன்சுவாமி

விஸ்வாமித்திரர்-வசனம்.

எங்கேயடாதுஷ்டப்பயலே.

சிஷ்யன்-வசனம்.

அப்படியொன்றும்வித்தியாசமிராதுஎனக்குச்சம்மதியான ஸ்தலத்தில்போட்டேன்சுவாமி.

விஸ்வாமித்திரர்வசனம்.

இப்படிகொண்டுவந்துபோடும்பிள்ளாய்

சிஷ்யன்வசனம்.

முன்னமே இப்படிச்சொல்லிக் கொளுத்தப்போகாதா சுவாமி பொன்னகிரிக்கும்புவனகிரிக்குமெந்நாளுமுள்ள இழிவுதானிது.

சிஷ்யர்-வசனம்.

அண்ணே மகாமாயசித்தாஎதுஐயர்ஆதனத்தின்பேரிலுட்கார்ந்துகொண்டு அழப்போகிறாற்போலேகாணுது ஏதோஅவ்வொழுத்லிந அவர்தொலைக்கப்போகிறார்தொலைக்கட்டும்.

பொதுவிருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

மாதவவிஸ்வாமித்ரன்மகிழ்தவச்சாரல்நண்ணி
யேதினுலரிச்சந்திரன்றன் னரிதினவன்காண்டேயென்று

காதியோமனதிலெண்ணிக்கலக்கமுற்றிருக்கும்பேதில்
ஆதியாயவ்வனம்வாழருமுனியோர்வந்தாரே.

வசனம்.

விசுவாமித்திரமகாரிஷியானவர் இமோற்கிரிசாரலிலேவந்து அந்த அரிச்சந்திரனை யெவ்விததத்திலேபொயயனுச்குவோமென்று உபாயமங்னைத்துக்கொண்டிருக்க அங்குள்ளவனத்திலேவாழும்படியாகியதவமுனிவர்கள்வருகிறவிதங்காண்க.

தவமுனிவர்கள்-வருகிற-தரு-இ-ம்-தோடி-தாளம்-ஆதி.

தவமுனிவர்கள்வந்தார்களே-மகா-தவமுனிவர்கள்வந்தார்களே
கவலையொழித்துமலக்கசட்டையறுத்துநல
சிவாற்பொருளின்பலத்யானம்நிறைந்துவல (தவமு)
கோடைவெய்யலில்மழைகாலங்குளிர்ந்துபனிக்
கூறுங்காலமெல்லாம்கூசாம்லேதனி
யுரடையாய்த்தரிப்பதுந்தோஷிந்தமேதினி
ஆசையொழிந்தவித்தோர்அரியபஞ்சாக்கினி
நாடிப்பாரத்தைநண்ணிநற்கதிதனைனயெண்ணி
நீடுமங்கையற்கண்ணிநேசமாப்பூசைபண்ணி (தவமு
முனிவர்கள்-போற்றி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.
பொருந்துநற்றவத்தின்மிக்க புகழ்விஸ்வாமித்ரநாதா
திருந்துமெய்ப்பொருளைநாடும் தீபனேநின்றாள்போற்றி
அருந்துணைநின்னையல்லா லயலொருதுணைதானுண்டோ
மருந்துபோலெமக்குவாய்த்தமாமுனிபோற்றிபோற்றி
விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.
பஞ்சாக்கினிநடுவேநின்று பரத்தினன்னிலையைநாடி
அஞ்சாமற்றவங்கள்செய்யு மரியயன்மனதுக்கேற்ற
மஞ்சாரும்பொழில்சூழ்ந்த வனத்தின்மாதவங்கள்செய்யும்
செஞ்சமர்ருதம்போல்வாழும் திறமுடையோரேவாரீர்.

வசனம்.

ஆசனத்திலெழுந்தருளியிருக்க இவ்வனத்தில் வாழும்படியாகியதவமுனிவர்களே.

முனிவர்கள்-விருத்தம் இ-ம்-தோடி.

இந்திரன்பதிக்கேயேகியபின்னர் யாததிசயமங்கேயிருந்து
வந்ததெப்போதுவானவர்சபையில் வந்தவர்யாவர்யாரந்தச்
சுந்தரதேவரொன்னசெய்கின்றார் தொகுத்தங்கோடந்ததைவிரித்து
ஏந்தமக்குரைத்தாலுளமகிழடைவோ மினிமையாய்ப்புகன்றிடுவீரே.

வசனம்

தேவரீர்தேவேந்திரன்சபைக்குப்போயிருந்தீரே அங்கேயார்யார் வந்திருந்தார்கள் அந்ததேவர்களென்னசெய்கிறார்கள் அங்கேயென்

ன அதிசயம்விளைந்ததோதேவரீரிங்கேயெப்போதுவந்தீரோ அதையெல்லாம்நாங்களிகேட்டுமனமகிழுடையும்படியாகத்திருவுளம்பற்றவேணும்விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-கழிநெடில்விருத்தம் இ-ம்-எதுகுலகாம்போதி.

அமரர்கோன்சபையில்யாவருமிருந்தார்யானுமங்கெய்தினேன்
புவியில்வாழரசரில்மெய்யன்யாரென்றவர்கேட்டார்
குமைகுருவசிஷ்டன்தன்னருஞ்சிஷ்யன்கூறரிச்சந்திரனே
மெய்யனென்றஞ்சாமலவர்முன்னேகொடுமையாயுரைத்தார்
சமரசமாகவெப்படியறிவாயென்றுநான்சொல்லச்சபதமுங்
கூறினனவனைச்சாதிக்கத்துணிந்திதோவந்தேன்
கமலநான்முகனுஞ்சிவனரிமுதலோர்காக்கவந்தாலுந்தடுத்
தெந்தன்சபதங்கணத்தினில்முடித்திடவேணும்.

வசனம்.

தேவசபையிலேஎல்லோரும்வந்திருந்தார்கள் நானும்போயிருந்தேன் அந்ததேவேந்திரமகாராசன் அங்கிருந்தவர்களைப்பார்த்துப் பூலோகத்திலுள்ள ராசாக்களில் எவன்பொய்சொல்லாதவன் என்றுகேட்டார் இந்தபஞ்சைப் பெட்டிமகனானவசிஷ்டன் வாயைமூடிக்கொண்டிருக்கவேண்டாமாதன்னுடையசிஷ்யனரிச்சந்திரன்மகாமெய்யனென்றுசொல்லவந்தான் அப்படியிராதென்றுதடுத்தேன் சபதம்பண்ணிக்கொண்டான்நானும்சபதம்பண்ணிக்கொண்டு இதோவந்தேன் அதைநிறைவேற்றவேணுந்தவமுனிவர்களே.

முனிவர்கள்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

நல்லகாரியம்நீர்செய்தீர் நலமிகுவிஸ்வாமித்ர
வல்லமாதவரோயந்த வசிட்டர்தான்கொஞ்சமோவிவ்
வெல்லையிலரிச்சந்திரன்முனிசைவாலேபொய்யைச்சொல்ல
புல்லியசபதஞ்சொல்லிப்புறப்படலாமோஅய்யா.

வசனம்.

நல்லகாரியம் நல்லகாரியம் அந்தவசிஷ்டமகாரிஷி என்னசாமான்யமானவரா அந்தஅரிச்சந்திரமகாராசன் ஒருபொய்சொல்லுகிறதுலகுவிலேயிருக்கிறதா இப்படிவகைதப்பாய்சபதஞ் சொல்லிப்புறப்படலாமோவிஸ்மித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

நீறுநீறாகச்செய்வே னினைக்குமுன்னுலகையெல்லாம்
தாறுமாறாகச்சொன்னீர் தவமுனிவர்களேநீங்கள்
வேறொருவர்களேயானாலவ்விதித்தெரித்திடுவேனென்றன்
கூறரும்பலமென்னுமல் கூசாமற்சொல்லலாமோ.

வசனம்.

நீங்கள்சொன்னதுபோல்வேறொருவர்சொல்லுவார்களேயானு ல்சாம்பலாகஎரித்துப்போடுவேன் என்னுடையதபோபலமகத்துவந் தெரியாததனாலேவாய்! கூசாமல்சொல்லிவிட்டீர்கள் நானினைத்தே னேயாகில் திரிலோகங்களையும் நீறுநீறாகச்செய்வேன் தவமுனிவர் களே.

முனிவர்கள்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

எங்கள்மேற்கோபமாமோ விசைபெறுவிஸ்வாமித்ர
துங்கமாமுனியேயுன்றன் றுணையடிபோற்றிபோற்றி
பங்கம்வந்தாலுஞ்சொன்ன படிகெலித்தாலுமிங்கே
தங்குமெங்களுக்கேதையா சமைவோம்நீரிடும்வேலைக்கே.

வசனம்.

எங்கள்பேரிலேன்கோபஞ்செய்கிறீர்கள் நீர்சொன்னபடிக்கு க்கெலித்தாலும் உம்மதேசிலாக்கியம் தோற்றாலுமஉம்மதேயிழிவுநா ங்களிந்தவனத்திலேஉம்முடைய ஆதரவிலிருந்துதபசுபண்ணுகிற வர்கள்தேவரீர்கட்டளையிட்டபணிவிடைக்குக்காத்திருக்கிறோமகோப த்தைப்பொறுத்துக்கொள்ளுமையாவிஸ்மித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

நாளையேகாண்பீரந்த நவையுள்ளவசிஷ்டன்சொல்லும்
கோளிலாதென்றன்சொல்லுங் குறைவிலாத்தவத்துளோரே
நீளுமோர்யாகஞ்செய்ய நிதிவேணுமதற்கயோத்தி
ஆளரிச்சந்திரமன்னனிசையறிந்துவந்தாற்போவேனே.

வசனம்.

கேளுங்கள்தவமுனிவர்களே நாளையேகாணப்போகிறீர்கள் அ ந்தஸ்வல்பனாகியவசிஷ்டனுடையசொல்லையும் என்சொல்லையும்அங் ருக்கட்டும் நானொருயாகஞ்செய்யவேணும் அதற்குக்கொஞ்சந்திரவி யம்வேணுமதற்காகஅயோத்தியாபுரியையாளும்படியாகியஅரிச்சந்தி ரமகாராசனிடத்திற்குநீங்கள்போய் விஸ்வாமித்திரமகாரிஷி ஒருவிதம வீதம்பொருந்தியயாகஞ்செய்யப்போகின்றார்அந்தயாகத்துக்குக்கொ ஞ்சந்திரவியம்வேண்டியிருக்கிறதாம் நீர்கொடுக்கமாட்டுவீரா வென் றுநான்கேட்டுவரச்சொன்னேனென்றுசொல்லி அவன்மனதையறிந் துவாருங்கள்பார்க்கலாமுனிவர்களே.

முனிவர்கள்-வசனம்.

அப்படியேயரிச்சந்திரமகாராசாவைக்கண்டு அவருடனே நீர் சொல்லியவார்த்தைகளைச்சொல்லி அவர்மனதையறிந்து வருகிறோம் விஸ்வாமித்திரமகாரிஷியே.

'விஸ்வாமித்திரர்-வசனம்.

மேல்நடந்தகாரியங்களிலே தாங்களும் அவனுடனே மூச்சுவிடப்போகிறீர்கள்உங்களுக்காணையிருக்கிறது.

முனிவர்கள்வசனம்.

அரிகரியப்படியிருக்குமா சுவாமியதார்த்தமாய்ச்சொல்லிவருகிறோம்விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஆனால்போய்வாருங்கள்முனிவர்களே.

பொது-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

மிக்கவேவசிஷ்டரோடும் வீம்புசெய்விஸ்வாமித்திரன்
சொற்குள்ளாய்முனிவராலே சுழலைச்செய்திட விடுக்க
அக்கொடுவினையமெண்ணா வரிச்சந்திரமன்னன் வாசல்
கைக்கொளுமதுரவார்த்தைதக்கட்டியக்காரனும்வந்தானே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக விஸ்வாமித்திரமகாரிஷியனுப்பின தவமுனிவர்கள் அயோத்தியாபுரிக்குவருமுன்பாக அங்கேயரிச்சந்திரமகாராசன் வாசற்கட்டியக்காரன்வருகிறவிதங்காண்க.

கட்டியக்காரன்-வருகிற-தரு-இ-ம்-கல்யாணி-தாளம்-ஆதி.

கட்டியக்காரன்வந்தா-ன திவ்வ்லாசக்-கட்டியக்காரன் வந்தான்
அஷ்டதிசைகளிலும் அமரருலகத்திலும்
அவனே சிரேஷ்டனென்ன எவருமபுகழ்ந்திதம்பன்ன
ஆசைகூர்புகழரிச்சந்திரமக
ராசன்வாசலலங்கரித்திட மிக
அடல்பெறுகடல்படுதொனிபெனவடிபடு
மதிர்முரசொலியிலுமுதிர்சொலினெவர்களு
மமைபுமமைபுமினியணிவரிசைகள்பெறு
மாசர்களைவினவியதிகஈன்னபமுறுங் (கட்டிய)
சிரசிற்பொன்னுருமாலைநன்றாய்த் தரித்து
திகழ்மணிமுத்துத்துராயலங் கரித்து
அரியநற்றிருமாலைநமஸ் கரித்து
அருள்பெறவேமனதிலுச் சரித்து
திருடர்களைவர்களநிதமிகுமகிழ்கொளும்
நிபுணராகியவிபவவுசிதசெய
நிலைபெருகியமயநெறியறிதருநய
நினைந்துசல்லடர்கட்டிப்புனைந்துகண்ணைல்மிரட்டி

நிறைய்ப்புதசற்சனர்மெச்சிடுவிற்பன
நிர்ப்பயநிற்குண்மிக்கவனென
நிசமங்கொள்சுபரியமமிகுவிசித
வனதுங்கனெனவளருமதியுசித (கட்டியக்)

கட்டியக்காரன்-வசனம்.

பேசாதிருங்கள் பேசாதிருங்கள் அரிச்சந்திரமகாராசாவானவர் கொலுவுக்குவருகிறார்வெகுபராக்கு.

அரிச்சந்திரன்-தரு-இம்-மத்தியமாவதி-தாளம்-ஆதி.

மாசில்லாதகன வுல்லாசனுமதிகப்ரகாசனுஞ் சுகுணநல்விலாசனரிச்சந்திரமகாராசமகிடன்வந்தானே.
பூசுரர்கள்நிதம்புகலருமறநெறி தனைப்பெவைகளுமறி
பூபன்மகிமைபெறுபுரவலன்கதிர்குல்மரபினில்வருமொரு
பூபதியெனவேபுகழினில்நிகழொருபொருளுளனெவ்வொன
பூவிலுறையயன்-அரியான்மகிழவே-அரசர்கள்புகழவே
பொற்பினற்புதத்தின்முக்ய-விற்பனற்குளிப்பிரசித்த
புளகமணியிதெனமிகவளரழகியபுருஷரசிதவுசிதமணியிவனெ
புனிதமான்கனிதானசுகநிதிஉன்னதமானகிரிசமானமகிபதியர்
மாணிக்கமிட்டிழைத்தகிரீடமுஞ்சிரசில் மின்ன
வச்ரகுண்டலங்களிருசெவிகளுந் துன்ன
ஆணிப்பொற்கவசமீதமரர்க்குமரி தென்ன
அம்புருத்தாணிமுதுகிலமைந்தலங்கிர்த மின்ன
காணிக்கைகொண்டரசர்கலங்கியெதிர் விலங்க
கதித்தவிற்பிடித்துடைவாள்கட்டிச்சுரிகை யிலங்க
காணக்கிடைக்குமோஇவர்புசகிரிதி யெங்கும்
காட்டமுத்தாணிப்பதக்கம்தாணிக்கதிர் விலங்க
கதியுற்றிடுநற்றுணைபெறுவர்களு
மதிசற்குணநிர்ப்பயமுற்றிசைகொளும
அதுலசூரனிவனெனுமொழிதர
சிதைவிலாதமகிழொடுவரவர
அண்டையில்மிரண்டுகொள்-கண்டகரண்டமி
ரண்டுபுரண்டு-திரண்டுவரண்டிட
ஆர்பாரகோரபேரிவீரமாரிதாரைபூரி
அடுபடுகிடுகுகள்முழங்கியதவில்முழ
கணிநகாஜபறையன்றதிசைநிறை
அதிரதுந்துபிதொந்தொம்மென
அடல்சங்குகளொளிபம்பம்மென
அரிவையர்நடமிடமருவலர்கெடிபட

வரும்இசையொலிமிட தரிபலர்பக்கேவிட
அன்புகொண்டுமந்திரிகளுருகவே
இன்பமுண்டுசந்திபேருகவே
அருமைமேவுநிபுட ஞானாயகிதி
பெருமைதாயுசுப துஜாசெய்நிதி (மாறி)

இராசன்கடவுள்வாழ்த்து-விருத்தம்-இ-ம-மத்தியமாவதி.

திருவளர்புவியிலோங்கித் திங்கள்மும்மாரிபெய்யக்
வருபல்வுயிர்கள்மீறி வள்முட ஞளும்வாழ்க
தருநெறிமறைவிளங்க தருமநன்னிதிபொங்க
அருமறைநெடியமாலின் அம்புயச்சரணம்போற்றி.

பொது-விருத்தம்-இ-ம-புன்னாகவராளி.

சிற்றத்தின்மிகுந்தவிஸ்வா மித்திரன் செய்கைதன்னை
மாற்றுதற்கரிதென்றெண்ணி மாதவமுனிவரெல்லாம்
வேற்றொருவினைகள்செய்யா மெய்யரிச்சந்திரமன்னன்
நாறறிசைபுகழுங்கீர்த்தி நற்சபைதனில்வந்தாரே.

வசனம்.

விஸ்வாமித்திரனுப்பியதவமுனிவர்கள் அரிச்சந்திரமகாராசன் சபைக்குவருகிறவிதங்காண்க.

தவமுனிவர்கள்-வருகிற-தரு-இ-ம-புன்னாகவராளி-தாளம்-ஆதி.

எல்லாந்தெய்வச்செயல்செகமெல்லாந்தெய்வச்செயல்
வல்லோரொருவர்களுண்டோ அரி அரி
மனநிலையாகியமாதவமே சரி(எல்லாம்)
சூத்ராதாரச்சி சாலம்இது
தோன்றுநெறியென்னமோ கோலம்
சாத்ரபுராணசம்பந்தசை தன்யமும்
பார்த்ததிலைலென்னபா அன்னியஉன்னியமும்(எல்லாம்)
தத்துவக்குப்பைகளைதை நீக்கிச்சொல்லும்
சங்கடவேதனைதனைப் போக்கிச்
சத்துச்சித்தானந்த பூரணமானது
நித்தியவினோதசிபாய பரம்பொது(எல்லாம்)
வசிஷ்டருடனே வாது-இவர்
வலிப்பபோய்செய்வ தேது
அசட்டுக்குணம்வந்தாலும் அதாமநகர்விளைந்தாலும்
சசட்டுச்சொற்பிறந்தாலுங்கபட நகள்நிறைந்தாலும்(எல்லா)

அரிச்சந்திரன்-போற்றி-விருத்தம்-இ-ம-சாவேரி.

நாவியநெருப்பினின்று தவம்புரிமகத்துவம்வாய்ந்த
தேவமாதவரேவாரீர் திருவடிதினமும்போற்றி

ஆவலாமெனதுபுண்ணியமனைத்தையுமின்றேபெற்றேன்
மூவருமதிக்கநல்ல முக்கியமாதவரோபோற்றி.

வசனம்.

வாருங்கள்வாருங்கள் தவமுனிகளே ஆசனத்திலெழுந்தருளியிருங்கள்சுவாமிகளே.

தவமுனிவர்கள்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

சேல்கள்பாய்வயல்கள்சூழ்ந்ததிகழ்வளமிகுமயோத்தி
நால்வகைத்தருமமோங்க நல்லாசுடையோய்வாழி
மாலெனச்சக்கரத்தை வையகந்தனிற்செலுத்தி
மேலுலகோர்மதிக்கவிளங்கரிச்சந்திராவாழி

வசனம்.

வாழிவாழி இராசசக்ரேஸ்வரனை அரிச்சந்திரமகாராசனேவாழி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

தவமுனிவோரோயெந்தன் தவப்பலன்போலேயிங்கே
கவலைதீர்ந்திடவேவந்த காரணமேதோசொல்வீர்
தவறொன்றுமிலாமலுங்கள் தாசன்யான்முடிப்பேனிந்த
குவலயம்பொய்த்திட்டாலுங்குறுக்கொன்றும்புகன்றிடேனே.

வசனம்.

கேளுங்கள் தவமுனிவர்களாகிய சுவாமிகளே நான்செய்தபூசாபலம் என்மனக்கவலை தீரத்தக்கதாக உங்கள்தெரிசனங்கிடைத்தது அதுபோதும் நீங்கள்வந்தகாரியார்த்தத்தைச்சொன்னால் தடையில்லாமல முடிக்கிறேன் இந்தப்பூமிபொய்த்தாலும் என்வார்த்தை பொய்யாதுசுவாமிகளே.

முனிவர்கள்-விருத்தம்- இ-ம்-அடாணா.

திகழரிச்சந்திரமன்னா திறல்விஸ்வாமித்திரர்தாமோர்
மகமொன்றுசெய்யவேண்டி வரவிட்டார்நாங்கள்வந்தோம்
தகைபெறவதற்குக்கொஞ்சம் தனம்வேணுங்கொடுப்பாயாகில்
மகிபனேயவர்தாமிங்கே வருகுவார்தருகுவாயே.

வசனம்.

கேளும் அரிச்சந்திரமகாராசனே விஸ்வாமித்திரமகாரிஷி யெங்களையனுப்பிவைத்தார் நாங்கள்வந்தோம் அவரொருயாகஞ்செய்யவேண்டியிருக்கிறதாம்அதற்குக்கொஞ்சந்திரவியம்வேணுமாம் அதைநீர்தருகிறோமென்றுசொன்னால் அவர்வருகிறோமென்றுசொன்னார் இதுதான் நாங்கள்வந்தகாரியம் மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அந்தமாமுனிவன்செய்யு மருமைசேர்வேள்விக்காக
முந்திவந்தென்னைக்கேட்டு முடிக்கவுவேணுமோதான்

இந்நாழிகையிலீவேன் எத்தனைதனமானாலுஞ்
சிந்தைதான் மகிழ்ந்துநீர் சீக்கிரமாயவரச்சொல்வீரோ.

வசனம்.

கேளுங்கள் தவமுனிவர்களே ஈதொருபிரயோசனமாகமுந்தி உங்களையனுப்பி என்னைக்கேட்டுக்கொண்டாவரவேணும் அந்த விஸ்வாமித்திரமகாரிஷி யாகஞ்செய்கிறதற்குத் திரவியங்கொடுக்க நானென்னபாக்கியம்பெற்றேன் எவ்வளவுவேணுமென்றாலும்கொடுப்பேன் நீங்கள் போய்ச்சீக்கிரமாய்வரச்சொல்லுங்கள் சுவாமிகளே.

முனிவர்-வசனம்.

அப்படியே நீர்தருகிறோமென்று ஏற்றுக்கொண்டோமென்று விஸ்வாமித்திரமகாரிஷிக்குச்சொல்லுகிறோம அரிச்சந்திரமகாராசனே.

பொது-விருத்தம்-இ-ம்-பூரிகல்யாணி.

தண்ணளியரிச்சந்திரன்றன் சாற்றியவாய்மைகேட்டுப்
பண்ணுமாதவத்தோரந்தப்பதிதனைநீங்கிமுன்னே
விண்ணவர்சபையில்வாது விளம்பியவிஸ்வாமித்ரன்
நண்ணியச்சொல்லைக்கும் நற்றவனிலைவந்தாரே.

வசனம்.

அரிச்சந்திரமகாராசனிடத்திற்குவந்த தவமுனிவர்கள் வேண்டிய திரவியந்தருகிறோமென்று அவர்சொன்னவார்த்தையை விஸ்வாமித்திரமகாரிஷிக்குச்சொல்லவருகிற விதங்காண்க.

முனிவர்கள்-விஸ்வாமித்திரனிடத்திற்குவருகிற - தரு

இ-ம்-பூரிகல்யாணி-தாளம்-ஆதி.

சிவசிவஞானசாரமே சாரப்ராணவாகாரம்
தெரிந்தாலல்லவோகாணும் நிர்விசாரம்
தவறில்லாசோதிப்பிரகாசத்தம்பாபலத்தின்நிறைவிலாசத்
தற்பரம்பொருளாகியதீபந்தழைத்துவிளங்கும்மகாப்ரதாபம் (சிவ)

பந்தபாசக்கட்டில் மயங்கலாமோ-அதைப்
பரிந்தால்ப்ரபஞ்ச மாய்கைபோமோ
சிந்தையிலேக்கமருந்துக ளுண்டாமோ - கண்டு
தெளியுர்வல்லமைவிளைந்திருப்பது நாமோ
ஐந்துபூதமைந்துபொறிக ளைந்துபலன்களானகுறிகள்
விந்துநாதங்கலந்ததேகம் விளைந்தவாறுகாணனுமோக (சிவ)

முனிவர்கள்-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

நிறைதவவிஸ்வாமித்திர நிபுணனேசாணமையா
மறைபுகழினியநீதி வள்ளலேசரணமையா

முறையேநீர்சொன்னசொல்லை முடிமன்னனிடத்திற்சொன்னேன்
குறைவில்லையவரோவந்தாற் கொடுப்பேன்மாதனங்களென்றான்.

வசனம்.

சாணஞ்சாணமையா விஸ்வாமித்திரமகாரிஷியே தேவரீருத்தாரப் படியே அயோத்தியாபுரிக்குப்போய் அரிச்சந்திர மகாராசாவைக் கண்டோம் தேவரீர்சொன்னசொல்லையும்சொன்னேம் தேவரீரவனிடத்திற்கெப்போதுபோனாலும் உமக்குவேண்டியதிரவியங்கள் கொடுக்கும்படியாய் உம்மிடவரவுக்கெதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான் விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அப்படியா நான்தன்னிடத்துக்குவந்தால் நான்கேட்டதிரவியமெல்லாந்தருகிறேனென்றுசம்மதித்தானுமகாசந்தோஷம்மகாசந்தோஷம்

முனிவர்கள்-வசனம்.

உத்தரவுகொடுத்தாலெங்க ளாசிரமத்துக்குப்போகிறோம் விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அப்படியேபோய்வரலாம்தவமுனிவர்களே.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஆரடா அடாசிஷ்யா மகாமாயசித்தா ஆரடா அடாமகாமாயசாலி நாம் அயோத்தியாபுரிக்குப்போகவேணும் வாருங்கள்வாருங்கள் சிஷர்களே.

மகாமாயசாலி-வசனம்.

நாங்கள்பின்னாலே மெள்ளவருகிறோம் நீர்முன்னாலேபோமையா சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

என்னடாசொன்னாய் துஷ்டப்பயலே.

மகாமாயசாலி-வசனம்.

பின்னையொன்றுமில்லைஇப்பவேவந்துதொலைக்கிறோம்சுவாமி.

விஸவாமித்திரர்-அரிச்சந்திரனிடத்திற்கு வருகிற-தரு

இ-ம்-மோகனம்-ஆதிதாளம்.

அதிகவுக்ரமகாதபோபலன்கள்நிறை அரியவிஸ்வாமித்திரனானே
செகப்ரசித்தமானவிஸ்வாமித்திர னானே
மதிகதிர்சூழுமிந்தவெண்டிசைமுத லுள்ள
மற்றவுலகங்களுமென்புகழ்சொல்லிக் கொள்ள
அதிபெருகிய அஷ்டகசங்கள்மனங் கலங்கத்
துன்னுஞ்சடையிலங்கத்தொனிப்பேனண்டங் குலுங்க

சுடர்விட்டிலகிய கனல்நடுவினில்மன
திடமுறவுயர்தவ நெறிதருபாமென (அதி)

ஒருவிரலாலிந்தத்தரைமிசையூன்றியே
யூழிகாலமுந்தவஞ் சாதிப்பேன்-மேலும்
உலவியவாயுவைமாக்கிரணங்களை
யுண்ணமலேயிருந்தும் போதிப்பேன்
திருகசில்லாமலந்தமூவர்க்குமேலாகத்
திகழும்பிரகாசத்தையுஞ் சோதிப்பேன்-நின்று
சீவராசிகளுந்தாபர்சங்கமுஞ்
சிருஷ்டித்துப்பிரமாவுடன் வாதிப்பேன்
சரணென்றடைந்தவரைத்தற்காத்துக்கொள்வே னென்னை
சாதிகசகினேந்தோரைத்தரைமட்டஞ்செய்வேன் பின்னே
தாழ்குவனேவசிஷ்டனாலே மூழ்குவனோயாரும்பாரும்
சகலபாதாபவிவேக விலாசன்
சாமர்த்தியபத்தினுல்நான்செக தீசன்
பகிமைக்கெதிரிட்டப்ர காசன்
வலிமைத்திறல்பெற்றவு லாசன் (அதிக)

அரிச்சந்திரன்-போற்றி-விருத்தம்-இ-ம்-தோடி.

வருத்தமும்மலங்கள்போக்கி மாதவப்பலன்கைக்கொண்ட
கருத்துயர்விஸ்வாமித்ர காரணமுனியேபோற்றி
அருந்தியாலென்னைநாடி அருளுடன்வருமென்பாக்கியம்
ஒருந்தருக்கிதைப்போலுண்டோ வுயர்மலர்ப்பதங்கள்போற்றி

வசனம்.

சரணம்சரணம் ஆதனத்திலெழுந்தருளியிரும் விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்- அடாணா

கோடைக்கொருதருவைப்போலும் குவலயத்தோர்கட்கெல்லாம்
தடைப்படாதளிக்குங்கீர்த்தி தரித்துயர்மகிபாவாழி
சடைப்புனைமுனிவர்செய்யுந் தவங்களுக்கிடறில்லாமல்
அடுத்துவந்தையுந்தந்தே யனுதினம்வாழ்வாய்வாழி.

வசனம்.

வாழிவாழி அரிச்சந்திரமகாராசனேவாழி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-வராளி

முன்னையான்செய்த தவத்தினிற்பயனே மொழியுமிவ்வயோத்திமாநகரம், புண்ணியதலங்கள் செய்தவப்பயனே புரிநதுநான்செ

ரிசிக்கப்பெற்ற, நன்னயசுகிர்தமண்மிசையார்தான் நாடியேபெருகுவா னரயா, என்னகாரியமாயெனனருகிங்கே யெய்தியதுரைசெய்தால் மூடிப்பேன்.

வசனம்.

*சரணஞ்சரணம் விஸ்வாமித்திரமகாரிஷியே தேவரீருடையதெரிசனங்கிடைத்தது அடியேன்செய்தபாக்கியமோ இந்தஅயோத்தியாநகரஞ்செய்தபாக்கியமோ நல்லகாரியம் தேவரீரென்னை நாடிவந்தகாரியம்தெரியச்சொன்னால் உடனேமுடித்தனுப்புகிறேன் சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

என்னகாணரிச்சந்திராநீ யாதொன்றுந்தெரியாப்போல
என்னகாரியமாய்வந்தீ ரென்பதுதருமந்தானோ
முன்னமேமுனிவர்சொன்ன முறையறிந்திசைந்திட்டாயே
சொன்னசொல்மறுமலந்த சொன்னதைத்தருகுவாயே.

வசனம்.

ஆஆஆ நன்றாயிருக்கின்றது நீசொன்னவார்த்தை யென்னைவேலைமினக்கெட்டவனாகத்தீர்த்துக்கொண்டாய் முன்னமேயந்தத்தவமுனிவர்களாலே யுனக்கறிக்கைபிட்டு நீசம்மதித்தபடியே யென்னுடையயாகத்துக்குவேண்டிய திரவியதரைச் சொன்னசொல் மறுக்காமற்கொடுக்கவேணு மரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-ஆரபி.

கோபமில்லாமற்கேளுங் குறித்துநீர்யாகஞ்செய்யச்
சோபிதமாகுஞ்சொர்ணத் தொகைதானெவ்வளவுவேணும்
கோபுரம்போலேவாரிக் குவித்துளமகிழுசவேன்
தாபரித்துரைப்பீரேதுந் தடையொன்றுஞ்சொல்லேன்சுவாமி.

வசனம்.

கோபமில்லாமற்கேளும்சுவாமி தேவரீர்செய்கிறயாகத்துக்குளவ்வளவுதிரவியம்வேணுமோ அதையிவ்வளவென்றுசொன்னால் கோபுரம்போலேயுயர்ந்தகுப்பல்குப்பலாகத் தருகிறேன்கொடுப்பதற்கு ஒருதடையுமில்லைவிசுவாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரன்-விருத்தம்-இ-ம்காம்போதி.

வானவர்புகழுங்கீர்த்தி வளரரிச்சந்திரமன்னா
யானைமேறகவண்கல்விட்டா லதுபோகுமளவுமட்டும்
நீநலதிரவியத்தை நிறைவுடன்கொடுக்கவேணுந்
தானம்யான்பெறவேவேணுந் தடையின்றிக்கொடுத்திடாயே

வசனம்.

சகலதேவர்களும் புகழத்தக்கதாகிய கீர்த்தியுடைய அரிச்சந்திரமகாராசனே இப்போதுசொன்னீரே இதுவேசரி ஓரியானையின்பேரில் பலவந்தனுகியஒருவனைநிறுத்தி அவன்கையில்கவண்கொடுத்து அவனெறிந்கவண்கல்போனவுயரந் திரவியந்தீர்கொடுக்கவேணும் நான்பெற்றுக்கொள்ளவேணும் தடையில்லாமற் கொடும் அரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

மகாசந்தோஷம் அப்படியேயிதோ கொடுக்கிறேன்சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

தணிவிலாவறிவின்மிக்க சத்தியகீர்த்திகேளாய்
பணிமதிச்சடையோனுன பரமன்றனருளினாலே
அணிதிகழ்விஸ்வாமித்திரர்க் களித்திடவிசைந்தேன்சொர்ணங்
கணிதப்பொன்னறைதிறப்பாய் கசமொன்றுவாச்செய்வாயே.

வசனம்.

கேளாய்சத்திய கீர்த்தியாகியமந்திரி ஸ்ரீகயிலாசவாசருடைய கிருபையினாலே இந்தவிசுவாமித்திரர்செய்கிறயாகத்துக்காகயானையின்பேரில்நின்று கவண்கல்லெறிந்தவுயரம் திரவியம்கொடுக்கச்சம்மதித்தேன் நம்மிடபொக்கிஷத்தைத்திறந்துவிடும் யானையொன்றையழைப்பியுமந்திரி.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

தாணிமன்னவர்கள்போற்றுந் தகைபெறுங்கதிர்குலத்தில்
அரியநன்மணிபோல்வந்த அரிச்சந்திரதீராபோற்றி
திரவியம்பெரிதோவிந்தத திகழ்விஸ்வாமித்திரர்க்கீந்தால்
பரமதுகிடைத்தபாக்கியம படைத்ததாந்தடையொன்றுண்டோ.

வசனம்.

கேளும் அரிச்சந்திரமகாராசசக்ரேஸ்வரா திரவியமொருபெரிதாபுண்ணியம்பெரிது அதிலும்யாகஞ்செய்வதற்காக இந்தவிஸ்வாமித்திரமகாரிஷிக்குத்திரவியங்கொடுத்தாலதைவிடமேலானபுண்யமொன்றிருக்கின்றதா தடையில்லாமற்கொடுக்கலாம்இதோபொக்கிஷசாலைகளுந்திறந்திருக்கிறது யானையும்வரவழைக்கிறேன் சுவாமி.

மந்திரி-வசனம்.

ஆடாஅடா ஆசாரவாசற்கட்டியக்காரா பட்டத்தானையை வரவழையும்பிள்ளாய்.

கட்டியக்காரன்-வசனம்.

அப்படியேயழைப்பிக்கிறேன் சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

மதயானைமேலேநின்று வல்கவனெறிந்தராம
சிதருமற்றனங்கொடுக்கச் சிந்தைதான்மகிழ்ந்தாய்கண்டேன்
ததியிதுவல்லயாகஞ் சமீபிக்கவருவேனிந்த
நிதியுந்தன்வசத்தில்வைத்தே னிபுணகாத்தளித்திடாயே.

வசனம்.

மகாசந்தோஷம்மகாசந்தோஷம் யானையின்பேரிலேநின்றுகவண்கல்லெறிந்தவுயரம் நீயேதிரவியங்கொடுக்கச்சம்மதிததாய் நானேபெற்றுக்கொண்டேன் மோசமில்லைஇப்போதிந்தத்திரவியமெனக்கு வேண்டியதில்லை யாகஞ்சமீபிக்கிறபோது வருவேன் அதுவரையிலும்உம்முடையவசத்திற்றானே வைத்துக்காப்பாற்றி நான்கேட்டபோது தடையில்லாமற்கொடுக்கவேணும் அரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

பாக்கியம்பாக்கியம் அப்படியே காப்பாற்றி வைத்துக்கொண்டிருந்துதேவரீர்கேட்டபோது தருகிறேன்சுவாமி.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

பாரையாளரசருக்குள் பார்த்திபாவுனைப்போற்காணேன்
போரைவென்றெனைப்போல்வந்த புனிதருக்குதவிவாழ்வாய்
நீரையேகைக்கொண்டிந்த நிதியெந்தன்சொந்தமென்று
தாரைவார்த்திடுவாயப்பால் தயக்கம்நானகன்றுபோவேன்.

வசனம்.

சத்துருக்களையெல்லாஞ் செயித்துஎன்னைப்போல்வந்த தபோநிதிகளுக்குச்சகலவொத்தாசைகளுஞ்செய்து வாழ்வாய்குறைவில்லை இந்தத்திரவியமென்னுடையசொந்தமென்று சகலருமறியத்தக்கதாகஎளளுந்தண்ணீருடனே தாரைவார்த்துக்கொடுத்தால் மனதுக்கொரு ஐயமில்லாமற்போய்வருவேன் அரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

இதோபூமிதேவிஆகாயவாணிமுதலாகிய சகலதேவர்களும்அறியத்தக்கதாக விசுவாமித்திரருடையதிரவியமென்னிடத்தி லிருக்கிறது அவர்கேட்டபோது நான்தருகுவேன் இது அவருடையசொந்தம் பிடியுதையாவெள்ளுந்தண்ணீரும்விசுவாமித்திரமகாரிஷியே.

விசுவாமித்திரரும்-அரிச்சந்திரனும்-சொல்தரு
இ-ம்-மோகனம்-தாளம்-ஆதி.

விசுவாமித்திரர்.

அரி அரியிந்தப்புண்யமுன்னேப்போலார்செய்வா
ருளரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்.

பரிவாகச்சொல்லுகிறீர் பதிதனுஞ்செய்யும்புண்யம்
பாரமோவிஸ்வாமித்திரநாதரே.

விசுவாமித்திரர்.

தருமமென்பதுநீயே சொரூபமாகவந்தாய்
தகுமரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்.

வருவதெல்லாந்தெய் வச்செயலல்லால்வேறுண்டோ
மாதவவிஸ்வாமித்திரநாதரே.

விசுவாமித்திரர்.

தரணியில்மாதவர்செய்யும் யாகப்பலன்கள்நீ
தானரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்.

உரைசெய்யும்மாதவர்களும்மிலும்வேறுண்டோ
வுத்தமவிஸ்வாமித்திரநாதரே.

விசுவாமித்திரர்.

திரவியமுன்னேப்போலார்கொடுப்பார்தந்தாயே
திரளரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்.

சரணஞ்சரணமென்னேப்புகழ்ந்ததுபோதும்சுவாமி
சாமர்த்தியவிசுவாமித்திரநாதரே.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

எந்தவேளையிலேவந்தென் யாகத்துக்கிரந்துன்கையிற்
சொந்தமாய்வாங்கிக்கொண்ட தொகையிலாத்திரவியத்தை
தந்திடவேணுமென்றால் தடையின்றிக்கொடுப்பாய்நீயே
அந்தநாள்மட்டுமெந்த ஞசீர்மத்திருந்துவாழ்வேன்.

வசனம்.

கேளும்அரிச்சந்திரமகாராசனே கணக்கிடக்கூடாததாய்யானையின்பேரிலேநின்று கவண்கல்லெறிந்தவுயரம்திரவியத்தைத் தானங்கொடுத்தீர் அதுஎனக்குச்சொந்தமதானே அதைநானெப்போது வந்துகேட்பேனோ அப்போது தடையில்லாமற் கொ

டுக்கவேணும் இனிநான்தவஞ்செய்கிற ஆசிரமத்துக்குப் போய்வருகிறேன்மகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

தடையென்னவிருக்கிறது தேவரீருக்குத் தேவையானபோதுவந்து கேட்டாலுடனேகொடுக்கக் காத்திருக்கிறேன்சுவாமி.

மகாமாயசித்தன்-வசனம்.

சுவாமிநாங்களிரண்டுபேருங்கூடவரமாட்டோம்.

விஸ்வாமித்திரர்-வசனம்.

என்பிள்ளாய் வரமாட்டீர்கள்.

மகாமாயசித்தன்-வசனம்.

உம்முடையபாட்டை நீர்பார்த்துக்கொண்டிரே மிந்தது சேர்ந்தது எங்களுக்கொன்றுமில்லையாசுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அடத்தாபோழி பொறிக்களக்கிறத்துக்கு முன்னமே சத்தத்துக்களக்கவந்தாய் அரிச்சந்திரமகாராசன்கணக்குப்பார்த்துச் சரியாய்நம்மிடபணத்தை நமக்குச்செலுத்தும்போதல்லவோ பார்க்கவேணும்.

மகாமாயசித்தன்-வசனம்.

தம்பிமகாமாயசாலி நம்மிடஐயர் நடையகுணத்தைப்பார்த்தால் காதகத்தொழிலுக்கு முதற்பாதமாய்க்காணுது அந்த மகாராசன்குடியைக்கெடுக்க தானியோசனைபண்ணிக்கொண்டிருக்கிறாற்போலக்காணுதப்பா.

மகாமாயசாலி-வசனம்.

அண்ணே அதிலேகுறைவுண்டா ஐயர்கொடுக்கிறது பிட்சையானுலுமேமெத்துகிறது திருவிளக்குத்தான்பின்னேயெனிப்படி வாலுக்கோலுமாயலேகிறார்.

விஸ்வாமித்திரர்-வசனம்.

நடவடா துஷ்டப்பயலே நட.

பொது - விருத்தம்-இ-ம்-சாவேரி.

கசத்தின்மேல்கவண்கல்விட்ட கடுந்தூரம்பொன்னைவாங்கி
நிசத்தின்வாழரிச்சந்திர நிருபன்தன்னிடத்தில்வைத்தே
செப்பட்டானவனென்றெண்ணி மகிழ்ச்சியாய்வனத்தில்வந்தே
விசித்திரவிஸ்வாமித்ரன் மிருகங்களைவரச்செய்வானே.

வசனம்.

இக்கப்பிரகாரமாகப்பின்னையின்பேரில்கவண்கல்லெறிந்தவுயரம்பொன்னைததானம்வாங்கி அந்தஅரிச்சந்திரமகாராசனிடத்திலேற்ன வைத்துத்தானிருக்கும் ஆசிரமத்தில் தவந்துவனத்திலுண்டாகிய மிருகங்களைவரவழைக்கிறவிதங்காண்க.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

புலிகளாகரடிகாளிப் பூசலக்கலைகாள்மான்காள்
எலிபெருச்சாளியேன மென்னுங்கூட்டங்கள்நாய்கள்
நலிவுறுநரிகாள்மற்றும் நாட்டுள்ளமிருகங்காள்நீர்
பலபலபந்தியாகப் பரிவுடன்வருகுவீரே.

வசனம்.

ஓகோபுலிக்கூட்டங்களே நரிக்கூட்டங்களே நாய்க்கூட்டங்களே கரடிக்கூட்டங்களே பன்றிக்கூட்டங்களே எலிபெருச்சாளிக்கூட்டங்களே மான்கூட்டங்களே மற்றுமிந்தக்காட்டில்வாழும்படியாகிய மிருகக்கூட்டங்களே வாருங்கள்வாருங்கள்.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

மயில்களேகுயில்களேநீர் பலைமிசையிருந்துவாழும்
பயில்சிறைபட்சிகாள்நீர் பரிவுடன்வருவீரிங்கே
செயிருகாடைகாள்நற் செழுங்கவுதாரிகாள்மா
தயையுடன்பறவைக்கூட்டந் தனித்தனிவருகுவீரே.

வசனம்.

ஓகோமயில்பட்சிகளே குயில்பட்சிகளே காடை கவுதாரிகுக்கில்சக்கரவாகம் நாரைகாக்கை அன்றில் சிட்டு ஊர்க்குருவிமுதலாகியசகல பட்சிசாதிகளும் வருகவருக அதிசீக்கிரம்வருக.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஓகோமிருகக்கூட்டங்களா பட்சிக்கூட்டங்களா அசையாபலிருங்கள் அசையாபலிருங்கள்கூப்பிடாமலிருங்கள்.

மகாமாயசாலி-வசனம்.

சுவாமிசுவாமி லோகத்திலேயுள்ளவர்கள் சிலபேர்கள் ஆடுகோழி கொக்குமீன் இவைகளைப்பிடிங்கித்தின்பார்கள் வனத்திலிறக்கிறகிராதகராகிய வேடரைப்பார்க்கிலும் பெரியவராய்க்காணுதே வுமைப்பார்த்தால்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அதுவென்னடா அப்படிசொல்லுகிறாய் துஷ்டப்பயலே.

மகாமாயசாலி-வசனம்.

சுவாமிசுவாமி புலி கரடி நாய் கழுதை யிவைவயெல்லாம்பிடிங்கித்தின்பீர்நீர்.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அல்லடா துஷ்டப்பயலே அந்த அரிச்சந்திரமகாராசனுடையநாட்டை அதம்பண்ணுகிறதற்காக அனுப்பவேணுமடா.

மகாமாயசாலி-வசனம்.

சுவாமிசுவாமி இந்தரிஷிகளெல்லாமுண்டவீட்டுக்குரண்டகஞ்செய்கிறவர்களா ஆனுல்சரிதான் நடக்கட்டும்நடக்கட்டும் சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

பறவைகாள்மிருகங்காள்நீர் பரவியவயோத்திநாட்டை
தரையெனச்செய்தங்குள்ள தழைத்திடும்பயிர்களெல்லாம்
முறிமுறித்ததங்கள்செய்து முடிக்கவேவேணுமெந்தன்
அறைதருமாணைகொண்டே யடைவுடன்நடந்திடீரே.

வசனம்.

கேளுங்கள்மிருகக்கூட்டங்களே பட்சிக்கூட்டங்களே நீங்களிந்தட்சணமே அந்த அரிச்சந்திரனுடையநாட்டைப்போயச் சுற்றிக்கொண்டு அங்குண்டாகிய பயிர்பச்சைகள் சோலைகள்குளங்கள் ஏரிகள்எல்லாவற்றையும் அதாகதங்களாய்ப்போகச் சேதப்படுத்துங்க ளென்மேலாணைப்படிக்குநடவுங்கள்போங்கள்.

மிருகங்கள்வருகிற-தரு-இ-ம்-பந்துவராளி-தாளம்-ஆதி.

வனத்தில்வாழ்மிருகக்கூட்டங்கள் கூடிவந்ததேபாரில்-பொல்லா

மாயவிஸ்வாமித்திரன் சொல்லு
முபாயமேமுனிவந்து கொல்லும் (வனத்தில்)

தனித்தனியாய்ப்பன்றிகள் கூட்டம்
தாவியேபயிர்மேல் நாட்டம்
நினைத்தயோத்திநாட்டை நாடி
சிற்காமலேயோட்டமா யோடி (வனத்தில்)

வெண்புலிகாடிசிங்கம் யாளிகளுடன்
மிகுத்தபட்சிசாலக்கருங் கூளிகள்
வெண்கரிகளோரிநரிஞாளிகள் பொல்லா
மந்திக்கூட்டங்கள்பெருச் சாளிகள் (வனத்தில்)

உண்கவென்றுணாத்திட்டா லிவ்
வுலகையுமுண்போம் நாங்கள்

உருக்கியெலிக ளுடும்
பூர்க்குருவிகாகம் நீங்கள் (வனத்தில்)

பண்புடன்வாருங்க ளென்று
பரிந்துதிரண் டுழன்று
பலபலகிலைகொளும் பலமுள்ளமிருகங்களும்
குலவிபுலவிவெய்யக் கோசிகன்பணிசெய்ய (வனத்தில்)

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

வந்ததோர்பறவைக்கூட்டம் மற்றுள்ளமிருகக்கூட்டம்
மந்திரவிஸ்வாமித்திரன் மாட்கையாலயோத்திநாட்டை
சிந்தையசேதமாக்குஞ் செய்கையையந்நாட்டுள்ளோர்
சுந்தரவரிச்சந்திரர்க்கே சொல்வோமென்றவர்வந்தாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகவிஸ்வாமித்திரமகாரிஷி அனுப்பினமிருகங்களும்பட்சிகளும அயோத்திநாட்டையதஞ்செய்யவே அந்த நாட்டிலுள்ள குடிகள் அரிச்சந்திரமகாராசனிடத்திற்சொல்லிக்கொள்ளவருகிற விதங்காண்க.

குடிகள்-வருகிற-தரு-இ-ம்-தோடி-தாளம்-ஆதி.

குடிகள்வந்தார்களே-பயிரிடும் - குடிகள்வந்தார்களே.

படிமிசையேருண்டுழுதுகுடித்தனம்
பாலித்துக்கீர்த்தியைப்படைப்பதவர்தனம்
வடிந்தாலுமாற்றிலேகால்வெட்டிநீர்கொண்டு
மாறுமற்பயிர்செய்யுமவாழ்விலேமிகுதுய்ய (குடிகள்)

பன்னுந்திரவியபாக்கியமிகுந்தாலும்
பட்சம்புலவர்மிசைநாட்டுவாரிந்தப்
பார்மிசைவேந்தர்கள்வந்திறந்தாலுமே
பயமில்லையென்றுறுதிகாட்டுவார்
நன்னயக்கவிராக்க நாதன்றமிழ்க்கொரு
நல்குமழைபோலிதம்பூட்டுவார்நாளும்
நவிலுமொழிசெல்வங்கோழைபடாதென்ற
நடக்கையாலற்பணாநாட்டுவார்

கன்னங்கமுகிளஞ்செந்நெற்சாலிநிறை
புன்மையில்லாப்பயிர்பெருத்தவளமுறை
மன்னுங்கார்லகதிர்வர்த்தமானத்துறை
யென்னமாமோவென்றுமிளைத்திடார்களிறை
சொன்னசொல்லுக்கொருநூசாவுபோகாமலே
நன்னயமுடனிந்தநாட்டினிலொருககாலே (குடிகள்)

குடிகள் போற்றி-விருத்தம்-இ-ம-மோகனம்.

அரசருக்கரசே போற்றி யருமறைநெறியைச்சேர்ந்தே
மாபுடனயோத்திநாட்டை வளமுட னாள்வாய்போற்றி
கரைபுரண்டோங்குங்கீர்த்தி காவலாதிருச்சங்கின்ற
நரபதியரிச்சந்த்ரேந்த்ர நாயகநின்றாள்போற்றி.

இராசன்-விருத்தம்-இ-ம்-அடாணா.

மருதமுமுல்லைநெய்தல் வளமிகுகுறிஞ்சிபாலை
பெருகுமைந்தாம்நிலத்திற் பெருநிலவாழ்க்கையெய்தி
அருமையாய்க்கைகண்டோங்கு மயலிலாக்குடித்தனஞ்செய்
மருவியகுடிகள்நீங்கள் வரக்கண்டுமகிழ்ந்திட்டேனே.

வசனம்.

வாருங்கள்வாருங்கள்மருதநிலத்தவர்களாகியகுடிகளே.

இராசன்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

தருணமும்மாரிபெய்யத் தாழ்வுண்டோவலதுவேற்றூர்
அரசராற்பயந்தானுண்டோ வமைச்சராற்பொல்லாங்குண்டோ
தருமுறைப்பகுதிநீங்கள் தருகின்றவருத்தமுண்டோ
உருகியிங்கென்பால்வந்த துரைசெய்தாற்பயந்தீர்ப்பேனே.

வசனம்.

கேளுங்கள்குடிகளே மாதமும்மாரிபெய்கிறதிலே தாழ் வுண்டா அல்லதுஅன்னியஇராசாக்களாலே யேதாகிலும்பயமுண்டா நம்மையல்லாமல்மந்திரிகளாலேஒருபொல்லாங்குண்டா நீங்கள் கொடுக்கின்ற பகுதியினாலேதாகிலும்வருத்தமுண்டா அந்தப்பகுதிகொடுக்கச் சக்தி போதாதா நீங்கள்விசனமாக வந்தகாரியந் தெரியச் சொல்லுங்கள குடிகளே.

குடிகள்விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

என்னசெய்வோம்குடிகள்நாங்க ளெங்களுக்குலகந்தன்னில்
பொன்பெறுமெல்லாவாபூவும் புகழ்பயிர்வளங்களையா
வன்பெறுமிருகக்கூட்டம மட்டில்லாப்பறவைக்கூட்டம்
துன்பஞ்செய்யாற்கூடிவந்து துவைப்பதால்நடுங்கிவந்தோம்.

வசனம்.

கேளுமெங்களாண்டவராகிய இராசபரமேஸ்வரா எங்களுக்குக்கு டித்தனஞ்செய்கிறவாழ்வெல்லாமுமது பயிரிடுகிறபாக்கியமேயல்லது வேறில்லையேதோ அனர்த்தகாலம்போலக் காட்டிலுள்ள மிருகசாதிகளாலும் பட்சிசாதிகளாலுநாங்களிடப்பட்டபயிரகளெல்லாமதமாய்ப்போகுது அதனாலே பயந்துசொல்லவந்தோம் மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

திங்களைமுடிமேல்வைத்த சிவனருளினுவேநான்செய்
பங்கமில்லாதபூசாபல னிதுதானேநீங்கள்
சங்கடப்படவும்வேண்டாந் தரும்பொருளிரண்டாண்டுக்கும்
எங்களுக்கீயவேண்டா மிதமுடனிருந்திடீரே.

வசனம்.

நல்லகாரியம் நல்லகாரியம் வருகிறதெல்லாம் அந்த மகாதேவருடையகடாட்சமேயல்லதுவேறில்லை நீங்களிட்டபயிர்களெல்லாம்மிருகங்களாலே நஷ்டமாய்ப்போச்சுதென்றுவிசனப்படுகிறீர்களே அந்தவிசனந்தீர இரண்டுவருஷத்துக்குள்ளபகுதிப்பணமீங்களெங்களுக்குக்கட்டவேண்டுவதில்லை பயப்படாமல் சுகமாயிருங்கள்குடிகளே.

இதுவும்-இராசன்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

அஞ்சாமலிருங்கள்நீங்க ளதஞ்செய்யுமிருகக்கூட்டம்
பஞ்சாகப்பறக்கநானே பாணந்தாறாணிந்துக்கொல்வேன்
மஞ்சாரும்பொழிற்சூழ்ங்கள் வளநகர்க்கேகலாகும்
அஞ்சாமல்வேட்டையாட இதோவரத்துணிந்திட்டேனே.

வசனம்.

பயப்படாமலிருங்கள்குடிகளே நீங்கள்பயிரிடும்படியாகியதானியமுதலாகியதுகளைச் சேதப்படுத்தும்படியாகியதுஷ்டமிருகங்களையெல்லாம்அதோகதியாக அடித்துப்போடத்தக்கதாக வேட்டையாடநானிதோவருகிறேன் நீங்களுங்களிருப்பிடம்போய்ச் சேருங்கள்குடிகளே.

குடிகள்-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

வேட்டைகளாடியந்த மிருகத்தின்கூட்டந்தன்னை
வாட்டியேயெங்கள்நாட்டை வளரச்செய்தாலுநீரே
நாட்டமவைத்தெங்களுக்கோர் நயம்பண்ணத்தாலும்நீரோ
தாட்டிகவரசர்போற்றுந் தக்கேசமணியேபோற்றி.

வசனம்.

கேளும்இராசசக்ரேஸ்வரா வேட்டையாடிமிருகங்களைக் கொன்று எங்களையும் எங்கள்நாட்டையும் இரட்சித்தாலும நீரே எங்களுக் கொருநஷ்டமில்லாமல் நயமுண்டாக்கினாலும்நீரே நாங்கள்போய்வருகிறோம் மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

இங்கிதகுணத்தின்மிக்க வெழிலுறுசத்தியகீர்த்தி
பங்கஞ்செய்மிருகத்தாலே பதைக்கிறார்குடிகளெல்லாம்
அங்கதைவேட்டையாட வகமகிழ்கொண்டேநல்ல
பொங்கமாம்வேட்டைக்காரர் புடைசூழவரச்செய்வாயே.

வசனம்.

கேளும் சத்தியகீர்த்தியாகியமந்திரி நம்முடைய நாட்டி லுள்ள குடிகளெல்லாம் மிருகங்களாலே பயிர்களெல்லாஞ் சின்னபின்னப்பட்டுச் சேதப்படுகிறதென்று முறையிட்டார்களே அவர்கள்துயரந் தீரத்தக்கதாக மிருகவேட்டையாடவேணும் வேட்டைக்காரரை வரச்செய்யும் மந்திரி.

மந்திரி-வசனம்.

அப்படியேவேட்டைக்காரரை வரவழைக்கிறேன்சுவாமி.

மந்திரி-வசனம்.

ஆரடா அடா ஆசாரவாசற் கட்டியக்காரா நம்முடையஇராசாவேட்டைக்குப்போகச் சித்தமாயிருக்கிறார் ஆகையால்வேடர் வில்லியர் முதலியயாவற்றுமானபேரையும் சீக்கிரமாயழைப்பியும் பிள்ளாய் கட்டியக்காரா.

கட்டியன்-வசனம்.

அப்படியேயழைப்பிக்கிறேன்சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-பந்துவராளி

வஞ்சனும்விஸ்வாமித்திரன் மாய்கைபால்மிருகக்கூட்டம்
தஞ்சமாமயோத்திநாட்டைத் தருக்கியேயழிப்பதாலே
யெஞ்சியேகுடிகள்சொல்லு மிரக்கத்தாலரிச்சந்திரன்றன்
செஞ்சொலால்வேட்டைக்காரர் திறமுடன்வருகின்றாரே.

வசனம்.

அரிச்சந்திரமகாராசனிடத்தில் வேட்டைக்காரர் வருகிறவிதங்காண்க.

வேட்டைக்காரர்வருகிற-தரு-இ-ம்-பந்துவராளி-தாளம்-ஆதி.

வேட்டைக்காரர்நாங்களே ஐயே-ஐயே-ஐயே-வண
வேட்டைக்காரர்நாங்களே.

காட்டைப்போய்ச்சுற்றிவளைத்தொரு
மூட்டைப்போலேதக்கிலேந்தரு
கற்படுமற்பெருபற்பலசிப்பய
காடிபுலிகள்செல்லுங்கதியைக்கண்டிடர்சொல்லும் (வேட்டைக்)

வசனம்.

போடாபோ பயித்தியக்காரா காட்டிலேவாய்விடாதசாதி தண்ணீரைக்குடித்து நீழலிலே விழுந்துகிடக்கிறதைக் கொல்லுகிறதா வீரம் பின்னையென்னடா வீரம நான்சொல்லுகிறேன் கேளடாகேள்.

தரு.

பாட்டிற்சீர்முத்தமிழைத்தருநாட்டிற்பாவிமனதுசொலிவரு
பக்குவநற்கிரிகைக்குளிலங்கிய
பயனறிகிலர்சொல்லும்படர்கொடிபடவெல்லும் (வேட்டைக்)

வெள்ளிச்சங்கிலிகட்டும்நாய்களனேகமுண்டு
வீரச்செந்நாய்களைச்சேரப்பிடித்துக்கொண்டு
மெள்ளப்பதுங்கிச்சீறித்தாவும்புலிமேல் விட்டுத்
துள்ளிக்குதிக்கமலைதொனிப்போம்கெக்கலியிட்டுச்
கள்ளிக்காடுதறிபுலி [illegible] திரி
கள்ளப்போரிடுகொடிகள் நரி
சுற்றிககதறித்தகதியினை [illegible]
தொடுவெல்வலைகளெறுதுடியிற்பெருமைபெறு (வேட்டைக்)

வள்ளலென்றேநுவனை நாடிப்போயடுத்தே
மன்னுமித்தமிழிசை மாலையாகத்தொடுத்தே
கொளவீரென்றிதஞ்சொன்னல்கூகாவென்றேநடுங்கும்
கள்ளர்போலேவீழும்பன்றிகள்கதறக்குத்திப் பிடிப்போம்
கத்திபோல்பல்லுளகாய்சில
சுற்றிச்சூழ்சொல்லலிலாவுல
கத்திற்பொயதக்கசித்தமூளைததிடு
கலைகளைவெலவுறுமலையினிறகொடுவரு (வேட்டைக்)

பன்றிவலைகளுடன்மான்வலை நாட்டுவோம்
[illegible]துப்பிருந்தென்றனைதயுசுப்பிப்பயம் காட்டுவோம்
தின்றுவிடுஞ்சிங்கங்கண்டால்சிதறவிட்டாலே பங்கம்
நின்றுகொல்லவோமதினங்கம்நெருங்கினுமேலன் விளங்கம்
குன்றைப்போலதாவுகடம்பைகள்
குன்றிச்சாய்தாவெறி யம்புகள்
கொத்திக்கொத்திப்பற்றியெறிந்திட
குழந்துமுட்டல்கள்படுமடுகுலைகள்வீழ் (வேட்டைக்)

இருப்புவலைகள்கொண்டுபலமாய் 　　　　　　　　　　　　　　　　　வீசுவோம்
　இடறிமான்விழவெகுவிருதுகள் 　　　　　　　　　　　　　　　　　பேசுவோம்
பொருப்பின்மேலிருந்தொருமுசலைக்கண்டாலும் 　　　　　　　　　　விடோம்
　போகெனப்பிடித்ததனைச்சுட்டுத்தின்னுமற் 　　　　　　　　　　　படோம்
நெருப்பனைக்கட்பொறியிலுண் 　　　　　　　　　　　　　　　　　டாக்குவோம்
　விருப்பிறபிறர்மேலெனைப் 　　　　　　　　　　　　　　　　　　போக்குவோம்
நெருக்கிப்புக்கிச்சிக்கிமிருகம்பட
　நெறிமுறைவழுவுளதுறவெனநில்லைமைகொள் 　　　　　　　　　　(வேட்டைக்)

வேட்டைக்காரர்போற்றிவிருத்தம-இ-ம்-ஆனந்தபைரவி.

சந்ததமயோத்திநாடர்சாளவேவந்த
　சக்ரேசநிதியேபோற்றி
இந்திரன்முதல்மரரெல்லோரும்வாழ்த்தவே
　யிலகுமாமணிபோற்றி
சுந்தரத்திரிச்சங்குமகாராசசுதனெனத்
　தோன்றுபூபதியேபோற்றி
எந்தமக்கருளசெயுமரிச்சந்திரமகாராச்
　விறைவனேநின்றருள்போற்றி.

வசனம்.

வந்தோம்வந்தோம்வேட்டைக்காரர்காஙகள்சுவாமிபராக்கு.

இராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

மனத்திலுக்கிலைச்சந்தவன்புவளர்சத்தியகீர்த்திநீகேள்
வனத்துளமிருகமெல்லாம்வதைத்திடவேட்டைக்காகச்
சினத்துடன்முன்னேசெல்வேன்தேவியோடெனதுசேனை
அனைத்தையுமமைச்சர்பின்னேயடவிககேவரச்செய்வாயே.

வசனம்.

கேளாய்சத்தியகீர்த்தியாகியமந்தரிநானிந்த வேட்டைக்காரரையழைத்துக் கொண்டுவனவேட்டைக்குமுன்னேபோகிறேன்நம்முடைய ரதகெசதுரகபதாதியாகியசதுரங்கசேனைகளு டனேகூடஎனது பத்தினியாகியசந்திரமதியையுமென துபுத்திரசிகாமணியாகியதேவதாசனையும் இரதத்தின்பேரிலேற்றிகொண்டு சகலமந்திரிபிரதானிகளுடனேகூடப்பின்னாலேவனத்துக்குவரச்செய்யுமந்திரி.

மந்திரிவசனம்.

அப்படியேசெய்கிறேன்தேவரீர்மிருகவேட்டையாடுகிறத்திலே சாவதானமாயிருக்கவேணுஞ்சுவாமி.

இராசன்வேட்டைக்குப்புறப்படுகிற-தரு

இ-ம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

வன்வேட்டைகளாட வாரீர்-பொல்லா
மதத்தமிருகங்கள்கொல்லும்வகை பாரீர்

கனமாமயோத்திநாடுகலங்கச்செய்தபிற்பாடு
காட்டிலொருசெந்துவைவிடுவேனே
கூட்டமிருகத்தால்பயப்படுவேனே (வன்)

உக்ரமுடனேவெற்றிவில்லைக்கையி லெடுத்து
வோங்காரத்தொனிசெய்துவளைத்தோரம்பு தொடுத்து
திககுகள்நடுங்கவேதீரமுடன் விடுத்து
சிதறஅக்கினிபபொறிதெறிக்கக்கடு கடுத்து
தேரில்நின்றொருகொர்ச்சனை யிட்டு
சிறியங்கொருபுகழ்க்கொடி நட்டு (வன்)

வெற்றிமுரசடிக்க வீரப்படைதுடிக்கச்
சுற்றியிசைபடிக்கத்தொனிகளெங்கும் வெடிக்கக்
சத்திகதறிவருங்கலைமான்பன்றிகளோடு
மற்றுங்கரடிமுசல்வலியமிருகங்கள்படு
மாட்சிமீங்கள்காண்பது பெரிதோ
சாட்சியென்கைக்கணைக்கிதரிதோ (வன்)

ஓரிநரிகள்கண்டுவொதுங்கினாலும்பயங் கொண்டு
சாரிசாரியாகப்பண்டுசதுர்முகாஸ்திரம்போ திரண்டு
கோரமாங்காளிகூடிச்செய்ய நிர்த்துளி
கூர்பொருந்துமென்கைவாளிகொல்லநிற்குமோ காளி
கூவிக்கதறிப்புரண்டிட வோடித்
தாவிச்சரமழைபொழிகுவோம் நாடி (வன்)

தளபதி-விருத்தம்-இ-ப்-ஆனந்தபைரவி.

கண்ணிமுள்வலையிருப்புக்கைத்தடிவில்லம்போடு
எண்ணுறுபடைகைக்கொண்டவிசைபெறுவேடரோம்
புண்ணியவரிச்சந்த்ரேந்த்ர பூபதிமகிழ்வதாக
வண்ணமாய்வேட்டையாடும்வகையெலாம்புரிகுவோமே.

வசனம்.

கேளடா அதிவீரசிங்கக்குட்டியடா மகாவுக்ர வீரப்புலியடா ஒண்டிசாத்தாண்டா நொண்டிசோட்டாண்டா ஆனைமுழுங்கியடா மலைமுழுங்கியடா ஒட்டைச்சூத்தாண்டா கம்பளிமுத்தா நம்மிட ஆண்டவனுமரிச்சந்திரமகாராசா இ

தோசந்தோஷமடையத்தக்கதாகநம்முடையவிருதுபெற்றவேடச்சாதியி னுடையவீரத்துக்கேதும்குறைவில்லாமல்இந்தக்காட்டைவளைந்து வேட்டையாடுவோம்வாருங்கள்.

வேட்டைக்காரர்-தரு-இ-ம்-பந்துவராளி-தாளம்-ஆதி.

காட்டைவளைத்துக்கொள்ளடையே இந்தக்
காட்டைவளைத்துக்கொள்ளடையே
காட்டைவளைத்துக்கொண்டுகள்ளவழியைக்கண்டு
சூட்டுப்புலிகளுண்டுதோல்நகம் நமக்குண்டு
தொடர்ந்துவரவரச்சாடைகள் காட்டி
கடம்பைமான்களைச்சிதறும லோட்டி (காட்)

முறுக்குவலையைக்கொண்டுமுன்னேகட்டடா-கல்ல
முசல்கூட்டங்கள்மேல்நாய்களைவிடடா-செல்ல
வுறுக்கிவருதோபன்றிமற்றொன்றுமல்ல
ஓடிவருகுதிந்தப்பூமியதனைக் கொல்ல
மறுக்காமலென்சொல்கேட்டுவலைக்குமுன்வலையம் நாட்டு
பொறுக்காமலேதட்டிப்போட்டுப்போனால்தடியாலேவாட்டு
புகுந்துவருமிந்தக்கடுவன் பொல்லாறு
மிகுந்தவிரைச்சலிட்டாலும் நில்லாறு (காட்)

மான்கூட்டம்வருதிதோவுற்றுக்கண்ணாலே பாரு
வளைதடிகொண்டெறிந்துவஞ்சமெல்லாந் தீரு
நான்சொல்வேனிதையெல்லாமொதுக்கிவேறே சேரு
காட்டுவேடர்க்கேயிதுசாதகமான நேரு
மேன்மையுடனேசில்லாக்கோலிருக்கிறு பொல்லா
மான்மதமிருகங்கள் நில்லா
வாய்மையுடனேசெல்லாவகைகிடுகிக ளோடு
மனிதவில்லடிபடுலைகளுடனேகொடுமலைகளுனையும் நடு (காட்)

நிஷ்டூரத்தனிப்பன்றிஅதோவொன்று வருகிறு
நேருக்குநேரேநின்றுபார்விசை பெருகிறு
துஷ்டமிருகங்கள்போனசாடையுந் தெரிகிறு
சூட்சுமமம்புகள்பட்டுத்தொடுத்துநொந் துருகிறு
எட்டிப்பிடிப்போம்பற்றியெறிவோம்பந்தபோ லெற்றி
கிட்டிநெறிப்போக்குத்திக்கிடைக்குமோஇந்த வெற்றி
மரங்கள்நிறைகின்றபல முள்காடு
நெருங்கியிருபுறங்கடம்பைக ளோடும் (காட்)

இராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

சங்கிலிநாய்கள்நல்ல தருக்குள்ளவலைகளம்பு
துங்கவிற்றடிகைக்கொண்ட துடுக்குள்ளவேடரேநீர்
இங்குள்ளமிருகக்கூட்டம் யாவையும்வதைத்தோமெந்தன்
மங்கையுஞ்சேனைநிற்கும் வரையிடம்போவோம்வாரீர்.

வசனம்.

கேளுங்கள்வேடர்களேவேட்டைநாய்கள்வலைகள்அம்புவில்லுகள்இதுமுதலானஉங்கள்பலத்தினாலேயிங்குள்ளமிருகக்கூட்டங்களெல்லாம் அதோகதியாகஅடித்து விட்டோம் இனிப்பயமில்லை யென்னுடைய பத்தினியாகிய சந்திரமதியும் நம்முடையஇரதகசதுரகபதாதிகளும் இறங்கியிருக்கிற மலைச்சாரலுக்குப்போவோம் வாருங்களவேடர்களே.

வேட்டைக்காரர்-வசனம்.

அப்படியேபோவோம்மகாராசனே.

பொதுகொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

மன்னனரிச்சந்திரனந்தவனவேட்டையா டியபின்
தன்னருஞ்சேனைகளருகேதான்வருமவ்வேளையிலே
முன்னமவிஸ்வாமித்திரமுனிமுடிகிவிட்டமிருகங்களில்
சின்னபின்னமாகியங்கேசிலபின்னழைத்துவந்தனவே.

வசனம்.

இக்கப்பிரகாரமாகஅரிச்சந்திரமகாராசன் வனவேட்டையாடித் தன்னுடையசேனைகள்நிற்கு மலையடிவாரத்திற்கு வரும்போது முன்னேவிசுவாமித்திரரிஷியினாலே யனுப்பினமிருகங்களில் சிலமிருகங்கள்தப்பி விஸ்வாமித்திரரிடத்திற்குவருகிற விதங்காண்க.

மிருகங்கள்விஸ்வாமித்திரரிடத்திற்குவருகிற-தரு

இ-ம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

அபயமபயமெங்களையனே இனி
ஆதரித்தருள்செய்யுமையனே

தபோபலன்மிகுந்துச்சாம்பிரதாயம்வகுத்து
துனியேயொருவனெனநின்றுயே-அய்யோ (அபய)

வசிட்டருடனேவாது வந்ததுமெங்கள் தீது
　மலைபோலிருந்துஞ்சதிநினைத்தாயே-அய்யோ
கசட்டுக்குணமோவென்ன கபடமோநீர்சொன்ன
　காரியத்திலேமோசம்புனைந்தாயோ-அய்யோ (அபய)

பயமில்லையென்றுசொல்லிப்பரதவித்திடச்செய்து
　பார்த்திருப்பதுமென்னமாயமோ-அய்யோ
நயவசனங்களாலேநம்பிமோசமபோனேம்
　நடுங்கச்செய்தாயேயிதுஞாயமோ-அய்யோ (அபய)

வாய்விடாச்சாதியென்றுமனுநெறிநினைந்தானே
　வம்சந்தனைக்களைந்துவதைத்தானே-அய்யோ
ஆயும்புவியரசர்கட்கடைவோதாமமோவுன்னை
　அனுமதியாமலேசிதைத்தானே-அய்யோ (அபய)

விஸ்வாமித்திரன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

கலங்கிநின்றழுவதேதுகாயங்களேதுநொந்து
சலனப்பட்டிடுவதேதுதயக்கமேதென்னைநாடி
அலங்கோலமாகவந்தீராரும்மைவதைசெய்தோர்கள்
மலங்கெரிமூட்டுவேனுன்வாய்திறந்துரைசெய்வீரே.

வசனம்.

கதறவேண்டாம்கதறவேண்டாம் உங்களையிப்படிகாயப்படுத்தி வதைசெய்தவர்களைத்தெரியச்சொன்னால் அக்கினிதத்தம்பண்ணிப்போடுகிறேன்சொல்லுங்கள்மிருகங்களே.

மிருகங்கள்-கழிநெடில் விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

என்செய்வோமெங்களையிப்புவிமீதினி
　லிலகியவயோத்திநாடதனில்
புன்பயிர்முதலாம்பலன்களையழிக்கப்
　போகினீர்நாங்கள்போயழித்தோம்
மின்றிகழ்வடிவேலரிச்சந்திரனென்னும்
　வீரனேவேட்டைகளாடத்
தந்திரனுடனேவந்தெமைக்கொன்றான்
　தப்பினோமிருவர்களையா.

வசனம்.

காட்டிலுள்ள ஆகாரங்களைப்புசித்து அங்குண்டாகிய தண்ணீரைக்குடித்துத்திரிகிற வாய்விடாச்சாதிகளாங்கள எங்கள் தலையிலெழுத்திப்படி முடிந்தது உத்தரவின்படியே அயோத்திநாட்டையழித்து அதம்பண்ணினோம் அரிச்சந்திர

மகாராசனாலே எங்கள்பிராணனையொப்பித்தோம்அதனாலேநாங்களிரண்டுபேர் தப்பிவந்தோமையா விசுவாமித்திரமகாரிஷியே.

விசுவாமித்திரர்-கழிநெடில்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

உலகமுடனண்டரண்டப்ரமாண்டபகிரண்டமுநொடியி
　லுறுக்கியேபொடிப்பொடியதாய்
நிலைகலங்கிடக்கடல்வறண்டிடகின்றெரிமூட்டி
　நிமைக்குள்யானைத்தையுமழிக்கவல்லேன்
மலைவதேவசஞ்சலமொழிகுவீர்மன்னவனரிச்சந்திரன்
　வலிமையுமாண்மையுமறிவேன்
சலனமேனைக்தன்றிராணியைப்பாருஞ்
　சண்டமாருதத்தினுமடல்கொண்டுசெய்வேன்.

வசனம்,

சொர்க்கமத்திய பாதாளதிரிலோகங்களும் ஆயிரத்தெட்டண்டமும் இருநூற்றிருபத்துநாலுபுவனங்களும் பொடிப்பொடியாய்நீறுநீறாய் அதோகெதியாய்ப்போகச்செய்கிறேன் அந்தஅரிச்சந்திரனுடைய பலபராக்கிரமங்களையுமறிகிறேன் என்றிராணியைநீங்களேபார்க்கப்போகிறீர்கள்லோகங்களையழிக்கிற பிரசண்டமாருதத்தைப்போலே அவனுடையபலத்தையெல்லாம் நானேயழித்துப் போடுகிறேன் பயப்படாமலிருங்கள்மிருகங்களே.

பொது-விருத்தம்-இ-ம்-மோகனம்.

வினைசெய்யவந்தமிருகங்கள்மாள வெட்டியேயரிச்சந்திரன்கொல்லக்
கனலிடடபஞ்சுபோலெரிந்தோடிக்கதறியசேதியையறிந்தே
மனவலிமிகுத்தகோசிகனென்னுமாமுனிநிர்மிக்கவாங்கோர்
தனிநெடும்பன்றியுலகெலாங்கலக்குஞ்சமனெனவுந்துதித்ததுவே.

வசனம்,

இந்தப்பிரகாரமாகவிசுவாமித்திரமகாரிஷியானவர்அரிச்சந்திரனாலேவதைசெய்யப்பட்டமிருகங்களானது ஓடிவந்துஅழுதலைதககேட்டு மந்திரசக்தியினாலேநிர்மிக்கபபட்ட ஒருதனிப்பன்றியானதுவருகிறவிதங்காண்க.

மாயப்பன்றிவருகிற-தரு-இ-ம்-மோகனம்-தாளம்-ஆதி.

பர்வதாக்ருதியானமகாமாயப்பன்றியுதித்து வந்துதே
மகாமாயப்பன்றியுதித்து வந்துதே
　கர்வக்ரூரமகாகண்டநிஷ்கண்டக
　　காட்டிலுள்ளமிருகக்கூட்டங்கண்டுவெருவ
　நடுகிடுநெடுனமுடிகிப்படபடெனக்
　　ககனமுதலகிலபுவனதிலைகளையும்

கருவியுறுமிகிறமிறைவேவிசைசொடு
  முறுவலுடனேதவமுனிவிடுதொனிபடு (பர்வதர்)

நாலுகாலும்வெள்ளைதிரேகங்கறுப்புநெற்றி
  நடுவேதுர்க்குண்சுழிகாட்டவே   நெடும்
நடுவால்செம்பட்டமயிர்பூமியிலக்கவைத்து
  நாலுகுளம்புகளைநாட்டவே   கொடும்
காலனுங்கண்டலறவக்கினிப்பொறிகள்சிந்திக்
  கண்ணைவிழித்துலகைவாட்டவே   கடும்
காட்டுத்தீயைமுதல்வடவாக்கினியும்
  கணத்திலவிக்கும்கோபம்மூட்டவே   விடும்
கற்குகை-யிற்புகு-நிர்ப்பய-சற்குணர்
  சக்கரம்-வெற்பொடு-திக்குகளைப்பொடி
யிற்பொடி-யொப்பெனநெருக்கி-நறுக்கிய
டிக்க-முடிக்க-நினைக்கில்-நடக்குமெ
னும்படி-பம்பி-ஒளம்பி-வெதும்பிக
தும்பி-யதும்பி-யுதும்பி-நிதம்படு
கடலுலகினிலுள   பலபலவுயிர்களும்
இடுகிடெனத்தனி   மலையெனவலிகொளும் (பர்வதர்)

பன்றி-விருத்தம்-இ-ம்-கலியாணி.

மின்னுமாதவத்தோர்போற்றுமகிழ்விசுவாமித்திரநாதர்
நின்னருங்கமலப்பாதம்நெறிமுறைவணங்கப்பெற்றேன்
என்னையோர்பொருளாயெண்ணியோதினல்வரச்செய்திரோ
என்னவூழியமெனக்கேயிடுந்தொழில்செய்வேனையா.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமி அடியேனையொருபொருட்டாய்நினைத்து எதுகாரியத்துக்காகவுண்டுபண்ணினீரோதெரியவராது அந்தவூழியத்தைக்கேட்டாலதிகசாக்கிரதையாகச்செய்யக்காத்திருக்கிறேன் விசுவாமித்திரமகாரிஷியே.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

பன்றியேகேளாயுன்னைப்படைத்ததோர்கருமமுண்டு
வென்றிவேலரசனான விறலரிச்சந்திரனந்த
குன்றுசூழ்காட்டின்மிருகக்கூட்டத்தைவதைத்தானீபோய்
இன்றவன்படையைக்கொன்றேயிங்கவன்வரச்செய்வாயே.

வசனம்.

கேளாயெனதுமாய்கையாற்பிறந்தபன்றியே யிந்தக்காட்டிலேயுள்ள மிருகக்கூட்டங்களையெல்லாம் கொலைசெய்த அந்தஅரிச்சந்திரனுடையசேனைகளை

யெல்லாங்கொன்று அவனையுமிங்கேவரும்படியாய்ச்செய்யவேணும் இதுநான் நீயெனக்குச்செய்கிறவுபகாரம்பன்றியே.

பன்றி-வசனம்.

அப்படியேஅந்தஅரிச்சந்திரனுடையசேனைவைக்கொன்று அவனையுமிங்கே யிழுத்துக்கொண்டுவருகிறேன்சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

வெஞ்சினவிஸ்வாமித்திரன்வினையினால்விடுத்தபன்றி
யெஞ்சிடாவரிச்சந்திரன்றன்னிகல்சேனைத்திரளின்மேவி
நஞ்செனவதைக்ககண்டு நடுங்கியேதூதரோடி
அஞ்சலின்கரனேயென்றேயலைந்துணாத்திடவந்தாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகவிசுவாமித்திரன்விடுத்தமாயன்கப்பன்றியினாலே சதுர ங்கசேனையுஞ்சின்னபின்னப்பட அந்தச்சேதியை அரிச்சந்திரமகாராசனுக்குச் சொல்லத்தூதர்வருகிறவிதங்காண்க.

தூதர்-தரு-இ-ம்-நீதுகுலகாம்போதி

தாளம்-ஆதி.

ஐயையோநாங்களென்னசெய்வோ மிந்த
யாரிடத்திற்சொல்லியுய்குவோம்
மெய்யரிச்சந்திரன்மேலேவிஸ்வாமித்திரன்சதியெண்ணி
பையபன்றியாலாவிபடச்செய்தான்சூது பண்ணி (ஐயையோ)

சொல்லவென்றால்நாவுலர்ந்து வாடுதே அந்த
துஷ்டமிருகத்தாலாவி யோடுதே
வல்லமைகளுங்களரச் சாடுதே சொல்ல
மனதுக்கும்நடுக்கம்வந்து மூடுதே
கல்லைமரத்தைகமற்றக்காட்டிலுள்ளவற்றைக் கண்டால்
கொல்லவருமெமன்போலேகுலையுதேயெண்ணங்கொண்டால் (ஐயையோ

தூதர்கள்-விருத்தம் இ-ம்-மோகனம்.

சங்கையாளவந்தவெழில்பெருமராசேபோற்றி
துங்கநல்லயோத்தியாளுந்துரைத்தனமணியேபோற்றி
பங்கமில்லாமலெங்கள்பங்குள்ளதெய்வம்போலும
சங்கையில்லாமலாளுமதயர்பரகிருபாபோற்றி.

வசனம்.

சரணம் சரணம் சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

போற்றியென்றிருகைகூப்பிப் புகழ்தருந்துயரத்தாலே
மாற்றலர்க்கஞ்சிவந்த வாறென்னமயங்கிநிற்கும்
காத்திரமுடையதூதர் கடுகிநீர்வந்ததேது
வேற்றொருவினைதானுண்டோ விரைந்துநீருரைசெய்வீரே.

வசனம்.

கேளுங்கள் தூதர்களே உங்களுடைய மனோதுக்கத்தைப் பார்த்தால் சத்துருக்களாலே யடிப்பட்டு வந்தவர்களைப்போலக் காணுது அதுதானோ அல்லது வேறொரு துன்பமுண்டோ விசனப்படாமற் சொல்லுங்கள் தூதர்களே.

தூதர்கள்-விருத்தம்-இ-ம்-முகாரி.

நிருபனேசொல்லக்கேளாய் நெடுவனவேட்டையாடி
திரளாம்பரவிலங்கோம் தீமையையென்னசொல்வோம்
அருவினைப்பன்றியொன்று வழித்ததுசேனையையா
செருமுனைகலங்கினோர்கள் சிதறியேயிருவர்வந்தோம்.

வசனம்.

கேளுமிராசபரமேஸ்வரா எங்கள்துக்கத்தை யென்னென்றுசொல்லுவோம் தேவரீருடன்கூடவேட்டையாடி இரதகசதுரகபதாதிகளெல்லாம் காடுகள் பரவியிருந்தார்களே அதிலேயொருபன்றியானது வந்துவிழுந்து நானாவிதமாகச் சேனைகளையெல்லாம்கொன்றுகலக்கினதால் நாங்களிருவரும்தப்பித்துக்கொண் டோடிவந்தோம் சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-தோடி.

என்கையில்வில்லிருக்க யிறையருளிருக்கச்சேனை
துன்பமுற்றிலதுண்டோ துணுக்கங்கொண்டிடவேவந்த
வன்பெரும்பன்றிதன்னை வதைக்கிறேனஞ்சவேண்டாம்
பொன்பதியரசெல்லாம் புகழ்ந்திடப்புகழ்கொள்வேனே.

வசனம்.

கேளுங்கள் தூதர்களே செயம்பொருந்தியவில் என்கையிலிருக்கப் பரமசிவனது கடாட்சமிருக்க என்னுடைய சேனாசமுத்திரத்துக்கொருதுன்பம்வருமா அந்தப்பொல்லாத பன்றியை நானேசித்திரவ

யள

னைசெய்கிறேன் தேவர்களெல்லோரு மெச்சத்தக்கதாக இதோ புறப் படுகிறேன் பாருங்கள் ஆதர்களே.

அரிச்சந்திரன்-தரு-இ-ம்-மோகனம்-தாளம்-ஆதி.

இந்தப்பன்றியைவிடுவேனோ-கொல்லாமல்நா
னிதற்குப்பின்னிடுவேனோ
அந்தமகாவனதுர்க்கியருள்செய்த
அம்பும்வில்லுங்கொண்டு அந்தத்தேர்மேற்கொண்டு
அகிலபுவனமெனுமகிதலமகிபர்க
ளதிர திசைநிலைபிதிர வுலவிவரும் (இந்த)

எடுத்தவில்லதைத்தொட்டுவளைப்பேன்-கையி
லிருக்குமஸ்திரமழை விளைப்பேன்
கடுத்தோராயிரந்துளை துளைப்பேன்-இந்தக்
காட்டில்விடாமற்சுற்றி வளைப்பேன்
சடுத்தம்பேசியென்னசாம்மகா சூரோம்
துடைப்பேன்மனோவிசாரம்துதர்களேயிந்நேரம் (இந்த)

இராசன்-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

செங்கமலமெனக்குமுதந் திகழ்குவளைக்காந்தண்மலர்
தங்குமிந்ததிவ்யநதி சதுர்முகன்மால்சந்நிதியோ
எங்குமிந்தப்பூதலத்தில் யானறியேனிளஞ்சோலைத்
துங்கசொர்க்கத்தருக்களென்றால் தோறகுமதுசிலாக்கியமிதே.

வசனம்.

ஓகோகோ அரிகரி இந்தஆரண்யத்திலே இப்படிப்பட்ட தெய்வீ கம்பொருந்திய தடாகத்தையுஞ் சோலைகளையும் நான்கண்டதில்லை ஆ கிலுமிதிலே புஷ்பித்திருக்கிற செந்தாமரைப்புஷ்பங்களும் நீலோற்பல மும் செங்காந்தள் வெண்காந்தள் குமுதமுதலாகிய புஷ்பங்கள் நிறைந் திருக்கிற சிங்காரமும் இந்ததடாகத்தைச்சூழ்ந்து தளிர்த்துத் தழை த்திருக்கிறபுஷ்பங்களின் விநோதமும் இந்த இளஞ்சோலையினுடைய அழகும் சுவர்க்கலோகங்களிலுண்டாகிய கற்பகச்சோலைகளும் நிகரா குமா பாரும் பாரும் மந்திரி.

வசனம்.

ஆம் ஆம் சுவாமி வெகுசிங்காரமாக விருக்கிறது இதுதான் இன் றைக்கு வாசம்பண்ணுவதற்கு யோக்கியமான க்ஷேத்திரமகாராசனே.

பொது-விருத்தம்-இ-ம்-சாவேரி.

பன்றியையம்பாலெய்யப் பதைத்தொளித்ததுதான்போக
மன்றலங்குழலாள்சந்த்ர மதியடன்சேனையோடும்
சென்றொருநதியைக்கண்டு தீர்த்தமுண்டிருந்தாரங்கே
வென்றிசேர்சந்திசெய்ய மிகுதவத்தோர்வந்தாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக அரிச்சந்திரமகாராசனானவர் அந்தப்பன்றியை
யொருபாணத்தா லெய்ய அந்தப் பாணம்பட்டுப் பதைத்து ஒளித்துப்
போனபின்பு தனதுதேவியுடன்கூடச் சதுரங்கசேனையையும் கூட்டிக்
கொண்டு ஒருநதியைக்கண்டு தீர்த்தபானஞ் செய்து ஆயாசந்தீர்ந்திருக்
க அங்கேவாசம்பண்ணுகிற ரிஷிகள் சந்தியாவந்தனஞ் செய்ய வருகிற
விதங்காண்க.

ரிஷிகள்வருகிற-தரு- இ-ம்-மத்தியமாவதி- அடதாளம்.

அருந்தவமுனிவர்களிதோவந்தார் மறை
யடங்கலுமுறைவிடங்கொள்ளுந்துறை
அருந்தவமுனிவர்களிதோவந்தார்

பெருந்தகையெனும்பாத்திற்கே தொண்டு
பேதமில்லாமற்செய்நெறி கண்டு
திருந்துஞான அமிர்த முண்டு
செபதபநிலையதனைக்கை கொண்டு (அருந்)

உசிதமாகச்சடைமுடி புனைந்து-தவறில்லாம
லுபர்ந்தசித்தகத்துவம் நினைந்து
விசிதமானகாரணந்தனில் முனைந்து-வேதசாஸ்திரம்
மெய்மைமக்கிடர்வாரமலே முனிந்து
திசைவிளங்கியகுண்டலம் பூட்டி
திரிபுண்டரம்நன்னுதலிற் காட்டி
இசைபொருந்தியமுப்புரி நூலு
மெழிற்செபமதுமாத்திரைக் கோலு
மிலகும்படிமிசை தங்கிய
நலமுந்திகழ் மகிழ் பொங்கிய (அருந்)

இராசன்-போற்றி-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

செப்பிபதலத்திலேனுங்குந் திறமுடையோரேபோற்றி
ஒப்பெபங்குஞ்சொல்லவொண்ணு துயர்நெறியோரேபோற்றி

இப்பெரும்புவியில்யானின் றெய்தியபலன்போல்யார்க்கு
மற்புதமாவதுண்டோ அரியபொற்சரணம்போற்றி.

வசனம்.

சரணம்சரணம் ஆசனத்தி லெழுந்தருளி யிருங்கள் சுவாமிகளே.

ரிஷிகள்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

குலந்திகழ்பரிதிபோலுங் கோசலாவயோத்திநாட்டை
நலம்புனைந்தாளவந்த நன்னெறியோனேவாழி
கலங்கவொன்னலரை வாட்டிக் கதிவென்றோர் தம்மைக்காக்கும்
பலங்கொள்வேலரிச்சந்த்ரேந்திர பார்த்திபாவாழிவாழி.

வசனம்.

வாழிவாழி அரிச்சந்திரமகாராசனே வாழி.

இராசன்விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

மும்மலக்குறும்பைநீக்கி மோனமாம்நிலையைச்சார்ந்த
செம்மைசேர்தவத்துளோரே திகழ்பூமிவ்வனத்தில்நின்றே
இம்மைமைபக்கடக்கும்வேள்வி யியற்றியிங்கிருக்கின்றீரோ
விபமுநல்லதிசயங்க ளிருந்திடில்விளம்புவீரே.

வசனம்.

கேளுங்கள் தபோநிதிகளாகிய சுவாமிகளே நீங்க ளிக்தவனத்திலிருந்து தபஞ்செய்கிறீர்களே இங்கேயேதாகிலும் அதிசயங்க ளுண்டா அடியேனுக்குத் தெரியச்சொல்லுங்கள் சுவாமிகளே.

முனிவர்கள்-விருத்தம்-ஸ்ரீராகம்.

கதிர்குலந்தராசேயித்தக் கடிமலர்வனத்தில்நாங்கள்
முதிர்தவஞ்செய்யுஞ்சூழல் மூக்கியபேயதிசயங்காண்
நதிவளமிகுமயோத்தி நாட்டைவிட்டிங்கேவந்த
அதிசயமேதோநாங்க ளகமகிழ்ந்திடச் சொல்லாயே.

வசனம்.

கேளும் அரிச்சந்திரமகாராசனே இந்தவனத்திலே தபசிகளாகி நாங்கள் தவஞ்செய்கிறதேயதிசயம் வேறென்ன விருக்கிறது அதுக ளிருக்கட்டும் நீரயோத்தியாபுரியை விட்டுக் காட்டிக்குவந்தகாரியந்தெரிச்சொல்லுவீர் அரிச்சந்திரமகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

அன்னநற்பயிர்களெல்லாம்வனமிருகக்கூட்டத்தாலே
புன்னையின்னழியுதென்று புகன்றனர்குடிகள்தாமே

திண்ணமாய்வேட்டைவந்தே சிதைத்தேன்பின் பன்றியொன்றை
கண்ணிற்கண்டெய்தேன்காணேன் கங்குலிங்கிருக்கின்றேனே.

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே மிருகங்களாலே பயிர்களெல்லா மழிந்து போகுதென்று குடிகள்வந்துசொன்னார்கள் அதற்காக வேட்டையாட வந்தேன் வேட்டையாடித்திரும்புகிறபோது மலைபோலொருபன்றிவந்து துரத்தியது அதை யொருபாணத்தினாற் போட்டேன் பட்டோடிப் போய்விட்டது அதற்குள்ளாகப்பொழுதுபோச்சுது ஆனதாலிந்தக் கானகத்திலிருக்கின்றேன் சுவாமிகளே.

முனிவர்கள்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

வருஞ்சட்டதிபாமன்று மாதவவிஸ்வாமித்ரன்
நெருங்கியேபுன்மேற்கோபம் நெடும்பகைவிளைவதானான்
பெருங்கொடுஞ்சாபமிட்டுப் பேதிக்கச்செய்வானிதத்
தருணம்நீதப்பியோடித் தருக்குடனயோத்திசேர்வாய்.

வசனம்.

கேளுமரிச்சந்திரமகாராசனே விஸ்வாமித்திரமகாரிஷியானவர் உம்மிடபேரிலதிசகோபமா யும்மைக்கண்டமாத்திரத்தில் சபிக்கக்காத்திருக்கிறார் இந்தவேளைதப்பவைந்துக்கொண்டுசீக்கிரமாக அயோத்தியாபுரிபட்டணத்தைப்போய்ச்சேருமரிச்சந்திரமகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அரிகரியவருக்கேநா னடிமையுமானேனென்மேல்
பரிவன்றிக்கோபமேதோ பட்சம்போய்ச்சபிப்பதென்ன
இருகெவர்செய்தாரிந்தத் தீவினைவிளைவதேது
சரணடைந்தவனைப்போற்றித்தயையும்பெற்றதன்பின்போவேன்

வசனம்.

கேளுங்கள்சுவாமிகளே அந்த விஸ்வாமித்திரமகாரிஷிக்கு நான்தாசானுதாசனல்லவோ அப்படியிருக்க அடியேன்பேரில் சபிக்கும்படியாகியகோபம்வரவேண்டியதென்ன இப்படிப்பட்டவினையும் ஆராலேவிளைந்ததோ எப்படிவந்தாலுநானேயவர்பாதத்திலேவிழுந்து அவர்மனதைசமாதானப்படுத்தி அவரது தயையும்பெற்றுக்கொண்டு பிற்பாடு நானயோத்தியாபுரிக்குப் போகிறேன் வந்ததெல்லாம்வரட்டும் சுவாமிகளே.

முனிவர்கள்-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

ஊழ்வினையொருவராலு மொழிந்திடவொண்ணாதுவந்த
தாழ்வொடுபெருமையெல்லாந் தாங்கள்செய்கருமமேயாம்

வேள்விசெய்விஸ்வாமித்திரன் வினைக்குளோருபாயமாக
சூழ்வினைகடந்துபோம்நீ ருதியிடம்போவோம்நாங்கள்.

வசனம்.

கேளுமரிச்சந்திரமகாராசனே தாங்கள்தாங்கள்செய்தகருமத்தினுற்பெருமையுஞ்சிறுமையும் இரண்டுந்தாங்களே அனுபவிக்கவேணும் விசுவாமித்திருடைய கற்பனையை மெள்ளவுபாயமாகத் தப்புவித்துக்கொண்டோம் நாங்கள் தவம்பண்ணுகிற இடத்துக்குப் போய்வருகிறோமரிச்சந்திரமகாராசனே.

இராசன்-வசனம்.

அடியேனும் வனவேட்டையாடி சஞ்சாரியிருக்கிறேன் ஆகையால் சற்றுநேரம் சயனித்துக்கொள்ளவேணும் கிருபையிருக்கட்டும் போய் வாருங்கள்சுவாமிகளே.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

அருந்தவர்போனபின்ன ரரிச்சந்திரன்தேவியோடு
பொருந்துபஞ்சணையிலந்தப் பொய்கையின்கரையின்மேலித்
திருந்துநித்திரைதான்செய்து திடுக்கிட்டோர்கனவினாலே
மருந்தெனுமந்திரிக்கு மனைவிக்குமுரைசெய்வானே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக வனவேட்டையாடிவந்து அரிச்சந்திரமகாராசனைக்கண்ட தவமுனிவர்கள்போனபின்பு அந்ததடாகக்கரையிலே தானுந்தன்னுடையதேவியாகிய சந்திரமதியும் பஞ்சணைமெத்தையின்பேரில் நித்திரைபண்ணிக்கொண்டிருக்கத் தானொரு சொப்பனங்கண்டுதிடுக்கிட்டெழுந்து தன்தேவியுடனேயும் மந்திரியுடனேயும் சொல்லுகிறவிதங்காண்க.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-கண்டா.

என்னருந்தவம்போல்வந்த வின்பமாமயிலேகேளாய்
என்னென்றுசொல்வேனிந்த விரவினிற்றுயிலும்போது
அன்னுமோர்சொப்பனத்தின் றுனுக்கத்தைநினைத்தாற்சிந்தை
சின்னபின்னங்களாகச் சிதறுதென்செய்வேனையோ.

வசனம்.

கேளாயென துபிராணரட்சகியான சந்திரமதி யிந்த இராக்காலத்திலிந்தத்தடாகக்கரையில் நாமிருவருஞ்சயனித்திருக்கையில்நானொருதகாதசொப்பனங்கண்டேன் அதைநினைத்தால்மனதுபதைக்குதுபுத்திசபலப்பட்டு சித்தநிலைதளர்வாகுது அரிகரி அரிகரியென்னசெய்வேன்.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

காதல்சேரெனதுப்ராண காந்தரேநீதான்கண்ட
வேதனைச்சொப்பனத்தின் விதமெலாந்தெரியச்சொல்வீர்
யாதுவந்தாலுந்தெய்வ மெண்ணத்தின்படியேயாகும்
தீதொருக்காலும்வந்து சேருமோதேவரீர்க்கே.

வசனம்.

விசனப்படவேண்டியதில்லை சுவாமி யொருபொல்லாங்குந்தேவரீருக்குவரமாட்டாது வருவதெல்லாந்தெய்வச்செயல் வந்ததுந் தெய்வச்செயல் தேவரீர்கண்ட சொப்பனத்தைத் தெரியச்சொல்லுஞ்சுவாமி.

இராசன்-விருத்தம்-இ-ம்-வராளி.

பெண்ணிளமயிலேமித்ர பேதமோயெவர்செய்குதோ
எண்ணுமென்கருத்துக்கிக்க விடர்தருசொப்பனத்தின்
புண்ணியபாவமென்னும் பொருள்தெறியறியவென்றால்
தண்ணளிபெரியோருக்குஞ் சாத்யமோஅசாத்யந்தானே.

வசனம்.

கேளாயெனதுபிராணரட்சிபாண சந்திரமதி நான்கண்டசொப்பனத்தின்பலனையறிந்து இதுபுண்யகதி இதுபாவகதியென்று சொல்லவேணுமேயானால் பெரியோர்களுக்கும் அசாத்தியமாகக்காணும் ஆகையால் இப்படிப்பட்ட தீங்குவருமபடியாய் யார்செய்தகுதோ யார்செய்தமித்திரபேதமோ அறியேனே அரிகரி.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

இக்கொடுக்கனவின்சேதி யெண்ணினலருமையேயாம்
டக்குவாறிந்துசொல்லும் பண்புநானறிகுவேனே
திக்கினிதெய்வமல்லாற் செய்யும்வாறறிகிலேனே
தக்கநற்சத்தியகீர்த்தி தனைவரவழைத்துச்சொல்வீர்.

வசனம்.

கேளுமெனதுபிராணரட்சகா தேவரீர்கண்டசொப்பனத்தின்பயனைநினைத்தால் உமக்கேசொல்லக்கூடாமல் மயங்கிறதினாலே நானெப்படிசொல்லப்போகிறேன் உள்ளபடியிருக்குது நம்முடைய சத்தியகீர்த்தியாகிய மந்திரியைவரவழைத்துச் சொன்னால் அவராலே தெரிந்துகொள்ளலாம்சுவாமி.

இராசன்-வசனம்.

ஆனாலப்படியேதெரிந்துகொள்ளலாம் எனதுபிராணநாயகி.

இதுவும்-இராசன்-வசனம்.

ஆராடாதூதா நம்மிடமந்திரியாகிய சத்தியகீர்த்தியை யழைத்துக்கொண்டுவாரும் பிள்ளாய்.

தூதன்-வசனம்.

அப்படியே யழைத்துக்கொண்டுவருகிறேன்சுவாமி.

சத்தியகீர்த்தி-போற்றி-விருத்தம்-இ-ம்-சாவேரி.

தருமமுங்கீர்த்திசத்யந் தவறிலாமனத்தோய்போற்றி
திருவுறையபோத்தியாளுந் திரிச்சங்குமைந்தாபோற்றி
அருணனையநூயமைமையாளும் அரிச்சந்த்ரபூபாபோற்றி
பரிவுடனெனையழைத்தப் பண்பெனக்குரைசெய்வீரே.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமி தேவரீரடியேனையழைப்பித்தகாரியந் தெரியச்சொல்லவேணும்சுவாமி.

இராகன்--விருத்தம்-இ-ம்-சௌராஷ்டகம்.

மதிமந்திரிசத்தியகீர்த்தி மணியேநீசொல்லக்கேளாய்
விதிமுறையாலேயிங்கே மேவிநித்திரைசெய்தோமே
அதிநேமோர்சொப்பனத்தை யடைவுடன்கண்டோமத்தை
சதிருடன்கேட்டுநன்றாய்த் தரும்பலனுரைசெய்வாயே.

வசனம்.

கேளுமெனதுமந்திரியாகிய சத்தியகீர்த்தி நாமொருசொப்பனங்கண்டேனந்தசொப்பனத்தைக்கேட்டு அதினுடையபலனை நன்றாயாராய்ந்துசொல்லவேணும்மந்திரி.

சத்தியகீர்த்தி-வசனம்.

அப்படியேதேவரீர்கண்டகனவைத் தெரியச்சொல்லும் அரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-கனவுகண்ட-தரு-கண்ணி

இ-ம்-பூபாளி-தாளம்-ஆதி.

இக்கனவுநான்கண்டவிதந்தன்னை
பெண்ணென்றுசொல்லுவேன் மந்திரீ-மந்திரீ

கந்தமலர்நிறைந்தவிந்ரத்தடாகமிந்தக்
கரையிலிருந்தோம்நாமே மந்திரீ-மந்திரீ

இந்துநுசலாவிந்தச்சந்த்ரமதியுடனே
பிரவினிற்றுயின்றேனுன மந்திரீ-மந்திரீ

சந்தியாகியநடுசாமராத்திரிதனிற்
றயங்கக்கண்டதைக்கேளும் மந்திரீ-மந்திரீ

ன ஒருஸ்திரீயென்னைவிட்டு நீங்காமலிருந்து பூலோகத்திலேயுள்ளநாள்வரைக்குங் கூடவேவாழ்ந்து மோட்சலோகத்துக்குங் கூடவே வரக்கண்டேன்அவளாரோ இந்தசொப்பனத்தின் பலனையெனக்கு விபரமாகத் தெரியச்சொல்லுமந்திரி.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-முகாரி.

தாரைவார்த்திட்டமாதாந் தன்னுடன்போனமாதுஞ்
சீருள்ளநகரமாமும் இருவர்மாதிருவர்சேதி
தாரமுஞ்சுதனு வேறோர் வையலேயுன்னைபிரிக்கச்
சாதமாயினவக்கொல்லாஞ் சதிசெய்கோசிகனால்வேதும்.

வசனம்.

கேளும் மகாராசனே நீர்தாரைவார்த்த ஸ்திரீயும அவளுடனே கூடப்போய்விட்ட ஸ்திரீயும் நாடுநகரமுதலாகிய சகலயாக்கியமும் அசையேற்றுக்கொண்டவரை விஸ்வாமித்திரமகரிஷி சாப்பாடடை வெறுத்து நீங்கிப்போய்விடவநும் கண்ணெதிரியாமற்றழித்தவனும் வெவ்வேறுபடப்போகிற வுமது பெண்சாதியும் பிள்ளையுமாகும் உமமைநீங்காமலிநந்தவொருத்தியும் உம்முடைய சத்தியமாகும் இதுதான் கனவினுடைய பலன் மகாராசனே.

இதுவும்-சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-தோடி.

சுபடனும்விஸ்வாமித்ர காதகனாலேயுந்தன்
சுபமுளநகரிநாடு சோர்விலாதனமுந்தோற்று
அபலமாய்மனைவிமைந்த னவருடனநீயும்வேறாம்
விபவமில்லாமற்காணும் விதிக்கென்னசெய்வேனையா.

வசனம்.

ஐயையோ இந்த அனியாயத்தைசகானென்னென்றுசொல்லுவேன் இந்தப்பொல்லாத விஸ்வாமித்திரனாலே நாடுநகரந்தன முதலாகிய தகலையுந்தோற்றுபெண்சாதிவேறுபிள்ளைவேறுக்கீபரதேசியைப்போலாகவோஅப்படிநீங்கள்காணவோஐயையோவென்னசெய்வேன் அரிச்சந்திரமகாராசனே அரிகரி,

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா-

பெண்டிமுந்தானுமிந்தப் பிள்ளைபோய்நீவேறாகி
மண்டலத்தலைதிட்டாலும் மாய்கையால்விஸ்வாமித்ர
கண்டனென்செய்தாலுஞ் சாயம்போகாகீர்த்திநிற்கும்
அண்டர்கள்புகழுஞ்சதய மனைவிடவேண்டாஞ்சுவாமி

வசனம்.

கேளும்எனதுபிராணரட்சகாரன்வேறுபிள்ளைவேறுநீருஞ்வேறுகிய

போதுசபிப்பேன்வேறொருபாயத்தினால்செயிக்கவேணும்நீயேபார்க்கப்போகிறா
ய்நீவருந்தந்தீர்ந்திருப்பாய்போய்விடும்பன்றி.

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

அம்புபட்டபன்றிவந்தாஅவனைக்கிச்சொன்னபின்பு
வெம்புமனக்குரூரவிசுவாமித்திரன்கோபத்தினிந
கொம்பனையாமைபுவிழிகொண்டநறுங்கொண்டலெனுங்
கும்பமுலைச்சிமாய்க்குதித்தனர்யோகினியர்களே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகஅரிச்சந்திரமகாராசனுடையபாணம்பட்டுவந்துசொ
ன்னபன்றியின்சொல்லைக்கேட்டவிசுவாமித்திரர்கோபத்தினாலேபெருமூச்செறி
ந்து இரண்டுஸ்திரீகளாகியயோகினிப்பெண்கள்பிறந்தார்களென்றுகாண்க.

யோகினிப்பெண்கள்-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

இருமையிலுநற்கதியையெய்துதவமேபுரிந்த
பெருமைமிகுமாதவரே பெண்களெனவெங்களைநீர்
தருணமிசையுண்டுபண்ணத்தந்திரமேதெடுத்துரைத்தால்
சுரணமிதொந்தொருகொடியில் சாதிப்போந்தடையில்லையே.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமியெங்களைத்தேவரீருக்குக் குமாரத்திகளாகவுண்டு
பண்ணினகாரியமென்ன அதைத்தெரியப்படுத்தினால்தேவரீருடைய திருவடியை
த்தியானம்பண்ணிக்கொண்டு எப்படிப்பட்டகாரியமானாலும் முடிக்கிறத்துக்கு
எங்களுக்குவல்லமையுண்டுகடாட்சிக்கவேணும்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

காணரும்பொருட்போல்வந்தகன்னிநல்லமுதேகேளீர்
வீணையினிசையுங்கியானவிநோதமும்பரதநாட்டம்
சேணுயர்மாதாநாணச்சிந்தையாயழகுவாய்ந்த
பாணர்கள்யாருமெச்சப்பாடவுந்திறங்கொள்வீரே.

வசனம்.

கேளுங்கள்நம்முடையஅனுக்கிரகத்தினாலேவந்தநீச்சலதிரீகளாகியசெய
ம்மோகனசித்விலாசமதனமோகினிப்பெண்களேயுங்களுக்கு வீணைமுதலியசக
லவாத்தியங்களுடையஇசையும்பரதநாட்டியமும்சித்திரமாக ஆடல்பாடல்
நிரம்பியதிராணியுஞ்சித்தியாகிச்சிலாக்கியமாகக்கடவீர்கள்வாழிவாழி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

உங்களையுண்டுபெண்ணென்றுண்டுவார்த்திலாங்கோர்
கங்கையின்கரையிலைமேவுங்காசல்சேரரிச்சந்த்ரனறன்
றங்கநக்சமுகங்கண்டுதுதிபெறுகானம்பாடி
திங்கள்வெண்குடையைக்கொள்வீர்பறித்திட்டால்சேர்ந்துவாரீர்

வசனம்.

கேளுங்கள்மோகினிப்பெண்களேயுங்களையுண்டுபெண்ணினாகாரியம் வேறொன்றுமல்லஇக்கவனத்திலதிக அக்ருதந்தவிலைவஸ்து இறங்கியிருக்கிற அரிச்சந்திரமகாராசனைக்கண்டுநீங்கள்நற்றசங்கீதகாநநாட்டியங்களைக்காட்டி மெய்ப்பித்துஉங்களுக்குவெகுமதிபாகப் பூச்சக்ரக்குடையைக்கேளுங்கள் இல்லாவிடில்உங்களைக்கூட்டியநுவித்தம்படிபாகத்திர்ப்பிடையுங்களை இதுதானிங்கள்செய்கிறவுபகாரம்போய்வாருங்கள்பெண்களே.

மோகினிப்பெண்கள்-வசனம்.

அப்படியேபோய்வருகிறோம்சுவாமி.

மோகினிப்பெண்கள் அரிச்சந்திரனிடத்துக்கு-வருகிற-தரு.

இ-ம்-ஸ்ரீகல்யாணி-தாளம்-ஆதி.

மதுரவசனகயோகமகாப்ரவாக
மாயமோகினியாதாவந்தார்

விதிவசத்தாலேவிஸ்வாமித்திரன்றனக்குவந்த
மிண்டாமதிககோபச்சண்டாளந்தனிலெழுந்த (மது)

நாட்டிமறையுமின்னற்கொடியென்றுலவிவரிடை
காமினிதனிவினி வேற்குமோ-வந்து

காதல்விளைக்குமிரண்டுகன்னத்தழகைக்கண்டால்
கண்ணுறுதனைககண்டு தோற்குமோ-சொல்லும்

தீட்டியவேள்வித்தவமுனிவர்கள்நெஞ்சைத்
திகைக்கச்செய்யாயமேலக்கிய பார்க்குமோ-வரு

சிலகளிரண்டிதென் [illegible] புவசேதுதி
இவல்லகைவிலலேயினையக சேர்க்குமோ-இசை
புட்டிக்சந்திமை [illegible] துந்து வீணைதொண்டு
பாட்டினிசைபெருகப்பரிம்பக்குவந்தனர் (மது)

வசனம்.

கேளுங்கள்பெண்களேசகலபுவனங்களையும்பிரமிக்கச்செய்யுங் குணாதிசயங்களோடுங்கூடியநீங்களார்உங்கள்பேரென்ன நீங்களிருக்குஞ் ஸ்தலமெது நீங்களென்னகுலம்நீங்களெங்கேவந்தீர்கள் வந்தகாரியந் தெரியச்சொல்லுங்கள் பெண்களே.

மோகினி-விருத்தம்-இ-ம்-அடாணா.

பர்வதமார்புலச்சியர் நாங்களிவ்வனத்திற்பகல்விஸ்வாமித்திரன்தவஞ்செய்
கோவியின்மலைச்சாரலிலிருப்போங்கூறுகன்ம்துயரழிசையும்
ஆவலினடஞ்செய்திறமறிந்தவாமாதலாலுனதுசக்ரதியின்
சேவியமாடல்பாடலைக்காட்டிவெகுமதிபெற்றிடவந்தோம்.

வசனம்.

கேளுஞ்சுவாமிநாங்கள்செய்தவப்பலத்தினாலேநீச்சகுலத்திற்பிறந்தோம் சங்கீதபரதசாஸ்திரங்களெல்லாம்படித்துக்கொண்டோம் இந்தவனத்தில் விஸ்வாமித்திரரிஷிதவஞ்செய்கிறமலைச்சாரலில் குடியிருப்போம் நீர்வந்தசேதியைக் கேட்டுஉம்முடையசமுகத்திலேகேளிக்கையாடி வீணைமுதலாகிய வாத்தியங்களுடனேபாடிமெய்ப்பித்து தேவரீரைச்சந்தோஷமடையச்செய்துவெகுமதிபெற்றுக்கொள்ளவந்தோம்மகாராசனே.

இராசன்-வசனம்.

ஆனால்நீங்கள்கற்றிருக்கிறஆடல்பாடல்களைத்தெரியப்படுத்தினால்நாம்சந்தோஷத்தையடையலாம்.

மோகினிப்பெண்கள்-அபிநயபதம்.

இ-ம்-நீலாம்புரி-தாளம்-ஆதி.

சகிக்கவசமோசாமிமோகதாகம்பொல்லாதினான்சாமி
சகிக்குமகாப்ரதாபாளங்கள்துரையரிச்சந்திரபூபா (சகிக்க)
சருவபுவில்மதன்காட்டிக்கருவிநாணிலையப்பூட்டி
விரிக்குமலர்க்கணைதீட்டிவிடுகிறான்சலம்பாராட்டி (சகிக்க)
மாருதமனல்போற்றுவமாங்குயிலெலதிரேகூவ
தீருமேமகாப்ரவாகசெந்தழல்மதிபுந்தூவ (சகிக்க)
உபாதிசமாதிவாகோகலவிவித
குபுகுபெனமதசலதிகொண்டிடவேகூடத்ததி (சகிக்க)

மோகினி-சிங்காரபத்தியம-இ-ம் புன்னாகவராளி.

மருவோஅலகந்தமேருநேராங்கிரிகள
நேருமோவுமதுபுசகிலையினழகும்

தாருவோ அலைந்த தாருநேரான தரு
நேருமோகைக்குவளைமங்கரதென்றல்
மலர்மாதுவிளையாடும் மார்புநேராகுமிவ்
வையமொப்பாருமோ துய்யநிபுண
அருளானபார்வையும் அழகின்மதுசேர்வையும்
ஒருநாளுமறவாதென்னுருகுமுளமே
புருஷகாம்பீரத்னமேபோகசாலி
சரசசிங்காரமுக்யமேதாபமாதர்
உருகுசிற்சோபமறியாதவுனதுகடினம்
அரியவுற்பாதவிரகமென்னுவல்கிராய்.

இராசன்-விருத்தம்-இ ம்-பந்துவராளி.

பெண்களேநீங்கள்செய்த பிரியமாம்நடனசாரம்
கண்களிற்கண்டேன்கீதங்கல்வியுந்திறமுமெய்யே
நண்பதாயுங்கள்சிந்தை நயமிகுமகிழ்ச்சியாகப்
பண்புறுசொர்ணம்வஸ்த்ரம் பணிகளுங்கொடுப்பேனனே.

வசனம்.

கேளுங்கள்பெண்களே உங்களாடல்பாடல்களுக்குமெச்சினே
ன் உங்களுக்குவேண்டியதிரவியங்கள் வஸ்திரங்கள் ஆபரணங்களும்
வாங்கிக்கொள்ளுங்கள்பெண்களே.

மோகினி-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

எங்களாண்டவரேசொர்ன மினியபொற்பணிகளாகட
எங்களுக்கெதேஷ்டமுண்டிவ் வேழையர்கருத்தொன்றுண்டு
துங்கமாங்கதிர்குலத்துத் துரைத்தனந்தழைக்கும்நீதி
எந்த வெண்குடையைத்தந்தாற்சந்தோஷமடைவோம்நாங்கள்.

வசனம்.

கேளுமெங்களாண்டவரே திரவியம்வஸ்திரம் ஆபரணமுதலாகி
யது உங்களுக்கெதேஷ்டமாகவேயிருக்கின்றது குறைவில்லைஆகை
யால் அதோவிருக்கிறஉங்கள்பூச்சக்ரக்குடையைத்தந்தால்நாங்கள்ச
ந்தோஷமடைகுவோம்சுவாமி.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-பியாகடை.

அடியிடைமாதரேநீர் சுவைபெறுமதுரகீத
நடனமுஞ்செய்தீர்மன்னன் நயந்தொருபொருளைத்தந்தால்
குடைதரவேணுமென்றீர் கொற்றவர்க்கடாதவார்த்தை
இவைதற்குராதைக்கேட்டா லிகழுடன்கொடுக்கலாமே.

வசனம்.

கேளுங்கள்பெண்களே நீங்கள்பாடியபாடலையும் ஆடலையுங்கண்டு இராசாவுக்குச்சந்தோஷம்வந்தொருவெகுமதியைக்கொடுத்தால் அதைபெற்றுக்கொள்ளாமல் இராசாக்களுக்குக்கொடுக்கத்தகாதகாரியமாகவிருக்கின்றகுடையைக்கேட்டால்கொடுப்பார்களா?கொடுக்கத்தக்கபதார்த்தங்களைக்கேட்டுநீங்கள்பெற்றுக்கொள்ளலாம்பெண்களே

பெண்கள்-விருத்தம்-இ-ம்-அனந்தபைரவி.

நாடியகுடையுந்தந்து நம்பெருஞ்செய்யாவிட்டால்
வாடியவிரகத்தாலே மயங்குமெங்களையன்பாகக்
கூடியேயின்பந்தாற் கொடையிதுபெரிதென்றெண்ணி
நீடியமகிழ்ச்சியாவோம் நிறையரிச்சந்த்ரமன்னே.

வசனம்.

கேளும்இராசசக்ரேஸ்வரா நாங்களும்மைநாடிவந்த பூச்சக்கிரக்குடையைத்தரமனதில்லாவிட்டால்எங்களைக்கூடியின்பசவுக்கியங்களைத்தந்தால்அதுபோதும் அதைப்பார்க்கிலும்வேறேவெகுமதியிருக்கின்றதாசுவாமி.

மந்திரி-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

அஞ்சாமலரசர்முன்னே அடுக்காதபரிசுகேட்க
நெஞ்சமும்வலிகொண்டீர்கள் நீச்சியரானநீங்கள்
எஞ்சலில்லாமல்யார்க்கு மேற்குமப்பொருளைக்கேட்டாற்
சஞ்சலமில்லாமலீவார் தகாதசொல்மொழியலாமோ.

வசனம்.

கேளுங்கள்பெண்களேநீங்கள் நீச்சஸ்திரீகளாகையால்நினைக்கத்தகாதகாரியங்களைக்கொடுக்கச்சொல்லிக்கேட்கிறீர்கள்தருமத்துக்குவிரோதமில்லாமல்கொடுக்கத்தகுமானவெகுமதியைக்கேட்டுவாங்கிக்கொண்டுபோங்கள்பெண்களே.

மோகினி-விருத்தம்-இ-ம்-கலியாணி.

கொடுக்கிலாருன்னைப்போலுங் குவலயந்தன்னிற்காணோம்
அடுத்துநற்பரதசாஸ்திர வபிநயமெல்லாங்காட்டித்
திடத்துடனொன்றைத்தாவித் தேகியென்றடுத்துக்கேட்டோம்
தடுத்துரைகள்ளன்றீயன் சபலனென்றறிகிலோமே.

வசனம்.

கேளும்மகாராசனே கொடாதலுத்தர்களிலேயும்மைப்போலெங்குங்கண்டதில்லைதாங்கள் ஒருபிசுபுவென்று எங்களுடையபாதலை

கிதவித்தைகளைக்காட்டினேம் தாங்கள்பொல்லாதவர்ச்பலசித்தர் ஆனதால்தேஹியென்றவர்கள்கேட்டதைக்கொடாமல் தடுத்தீர்தங்களுடையநிர்வாகமறியாமல்வந்தோம்மகாராசனே.

## இராசன்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

வீரமாம்புலிபோற்சீறு மிகுவலிதூதரோயிக்
கார்நிறக்கூந்தல்நீச்சக் கன்னியரானோர்தம்மை
நேருமென்சமுகம்விட்டு நெடியதூரத்திலோடச்
சேரவந்திழுத்துத்தள்ளித் திரும்புவீருடன்செய்வீரோ.

## வசனம்.

கேளுங்கள்பலபராக்ரமமுள்ளதூதர்களே இந்தநீச்சப்பெண்களைத் தாட்சண்யமில்லாமல் கழுத்தைப்பிடித்துத தள்ளிக்கொண்டுபோய்நெடுதூரத்தில்விட்டுவாருங்கள்உடனேசெய்யுங்கள்தூதர்களே.

## தூதர்கள்-வசனம்.

அப்படியேசெய்கிறேம்சுவாமி.

## பொது-வசனம்.

இவ்விதமாகஅரிச்சந்திரமகாராசாவின் உத்தாரப்படியேதூதராலேதள்ளிவிடப்பட்டமாயமோகினிகளாகிய நீச்சஸ்திரீகள்தங்களையுண்டுபண்ணியனுப்பினவிஸ்வாமித்ரமகாரிஷியினிடத்திற்குவருகிறவிதங்காண்க.

## மோகினிப்பெண்கள்-பிரலாபனை-தரு.

## இ-ம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

| | |
|---|---|
| ஐயைபோனாங்கள்போயவதிப்பட்டோமையா | முனிநாதா |
| தெய்வச்சதியோநாங்கள்செய்தபாவந்தானே | முனிநாதா |
| அருமையாயெங்களையனுக்ரகஞ்செய்தாயே | முனிநாதா |
| கருஷிக்கும்பாவிகைபிற்காட்டிக்கொடுத்தாயே | முனிநாதா |
| உத்தரங்கொண்டந்தலுத்தனைப்போய்க்கண்டோம் | முனிநாதா |
| எந்தனைபோவிதவிங்கிதங்காட்டினே | முனிநாதா |
| எல்லாந்தெரிந்தவன்போலிருந்தானையா | முனிநாதா |
| நல்லவெகுமதிதருவானென்றிருந்தோம் | முனிநாதா |
| என்னவெகுமதிவேணுமென்றுகேட்டான் | முனிநாதா |
| மன்னவனென்றெண்ணிவண்ணக்குடையைக்கேட்டோ | முனிநாதா |

கொடுக்கப்படாதென்றான்கூடவேமோகித்தோம் முனிநாதா
தடுத்துத்தூதனைவிட்டுத்தள்ளிவிடச்சொன்னான் முனிநாதா
அடிக்குமோதூதர்களடித்துத்தள்ளினார்கள் முனிநாதா
நடுக்குதுதிேகமும்நாங்களென்னசெய்வோம் முனிநாதா

விஸ்வாமித்திரர்-விருத்தம் இ-ம்-மோகனம்.

அழுதகண்ணீருமேலு மடியுண்ட தழும்புமாகி
விழுதெனக்கூந்தல்வீழ மெல்லியதுகிலுஞ்சோரப்
பழுதுடனிங்கேவந்த பாவையீரார்தானிந்த
முழுமனத்திடமாய்ச்செய்தோர் மொழிகுவீரினியொருக்கால்.

வசனம்.

கேளுங்களெனதுமாய்கையாலேவந்தமோகினிப்பெண்களே அந்தஅரிச்சந்திரனிடத்தில்நீங்கள்போய்ஆடல்பாடல்களைச்செய்துவெகுமதிபெற்றுவாருங்களென்றுசொன்னேனே அப்படியிருக்கஉங்களையிப்படிஅலங்கோலமாய்மேலெல்லாந்தழும்பேறக்கண்களிலேதாரைதாரையாய்சலம்பெருகக்கட்டியிருக்கின்றவஸ்திரஞ்சோர்ந்துபோகஈனவிதமாகஅடித்துத்துரத்தவந்தகாரணமேதோ இன்னமொருதரந்தெரியச்சொல்லுங்கள்பெண்களே.

மோகினிப்பெண்கள்-விருத்தம்-இ-ம்-முகாரி.

மொழிப்படிநாங்களரிச்சந்த்ரமன்னன்
முகங்கண்டேயபிநயம்படித்தோஞ்
செழிப்புடன்கேட்டுக்கொடுத்ததைமறுத்துத்
திகழும்வெண்குடைதனைக்கேட்டோம்
பழித்தலைத்தந்நீதான்மோகத்தியொன்றோம்
பாதகத்தூதனைவிடுத்துக்
கழுத்தினைப்பிடித்துத்தள்ளியேயடித்தான்
கலங்கினோமென்செய்வோமையா.

வசனம்.

தேவரீருத்தாரப்படியேயந்தஅரிச்சந்திரமகாராசனைக்கண்டு அபிநயம்படித்தோம் மெச்சிவெகுமதிகொடுக்கவந்தான் அதைமறுத்துப்பூச்சக்ரக்குடையைக்கேட்டோம்கொடுக்கமாட்டேனென்றான் எங்கள்மோகந்தீர்க்கச்சொன்னால்எங்களையிப்படித் தூதர்களாலேயடித்துத்தள்ளினான் வெகுவருத்தப்பட்டோம்என்னசெய்வோம் என்னசெய்வோம்விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

பதைத்தழுதேங்கிநிற்கும் பாவைநல்லோரேகேளீர்
வதைத்தொழிற்கஞ்சானந்த மன்னனையான்போய்க்கண்டு
சொதித்தெழுஞ்சுடரைப்போலக் கூசாமல்சபிப்பேனென்ன
மதித்தவன் வணங்கிவந்தால் மணஞ்செய்துவைப்பேன்வாரீர்

வசனம்.

கேளுங்கள்பெண்களேகொலைசெய்வதற்கஞ்சாத அந்தஅரிச்சந்திரன்உங்களையடித்தானல்லவாநல்லது நல்லது அதோநான்புறப்படுகிறேன்வடவாமுகாக்கினியைப்போலச்சீறி எவ்வளவுந்தாட்சண்யமில்லாமற்சபிக்கிறேன் அதற்குமுந்தி அவன்என்னைவணங்கிக்கொண்டால்அவனுக்கேயுங்களைக்கலியாணஞ்செய்துவைக்கிறேன் கூடவேவாருங்கள்பெண்களே.

பொது-விருத்தம்-இ-ம்-சாவேரி.

நலமிகுமரிச்சந்திரனெழிற்சபையில்
   நடனகீதத்தொழில்முறையெலாங்காட்டி
இலகியபரிசைப்பெறுமலேதள்ளுண்
   டிடவொலாம்வனிதையர்சொலவே
அலைகடல்சிதறவுலகெலாம்பதற
   அரியயன்சிவன்முதலெவர்களுமஞ்ச
நிலைபெறுமந்தக்கோசிகமுனிவ
   னிருபன்வந்திருக்குநிலைக்குவந்தனனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகவனத்திலேவந்திருக்கும்அரிச்சந்திரமகாராஜனிடத்திற்குவிஸ்வாமித்திரமகாரிஷிவருகிறவிதங்காண்க.

விஸ்வாமித்திரர்-தரு-இ-ம்-மோகனம்-தாளம்-ஆதி.

விஸ்வாமித்திரனே-மகாதவ-விஸ்வாமித்திரனே.
திசாதிசையிலுள்ளநிசாசரர்முதலாஞ்
   சிலாக்கியனேமிகுந்தபலாஷ்டகசங்களுந்
திக்குகள்கெட்டிடல்நெக்குகள்விட்டிடப்
   பக்கெனவுலகையுந்திக்கெரித்திடவல
திறமிகுகிழிபடுகனல்நடுவினிலொரு
   திசழ்சதுர்யுகமுமேமிகுதவமகிமைசெய் (விஸ்வா)
சுரரும்இமையகிரிச்சாரல்நாலுதிசையும்
   தலைஞ்செய்தமனவலிவெளி தாமோ-இந்தத்

தாரணியாளரிச்சந்திரனைப்போகுஞ்செய்ய
சாமர்த்தியமென்னிடத்திற்பிழை போமோ
ஆருநடுங்க அவன்மனைவியைப்புதல்வனை
அரசைவேறாக்கினாலறும் நோமோ-சொல்லும்
அந்தவசிஷ்டனன்றுயிந்திரன்சபையிற்சொன்ன
அசட்டுவார்த்தையாலெந்தன்பகை போமோ
சீரிலங்கியமனுவலுமைமூவர்க ளாலுஞ்
செப்புவரோவெனக்கிணைசெகத்திலுண்டோ மேலும்
காருண்டெழுந்தகருங்கடல்வந்தெதிர்த்திட் டாலுங்
கடுங்கனல்போலெரிப்பேன்கலங்கேனொருக்காலும்
கர்த்தனெனத்திகழ்கீர்த்தியப்பிரசித்த
விசித்ரசரித்ரகருத்தினுதித்தவெங்
கடுவிடமெனநெறிகொடுவருசினமிகு
கனலெதிர்வருபவரெவரினியுலகினில் (விஸ்வா)

அரிச்சந்திரன் போற்றி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

விரிந்தபொற்சடையிலங்க மெய்யெலாம்வெயர்வுசிந்தப்
பரிந்துடன்வருந்தவத்தின் பாக்யமேபோற்றிபோற்றி
தெரிந்துமைவணங்கவிந்தச் சிறியனாலாவதுண்டோ
மருந்தெனுங்கமலபாதம் மகிழுடனாளும்போற்றி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

விடுவிடுவிடுவிடடாபாதத்தைவிடடாமகாபாவியானதுரோகிவிடடாவிடு.

இராசன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

யாதொருகுற்றந்தன்னை யடிமையான்செய்ததில்லை
தீதுறுகோபமிஞ்சிச் சினந்தென்னையுதைத்தாலே
பாதம்நொந்திடுமேயிந்தப் பழிக்கியான்பயந்தேனையா
பேதமாந்தழும்புண்டாகும் பிடித்துபசரிப்பேன்சுவாமி.

வசனம்.

அரிகரிதேவரீர்சிந்தைதனக்குக்கோபம்வரும்படியா யடிமையொருகுற்றமுஞ்செய்யவில்லையே அப்படியிருக்கவீணிலேயென்னைமாறி மாறியுதைத்தீர் அப்படியுதைத்ததினாலே தேவரீருடைய பாதங்கள் நோகுமே அதனாற்றழும்புண்டாகுமே அந்தவருத்தந்தீருதற்காக நான்வைத்தியவுபசாரஞ்செய்துபாதங்களைப்பிடிக்கிறேன் சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

குற்றங்களறியேனென்றுங் கொடுமையாயுனைத்தேடுவேன்றும்
வெற்றியாய்விசித்ரமாக விளம்பினுய்பளாகன்று சு
கற்றுவாழ் மிருகக்கூட்டத்தைக் காலன்போல்வதைச்செய்தாயே
சுற்றுமிவ்வனத்தையெல்லாஞ் சுட்டெரித்தழித்திட்டாயே.

வசனம்.

ஆமடா துஷ்டாவாயினுலே விண்ணுணம் பேசிப்பலுக்கிருப்ப ளாபளா உன்னைப்போல்ஒருவனரயுங்கண்டதில்லைநான்பஞ்சமாபாதகங்களுக்கும் அஞ்சாதவனைப்போல்காட்டிலேகிடக்கிறவாய் விடாச்சாதியாகியமிருகக்கூட்டங்களையெல்லாங்கொன்றுவாயிலேபோட்டுக்கொண்டாய் இந்தவனத்தையுமெரித்துச்சாம்பலாக்கி விட்டாயேயித்தோடேவிட்டடையாபோடா அப்புறத்தே.

இதுவும்-விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

தவஞ்செய்வோர்க்குதவியாகத் தழைத்துப்பூத்திருந்தாயிந்த
நவமுளசோலையெல்லாம் நாசஞ்செய்திட்டாயெந்தன்
துவரிதழ்மாதர்வந்து சுதிக்யானவிநோதங்கள்செய்தால்
கவலைகொண்டமூதேயேங்கிக் கதறவேயடித்திட்டாயே.

வசனம்.

இன்னமும் நீசெய்தபொல்லாதவிதங்களைச் சொல்லுகிறேன் கேள்பஞ்சேந்திரியங்களையுமொடுக்கிதவஞ்செய்கிறரிஷிகளுக் குதவியாகஇருக்கிறசோலைகளையெல்லாமழித்தாய் நான்சிருஷ்டித்துவளர்த்தபெண்களையுன்னிடத்திற்கனுப்பினுல்அவர்கள்செய்த ஆடல்பாடல்களைக்கேட்டு அவர்களைச்சந்தோஷப்படுத்தாமலும் ஸ்திரீசாதிகளென்றும்பாராமலும்அலங்கோலமாயடித்துத்துரத்தினுய் ஆகையாலுன்னைப்பார்க்கிலுந் துஷ்டன் இவ்வுலகத்திலுண்டா போடாபோ

இராசன்-விருத்தம்-இ-ம்-கலியாணி.

மனுநெறியரசர்க்கெல்லாம் வனவேட்டையாடவந்த
பனுவலின்விதியுமன்றிப் பாவியகுடிகளானோர்
தினமிடும்பயிர்களெல்லாஞ் சேதமாய்ப்போகுதென்றும்
வனமுளமிருகந்தன்னை வதைத்ததாற்பாவமுண்டோ

வசனம்.

கேளுஞ்சுவாமிசுபாவமாகவனவேட்டையாடுகிறது க்ஷத்திரியருக்குத்தருமமென்று மனுவிக்கியானசாஸ்திரமிருக்கிறது குடிகள்தாங்களிடும்படியாகிய பயிரையெல்லாம்அழித்துப்போடுகிறது

றுமுறையிட்டால்அந்தமிருகங்களைவதைத்தால்பாபமுண்டாகோ? சுவாமி
மேன்விஸ்வாமித்திரமகாரிஷியே.

இதுவும்-இராசன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

தீராதகோபமேன்மேற்செனிப்பதேன்யானென்செய்தேன்
பேரானமிருகக்கூட்டம் பிரளயசமுத்திரம்போலே
ஆராலுமளவிடாதா யடர்ந்ததிவ்வனத்திற்கொல்ல
தாராளவழியுண்டாகத்தடுக்குமுள்வனத்தைச்சுட்டேன்.

வசனம்.

கேளும் மகானுபாவரே அடியேனைப்பார்க்கப்பார்க்கத் தீராத கோபங்கள்மேலிடவேண்டியதென்ன ஒருவராலும்எண்ணிட்டளவிடக் கூடாததாய்பிரளயகாலசமுத்திரம்போலமிருகக்கூட்டங்கள்பெருத்துநாட்டையழிக்கஇந்தகாட்டிலேநிறைந்தது அதுகளைவளைத்துக்கொல்லத்தடுத்துக் கொள்ளும்படியாகிய முட்புதறுகளையெல்லாஞ்சுட்டெரித்தேனேயல்லதுவேறில்லைசுவாமி.

இதுவும்-இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வனிதையர்தம்மைநானேவம்பதாயடித்தேனென்றீர்
தனிநெடுங்குடையைக்கேட்டார் தாபத்தைத்தீர்ககச்சொன்னேர்
வினயமென்றெண்ணிவேறேவெகுமதிகொடுக்கப்போனல்.
சினமிகுந்தேசினர்கள் சீறியேதுரத்திவிட்டேன்

வசனம்.

தேவரீரனுப்பினஸ்திரீகளை அனியாயமாகஅடித்தேனென்றுநிந்தைசொல்லுகிறீர் அவர்கள் ஆடல்பாடல்களைக் கேட்டுவெகுமதி கொடுக்கப்போனல்அதைத்தடுத்து பூச்சக்ரக்குடையைக்கேட்டார்கள் அதுமுறையல்லவென்றால்தங்களைக்கூடியணையச்சொன்னர்கள் சத்தியபங்கமென்றுசொன்னல்வாயிலே வந்தபடிபேசினர்கள் சபையைவிட்டுத்துரத்திவிட்டேன் இதுதான்நடந்தசேதி விஸ்வாமித்திர மகாரிஷியே.

இதுவும்-இராசன்-விருத்தம்-இ-ம்-சுருட்டி.

வந்ததோர்மிருகக்கூட்டம் வளநகர்நாடிதெல்லாஞ்
சிந்தவேயழித்திட்டாலும் சேனையைவதைத்திட்டாலும்
அந்தமாமாதரெந்த னருயிர்தனைக்கேட்டாலும்
நிந்தனைப்படுத்தேன்கொல்லேனிவிட்டதறியேன்சுவாமி.

வசனம்

என்னுடைநகரமெல்லா மழிந்தாலும் அந்தமிருகங்களைச் கொல்லேன் என்பிராணனைக் கேட்டாலுந்தகாதென்று கோபித்துக்கொ...

ளாமலிருப்பேன்நீருண்டுபண்ணியனுப்பினதென்றறியேன்பொறுத்துக்கொள்ளவேணும்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

கழுத்தினைபறுத்தபின்பு கைத்தப்புவந்ததென்றால்
பழுத்தநலலறிவுன்னைப்போற் பாரினிலெவருக்குண்டோ
அழுத்தமாய்ப்பேசவேண்டா மதர்மமேசெய்தாய்நீயும்
வழுத்துமென்கோபம்பொங்கி வளர்வதாற்சபிப்பேன்பாராய்.

வசனம்.

கேளடா அடா அதர்மா நீசெய்த காரியமெல்லாம் பொல்லாங்கென்று தெரியாமல் நீகற்ற சாமர்த்தியமெல்லாம் பேசிப்புரட்டுகிறாய் இந்தஅகங்காரவார்த்தையைவிட்டு நீசெய்கிறகாரியங்களை நினைக்கக்கோபமேலிட்டுச் சொலிக்கிறது மனதுஎரிகிறது தூரமில்லடா இனிப்பேசினால் சபிப்பேன்.

இராசன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

சிறியரானவர்கள்நாளுஞ் செய்திடுந்தீமைதன்னை
அறிவிலாதவரென்றெண்ணி ஆள்வதுபெரியோர்தன்மை
மறுவிலாவுமதுபெண்கள் வார்த்தையாலென்மேற்கோபம்
நிறைவதுதர்மமல்ல நீர்பொறுத்தருளுஞ்சுவாமி.

வசனம்.

தேவரீர் சிருஷ்டித்தனுப்பின பெண்களென்றறியாமல்நான் துரத்திவிட அவர்கள்வந்தும்முடனே சொன்னவார்த்தையினாலே யுண்டாகிய கோபத்தைக்ஷமிக்கவேணும் அதுஎப்படி யென்றால என்னைப்போலுஞ்சிறியோர்செய்த குற்றங்களையெல்லாம் உம்மைப்போலுள்ளபெரியோர்கள் பொறுத்து இரட்சிக்கிறதே கடன் ஆனபடியினாலே கோபத்தைப்பொறுத்தளிக்கவேண்டும் சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

எத்தனைவிதத்திலே நீ யெனக்கிதம்பேசினாலும்
சித்தத்திற்பிறந்தகோபந் தீருமோசபித்திடாமல்
முத்தணிமுலையினாரை மோகந்தீர்த்தாளாவிட்டால்
பெற்றவுன்னப்பனைப்போற் பெரும்புலையாகச்செய்வேன்.

வசனம்.

இதோஒருவார்த்தை சொல்லுகிறேன் இதைமாத்திரங் கேட்டுக்

கொள் என்பெண்களாகிவந்த இந்த இரண்டு பெண்களையும் விவாகஞ் செய்துகூடி ஞலாச்சுது இல்லாவிட்டா லுன்னைப்பெற்ற திரிச்சங்கும காராசனுக்கு நீச்சத்துவமவந்து பறையஞனது போல உன்னையும்புலே யஞகச்சபிப்பேன் சொன்னேன் சொன்னேன்.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

அன்னைநீதந்தைநீயே யரியதோர்தெய்வம்நீயே
உன்னையல்லாமலெம்மை யுவந்திரட்சிப்பாருண்டோ
முன்னமென்மாமனுர்க்கு முனிந்தியசாபந்தீர்ந்ததாய்
என்கணவனைச்சபித்தா லேற்குமோஆள்வாய்சுவாமி.

வசனம்.

அரிகரிதேவரீருக்கிப்படி தீராதகோபமும்வருமாஎன்மாமனுராகிய திரிச்சங்குமகாராசனுக்குவந்தசாபத்தைத்தீர்த்தநீர இப்போதவர்குமார ஞகியஎன்புருஷனைச் சபிக்கமனதுவருமா வுண்மையல்லாமல் தாய்தக ப்பன்தெய்வம்சகலமும்எங்களுக்குவேறேயுண்டோ கோபத்தைப்பொ றுத்துஇரட்சியும் சுவாமி.

தேவதாசன்-விருத்தம்--இ-ம்-தன்னியாசி.

அந்தரசொர்க்கந்தன்னி லனைத்திரென்பாட்டனுரை
விந்தையாய்வசிஷ்டராலே விளைந்திடுஞ்சாபந்தீர்த்தீர்
தந்தைதாய்நானுமற்ற சகிருள்ளசுற்றத்தாருஞ்
சந்ததமடிமையாவோந் தயைபுரிந்தாள்வீர்சுவாமி.

வசனம்.

என்பாட்டனுகியதிரிச்சங்குமகாராசாவைச்சபித்த வசிஷ்டருடை யசாபந்தையுநீக்கி அவருக்கு அந்தரசொர்க்கமொன்றுண்டாக்கினீர அப்படிப்பட்டதேவரீர் அந்ததிரிச்சங்குமகாராசாவுடைய புத்திரனுகிய என்பிதாவைச்சபிக்கிறேனென்று கோபிக்கலாமா பொறுத்து ரட்சிக்க வேணும் சுவாமி.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-காம்போதி.

அருந்தவமுனிவோர்க்கிந்த வவனியையாளுமன்னர்
திருந்துநல்லுதவியாக ஸ்திரமுடன்வாழ்கவென்றும்
பொருந்துமுன்மனதிற்கோபம் பொறுக்காமற்சொலித்தாலத்தைப்
பிரிந்திடத்தீர்ப்பாருண்டோ பிழைபொறுத்தருளும்சுவாமி.

வசனம்.

உலகத்திலே துறவறத்தையடைந்தரிஷிகளுக்கெல்லாம் இராசாக்களாலேயெப்போதும்வேண்டியவுதவிகளுண்டு அப்படியிருக்க விருகாவிலேயிந்தராசன்பேரிலேகோபஞ்செய்கிறீரே தபோநிதிகளுக்குக்கோபம்வரலாமோ அல்லதுமக்கிப்போதுபிறந்தகோபத்தைநீக்க ஒருவராலாகுமா கோபத்தைப்பொறுத்துக்கிருபைசெய்துரட்சிக்கவேணும்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-அடாணா.

இதுநல்லசாமர்த்தியந்தா னென்னடாசத்தியகீர்த்தி
புதுமையாயிவனுமிந்தப் புகல்வனும்பசப்பவந்தால்
இதமென்றுநினைத்துநீயு மிரங்குவீர்பொறுப்பீரென்று
மதமுடன்பேசவந்தாய் வஞ்சன்மேல்பொறுத்திடேனே.

வசனம்.

சபாசுஉன்னைப்போல்மந்திரியைநான்யாரையுங்கண்டதில்லைநீபேசுகிறதும்வெகுசாமர்த்தியந்தான் இந்தஅரிச்சந்திரன்செய்ததுஷ்டகாரியங்களுக்கு நானெவ்வளவும்பொறுக்கமாட்டேன் அவன்பெண்சாதியாஇவள்இவளும்இந்தப்பிள்ளையும்பசப்புகிறார்களே இந்தப்பசப்புவார்த்தைகளைநம்பி யோசனைபண்ணாமல்பேசவந்தாய் நீபோபோ அப்புறத்தேபோய்விடுபோய்விடு.

இராசன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

முன்னமென்றந்தைதன்னை முநிவர்வசிஷ்டராலே
துன்னியபுலைச்சாபத்தைத் தொலைத்துநீராண்டுகொண்டீர்
இந்நாளிலெனக்குச்சாப மிடவென்றுநினைக்கலாமோ
புன்னெறிப்புலைச்சிறாரைப் புணர்வதுந்தகாதேசுவாமி.

வசனம்.

அந்தவசிஷ்டரால்வந்தநீச்சத்துவமென்றுஞ்சாபத்தைஎன்பிதாவுக்குத்தீர்த்திரட்சித்தீர் அவர்குமாரனை அடிமைச்சமிக்கலாமா க்ஷத்திரியனும்பிறந்துநீச்சஸ்திரீகளைச்சேரலாகாதேசுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

தகாதகாரியமானாலுந் சண்டாளகுலத்தில்வந்த
விகாதமாதர்களானாலு மேவினுன்பொறுப்பேனிந்த
யுகாதியாங்கதைகள்சொல்லி யுசப்பியேபசப்புகின்றாய்
சகாதியருயிர்நடுங்கச் சபிப்பேன்மூவர்க்குமஞ்சேன்.

வசனம்.

இனிதிரிமூர்த்திகளுக்கும்பயப்படேன் அவர்கள்நீச்சஸ்திரீகளானாலும் அவர்களையேகூடவேணும் யுகம்பிறக்கிறத்திற்குமுதலுண்டாகியகதைகளைச்சொல்லுகிறாய் இந்தப்பசப்பு வார்த்தைக்கிரங்குவேனோ விடாபாதத்தைவிடாசபிப்பேன்.

இராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

அன்னியமாதர்தம்மை யருங்கனவதிலும்நாடேன்
என்னைவாளாற்பிளந்தே யிரண்டுகூறிடினுமிந்தக்
கன்னியர்தம்மைக்கூடேன் கருதிநீயளிக்குஞ்சாபம்
என்னவந்தாலுங்கொள்வேன் இனியுந்தன்கடாட்சம்சுவாமி.

வசனம்.

கேளுஞ்சுவாமி யென்னை வாளினாலேவெட்டி இரண்டு கூறாக்கினாலும் உமதுடைய சாபாக்கினியினாலே யெரித்துவிட்டாலும் வந்ததெல்லாமனுபவிக்கிறதேயல்லாமல் அன்னியஸ்திரீகளைக் கனவிலும் நினையேன் இந்தச்சண்டாளஸ்திரீகளைக்கூடேன் அப்பால் தேவரீருடையகடாட்சம்சுவாமி.

இதுவும்-இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

இன்னமோர்வார்த்தைகேளு மென்னரும்பொருள்களெல்லாந்
தன்னையுமாசகீவேன் தரணிசன்னகரம்நாடு
பண்டைசொன்பாக்கியமெல்லாம் பற்றறத்தரச்சொன்னாலும்
சொன்னசொற்பிசகாதீவேன் தோஷத்திற்குள்ளாகேனே.

வசனம்.

இன்னமொருவார்த்தைகேளும் சுவாமி யென்னிடத்தி லுண்டாகிய தெதைக்கேட்டாலும் தடையில்லாமற்கொடுப்பேன் பின்னும் என்னுடைய நாடுநகரம் பண்டிபண்டாரம் சகலத்தையுங் கொடுக்கச்சொன்னாலும் கொடுத்துவிடுவேனேயல்லது பாபத்திற்கு மாத்திரம் நானுடன்படமாட்டேன்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ப்-மோகனம்.

ஆமிதுசரிநீசொன்ன அருமொழிதனைக்காப்பாற்று
பூமிநன்னகரம்நாடும் பொருந்துபொன்னிதிகளெல்லாம்
தாமதமில்லாமலீவேன் தையலார்தமைக்கூடேன்
சேமமும்பிசகேனென்றுநீசொன்னசொல்மறந்திடாதே.

வசனம்.

அதுவேசரி அதுவேசரி அரிச்சந்திரமகாராசனே யென்னுடைய பூமிநாடுநகரம் பண்டிபண்டாரமுதல் சகலமுங்கொடுத்துவிடுவேனேயல்லது இந்தஸ்திரீகளைமாத்திரம் நான்கூடுகிறதில்லையென்றுசொன்ன சொல்லைப் பிசகிப்போகாமல் சொன்னபடி நடத்து மரிச்சந்திரமகாராசனே.

திவலொளிபொன்னுஞ்சேனை செறிபலவளங்களெல்லாம்
தவறிலாவிஸ்வாமித்திரர் தாங்கொண்டாரொன்றாய்ப்பின்னர்.

வசனம்.

ஓகோதவமுனிவர்களே ஓகோசிஷ்யர்களே இந்தஅரிச்சந்திரமகா ராசனுடைய நாடுநகரமுதலான சகலபாக்கியமும் நமக்கேதாரைவார்த்து விட்டான் ஆகையால் அயோத்தியாபுரிநாடுநகரம் யானைசேனை பரிவாரங் சொர்ணங்கள் இரத்தினங்கள்சகலமும்இராச்சியத்தைவிஸ்வாமித் திரமகாரிஷி கைக்கொண்டானென்று ஆர்ப்பரித்து இரைச்சலிடுங்கள் இரைச்சலிடுங்கள்தவமுனிவர்களே.

தவமுனிவர்கள்-விருத்தம்-இ-ம்-ஆரபி.

அயோத்திநாடரசும்வாழ்வு மதிலுள்ளயானைசேனை
தயாராகப்பரிசனங்கள் தனமுதல்பாக்யமெல்லாந்
சயோக்கியமாகமன்னன் றாரைவார்த்திட்டான்மெய்யாய்
வியாகுலமழிந்துநாமே மேதினியாள்குவோமே.

வசனம்.

ஓகோகோ எங்களுக்குக்கிடைத்த பாக்கியமேபாக்கியம் இந்த அ யோத்தியாநாடுநகரம் யானைசேனைபரிவாரங்களையும் நாங்களேயாளத்த க்கதாகத்தாரைவார்த்துக்கொடுத்தான் நாங்கள்போய்ராசாங்கம்பண்ணு வோம் எங்களுடையபாக்கியமேபாக்கியம்.

இதுவும்-முனிவர்கள்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

சூரியகுலத்தில்வந்த தோன்றலேயரிச்சந்த்ராவுன்
பேருயர்பொறுமைகீர்த்தி பெருக்கிடுஞ்சத்யஞானம்
ஆருனகொப்பாவார்களரசாட்சியதனையிந்தச்
சாரமாமுனிவர்க்கீந்தாய் சபாசுனைப்போற்காணேனே.

வசனம்.

சூரியகுலத்தில்வந்த அரிச்சந்திரமகாராசனே சத்தியத்திலேயுங் கீர்த்தியிலேயும்பொறுமையிலேயும் ஞானத்திலேயுமுனக்குசமானமா ஆரேவார்கள் ஒருக்ஷணமாத்திரத்திலேயுன்னுடைய அரசாட்சியாகியச கலபாக்கியமும் தம்பாதியாகிய இந்த விஸ்வாமித்திரமகாரிஷிக்குத்தா ரைவார்த்துவிட்டாயே சபாசு சபாசு ஆகாகா உன்னைப்போலார்செய் வார்மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

கொடைதந்தேனென்கொடிதந்தேன்யான்குறித்தாளும்
படிதந்தேனிப்பதிதந்தேனென்பரியாலே

இராசன்-விருத்தம்-இ-ம்-பியாகடை.

தப்புமோசொன்னவார்த்தை சத்யமாயின்னுஞ்சொல்வேன்
செப்பியஅந்தமாதர் சேர்கையைவிரும்பிடேன்யான்
இப்புவிநகரம்நாடு மெனதருமபொருளிதெல்லாம்
முப்புரமெரித்தோன்போல்வாழ் முனிவரேயுமக்கேயீந்தேன்.

வசனம்.

ஆம்ஆம் நான்முன்னேசொன்ன சொல்லுஞ்சரியே யின்னமுஞ் சத்தியமாகச்சொல்லுகிறேன் அந்தஸ்திரீகளை யொருக்காலுஞ் சேரேன் என்னுடையநாடுநகரமுதலாகிய சகலபாக்கியமும் உமக்கே தந்துவிட்டேன் விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-தோடி.

பாரையாளரசர்க்கெல்லாம் பதியெனுமரிச்சந்த்ராவுன்
பேரையும்நினைக்கில்வார்த்தைப் பெருமையுஞ்சத்யம்ஞாயம்
நீரையுன்கையாலள்ளி யின்னரும்பொருளையெல்லாந்
தாரைவார்த்திட்டாலெந்தன் தளர்மனமகிழ்ச்சியாமே.

வசனம்.

கேளுமரிச்சந்திரமகாராசனே உம்முடையபேரையும்உம்முடைய வார்த்தையின்பெருமையையும் நினைந்தால் ஒன்றும்பிசகில்லையெல்லாஞ் சத்தியமாகவேயிருக்கின்றது ஒருதுளிசலத்தையள்ளித்தாரைவார்த்துக் கொடுத்தால் அப்போதும்முடையபாக்கியமெல்லாமென்னதென்றுசந் தோஷமடைவேன்மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

இந்தநற்சென்மந்தன்னி லினியொருமாதர்தம்மைச்
சிந்தையிலெண்ணேனிந்தத் திருநாடுநகரிதெல்லாஞ்
சந்ததமாள்வீர்தந்தேன் தாரைநீரேற்றுக்கொள்ளுமே
அந்தரத்தமரர்யற்றிவ் வவனியுமறியச்சொன்னேன்.

வசனம்.

கேளும்சுவாமி எடுத்த இந்தசென்மமுள்ளளவைக்கும் பரஸ்திரீக ளைக்கூடுகிறதில்லையென்னுடையநாடுநகரம்வஸ்திராபரணம்பொக்கிஷம் யானைசேனைபரிவாரம் சகலமும் முமக்கேதந்துவிட்டேன் இதோ தாரை வார்க்கிறேனெடுத்துக்கொள்ளும் இதற்குச்சாட்சிதேவதைகள் இந்தபூ மியிதற்கொருசந்தேகமுமில்லைசுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

தவமுனியோரோமற்றத் தவறிலாச்சிஷ்யரோநீர்
குவலயமுழுதுமிந்தக் கொற்றவனமக்கேதந்தான்.

முடிகொண்டாளும்மோதரம்பெறுநீர்முனிகாட்டில்
அடிதங்கேகௌனன்மனைவி மகனுடன்யானுமகல்வோமே.

வசனம்.

கேளும்சுவாமி விசுவாமித்திரமக ரிஷியே என்னுடையரதகெசதுரகபதாதிகளேயும் நாடுநகரம் சகலசாம்பிராச்சியமும் தந்துவிட்டேன் இதோ இந்தமுந்தினாமோதிரத்தையும்வாங்கிக்கொள்ளும் ரிஷிகளுக்குத் தாரைவார்த்த இந்தப்பூமியிலே பொருமைப்போதாவது நிற்ககூடாது நானுமென்பெண்சாதி பிள்ளையுமாக அப்புறத்தேபோய்விடுகிறோம் உத்தரவுகொடும்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-அடாணா.

ஆசுகீதந்தாய்மெய்யே ஆள்வதற்சழகுவேண்டுந்
திருநெடுமகுடமாலை திகழுமகுண்டலங்கள்மற்றும்
பரிவுளவலயம்வாளும் பணிகளுமுள்ளதெல்லாம்
அரிவையுஞ்சுதனும்நீயு மளித்திட்டால்மகிழ்ச்சியாமே.

வசனம்.

சரிதான் அரிச்சந்திரமகாராசனே இராச்சியத்தைக்கொடுத்தாய்சந்தேகமில்லை இராசாங்கத்துக்குவேண்டியசிறப்புவேணுமே ஆகையால் உன்னுடையகிரீடகுண்டலம் புசகிரீகிவாகுவலம்உடைவாள் சகலஆபரணமும் உன்னுடையபெண்சாதி பிள்ளை அவர்களுடையஆபரணமுங் கொடுத்தால் சந்தோஷத்தையுடையேன்மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

மாதுடன்மகனுநானும் மலரடிசிரமும்போற்றி
ஈதொருபொருளோதேவ ரெண்ணத்தின்படியேயிவன்
தீதறுமுனிவரேநீர் சித்தப்ளவத்திரைக்கைக்கொண்டு
நீதிசேரிந்தநாட்டை நீங்கவிடைதந்தாள்வீர்.

வசனம்.

தேவரீர்சித்தத்தின்படியே சகல ஆபரணங்களையுங்கொடுக்கிறோம் இந்தாரும் இனியாகிலுமுத்தாரங்கொடும்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஆனுற் போய்வாருங்கள்.

இராசன்-வசனம்.

அப்படியே போய்வருகிறேன்சுவாமி வாரும்பெண்ணேசந்திரமதி அப்பா அடாதேவதாசா இந்தநாட்டைவிட்டேபோவோம்வாருங்களப்பா.

விசுவாமித்திரர்-வசனம்.

ஓய் ஓய் அரிச்சந்திரமகாராசனே மறந்துபோனேன் மறந்துபோனேன் ஓடிவாரும் ஓடிவாரும்.

அரிச்சந்திரன்-வசனம்.

வந்தேன் வந்தேன் சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-சௌராஷ்டிகம்.

பூமியைத்தந்தாய்பூண்ட பொற்பணியெல்லாந்தந்தாய்
காமினியுனைப்புகழ்ந்து நாட்டவுமெளிதேயலலால்
பூமணக்குழலாளுந்தன் பூவையுமகனும்நீயும்
சேமமாயுடுத்தவஸ்திரம் நெறிப்படிதருகுவாயே.

வசனம்.

கேளும்மகாராசனே சகலசாம்பிராச்சியமுங்கொடுத்தீர் நீங்கள்தரித்த ஆபரணங்களையுங்கொடுத்தீர்கள் மூன்றுபேருமுடுத்தியிருக்கப்பட்டவஸ்திரத்தையுங்கொடுக்கவேணும் அரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-கண்டா.

ஆனாப்போயிரப்போம்வஸ்திரம் அபிமானபங்கமாகும்
ஈனருமுன்சரணமல்லாற் றஞ்சம்வேறில்லையையா
தூரமாவேறோர்நாட்டைத் தொடர்ந்துபோயிருக்கவேணும்
தீரமாயுனைத்தடாமற் சித்தம்வைத்தருளுஞ்சுவாமி.

வசனம்.

அபிமானபங்கமாகுமே வஸ்திரத்தைக்கொடுத்துவிட்டால் இரக்கவேணுமானாலும் அன்னியதேசங்களதிகதூரமாகவிருக்கின்றபடியே வஸ்திரமில்லாமலெப்படிப்போவோம் அபிமானபங்கமில்லாமல் கிருபைசெய்துரட்சிக்கவேணுஞ்சுவாமி.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

மைந்தனுமமாதுநீயும் மருவியேயுடுத்தவாடைக்
கந்தலையெனக்குத்தந்தாற் காஷாயவஸ்திரந்தன்னை
சிந்தைநாணமிழந்துமூன்று சேலையாய்க்கிழித்தேயீவேன்
சுந்தரவுருவுண்டாகுங் கரக்குமோகொடுத்திடாயே.

வசனம்.

மகாதவமைச்செய்துபேர்பெற்ற நானுடுத்தியிருக்கிற இந்தக் காஷாயவஸ்திரத்தை மூன்றுதுண்டாகக்கிழித்துத்தருகிறேன் நீயுமுன்பெண்சாதியும்பிள்ளையுங்கட்டிக்கிழிக்கிற அந்தக்கந்தைத்துணிகளைக்கொடுத்துவிடுங்கள் இந்தக்காஷாயவஸ்திரத்தையுடுத்திக்கொண்டால் மகான்களைப்போல அழகாய்ச்சொருசுப்பிறக்கும் அதற்கென்ன கரச்சித்தோ கொடும்பிள்ளாய்கொடும்.

அரிச்சந்திரன்-வசனம்.

ஆனாலிந்தக்காஷாயவஸ்திரத்தையாகிலுங்கிழித்துக்கொடும் சுவாமி

விஸ்வாமித்திரர்-வசனம்.

பட்டுவஸ்திரத்தைக்கொடுத்துப் பழங்கந்தத்துணியை வாங்கிக்கொள்ளுகிறதுயென்னுடையகர்மவசந்தான்தொலைத்துத்தொலையபட்டர்தொலை.

அரிச்சந்திரன்-வசனம்.

பெண்ணேசந்திரமதி அப்பா அடாதேவதாசாகாஷ்டா யவஸ்திரத்தையுடுத்திக்கொண்டுநீங்களுடுத்தியிருக்கிறவஸ்திரத்தை விசுவாமித்திரமகாரிஷிகளுக்கொடுத்துவிடுங்களப்பா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

தவப்பலந்தன்னில்மிக்க தருமநற்மொருளாய்வந்த
தயறில விஸ்வாமித்ர தாயகமுனிவேபோற்றி
அவத்தினிலெங்கள்பூமி அயிஸ்வர்யம்வஸ்திரமெல்லாம்
பவத்தினிலொழித்திடாமற்பற்றிக்கொண்டதுதான்பாக்கியம்.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமி எங்கள்பூமிமுதலாகியசகல அயிஸ்வரியமும் நாங்களுடுத்தியவஸ்திரமுதலாகியதுகளும் வீணிலேதானாவார்க்காயல் தேவரீரகொண்டதுதான் எங்கள்பாக்கியஞ்சுவாமி.

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

ஆண்பெண்ணிரண்டினுள்ளேயபிமானமதனைக்காக்க
மாண்பெறுபுவியில்மூடும்வஸ்திரமேநிலைமையாகும்
சேண்புகழ்நகரம்நாடுதாழ்வளமெல்லாங்கொண்டு
நாண்மலிவஸ்திரங்கொள்ளநாங்கள்செய்ததுவேபாக்யம்.

வசனம்.

கேளும்சுவாமி எங்கள்நாடுநகரமுதலாகியசகலபாக்கியமும் கைக்கொண்டுநாங்களுடுத்தியிருக்கிறவஸ்திரத்தையுங்கைக்கொண்டீரோ அதுதானெங்கள்பாக்கியஞ்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அப்புறத்தேபோடாபிஞ்சியிலேபழுத்தபயலே.

தேவதாசன்-வசனம்.

தூரத்தேபோம்விடுகிறேன் கோபத்தைப்பொறுத்திரட்சியுஞ்சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

மண்ணையுமுமக்கேதந்தேன்வாழ்வையுமுமக்கேதந்தேன்
எண்ணரும்பொனதுபாக்கியம்யாவையுமுமக்கேதந்தேன்
பெண்ணிளாயிலாளிந்தப்பேதையுமமகனும்யானும
மண்ணுமன்னியநாடேக நல்விடைகொடுப்பீர்சுவாமி.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமி தேவரீரிஷ்டப்பிரகாரம் என்னுடைய நாடுநகரம் வஸ்திராபரணாதிசகலபாக்கியமுங் கொடுத்துவிட்டேன் இனியென்பெண்சாதியு பிள்ளையுநானும் அன்னியதேசங்களிலேபோய்ச் சீவனஞ்செய்யத்தக்கதா கச்செலவுகொடுமே விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஆனால்சுகமாய்ப்போய்வாருமரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

பெண்ணேசந்திரமதிஅப்பாஅடாதேவதாசா இனிநாமன்னியதேசங்களு க்குப்போவோம்வாருங்களப்பா.

தேவதாசன்-வசனம்.

சீக்கிரமாய்ப்போவோம் பிதாவே.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஓய்ஓய்அரிச்சந்திரமகாராசனே இன்னமொருகாரியமறந்துபோனேன்ஓ டிவாரும்ஓடிவாரும்.

அரிச்சந்திரன்-வசனம்.

சுவாமிசுவாமிஇதோவந்தேன்என்னமறந்துபோனீரோ அதைத்தெரிக் ல்லுமசுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

மறந்தவருடைமையிந்தமண்ணிலில்லன்னாகவெல்லாம்
சிறந்தகோதகையோநீர்மறந்திகழ்ந்தரானேசொல்வாய்
நிறைநதியோகஞ்செய்யரிமறையானேமற்கவண்கல்
எறிதளவீந்தபொன்னையிப்போதேதருகுவாயே.

வசனம்.

அல்லகாணும்ஓய்அரிச்சந்திரமகாராசனே இந்தப்பூமியிலிருக்கிற இராசா க்களுக்கெல்லாம் ஒருவர்பட்டாபிஷேகத்திலேவைத்துமறந்துபோனவுடைமைகள் எல்லாம் அவர்களதுதானே அவர்களுக்குக்கொடாதிருமத்துக்குவிரோதமாச்

ருவனேற்பட்டாய் இநக்கட்டுமென்கடனுந்திரவேணும் உன்மனோதுக்கமு
ஒழியவேணும் அதென்னவென்றால்சாவில்லையிருக்கிறது உன்னைக்கண்டதா
உன்பொன்னைக்கண்டதார் என்னிடத்திலில்லைபோவென்றால் விட்டுவிடுவே
ன் அதுதான்காரியம் மகாராசனே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

துண்டிலிட்டாட்டினாலுஞ்சொன்னசொல்மறுத்துப்பேசேன்
பூண்டவுன்கடனைத்தீர்க்கப்பொருளொருவன்கையிலில்லை
நீண்டதோரண்யதேசநெறிசென்றங்கிரந்தேயீவேன்
வேண்டுமோராளைக்கூட்டிவிடுத்துக்கைக்கொள்வீர்சுவாமி.

வசனம்.

உயிர்க்கழுவைப்போனாலும்வாதனைசெய்யாநின்ற துண்டின்முள்ளிலேமாட
டியாட்டினாலும்பொய்பேசேன் ஒருஆளைமாத்திரங்கூடஅனுப்பினால் அன்னி
தேசங்களிலேபோய்யாசகம்பண்ணியாவதுவும்முடையபொன்னைத்தருகிறே
சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-கும்பகாம்போதி.

குதிரைசெத்ததுமல்லாமற் குழிதோண்டவேலையொன்று
நிதியையுங்கொடுத்தோராளைநின்பின்னேகாவல்வைக்க
விதியெனக்குண்டோபோபோவீண்வார்த்தைபேசவேண்டாம்
சதியிதுசெய்தாய்நீதான்சத்தியமழித்திட்டாயே.

வசனம்.

நல்லகாரியஞ்செய்தாய்குதிரைசெத்ததுமல்லாமல்குழிதோண்ட ஒருஆள
ஏன்பொன்னைக்கொடுத்ததுமல்லாமல் ஒருசம்பளக்காரனையும் பின்னாலேகா
ல்வைக்கவேணுமல்லவா அப்படிப்பட்டவிதியெனக்கில்லை இப்படிப்பட்டவீண
வார்த்தையினிமேல்பேசவேண்டாம்அப்புறத்தேபோய்விடு எனனைச்சதிசெய்த
மல்லாமல்சத்தியமுந்தப்பிப்போனாய்நல்லகாரியம்நல்லகாரியம்.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-கண்டா.

நாலுவேதங்களாறுசாஸ்திரம்நவில்மெய்ஞ்ஞானச்
சீலமுங்கைக்கொண்டோங்குந்திறத்துயாமுனியேபோற்றி
பாலனையானன்னைநீயேபரமுமர்யடியைநானே
சாலவேபொறுத்தென்னோடுதூதரகனையனுப்பும்சுவாமி.

வசனம்.

தேவரீரே யொருதாய் அடியேனே யொருபிள்ளை தேவரீரே

செய்வார் அடியேனையொருஅடிமை இப்படிப்பட்ட என்பேரில்தேவரீர்கோபஞ்
செய்யலாமாவேதசாஸ்திரமெஞ்ஞானசிகாமணியாகிய விஸ்வாமித்திரமகாரிஷி
யேயிந்தவேழைக்கிரங்கியொருதரசனைமாத்திர மனுப்பிவைக்கவேணுஞ்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

ஒருபகலளவுமெந்த வுலகாளாயாய்வைத்தபொன்னைத்
தருகுசெய்சகலயாவுந்தீரவேபொறுப்பதில்லை
கருதுமுன்விசனத்தாலே கருணைபாய்ச்சொல்லுகின்றேன்
இருபதுநாளிற்றந்தா லிப்போதாள்விடுகுவேனே.

வசனம்.

கேளும்பிள்ளாயரிச்சந்திரமகாராசனேநம்மிடவுடைமையையபகரித்துக்
கொண்டுநீசெய்ததுமோசந்தான்ஆகிலுந்தருமமேசெயம் நீவிசனப்படுகிறதை
ப்பார்த்தால்பரிதாபமாயிருக்கிறது இருபதுநாளிலேகொடுக்கிறதானால் இப்போ
தேஆளனுப்புகிறேன்சம்மதியானாற்சொல்லுமகாராசனே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

காசிக்குமிதற்குஞ்செல்லக்கடுந்தூரம்நெடுநாட்செல்லும்
மாசிலாவவ்வூர்க்கேகி மாநிதிதரவேவேணும்
பூசிதமுனிவரேநீபொறுக்குநாளைம்பத்தெட்டில்
மாசிலாவுமதுபொன்னை வளமுடன்சேர்ப்பேன்சுவாமி.

வசனம்.

கோபமில்லாமற்கேளுஞ்சுவாமிஇத்தேசமீபத்தில்கிடைக்கிறதல்லகாசிப்ப
ட்டணத்திற்குப்போய்பொன்சம்பாதித்துவுமக்குக்கொடுக்கவேணும் ஆகையா
லந்தகாசிப்பட்டணத்திற்கும்இதற்குந்தொலைதூரமாகையால்இராசகெதிவுநாற்
பத்தெட்டுநாள்கொடுக்கவேணுஞ்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஓய்அரிச்சந்திரமகாராசனேயாருக்குங்கடன்வாங்குகிறபோதிருக்கிறசந்
தோஷகுணங்கொடுக்கிறபோதிராது ஆகையாலிந்தகெடுவிலேதப்பாமற்கொடு
ப்பீராசத்தியமாய்ச்சொல்லும்பார்க்கலாம்.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

ஆகமம்பொய்த்திட்டாலும் அருமறைபொய்த்திட்டாலும்
வேகமாமுனியேயெந்தன் மெய்புகழ்தவறாதையா
ஆகையாலிந்தநாளி லரும்பொருள்கொடேனேயாகில்
கோரமாம்பாதகத்தின் துரோகநாவேன்சுவாமீ.

நானுங்களாயயோத்தியாபுரியைப்பட்டங்கட்டிக்கொள்ளலாம்வாருங்கள்.

மகாமாயசித்தன்-வசனம்-தம்பிஅடாமகாமாயசாலி.

மகாமாயசாலி-வசனம்-என்னடாஅண்ணே.

மகாமாயசித்தன்-வசனம்-நம்மிடஐயர்போகிறதிடமுனக்குத்தெரியுமா.

மகாமாயசாலி-வசனம்-எனக்குத்தெரியாதுஅண்ணே.

மகாமாயசித்தன்-வசனம்-ஐயனாக்கமூவிக்குளிப்பாட்டிச்சமாதியிலேவைக்கப்போகிறார்களப்பா.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அடத்தாபோழிகெங்காஸ்நானம்பண்ணிவைத்துச்சிங்காதனத்திலேவைக்கப்போகிறார்களென்றுசொல்லடாதுஷ்டப்பயலே.

இதுவும்-விஸ்வாமித்திரர்-வசனம்.

ஆர்காணும்ஐய்மந்திரிநமக்கொருஇரதங்கொண்டுவரச்சொல்லும் இந்தரிஷிக்கூட்டங்களுக்கெல்லாங்குதிரைகளையானைகள்கொண்டுவரச்சொல்லும்.

மந்திரி-வசனம்.

அப்படியேகொண்டுவரச்சொல்லுகிறேன்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஓய்ரிஷிக்கூட்டங்களேநானிந்தஇரதத்தின்பேரிலேறுகிறேன்நீங்களெல்லோரும்யானைகுதிரையேலேறிக்கொள்ளுங்கள்.

விஸ்வாமித்திரர்-தரு-இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

பட்டாபிஷேகம்நாம்கட்டிக்கொள்வோம்-நீங்கள்
பயணம்புறப்படுங்கள்
அட்டாளதேசத்ததிபரேவந்து
அடிதொட்டுகெஞ்சினின்றுபடிகள்வணங்கஇன்று (பட்டா
மானதோல்கலைத்தோல்புலித்தோல்முதலான
வஸ்திரங்களை யெடுங்கள்-நீங்கள்
ழக்கமயக்கொடுக்கின்றஅவிர்ப்பாகமக்கினிக்கு
வரிசையுடன் கொடுங்கள்
வான்படரந்தமதிகதிர்க்குஞ்சந்தியா
வந்தனத்தைத் தொடுங்கள்-நீங்க

மெல்லிசந்திரமதிக்கிந்த விதியும்வருமோராஜ சா
ரேதினிபொருந்தே அய்யோ தெய்வமே
சோதிமணிமுடிகாணோம துலங்கிபகுண்டலங்காணோம்
சூழ்வினையைக்கண்டோம் அய்யோ தெய்வமே
ஓதுபுசகிரீதிகாணோம் உடைவாளதனைக்காணோம்
உற்றஆடைதனைக்காணோம் தெய்வமே
சொர்ணப்பட்டுவஸ்திரபோயதுண்டுதுண்டாய்க்கிழிந்தகந்தை
துலங்கவுடுப்பாரோ அய்யோ தெய்வமே
என்னசதிசெய்தானிந்தப்பாதகவிஸ்வாமித்ரன்
இப்படிசெய்வாருண்டோ தெய்வமே
தலைவனிருக்கச்சந்திரமதிபம்மனுக்குத்
தாழ்வுவரலாமோ அய்யோ தெய்வமே
உலகையாளும்தேவதாசன் உருகியேநடந்துவர
ஒப்புமோஆருக்குமையோ தெய்வமே

குடிகள்-விருத்தம்-இ-ம்-நீலாம்புரி.

சம்பலைப்பூசிச்சடைசனைவளர்த்துத்தவஞ்செய்யுஞ்சன்யாசிக்கூட்டம்
பூம்பொழில்வனத்திலிருப்பதுவிட்டுப்புனிதமாமயோத்தியாண்டிடவே
தாம்வருவதுமெங்களையாளுஞ் சத்தியவரிச்சந்திரபதிபா
தேம்பிநடக்கமனைவியுமகனுந் திகைத்திடக்காண்பதும்விதியோ.

வசனம்.

கேளும்எங்களாண்டவராகிய அரிச்சந்திரமகாராசனேசந்திரமதிய
ம்மாளும்இந்தக்குழந்தையுந்துக்கமடைந்துபின்னேவரத் தேவரீர்கால்ந
டையாய்நடக்கவுநாங்கள்காணலாச்சுதேகாட்டிலேயிருக்கிற இந்தசந்
நியாசிக்கூட்டங்கள்நாட்டையாளவருகிறதும் அதைநாங்கள்பார்க்கிறத்
துக்கும்எங்கள்தலைவிதியோஐயையோஅரிகரிஅரிகரி.

அரிச்சந்திரன்-விருத்தம்-ஸ்ரீராகம்.

கலங்கிடவேண்டாமென்னைக் கருதியேயிவர்சொற்கேட்டுத்
துலங்கவேயிருப்பீரெந்தன் துரைத்தனமிலரோசெய்வார்
விலகிடிலெந்நாளும் விளங்குமென்சத்தியவார்த்தை
கலந்திடாவகைநீர்காருங் கடன்முறைவாங்கொடுப்பீர்.

வசனம்.

நீங்கள்விசனப்படுவதில்காரியமில்லை ஏனென்றால்நான்மனப்பூர்
த்தியாய்இந்தவிஸ்வாமித்திரமகாரிஷிக்குஎன்னுடையநாடுநகரமுதலாகி

யதுகளையெல்லாங்கொடுத்துவிட்டேன் அவரோ துணாத்தனஞ்செய்வா
அதைக்குறித்துநீக்களெனக்கொருவரங்கொடுக்கவேணும்அதாவது
வர்சொல்லுக்குமாறுபாடில்லாமல்நடக்கவேணும்பிரசைகளே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

ஏதுகாணரிச்சந்த்ராநீ யேளிதமாகவென்னைப்
பேதைமைக்குடிகளாலே பேசவுமிழுத்துவிட்டாய்
நீதயசாலிமெய்யே நிமிஷத்தில்மகுடஞ்சூட்டி
மேதினியாளச்செய்தேவினாவுடனடந்திடாயே.

வசனம்.

ஓய் அரிச்சந்திரமகாராசனேயென்னையுபாயமாயழைத்துவந்துஇ
தப்பட்டணத்துக்குடிகளால்என்னைநிந்திக்கச்செய்தாய்இருக்கட்டும்
சொன்னசொற்படியெனக்குப்பட்டாபிஷேகஞ்செய்து சீக்கிரமாகநீப
ட்டணத்தைவிட்டுஅப்புறம்போய்விடுமகாராசனே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

சூதுவஞ்சனைதுரோகம் துடுக்குறும்பழிசொற்பேசேன்
தீதிலாக்குடிகளுந்தன் செப்புநல்லேவல்கேட்பார்
ஆசலாலயோத்தியாள அணிமுடிதரித்துக்கொள்வீர்
மாதவவிஸ்வாமித்ர மணியேநின்சரணஞ்சுவாமி.

வசனம்.

சரணஞ்சரணம்சுவாமி தேவரீர்சொல்லும்படியாகிய பொல்லாத
வார்த்தைகளுக்கு நானெவ்வளவு முட்படமாட்டேன் தேவரீருடைய
சொல்லையுங்கடந்துபேசார்கள் இந்தக்குடிகள்ஆகையால்தேவரீர்தடை
யில்லாமல்பட்டங்கட்டிக்கொள்ளும் கோபத்தைபொறுத்தருளுஞ்சுவா
மிவிஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஆனால்சட்டமாய்ப்பட்டங்கட்டிவையும்பிள்ளாய்

அரிச்சந்திரன்-வசனம்.

தேவரீரிந்தச்சிங்காதனத்தின்பேரில் கிழக்குமுகமாயெழுந்தருளி
யிருஞ்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஓ ப்ரிஷிக்கூட்டங்களே சிஷ்யவர்க்கங்களே உங்கள் தோலாசனத்தை இந்தசிங்காதனத்தில் விரித்துக்கொண்டு வரிசையாய் உளுக்காருங்கள்.

மகாமாயசாலி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

பிறவியாந்தரித்திரனுக்குப் பெருத்ததோர்விருத்தாப்பியத்தில்
நிறைசெல்வம்வந்தாறபோகம் நிலைக்குமோமகிழுண்டாமோ
முறைமுறைதவங்கள்செய்யு மூனிக்கூட்டமாசுசெய்யக்
குறைவில்சிங்காதனத்தில் குரங்குபோலிருக்குதன்றே.

வசனம்.

அண்ணே மாயசித்தா ஒருவன் பிறந்தநாள்முதல்தொண்ணூற்றொன்பதுவயதுவரைக்குந்தரித்திரன் அப்படிப்பட்டவனுக்கு அயிஸ்வரியம்வந்தாலென்னசுகங்களை யனுபவிக்கப்போகிறான் என்னசந்தோஷத்தையடைவான்மகா மாயசித்தா.

மகாமாயசித்தன்-வசனம்.

தம்பிமகாமாயசாலி நீசொன்னதுசரியேபுருஷாயுசுநூறல்லவோ அதிலேஇன்னம்பதினொருமாதமும் இருபத்தொருநாளுமவிட்டு விட்டாயே அதுதானெனக்குச்சம்மதியில்லை.

மகாமாயசாலி-வசனம்.

ஆமண்ணேமகாமாயசித்தா அப்படிப்பட்டவனுக்குஅயிஸ்வரியம் வந்தால்என்னசெய்கிறது அதுபோல இந்தரிஷிப்பிண்டமக்கள் இவர்களாயுசுள்ளவரைக்கும்கண்ணைமூடிக்கொண்டுகாட்டிலேதபசுபண்ணுகிறவர்களுக்கு நாட்டையாளச்சொல்லிப்பட்டங்கட்டினால் என்னசெய்வார்கள் இதோபார்சிங்காதனத்திலேநம்மிட ஐயர் கிழக்குரங்குபோலக் குந்திக்கொண்டுகண்ணைமிரளமிரள முழித்துக்கொண்டிருக்கிறார்.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அடாதுஷ்டப்பயலேநாம்காட்டிலேயுமிருப்போம் நாட்டிலேயுமிருப்போந்தபசும்பண்ணுவோம் இராச்சியமுமாளுவோம் மதற்கொருதடையா.

மகாமாயசித்தன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

காட்டிலுமிருப்பாரிந்தக் கனம்பெறுமயோத்திலைச்சூழ்
நாட்டிலுமிருப்பார்முன்னே நம்மிலுங்கடையாயந்த

நீட்டுங்கௌசிகநாடாள நிருபன்றனைதோபுண்யங்
கூட்டியவழியினாலே குறித்ததோ தபசியானார்.

வசனம்.

தம்பி மகாமாயசாலி நம்மிட ஐயர்சொல்லுகிறது சரியே முன்னாலே நம்மைப்பார்க்கிலும் கஷ்டமாய்த்திரிந்தவர்தானே.

மகாமாயசாலி-வசனம்.

அண்ணே மகாமாயசித்தா எதைச்சொல்லுகிறாய் ஐயர் தபசுபண்ணுகிறேன் தபசுபண்ணுகிறேனென்று முண்டைகளைகட்டிக்கொண்டழுதாரே அதைச்சொல்லுகிறாயோ அல்லதந்த அம்மமார்வயிற்றிலெபிள்ளைபிறந்ததே அதைச்சொல்லுகிறையோ.

மகாமாயசித்தன்-வசனம்.

தம்பி மகாமாயசாலி அதுவல்லாமல் இவர்முன்னே இராசாவாயிருந்து நாட்டையாண்டுகொண்டிருந்தவர்தானே சுத்தபாவிக்குக்கொஞ்சம்புண்ணியங்கிடைத்தாற்போல்தபசியானார் தபசியானாரப்பா.

இதுவும்-மகாமாயசித்தன்-வசனம்.

சுவாமி சுவாமி முன்னாலே நீர்நாட்டையாண்டபோது சாப்பிட்டபதார்த்தங்களையெல்லாம் இப்போதுநினைத்துக்கொள்ளும்சுவாமி.

மகாமாயசாலி-வசனம்.

அண்ணே மகாமாயசித்தா அவர்தான் சோற்றுக்குவிக்கிநாட்டைவிட்டோட்டிக்குவந்தார் இதோ இருக்கிறார்களே அய்யமார்கள் தருமபுரோளவும்பெடுத்துக்கொண்டு இனியெருமைக்கடாப்போலத்தின்றுகொழுப்பார்களப்பா.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம-கலிபாணி.

இந்தனனகரம்நாடு மிடைவிடாதாள்வீர்யனைப்
பக்தியிற்சூலபந்தி படையிது தான்யசாலை
அந்தமில்சொர்ணசாலை யணியேறுசெங்கோல்கொள்ளும்
நந்தனமயாண்போய்மற்ற தனமிரந்தளிப்பேன்சுவாமி.

வசனம்.

சரணஞ்சரணம் சுவாமி இந்நாடும் செங்கோல் கையில்வாங்கிக்கொள்ளுகிற இராச்சியபட்டாபிஷேகம் செய்துகொள்ளும் நாட்டையாண்டுகொள்ளுகிற இதோ பானசாலை குதிரைசாலை பொக்கிஷசாலை தான்யசாலை இதோ சேனைசமுத்திரங்கள் சகலமும் ஒப்பு

வித்துவிட்டேன் இதையெல்லாங் கைக்கொளளும் நான் அன்னியதேசங்களுக்குச்சென்று யாசகஞ்செய்து தேவரீருடைய திரவியத்தைக் கொடுத்துவிடுகிறேன் சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அப்படியேசகலமு மொப்புவித்துக்கொண்டேன் இந்தச்சிங்காதனத்திலேயிருந்து நானேயிராச்சியபாரம் பண்ணிக்கொள்ளுகிறேன் நீர்போய்வாரும் அரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

மந்திரிமுதலாய்மற்ற பன்னரேகுடிகள்நீங்கள்
இந்தமாமுனிவர்சொல்லை யெனதுசொல்லாகவெண்ணிச்
சந்ததம்வாழ்வீர்வந்து தாளிணைவணங்கிக்கொள்வீர்
அந்தமில்லாதபுண்ய மடைகுவேனுங்களாலே.

வசனம்.

கேளுங்கள்மந்திரிமுதலாகிய இராசகூட்டங்களே குடிகளே இந்தமகானுபாவருடைய வார்த்தையை யென்வார்த்தையாக நினைத்து அவர்சொற்படிகேட்டிருந்தால் அதனாலே யெனக்கு வருகிற புண்யமெல்லாம் உங்களாலேவந்ததாகவிருக்கும் ஆகையால் இப்போதேவந்துவணங்கிக்கொள்ளுங்கள்.

மந்திரி-வசனம். அப்படியேசெய்கிறோம் சுவாமி.

மந்திரி-விருத்தம்-இ-ம்-தோடி.

எங்களையாண்டமன்ன னியம்பியபடியேநாங்கள்
சங்கையில்லாமலுந்தன் தாளிணைவணங்கிவாழ்வோம்
பொங்குமாந்தவத்தின்மிக்க புகலுமாமுனியேயிந்த
பங்கமில்லாதநாட்டைப் பரிவுடனாள்வாய்போற்றி.

அரிச்சந்திரன்-வசனம்.

இனியெனக்குச் செலவுகொடும் ஒருஆளைமாத்திரங் கூடக்கூட்டுங்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

கேளும் அரிச்சந்திரமகாராசனே நாளை தினம் ஆளையனுப்புகிறேன் நம்முடையபொன் ஓடிப்போகுதா நீஇன்றைக்கே பட்டணத்தைவிட்டுவெளியேபோயிருநடநட.

அரிச்சந்திரன்-வசனம்.

அப்படியேவெளியிலேபோயிருக்கிறேன்சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்.

எத்தனைகுறைகளிந்த விறைதருகுடிகளெல்லாம்
சித்தம்நொந்திடச்செய்தாலும் திருவுளந்தனிற்பொறுந்தே
தத்துறவொழித்தேயாள்வீர் தமியன்யான்செய்ததீமை
பற்றறவிடுத்தேயன்பு பாலிப்பீர்பொறுத்தாள்வீரே.

வசனம்.

கேளுங்விசுவாமித்திரமகாரிஷியே யிந்தப்பிரசைகளெல்லாரும்எத்தனைகுற்றங்கள்குறைகள்செய்தாலும்தேவரீர்பொறுத்து இதுவரையில் அடியேன்செய்த குற்றங்களையும்பொறுத்துக் கோபத்தைநீக்கவேணும்சுவாமிநான்போய்வருகிறேன்.

விசுவாமித்திரர்-வசனம்.

நமக்குச்சந்தோஷமாச்சுதுபோய்வாரும்அரிச்சந்திரமகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

வாராய்பெண்ணேசந்திரமதி அடா அப்பாதேவதாசா இந்தமட்டோடே போய்வருவோம்.

தேவதாசன்-வசனம்,

அப்படியேபோய்வருவோம் என்பிதாவே.

விசுவாமித்திரர்-வசனம்.

ஓய்ஓய் அரிச்சந்திரமகாராசனே மறந்துபோனேன் மறந்துபோனேன்ஓடிவாரும்.

அரிச்சந்திரன்-வசனம்.

மறந்ததெல்லாம்நினைத்துக்கொள்ளும்சுவாமி இதோவந்தேன்.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

அறிகுவோமனதையென்றேஆள்வேண்டாம்போவென்றேன்யான்
மறுபடிநினைக்குமுன்னேவஞ்சமாய்நடக்கலாமோ
குறிதருமிடஞ்சொல்லாமற்குலாவியேநடக்கின்றாயே
முறைவழிபாள்விடுத்தால்மோசமுஞ்செய்குவாயே.

வசனம்.

ஓப் அரிச்சந்திரமகாராசனே உன்பேரிலெனக்குப்பாக்கியிருக்க உன்னுடைய மனைவியறிபல மென்றுநாளைபதினைந்தாள் விடுகிறேன்போவென்றால்போயிருக்கிறது ஞ்சொல்லாமலே சாடையாய்நடந்து விடுகி

றையேஇது நானுதர்மம்நல்லதுஆளைத்தானனுப்பினேன் அ வனையுநீ மோசம்தானே செய்வாய்நல்லகாரியம்நல்லகாரியம்.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

தேவரீருரைத்தவார்த்தைதெய்வத்துக்கொப்பாகாது
தேவரீபொன்னைநானே தேடியெவ்விதமுமீவேன்
காவலில்லாமற்போகேன் கனம்பெருசரயுநீங்கி
மேவுமக்கரையிருப்பேன் வினையமாய்நினைக்கொணாதே.

வசனம்.

தேவரீர்சொற்படிநடந்தேனேயல்லதுவேறில்லை இந்தவார்த்தை தெய்வத்துக்குமேற்காதுஉம்முடையதாகன் கூடவாராமல் நான்போகமாட்டேன் இந்தா இந்தசரயுநதியென்கிற ஆற்றின்கரையிலேயிருக்கிறேன் உத்தரவுகொடுஞ்சுவாமி.

விஸ்வாமித்தார்-விருத்தம்-இ-ம்-ஆரபி.

மகுடகுண்டலமும்வளர்புஜகிருகிதானும்
திகழுநல்லணிகளெல்லாந்தேசத்தோடாசுநீங்கி
ப்கனெடுமனையாள்கூடமறுகியேயலைகின்றுய்நீ
மகிழ்ழென் மக்களைப்புணர்ந்துமண்ணுலகாண்டுவாழ்வாய்.

வசனம்.

கேளுநீஅரிச்சந்திரா காராசனேஉம்முடையகிரீடகுண்டலமும்புஜகிருகிஉடைவாள்வீரகண்டாமணிஇராசயோக்ய ஆபரணங்களையெல்லாம்விட்டுநீயும்உன்பெண்சாதியும்பிள்ளையும்பாதவிக்கிறதுநன்றுகவிருக்கவில்லைஇதோநானென்பெண்களாகிய இந்த இரண்டுஸ்திரீகளையும்விவாகஞ்செய்துகொண்டுஇனிமேலிந்தஇராச்சியத்தை நீயே யாண்டுகொள்ளு மவாரும்வாரும்போகவேண்டாமவாரும்வாரும்.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-ரேகுப்தி.

கைப்பிடித்துரைக்கவர்த்திர்கால்பிடித்துரைப்பேன்கேளு்ம்
மைப்படிகண்ணுர்னயமாதர்மேற்காதல்வேண்டேன்
இப்புவிவாழ்வுமவேண்டேனெனக்குமதருளேவேண்டும்
தப்பிதமுரைக்கமாட்டேன் சத்யமாய்நம்புஞ்சுவாமி.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமி இந்தப்பூலோகத்திலுண்டாகிய வாழ்வெல்லாமெனக்குவேண்டியதில்லை அன்னியஸ்திரீகளுடைய போகத்தை நான்விரும்பப்போகிறதுமில்லைஆடையாபரணமழுகுஎனக்குவேண்டியது

மில்லை எனக்குவேண்டியது தேவரீருடைய கிருபையொன்றுதான் இது சத்யமாகநம்பும் உத்தரவு கொடும்சுவாமி.

விசுவாமித்திரர்-வசனம்.

கேளும் அரிச்சந்திர மகாராசனே ஆளனுப்புகிறவரைக்கும் சரயுநதியென்கிற ஆற்றின்கரையிலே தானேயிரும் அதைவிட்டு அப்புறம்போக வேண்டியதில்லை போம்போம்.

அரிச்சந்திரன்-நாட்டைவிட்டுச் சரயுநதிக்குப்போகிற-தரு
இ-ம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

நடந்துவருவாய் பெண்ணே நீ நடந்துவருவாய் கண்ணே

அடர்ந்தசோலைநிறைசரயுநதியெனும்
ஆற்றின்கரையினின்று அடைந்திருப்போம்சென்று (நடந்து)

பஞ்சணைமீதிலெடுத்தடிவைத்தால்நோகும்
பாதம்வருந்துதென்று தளராதேபெண்ணே
பாவபுண்யமெல்லாம் ஊழ்வினைப்பயனல்லால்
பதைத்தாலதிகமொன்றும் வளராதே
கஞ்சமலராயனாகியபிரமாமுன்பு
கண்டெழுதிவிட்ட தீதைக்கண்டோம்வேறென்னபின்பு
தஞ்சமென்றுநினைந்திடலாமோ
நெஞ்சமுருகிடத்துயராதுபோமோ (நடந்து)

செனனமரணமென்னுஞ்சாகரமிதையினி
சிந்தித்துக்கடக்கவும்வசமாமோ பெண்ணே
தெய்வச்செயலென்பதைநீக்கியுலகிலுள்ளோர்
சித்தத்தின்படிவாழ்வதுநிசமாமோ
கனவுகண்டதுபோலேபோகபாக்கியமெல்லாம்
கண்டோம்போச்சுதென்றுன்னுநகைகாணென்பதோர் சொ
மனதினினைப்பெரிதாகவெண்ணாதே (லாம்
இனமுமுனிவனைமறக்கவொண்ணாதே (நடந்து

தவஞ்செய்துபெற்றெடுத்தபாலன்தேவதாசன்
தவிக்கிறானென்றுமனமுருகாதேபெண்ணே
சத்யம்நிலைக்காதல்லால்வாழ்வுநிலையுண்டாமோ
சந்தேகமாய்த்துயரம்பெருகாதே
சீலமுனியானவிசுவாமித்திரனுக்கிந்தநாட்டை

தந்தபலனோமக்குமோட்சசாம்ப்ராச்யமுட்டை
கவலைகொண்டுதளர்ந்திடலாமோசிவ
னனுக்ரகத்தடைசொல்லப்போமே. நட்டந்து

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-கண்டா.

அருமையாய்த்தவஞ்செய்தெர்த னகமகிழ்ந்திட வேவந்த
பெருமையும்வாழ்வும்நல்ல பிரபலமார்க்கமுமுண்டாக
வருமெந்தன்மகனேயப்பா மலரடிவருந்தியும்
தரணியில்நடக்கவுந்தன் தலைவிதிக்கிளைத்திடாதே.

வசனம்.

நான்செய்த தபோபலத்தினாலேவந்த என்னுடைய புத்ரசிகாமணி
யாகிய அப்பா அடாதேவதாசா தர்மனாமலர்போலுமிராநின்றபா
கம்வருந்த நடக்கிறேமென்று இளைக்காதே யப்பா.

பிரசைகள்-புலம்பல்-தரு-இ-ம்-கண்டா-தாளம்-ஆதி.

மகுடமுடிசூடவையகந்தன்னையாண்ட
மன்னவர்க்கிந்தவிதிவரலாமோவிதி வரலாமோ
தருமோவஞ்சனைபோலே தாரணியைக்கைக்கொண்டு
தவமுனிவர்க்குநலந்தரலாமோநலந் தரலாமோ

நீதியில்லையோஐயோ நிசமுமில்லையோஇந்த
நிஷ்டூரம்விளைந்ததுநெறிதானோஇது நெறிதானோ
ஏதிதுநல்லவர்க்குமிடர்வரலாமோதெய்வம்
இல்லையோஐயையோபழிதானோஐயோ பழிதானோ

அன்னப்பேடையோஇந்தஅரிவையாஞ்சந்திரமதி
அலங்கோலப்படுவதுந்தகுமோதான்இது தகுமோதான்
சின்னவயதறியாச்சிறுவனாந்தேவதாசன்
திருமுகம்வாடுதேஐயோதெய்வமேஐயோ தெய்வமே

தவமுனிவர்யாகஞ்செய்யத்தனங்கேட்பாரென்றிருந்தோம்
தரணியைப்பறிக்கவந்தசதிதானோஇது சதிதானோ
அவமதியோநாடுநகர்யானைசேனையுடங்களும்
அவர்க்கேகொடுத்துவிட்டார்மதிமோசம்இது மதிமோசம்

நாடிழந்துநகரிழந்துநல்லரசுதானிழந்து
நடப்பாரோஇப்படி நடப்பாரோ

பேடைமயிலாளுடனேபிள்ளையும்பின்னேவரப் பிரிவாரோ
பிரிவாரோஎங்களைப்

வேதசாஸ்திரங்கற்றவிஸ்வாமித்திரனுக்
கெவ்வளவும்விளையாதோதயை விளையாதோ
மேதினியாண்டிருந்தவீரனைப்
பாதவிக்கவிடலாமோகை விடலாமோ

பாக்யமெல்லாம்பறித்துக்கொண்டுபழையபொன்னைத்
தரச்சொன்னால்பதையாதோநெஞ்சம் பதையாதோ
ஏக்கமுற்றுமறுமன்னனையிரந்துபொன்னைத்
தருவேனென்றாலிரங்காதோமன மிரங்காதோ

கொப்பளிக்கும்பாதமையோகோதைமலரடிநடந்தால்
கொதிக்காதோமனங் கொதிக்காதோ
சர்ப்பனேயோநாங்களிந்த தவமுனிவன்கீழிருந்து
தளர்வோமோநெஞ்சந் தளர்வோமோ

பிரசைகள்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

புவிபுகழயோத்தியாளும்புனிதனுந்திருச்சங்கின்ற
தவறிலாவரிச்சந்த்ரேந்த்ர சற்குணமணியேபோற்றி
கவலைகொண்டழுதோநாங்கள் காதகவிஸ்வாமித்ரன்
அவமதிக்காளாவோமோ அடியருமவருவோமே.

வசனம்.

தேவரீரிந்தத் திருக்கோலத்துடனே பட்டணத்தைவிட்டு போகவும் நாங்களிந்த மகாகாதகனான விஸ்வாமித்திரன் சொல்லுக்கு அடங்கியிருக்கவும் தகுமாநாங்களும் கூடவேவருகிறோம் சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-பைரவி.

பெருந்தனனகரில்வாழும் பிரசைகளேநீங்கள்மிக்க
வருத்தமாய்மொழியவேண்டாம் மனத்துயரொழிவீரெந்தன்
கருத்தினில்மதித்தேயந்தக் கவுசிகர்க்கரசையீந்தேன்
திருத்தமாயவர்சொற்கேட்டுத் திரமுடன்வாழ்குவீரே.

வசனம்.

கேளுங்கள்பிரசைகளே எனக்காகநீங்கள்விசனப்படவேண்டியதில்லையுங்களுக்கொரு வருத்தமும்வராது என்மனப் பூர்வகமாக என்னுடைய ராசாங்கத்தையவருக்கேகொடுத்தேன் என் கீர்த்திக்கு விரோதமில்லாமல் அவர்சொற்படிநடவுங்கள்.

பிரசைகள்-வசனம்.

தேவரீர் திருவாக்குக்குமறுவாக்குண்டோசுவாமி அப்படியே இருக்கக்கடவோம் எங்கள் தலைவிதிப்படியாச்சுது மகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

ஒருகுறைவும்வராது சுகமாயிருங்கள் பிரசைகளே.

இதுவும்-அரிச்சந்திரன்-வசனம்.

அடா அப்பா தேவதாசா பெண்ணேசந்திரமதி சரயுநதிக்கு அக்கரைபோயிருப்போம் வாருங்கள்.

தேவதாசன்-வசனம்.

அப்படியேபோயிருப்போம் வாருமென்பிதாவே.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

அரசுநன்னகராடு மளித்தரிச்சந்த்ரமன்னன்
உரைசிதறுமற்பொன்னையுவந்தளித்திடுவேனென்று
கரைசெறிசரயுநண்ணிக் காதலியுடனிருக்க
முறைசெறியயோத்தியாளு முனிமனந்தளர்கின்றனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகத் தன்னுடைய இராச்சியமுழுமையுந்தாரைவார்த்ததுமல்லாமல் தொடர்வழக்காகவந்த பொன்னையுந் தருகிறேனென்று சம்மதித்த அரிச்சந்திரமகாராசனவர் சரயுநதிக்கரையிலே வந்திருக்க அங்கே அயோத்தியாபுரியையாளவந்த தவமுனியாகிய விஸ்வாமித்திரமகாரிஷிவிசனப்படுகிறவிதங்காண்க.

விஸ்வாமித்திரர்-விசனப்படுகிற-தரு.

இ-ம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

இனிநானெப்படிமுடிப்பேன்-இந்தச்சபதம்
இனிநானெப்படிமுடிப்பேன்
சனிபிடித்ததுபோல் இந்திரசபைதனில்
தர்க்கமிட்டேனையையோ-சாதிப்பதுவுமெய்யோ ‚இனி
யானையின்மேலொருபலசாலிவந்துநின்று
எறிந்தகவண்கல்லதுபோந்தூரம்
தானங்கொடுக்கச்சொன்னால் தளராமற்கொடுத்தபின்
சற்றுமெண்ணமற்போனேன் க்ரகசாரம்

ஆனமட்டும்பார்ப்போமென்றுகாட்டிலிழுத்துவிட்டேன்
அங்கேவெல்லநினைத்த
னேகவலைச்சப்பட்டேன். இனி

மாமிருகக்கூட்டத்தால் மலைபோலோர்பன்றியினால்
வளநாடழிக்கசெய்தேன் வெகுமோசம்
நேயம்பண்ணுவானென்றெண்ணிநீச்சப்பெண்களை
விட்டேனீங்கிவிட்டானரியானோர்வித்யாசம்
சாயுமோநான்செய்யுந் தந்த்ரசாலவித்தையைக்கடக்க
ஞாயம்பிசகாத இந்த
நராதிடன்மெய்மைநடக்க இனி

உண்டானபாக்யமெல்லா மொன்றுந்தப்பாமல்வாங்கி
யூர்கடக்கவிட்டும்பயப்படுவானோ
கண்டோரிரங்கவவன்கட்டியவஸ்திரங்களைச்
கைக்கொண்டுந்தயியத்தைவிடுவானோ
பெண்டுபிள்ளைத்துயரத்திலும் பேதியாமலாளைவிட்டால்
கொண்டுவந்துன்பொன்தருவேன்
கூட்டுமென்றுபுறப்பட்டால். இனி

மகாமாயசித்தன்-வசனம்.

தம்பி மகாமாயசாலி அப்புக்கல்ல நாள்கொண்டு அழுத்தெ
டங்கினூர்கூடச்சாயவேணும்.

மகாமாயசாலி-வசனம்.

அண்ணே மகாமாயசித்தாநாமிரண்டுபேருங் கூடக்கட்டிக்கொ
ண்டழுவோமா.

மகாமாயசித்தன்-வசனம்.

தம்பிமகாமாயசாலி அப்படியாகிலுஞ் செய்துதொலைப்போ
வா ஏன்சுவாமிஊளையிடுகிறீர்.

மகாமாயசாலி-வசனம்.

அண்ணேமகாமாயசித்தா காட்டிலேயிருக்கிற வெகுகாலங்க
ட கிழநரி ஊளையிடுகிறது நீபார்த்திருக்கிறையா.

மகாமாயசித்தன்-வசனம்.

தம்பி நான்பார்த்ததில்லை அது எப்படியிருக்கும்

மகாமாயசாலி-வசனம்.

அண்ணே இதோ இப்படிதானிருக்கும் நம்முடைய ஊ
ளையிடுகிறதுபோல்.

விஸ்வாமித்திரர்-வசனம்.
அடா துஷ்டப்பயலே என்னடாசொல்லுகிறாய்

மகாமாயசாலி-வசனம்.

பின்னையொன்றுமில்லை சுவாமி தேவரீர் ஒண்டியாயழுகிறீரே நாங்களுங்கூட அழுவோமாவென்று ஆலோசனை பண்ணுகிறோம் சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம். அடத்தாயோழிதுஷ்டப்பயலே

மகாமாயசாலி-வசனம்.

என்சுவாமி உள்ளதைச்சொன்னால் னொள்ளென்று விழுகிறீர்.

பொது-விருத்தம்-இ-ம்-பந்துவாளி,

வஞ்சனையாலேயந்த மன்னன்பொய்சொல்லானென்று
நெஞ்சந்தான்றளர்ந்துவிஸ்வாமித்திரனினைத்தெழுந்து
சஞ்சலத்துடன்பதுங்கித் தான்மறைந்திருக்கஅந்த
தஞ்சமன்னவன்பால்மந்திரித்தலைவர்கள்தாம்வந்தாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக விஸ்வாமித்திரன் விசனப்பட்டு அரிச்சந்திரன் என்னபேசிக் கொள்ளுகிறானோவென்று சாயுநதிக்கரையிலேவந்துபதுங்கியிருக்க அரிச்சந்திரமகாராசனிடத்தில் மந்திரித் தலைவர்கள் விசாரிக்கவருகிற விதங்காண்க.

மந்திரித்தலைவர்-புலம்பல்-தரு-இ-ம்-பந்துவாளி-அடதாளம்.

ஐயையோவும்மைநாங்களெப்படிப்பிரிவோம் உன
தடைக்கலம்புகுந்தோமே-கூடவருவோம்
தெய்வமிப்படிசதிசெய்யுமென்று
திரணமுமறியோம்சிந்தையிற்குறியோம். ஐயை

அடுக்குமோசொல்லுமுலகினிலிந்தசூதுசெய்யத் தகாது
அடல்கொண்டவிஸ்வாமித்திரர்கென்ன வாது
தடுக்கொண்ணாதவினையும்விளைவதேது விதிபொல்லாது
தவஞ்செய்யுமுனிவர்கொடுமைசெய்ய. செல்லாது
தடுக்கண்டுசொல்லதெய்வ மில்லையோ
நம்மைக்கோல்லும்பசுவைக்கொன்றுற் கொலையோ
மிடுக்குள்ள அந்தமுனிவர்க் கஞ்சி
மிரண்டோடிப்போவாரோபயப்பட்டுக்கெஞ்சி (ஐயையோ)

மந்திரித்தலைவர்-விருத்தம்-இ-ம்-ஆகிரி.

செங்கோல்செலுத்தியரசாளுந்திரிச்சங்களித்ததிறல்வேந்தே
இங்கோரேழையெனவிந்த இளமாமயிலுந்திருமகனும்
தங்காது முன்றுதயங்கிவாத் தளருமுனதுதிருமுகத்தின்
சிங்காரமும்போய்வருந்துவதைஸ்திரமாய்ப்பார்த்து மகிழ்வோமோ.

வசனம்.

ஐயையோ இந்தமகாபதிவிரதையான சந்திரமதியம்மனுந்தேவரீர்திருக்குமாரனுகிய இந்தக்குழந்தைதேவதாசனும் பரதேசிகளைப்போல இப்படிப்பரதவித்துவரவும்முடையசிங்காரமும்போய் நீர்வருத்தப்படநாங்களெப்படிப் பார்த்திருப்போம்சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம் - காம்போதி.

வருந்திவந்துளாக்கவந்த மந்திரித்தலைவரேநீர்
பொருந்துமென்சத்தியத்துக்கோர்பொல்லாங்குநினைக்கொணுது
பெருந்தரைதனிற்பிறந்தோர்பெருவதுபுண்யபாவம்
இருந்தந்தமுனிவன்சொல்லுக்கிடரின்றிவாழ்குவீரே.

வசனம்.

கேளுங்கள் மந்திரித்தலைவர்களே பூமியிலே பிறந்தபேருக்குகிடைக்கிறதுபுண்யபாவமாகையால் நான்செய்த புண்ணியத்துக்கொருவிரோதமில்லாமல் அந்த விஸ்வாமித்திர மகாரிஷியின் சொற்படிகேட்டு வாழ்ந்திருங்கள் மந்திரித்தலைவர்களே.

மந்திரித்தலைவர்-விருத்தம்-இ-ம்-தோடி.

அதர்மமாயுமதுநாட்டையபகரித்ததுமல்லாமல்
முதல்வைத்தபொன்னைக்கேட்டு மூடிந்தொருவழக்கைநாடிச்
சுதனுடன்மனையாளோடுக் தூரதேசத்திற்போகும்
விதம்நினைந்திட்ட விஸ்வாமித்ரனுக்கிரங்குவாரோ.

வசனம்.

கேளுமெங்களாண்டவரே ரிஷிகளுக்கு அதர்மஞ்செய்யத்தகுமாஅல்லது அப்படி அதர்மத்துக்குட்பட்டுமோசஞ்செய்து நாட்டைப்பறித்துக்கொண்டதுமல்லாமல் முன்னேதான்வாங்கிவைத்தபொன்னைத்தாவென்றுமொருவழக்கிட்டு அன்னியதேசத்திலேயோடிப்போகத்துரத்தலாமா அப்படிப்பட்ட விஸ்வாமித்திரமகாரிஷிக்குஇரக்கப்படலாமா சுவாமி.

அரிச்சந்திரன்-வசனம்.

அவரொருநாளுமோசஞ்செய்ததில்லை இப்படிப்பட்ட வார்த்தைகள்சொல்லவேண்டாமந்திரித்தலைவர்களே.

மந்திரித்தலைவர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அத்துடன்விட்டானேமுன் னருமையாய்த்தானங்கொண்ட
சொத்ததைத்தருவாயென்றுதொடர்வழக்கிட்டபாவி
இத்தலம்நீங்கிநாற்பத் தெட்டாநாள்தருவாயென்றோர்
மத்தனைக்காவல்வைக்கமனுநெறிக்கடுப்பதுண்டோ.

வசனம்.

அரிகரிஅந்தமகாபாவியாகிய'விஸ்வாமித்திரன்நாட்டைப்பரித்து க்கொண்டதோடே விட்டானா தானம்வாங்கினபொன்னென்றும்அ தைநாற்பத்தெட் டுநாளில்தரவேணுமென்றும்ஒருதாகனைக்காவல்வை க்கத்தகுமாஇதுமனுநீதிக்கடுக்குமாமகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

அவரெப்படிசெய்தாலும்நமக்குச்சந்தோஷம் நீங்களவர்சொன் னபடியேகேட்டிருங்கள்மந்திரித்தலைவர்களே.

மந்திரித்தலைவர்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

பூண்டதோர்பணிகளெல்லாம் பொறுக்கியேகழட்டிக்கொண்டு
பூண்டதோர்வஸ்திரந்தன்னை நிலையுரியுரிந்துகொண்டான்
தூண்டுமொபாதகஞ்செய்துரோகியாமவனைக்கொன்றே
ஆண்டவரேயுமக்கே யருமுடிசூட்டிவைப்போம்.

வசனம்.

சற்றுமிரக்கமில்லாமல்நீங்கள்தரித்திருந்த ஆபரணத்தையும்உடு த்தியிருந்தவஸ்திரத்தையும் பரித்துக்கொண்டு இப்படியலையவிட்ட அந் தமகாபாவியானவிஸ்வாமித்திரனைவதைத்துஎங்களாண்டவரேயுமக் குப் பட்டாபிஷேகஞ்செய்விப்போம் அதினுற்றேஷமில்லைமகாராச னே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

அரிகரியிந்தவார்த்தை யறநெறிக்கடுத்திடாதே
விரிசதுர்மறையின்நீதி விளங்கிய!விஸ்வாமித்திரர்
இரவலனாகவந்தா லிவதுபெரிதோபாக்கியம்
நரகங்கைக்கொள்ளவேண்டாம்நாதனென்றவர்கீழ்வாழ்வீர்.

வசனம்.

அரிகரிஅரிகரி இப்படிதருமத்துக்கு விரோதமானவார்த்தைகளை

ச்சொல்லலாமாசதுர்வேதங்களுடையமுடிவையுமறிந்து தாமேபிரம மாய்ப்பிரகாசிக்கப்பட்டவிஸ்வாமித்திரர்தேகியென்றால்நான்கொடுக் கத்தகாததொன்றுண்டோ இப்போதுநீங்கள்சொல்லுகிறதிலேநரக ப்பிராப்தியாகும்படிவரவொட்டாமல் அவரையே ராசாவாகப்பாவி த்து அவர்கட்டளையிட்டபடிநடவுங்கள்மந்திரித்தலைவர்களே.

மந்திரித்தலைவர்கள்-வசனம்.

எங்களுடையபிராரத்துவபுண்யவசமிப்படியிருந்தால் ஈஸ்வராஈ ஸ்வராதேவரீருத்தாரப்படிக்கேநடக்கக்கடவோம்சுவாமி.

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

சீலமிகுகுடிகளுடன் திகழுமந்திரித்தலைவர்களும்
பாலர்முதல்பெரியோரும் பதைபதைத்துக்கதறியழ
ஞாலம்புகழரிச்சந்திர நராதிபதிதன்மனதை
மேலுஞ்சோதிக்கவிஸ்வாமித்திரன்வந்துற்றனனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகஅழுதுவருகிறபிரசைகளையெல்லாம் நிறுத்தி ப்பின்புமறைந்திருந்தவிஸ்வாமித்திரன் அரிச்சந்திரமகாராசனைச்சோ திக்கவருகிறவிதங்காண்க.

விஸ்வாமித்திரன்-தரு-இ-ம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

அறிவேன் அறிவேன்காணும்நீசெய்கபடம்
அறிவேன் அறிவேன்காணும்
அறிவேனறிவேனுன்னை அரிச்சந்திரனெனவே
அசத்யங்குடிகொண்டதோஐயோவுன்னிணைவை (அறி)
அன்னியாயமாகக்காட்டில்மிருகங்களைவதைத்தா
யருந்தவத்தோர்க்குதவியானகாட்டைச்சிதைத்தாம்
பண்ணுமென்மந்த்ரசிருஷ்டிப்பன்றிதனையுங்கொன்றாய்
பாவையர்தனையடித்துப்பாதகன்போலேநின்றாய் (அறி)
செப்பிடுவித்தைகள்செகச்சாலப்புரட்டுமந்த்ரம்
செம்மைபாய்ங்கற்றநீதான்செய்வாயனேகந்தந்த்ரம்
ஒப்புச்சொல்லவென்றாலுமுன்னைப்போற்கிடையாது
ஒரேவுபாயவித்தையுன்னிடத்திருக்குஞ்சூது (அறி)
பார்த்தவர்க்குமெய்யாகவேபட்டாபிஷேகந்தந்தாய்
பந்நசைரிஷிகளென்றுசொல்லச்சதிபண்ணத்தாய்
தூரத்தாரானமந்திரிகள்சொல்லுக்கேசம்மதித்தாய்
சுந்தப்புரட்டென்றுன்சா [illegible] (அறி)

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-ஆரபி.

ஊறவினி லிருந்த நாலும் வஞ்சனைப்புரட்டிதெல்லாம்
றைவறக்கேட்டேன் கண்டேன் கொடுமைசெய்யரிச்சந்த்ராகேள்
றையுமுன் செல்வம்நாடு நீயேகைக்கொள்வாயென்னை
றல்மிகுபிராணனோடு விட்டால்போய்விடுவேனப்பா.

வசனம்.

போதும்போதும்ஓய் அரிச்சந்திரமகாராஜனே தெய்வாதீனமா
நான்மறைவிலே கேட்டுக்கொண்டிருந்தபடியினாலே நீமந்திரிகளு
னேபேசிக்கொண்ட சூதுவார்த்தைகளெல்லாம் கேட்டேன் கண்
ணினாலுங்கண்டேன் நீசெய்கின்றவுபாயத்தைப்பார்த்தால் நமக்குப்
யமாயிருக்கின்றது உன்னுடைய நகரத்தைநீயேவாங்கிக்கொண்டுஎன்
ணட்பிராணனுடனேவிட்டுவிட்டால் ஓடிப்போய் விடுகிறேனப்பா.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

ாயினில்வாராதவார்த்தை வம்புகளாகப்பேசி
யெனைத்துவித்தேகும் நிலவரமெல்லாங்கண்டேன்
யும்நான்கொடுப்பேனுட்டை யதனைக்கைக்கொள்ளாயாகில்
யரிந்நீயனுவாய் செய்தகுற்றமும்போகாதே.

வசனம்.

இப்போதுநானொன்றுசொல்லுகிறேன்கேளும் இந்த ராச்சியத்தை
னக்கேகொடுத்துவிடுகிறேனதைநீயேற்றுக்கொண்டாலாச்சுது இ
லாவிட்டால் பாவிகளிலேயெல்லாம்மகாபாவியாவாய் அதெப்படி
யன்றால்காட்டிலே இருக்கின்றவாய் விடாச்சாதிகளையெல்லாங்
காலைசெய்தாய் நானுண்டுபண்ணியனுப்பினபெண்களிடத்தில் ஆ
ல்பாடல்களைக்கேட்டுஅவர்களையுமடித்தாய் நான்மந்திரசக்தியினு
லசிருஷ்டித்தபன்றியையுங்கொன்றாய் அந்தப்பாவங்களை யெல்லா
நீகைக்கொள்ளவேணும்பாவத்துக்குப்பயந்தால் என்சொற்படிஇந்
நாட்டைநீகைக்கொள்ளவேணும் தாரகில்லு தாரகில்லு.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-வராளி.

பியோர்கள்செய்தபிழைபெரியோர்கள்பொறுப்பதுவுஞ்சீர்தானேபா
றியாமலிவ்வார்த்தையென்னுடனேயுரைத்ததற்குணர்ந்தாலுண்டோ
றியேதும்பிசகிடேனீயாள்வ ... பன்னாட்டை நான் ... போம் ...
ைறவானபொன்கொடுப்பேன் ஆள்விடுவாய்தவப்பெருமைக்கொ
ந்தேபோற்றி.

வசனம்.

ஒருகாலத்திலுஞ்சொன்னசொற்பிசகேன் சிறியோர்கள்செய்த குற்றமெல்லாம்பெரியோர்களபொறுக்கக்கடவர் ஆகையால்தவசிரோமணியாகியதேவரீர் அடியேன்செய்தகுற்றமெல்லாம்பொறுத்துஒரு ஆளையனுப்பினால்உமக்குக்கொடுக்கவேண்டியபொன்னைக்கொடுத்துவிடுகிறேன் தேவரீர்இந்நாட்டையாண்டுகொள்ளும்நீர்மறுத்தொன்றுஞ்சொல்லாமல் திருவுளமிரங்கியுத்தரவுகொடுஞ்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

நல்லது நல்லது இந்தக்குற்றமும்பொறுத்தேன் சொற்றவறாமல் என்பொன்னையெல்லாம்பற்பத்தெட்டுநாளில்சரியாய்ச்செலுத்திப்போடும்.

அரிச்சந்திரன்-வசனம்.

அதற்கொருதடையா ஆளனுப்பும் சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்- சாவேரி.

கோபஞ்செய்விஸ்வாமித்ரன் கோமலர்ப்பாதம்போற்றிப்
பூபதியரிச்சந்த்ரன்றன்பொன்னுக்காளனுப்புமென்னத்
தாபதர்பணியுமந்தத்தவமுனிவனைத்ததாலே
சாபம்போல்சுக்ராசாரிதரகனென்றெதிர்வந்தானே.

வசனம்.

அரிச்சந்திரமகாராஜனுமவர்பொன்னைத்தருகிறேன் ஆளனுப்புமென்றுசொல்லவிஸ்வாமித்திரமகாரிஷி சுக்ராசாரியைமனதிலேநினைக்கநட்சத்திரத்தரகனாக வருகிறவிதங்காண்க.

நட்சத்திரத்தரகன்வருகிற-தரு-இ-ம்-காம்போதி - அடதாளம்.

தரகன்வந்தானே-நட்சத்திர-தரகன்வந்தானே

வரவேண்டியபொன்னுக்காளைக்காட்டிவிட்டால்
வதையாமலேசித்ர வதைசெய்மகாசித்ரத (தரகன்)

வெடுவெடென்றுபேசிக்கையை-வீசிவீசி
மின்னும்பூணூலைமன்னித்திருத்திக்கொண்டு-ஆகா
கடுகடுத்துமகாவேகத்துடனடந்து
கறுவிக்கறுவித்தனக்குள்ளேசிரித்துக்கொண்டு
நடுநடுங்கியரிச்சந்திரமகாராசன்
நமஸ்காரமென்றுசொல்லநமக்கென்னவென்றுசொல்லாத (த)

சாண்கயிற்றினிலண்ணாந்தாள்போடுவேனென்றும்
 தடுத்துச்சொன்னால்கிட்டிக்கோல்போடுவேனென்றும் - ஆகா
வீண்வார்த்தைபேசினால்முதுகில்கல்லைவைத்து
 மேலேயேறிக்கொண்டுமீசையையிழுப்பேனென்றும்
காண்பீர்களெல்லோருமிந்தவரிச்சந்திரனைக்
 கசக்கிப்பிழிவேனென்றுகாட்டுவன்சாமர்த்தியமென்றும் (தர)
பெண்சாதியழுதாலும் பிள்ளைவந்தழுதாலும்
 பெரியோர்வந்தழுதாலும்விடுவேனோ-ஆகா
கண்சாடையினாலுங்கைக்கூவியினாலும்
 கள்ளவுபசாரத்துட்படுவேனோ
எண்ணுஞ்சம்பளமெனக்கீயும்விஸ்வாமித்திரர்க்
 கிரண்டகஞ்செய்தோதகமெனக்கேனென்றுபாதகத் (தரகன்)

நட்சத்திரத்தரகன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

சாட்டியாலிறுகச்சுற்றித்தாணியிற்சுழலவேவிட்
டாட்டியபம்பரம்போலாட்டுவேனவராலும
காட்டுமென்கண்ணிற்பொன்னைக்கக்கவைத்திடுவேன்கையை
நீட்டிடும்விஸ்வாமித்ரரித்தயமாதவரேபோற்றி.

வசனம்.

நமஸ்காரஞ்சுவாமி விஸ்வாமித்திரமகாரிஷியே,ஆர் உமக்குச்செல்வ
ரவுபொன்கொடுக்கவேணுமோ அவர்களைமாத்திரம் உம்முடையகை
யைநீட்டிக்காட்டிவிட்டாலதுபோதும் அவனையல்லோகல்லிலேல்லாப
த்திப்பம்பரம்போலாட்டிவிட்டுப்பணத்தையுங்கக்கவைப்பேன்சா
ட்சியிற்காட்டிவிடும்.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-அடாணா

காட்டுதற்கையமுண்டோ கசட்டரிச்சந்திரன்றன்னை
ஆட்டுவாய்பம்பரம்போலவன்மகன்மனையாளோடும்
வாட்டமுற்றழவேபொன்னைவாங்குவாய்பெரிதீதல்ல
பூட்டுமுன்திராணியாலோர்பொய்வரச்செய்குவாயே.

வசனம்.

சேனும்நட்சத்திரத்தரகரே நானிந்தஅரிச்சந்திரனைக் காட்டுதற்
கு நுசங்கேகமாகீரவனைப்பம்பரம்போலாட்டி அவன்பெண்சாதிபி
ள்ளைபெல்லாங்கதறியழத்தக்கதாகப்பொன்னை அவன்கையில் வாங்கு
றதற்கொருசந்தேகமா அதுபெரிதல்லஎவ்விதமாகிலும் உன்சாமர்
த்தியத்தினாலே அவன்வாயிலொரு பொய்வரச்செய்யவேணும் அது
தான்உம்மிடதிராணி.

நட்சத்திரத்தாரகன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

பொய்யையுஞ்சொல்லச்செய்தே பொன்னையும்வாங்கிவைப்பேன்
செய்யுமென்றிராணியெல்லாந்தேவரீர்தாமேகாண்பீர்
மைவிழியானசந்த்ரமதியுடன்மகனும்மேங்கி
வைநவதிலழுதுவாடிநலிவதிலிரங்குவேனே.

வசனம்.

கேளுஞ்சுவாமி விஸ்வாமித்திரமகாரிஷியே அப்ரயோசகனான அந்தஅரிச்சந்திரனைப்பொய்சொல்லச்செய்கிறதும் அவன்கையில்பொன்னைவாங்குகிறதுமெனக்கொருபெரிதல்ல அவனும் அவன்பெண்சாதியும் அவன்பிள்ளையும் அவர்கள்படப்போகிறார்களேபாடு அதைக்கண்டாகிலுங் கொஞ்சமிரக்கப்படுவேனோ அதுவெல்லாந்தேவரீர் காணப்போகிறீர்விஸ்வாமித்திரமகாரிஷியே.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

காண்பதுமெய்யேயிந்தக் கபடனுமரிச்சந்த்ரற்கு
சாண்கயிறடிகிட்டிச்கோற்றப்பாமற்செலுத்திமேலும்
மாண்படுகோட்டில்வைப்பாய்வாங்கிக்கொள்நாட்டையென்பாய்
தூண்பெறுப்யனிசைந்தாற்றுனாயைப்போலழைத்துவாராய்.

வசனம்.

கேளும்நட்சத்திரத்தாரகரே பொன்னைவாங்குகிறதுதானிருக்கி[றதே] அதற்குள்ளாகநீரவனைப்படுத்துகிற நானாவித இம்சைகளிலேநீ[ரே]ன்வருத்தப்படுகிறீர் உம்மிட நாட்டைக்கொடுத்துவிடச் சொல்லு[கி]றேன்நீர்சுகமாயாண்டுகொள்ளுமென்றுசொல்லும்அவன்சம்மதித்து வந்தால்அவனைநம்மிடதுரையென்றுநினைத்துச்சோடசவுபசாரத்துடனேயழைத்துவாரும்இதுதானமக்குவேண்டியதுபோம்.

நட்சத்திரத்தாரகன்-வசனம்.

ஆனால்ஆளைக்காட்டிவிடும்

விஸ்வாமித்திரர்-வசனம்.

இதோநிற்கிறானே இவன்தானரிச்சந்திரமகாராசன் யானையின்[மே]றுமேலேநின்றுகவண்கல்லெறிந்ததூரம்பொன்னையோகுப்பலாக நா[ற்]பத்தெட்டுநாளைக்குள்ளாகவாங்கிக்கொள்ளும்.

நட்சத்திரத்தாரகன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

நம்மையீரழைக்கவேணும்நாளுநம்மாத்திருக்கவேணும்
செம்மையாய்ப்பேசவேணும்சிரித்துநான்மகிழவேணுங்
கும்பலாய்க்கெடுவிற்பொன்னைக்கொட்டுமுன்தெண்டிப்பேனான்
இம்மென்றெழுந்துபோவேனில்லையென்றுரைத்தானென்பேன்

வசனம்.

ஓய் ஓய் அரிச்சந்திரமகாராசனே சேனும்நாமானல்பிராமணன் நமக்கேது வேலேயும்பயந்தோன்றும்சமயமறிந்தேதேடியழைக்கவேணும் நீரும்உம்முடையஆம்புடையாளும்பிள்ளேயும் சமைக்காத்துக்கொண்டுகூடவேயிருக்கவேணும் நான்கேட்டபோது பொன்னைக்கும்பலாய்க்கொட்டிக்கொடுக்கவேணும்சற்றேதடைப்பட்டாலேதோ சம்மிடகையிலிருக்கிறஆயுதங்களாலேஉம்மைமானான் தெண்டிக்கவேண்டியிருக்கும் அழைத்தபோதாவதுபொன்னைக்கேட்டபோதாவது நாம்தெண்டிக்கிறபோதாவதுசற்றேஆவென்றுவுடனேபோய்விடுவேன் இல்லேயென்றுசொன்னுனென்று சொல்லுவேனிதற்குச் சம்மதியானுல்வருகிறேன்சொல்லும்.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்- தன்னியாசி.

தெண்டிக்கப்பொன்னைக்கேட்கச்செப்புமென்கெடுவிற்குள்ளே
கண்டிக்கத்தேவரீர்க்குக்கனவதிகாரமுண்டு
பெண்டுடன்பிள்ளேநானும்பொருத்தமேதோர்பிழைசெய்தாலும்
கொண்டுடன்பொறுப்பீரெங்கள்குலதெய்வம்நீரேசுவாமி.

வசனம.

உம்மையெங்கள்குலதெய்வம்போலவைத்திருப்போமேயல்லது குறைவில்லேபொன்னைக்கொடுக்கிறவரைக்கும் தேவரீருடையதண்டனைக்குட்பட்டுச்சொற்படிநடப்போமேயல்லது ஒருவித்தியாசங்களும்வராதுகிருபைசெய்துகூடவாருஞ்சுவாமி.

தாகன்-வசனம்,

எனக்கிப்போது தான் சந்தோஷம் இனிமேலிருக்கிறது வயிற்றெரிச்சல்.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-கல்யாணி.

காதினிலொன்றுசொல்வேன்கருத்தினில்வைத்துக்கொள்ளும்
சாதமுங்கறியும்நெய்யுந்தயிருடன்கொடுக்கச்சொல்லும்
போதவேபொன்வந்தாக்காபுஞ்சிப்பேனென்றுரைப்பீர்தந்தால்
மாதமும்நாளுமெண்ணிவாங்குஞ்சம்பளங்கிட்டாதே.

வசனம்.

இன்னமொருஇரகசியங்காதிலேசொல்லுகிறேன்மனதிலேவைத்துக்கொள்ளும் அவர்கள்சாப்பிடுகிறபோதுகாயிலேகிழங்குவேயமக்குகொடுக்கவரவர்கள்கீரைதைவாங்காமல்சல்லதயிர்நெய்கறியுடனே திவ்யமானபோசனம்சேவணுமென்றுகேளும் ஒருவேளையதுவுங்கிடை

த்தாலும் என்பணத்தைக்கொடுத்துவிட்டால் சாப்பிடுவேனென்று சொல்லும்அப்படிப்பணத்தைக்கொடுத்துவிட்டாலும் நின்றமாதமும் நாளுங்கணக்கெண்ணிக்கொண்டுஉம்முடைய இஷ்டப்படிக்குச்ச ம்பளங்கேளும் அதற்குவழியில்லாமற்போகும் அதுதான்ஆளை மடக்கிக்கொள்ளும்நட்சத்திரந்தரகரே.

தரகன்-வசனம்.

ஒருபோது சாப்பிட்டேனானால்மூன்றுநாளைக்குப்பசிபடாமல் கெட்டித்துக்கொண்டு அவனைப்படுத்துகிறபாட்டிலே கும்பல்கும்பலாகப்பொய்யைக்கொட்டப் போகிறான் தடையென்ன இருக்கிறதுசுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

பொன்னைக் கொடுத்துவிடுவீரா நான்போய்வரவோ அரிச்சந்திரமகாராசனே நம்மிடசிஷ்யன் பிராமணப்பிள்ளைசாக்ரதையாய்வைத்துக்கொண்டிரும்.

அரிச்சந்திரன்-வசனம்.

அடியேன்பிராணனிருக்கிறவரைக்கும்ஒருகுறைவுமில்லை இந்தமட்டுக்குஉத்தரவுகொடுக்கவேணும்சுவாமிவிஸ்வாமித்திரரே.

விஸ்வாமித்திரர்-வசனம்.

அறியாத பிராமணப்பிள்ளையென்று ஏய்க்கப்போகிறாய் சாக்ரதையாய்ப்பொன்னைச்சேர்த்துவிடும்.

அரிச்சந்திரன்-வசனம்.

தேவரீர்கூடவேவாரும்நட்சத்திரத்தரகரே மெதுவாயழைத்துக்கொண்டுபோகிறேன் நடந்துவாரும்சுவாமி.

தரகன்-வசனம்.

எதடாஎனக்குமுன்னேயெட்டிவைத்தாய் நான்வரமாட்டேன் நான்வரமாட்டேன்.

அரிச்சந்திரன்-வசனம்.

தேவரீர்சித்தத்துக்கு அடியேன்செய்ததெல்லாங்குற்றம்பொறுத்திரட்சிக்கவேணும்சுவாமி.

பொதுவிருத்தம்-இ-ம்-செஞ்சுருட்டி.

கண்டகவிஸ்வாமித்ரன்கபடத்தால்நகரைவாங்கி
எண்டிசைபுகழுங்காசிக்கேகிநன்மனைபாலனோடுங்
குண்டுணிதாகனொடுங்குழைந்தரிச்சந்திரன்போகக்
கண்டந்தசத்யகீர்த்திகலங்கியேவருகின்றானே.

வசனம்.

விஸ்வாமித்திரர்செய்தபொல்லாங்கினலேபிள்ளையும் பெண்சாதியுந்துயரத்துடனே பின்வரநட்சத்திரத்தாகனைக்கூட்டிக்கொண்டுகாசிப்பட்டணத்தைத்தேடி அரிச்சந்திரமகாராஜன்நடக்கஅவனைத்தேடிக்கொண்டுசத்தியகீர்த்தியாகிய மந்திரிவருகிறவிதங்காண்க.

சத்தியகீர்த்திவருகிற-தரு இ-ம்-செஞ்சுருட்டி- தாளம்-மிசுரம்.

தெய்வம்பொதுவென்பதுபொய்யோ-அதர்மமெய்யோ
தெய்வம்பொதுவென்பதுபோய்யோ-ஐயையோஐயையோ (தெய்)
செய்யும்வகையினியொன்று மறியேன்
திருவுளச்செயலென்று குறியேன் (தெய்)
சக்ரேஸ்வரனரிச்சந்திரமகாராசன் மகாவிசுவாசன்
தருமநீதிபிரகிலாப்ர காசன்
எக்காலமும்பொய்யில்லா வாயன்
இளைத்தோருக்குநாளுஞ் சகாயன்
தக்கோர்மிகப்புகழுந் தூயன்
தளரலாமோவென து நேயன் (தெய்)
தருமமிவளென்றுறசமியாதே பொய்பமியாதே
தவமுமிவள்நொந்தாள் கெலியாதே
கருமமோசங்கிரமதியாந் தாய்க்குக்
கலகஞ்செய்விஸ்வாமித்திரப் பேய்க்குத்
தர்மமேதுஅதர்ம வாய்க்குத்
தருமருந்துண்டோதலைவிதி கோய்க்குத் (தெய்)
தவஞ்செய்துவருமைபாய் பெற்றபாலன்சுகுணசீலன்
தழைத்திடுந்தேவதாசனை லோலன்
எவரைவிட்டதுசநிபோ ல்லாதே
இந்தவிஸ்வாமித்திரன்சூதுநில் லாதே
கவலைபோமோவிதிபொல் லாதே
காலம்வராமற்கதிசெல் லாதே
தெய்வம்பொதுவென்பதுபொய்யோ-அதர்மமெய்யோ
தெய்வம்பொதுவென்பதுபொய்யோ
ஐயையோஐயோ-தெய்வம்பொதுவென்பதுபொய்யோ

சத்தியகீர்த்தி-விருத்தம் இ-ம்.கண்டா

கண்களாலிந்தக்காட்சி காணவும்பெற்றேனையா
மண்முதன்மரங்கண்மற்ற கிலேசளுமுருடாதோ
வண்மதிமுகத்தாள்சந்த்ர மதியுடன்மகனும்நீயும
பண்மிசைசாடக்கக்கண்டுவாழ்வனோதமியனேனே.

வசனம்.

கேளும்எங்களாண்டவராகிய இராஜசக்ரேஸ்வரா எனதுதாயாகி யசந்திரமதியம்மனும் இந்ததவப்புத்ரனாகிய தேவதாசனுந்தேவரீரும் பாதகமலங்கள்நோவ நடக்கின்றதைக்கண்டால்மண்மரங்கள்முதலா கியதுமுருகாதாஜனயோ இப்படிவருத்தப்பட்டுநீங்கள்நடக்கிறதை ப்பார்த்திருந்தும்நான்பட்டணத்திலிருந்துவாழ்கிறதாநானுங்கூடவே வருகிறேன்சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-சாவேரி:

என்னிலுமழகுமாறியேங்கியோர்பரதேசிபோல
மன்னுமன்னைகைவிட்டுவருவதேன்மந்த்ரிநீதான்
பன்னியவிஸ்வாமித்திரர் பருந்தநாடரசுசெய்ய
உன்னையல்லாதுவேறொருநற்றுணைவருண்டோ.

வசனம்.

வாராயெனது விவேகமந்திரியாகியசத்தியகீர்த்தி நானொருவன்பர தேசியென்றிருந்தால் என்னிலும்பரதேசியாயழகுமாறி இப்படிவரு வானேன் அந்தவிஸ்வாமித்திரமகாரிஷிக்குஇராசாங்கம்பண்ணுகிறதற் குச்சகாயமாயிருக்கஎன்னையல்லது உரித்தானமந்திரியுண்டோபோ ய்விடுபோய்விடு சத்தியகீர்த்தி.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ ம்-ஆகிரி.

காறுபாறென்றும்வேண்டாங்கருதியபாக்யம்வேண்டாம்
பேறுமதருளேயும்மைப்பிரிந்துநானிருக்கமாட்டேன்
நீறணிமுனிவனுக்கேநிலைமையோவடிமையோநான்
சோறுவேண்டாதபேர்க்குத்தரித்திரமுண்டோசுவாமி.

வசனம்.

கேளும்எங்களாண்டவராகிய இராசசக்ரேஸ்வரா அந்தவிஸ்வாமி த்திரமகாரிஷிக்குநானேதாகிலும்சொந்தமனுஷனாஅல்லதுநானேதா கிலும்அவருக்கடிமையா அவரிடத்திலெனக்கு மந்திரித்தன்மைவே ண்டாம்யாரிடத்திலேயாவதுசம்பளம்வேண்டியவன் தானேசேவிக் கவேண்டும் சோறுவேண்டாதபேருக்குத் தரித்திரமுண்டா உம்மை விட்டுநான்பிரியமாட்டேன் சுவாமி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

ஆடையாபரணராச்சியமடங்கலுமவர்க்கேதந்தேன்
தேடியவானைசேனைத்திரளெலாமவர்க்கேதந்தேன்
கூடெலாங்கடந்தேயந்தகாசிக்கேசென்றுபொன்னைத்
தேடப்போமென்பின்பிந்துதிரகத்திடுவாயோமந்த்ரீ.

ளையுங்கூடிக்கொண்டுபோகிறதும்நம்மைக்காட்டிலேவிட்டு விடுகிற
யாஇந்தோமோசஞ்செய்தான் இதோமோசஞ்செய்தான்.

அரிச்சந்திரன்-வசனம்.

சத்தியகீர்த்திக்குச்சொல்லியசமாதானத்தில்உவமையாகச்சொல்
ளேனேயல்லதுஉண்மையொருக்காலும்விட்டுப்பிரியோமகவாமிநட்ச
திரத்தாகரே.

தாகன்-வசனம்.

ஆனால்சந்தோஷம்ஆனால்சந்தோஷம்.

சத்தியகீர்த்தி - புலம்பல்-தரு-இ-ம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி

அன்புடனெந்நாளுமென்னையாதரிப்பாரென்றுசொல்லி
அடுத்தேனேதுரை விடுத்தேனே
முன்பின்னொன்றுமலென்னைமுகமறியாரைப்போல
மோசஞ்செய்யநினைத்திட்டமொழிதானோவேறோர்பழிதானோ
என்னைப்பெற்றதாய்தந்தையெல்லாம்நீயென்றிருந்தேன்
ஏங்கிப்பாதவிக்கவிடலாமோசகிக்கப் படலாமோ
தன்னைநம்பியிருந்தபேரைத்தனக்குவருத்தம்வந்தால்
தள்ளிவிடவெண்ணிநெஞ்சந்தரிப்பாரோ நமஸ்கரிப்பாரோ
காடுவரும்நகரம்வருமநல்லபிள்ளைபெண்டுவரும்
நம்பினவர்போனால்பின்புவருவாரோநலந் தருவாரோ
கூடிப்போனால்கூட்டிலுள்ளகுற்றுயிர்போகாதுண்டோ
குலையுதென்மனதையோவிதிஞாயமோகோ இதுஞாய
காடுமலையிந்தப்பூமிகக்ஷமெல்லாம்நண்ணிமெள்ளக்
கடிவாரோவினையம் முடிவாரோ
பாடுவந்துநேர்ந்திட்டாலும்பழிவந்தடுத்திட்டாலும்
பற்றுதல்விட்டவரைக்கனமொழிவேனோகுரு மொழிவேனோ

அரிச்சந்திரன்--விருத்தம்-இ-ம்-முகாரி.

மனைவியுமகனுநானும் வருமிக்குத்தாகன்கையில்
சனங்குலைந்தலையுமெங்கள் காட்சியைநீயுங்கூடத்
தினமுங்கண்டழுவோவப்பா சிந்தித்தாய்துயரம்வேண்டாம்
தனிமதிசத்யகீர்த்தி தளராமல்வருகுவாயே.

வசனம்.

கேளப்பாஎனதுவிசேஷமந்திரியாகியசத்தியகீர்த்திநாங்கள் மூ
றுபேரும்இந்தநட்சத்திரதாகன்கையில்படப்போகிறபாட்டையுநீ
ர்த்துஅழவேண்டாமாயாசப்படவேண்டாமாவாவா.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-கண்டா-

இடிவந்தேவிழுந்திட்டாலுமிவர்கையில்நாமெல்லோரும்
கடனுக்காய்ப்பாடுபட்டுக்கலக்கமுற்றழுதிட்டாலும்
மடிவிலாவெனதுநெஞ்சம்வருந்துமோவருந்தமாட்டேன்
படிமிசைநான்செய்புண்ணியம்பலித்ததுபுனிதனானேன்.

வசனம்.

கேளுஞ்சுவாமியெங்களாண்டவராகியஇராசசக்கிரேசுவரா இப்போ நல்லவேளைநான்புனிதனானேன் கடனுக்காகநீங்கள்படுகிறபாடெல்லாம் நானும்படுவேனேயல்லதுதளரமாட்டேன் உள்ளபடியாகிறது நடவுஞ்சுவாமி.

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

வாடியழுமந்திரியைமன்னனுடன்வரச்செய்தே
நாடியந்தசிவகாசிநகரையெண்ணித்தானடக்கக்
காடுமலைமிகச்சூழுங்கடும்பாலைவனத்தில்வர
நீடுமுனிமாய்கையினால்நேர்ந்ததுன்பம்புகல்வேனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச்சத்தியகீர்த்தியாகியமந்திரியையுங்கூடஅழைத்துக்கொண்டுசந்திரமதியம்மனுந்தேவதாசனும்அரிச்சந்திரமகாராஜனும நட்சத்திரத்தாகருடனேகூடக்காசிப்பட்டணந்தேடி ஆரணியத்திலேபாலைவனத்தில்வருகிறபோது விசுவாமித்திரர்மாய்கையினாலே அவர்கள்துன்பப்படுகிறவிதங்காண்க.

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-வராளி.

இந்தவெண்மணலுஞ்செந்தழல்போலெரிக்குதேசகிக்கவெவ்வகை
யோ, நனைதயேயம்மாசத்தியகீர்த்திதகிக்குதேயென செய்கேனோ
நாரப்பாதஞ்சிவக்குதேசிவந்துசுறுக்கென்றுகொப்பளித்திடுதேமுந்த
நான்செய்ததீவினைப்பயனோமுடிவிதுவாகுமோவறியேன்.

வசனம்.

ஆ என்னைப்பெற்றஅய்யனே அம்பா ஆசத்தியகீர்த்தி இந்தமணல் நெருப்புப்போலக்கொதிக்கின்றதே பாதமெல்லாஞ்சிவந்து கொப்பளிக்கிறதே இப்படிதகித்தால்என்னால்சகிக்கலாமோ இதுநான்முன் ஜென்மத்தில்செய்தபாவமோ இனிஎப்படிமுடியுமோ என்னசெய்வேன் என்னசெய்வேனீசுவரா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-சௌராஷ்டிரம்.

ஐயையோமகனேநீபடுந்துயரமாற்றவோதந்தையைப்பார்த்தால்
வையகமுழுமைபெற்றதோர்வேந்தன்வயிறுதான்கொதிக்கின்றதப்பா

செய்யபஞ்சினைமேல்மருமலர்தூவிச்சிற்றடி வைத்துநீநடந்தால்
செய்யுபசாரமெத்தவுண்டெனச்சிந்தைதால்படலந்தீர்த்திடுமோ.

வசனம்.

ஆனதுதகப்புத்திரனுகிய தேவதாசா என்கண்மணியே உன்னுடையதுக்கத்தைநானெப்படிகண்ணினுல்பார்ப்பேன் இதோஉன்னைப் பெற்றபிதாவாகியமகாராசன் உன்னைப்பார்த்துப்படுகிற துக்கத்தைக்கண்டாலிந்தவுலகமெல்லாமழுமே அப்பா மகனே முன்னே பஞ்சணையின்மேல்புட்பங்களைத்தூவியதன்மேல்நீசிற்றடியிட்டுநடந்தால்பாதம் நோகுமென்றழுவாயே அப்படிப்பட்டநீயிந்தவெண்மணலில்கிடக்கவும் நாங்கள் கண்ணினுற்பார்க்கவும்வந்ததாமகனே பெற்றவயிறுகொதிக்கின்றதே யென்ன செய்வன் என்னசெய்வனடாமகனே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

மூவருங்காணுமங்கல்யங்கண்டுமுறைப்படி விவாகஞ்செய்தே
ஆவலாய்க்கூடித்தவத்தினுதித்த அருமைசேர்மைந்தனேயப்பா
நீவருந்திடவுமுன்னுடன்தாயார்நின்றழுதிடநானுஞ்
சீவனில்லாப்பதுமைபோலிருக்கத்தெய்வமுமாவிதித்தவாறிதுவே.

வசனம்.

திரிமூர்த்திகளுங்காணப்பட்டதிருமங்கலியங்கண்டு விவாகஞ்செய்துகூடியருமையாய்ப்பெற்றஎன்மகனேநீபடுகிறதுயரமும்நான் கண்ணினுலேகண்டுசித்திரப்பதுமைபோலிருக்கிறேனே தெய்வமிப்படியும் விதித்ததாமகனே.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

சிங்காதனத்தின்மிசையிருந்த தேவாவுனதுதுக்கமுமுன்
பங்காகியதோர்பன்னியாரும்படுந்துக்கமும்நான்பார்த்தாலும்
இங்கேயிந்தவிளங்குழந்தைபடுந்துயரம்பார்ப்பேனே
பொங்கோர்தோளின்மிசையெடுப்பேன்புனிதாவேறென்செய்வேனே.

வசனம்.

ஐயையோசிங்காதனத்தின்மேலிருந்து அரசாட்சி செய்ததேவரீர்படுகிறதுக்கமுந்தேவரீர்பத்தினியாகியவெனதுதாய்சந்திரமதியம்மன்படுந்துக்கமுமநான்பார்த்துக்கொண்டிருந்தாலும் இந்தக்குழந்தை படுகிறதுக்கத்தைநானெப்படிபார்ப்பேன் என்னையன் தேவதாசனை யென்தோளின்மேலெடுத்துக்கொள்ளுகிறேன் அதற்குமேலும்நானென்னசெய்யப்போகிறேன் மகாராசனே.

சத்தியகீர்த்தி-வசனம்.

அப்பா தேவதாசா என்கண்மணியே என்தோளின்பேரிலேறிக் கொள்ளுமப்பா.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-ஆகிரி.

பெண்ணிளையிலேசுநம்பினாதாரம் பெருத்தசகலவின்பவாரிதியே
கண்ணினுட்கண்டுசீடமுந்துயரங் கடக்கவுமினியென்னல்வசமோ
பண்கள் பாதப்வருந்துதேயாதுல் வந்தெந்தன்தோளமிசையேறாய்
எண்படுபிரமனெழுதியவெழுத்தி னியல்பிதோவறிகிலேனேயா.

வசனம்.

ஐயையோ எனதுபிராணபதமான சந்திரமதியே இந்தசுடுமணலிலே வருத்தப்பட்டு உன்பாதம்நோகக்கண்டு நடக்கப்படிசகித்திருப்பேன் ஆ இப்படிபிரமாவும் எழுதினானோ இந்தகஷ்டம் என்தோளின்மேலேறிக்கொள்ளுமகனை நடத்துக்கொள்ளுகிறேன் பெண்ணேசந்திரமதி.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-நீலாம்புரி.

பூமகளுநிலமகளும்பொருந்துபுயமிசையடியேன்பொருந்தியேற
நீமனதுசம்மதித்தானனதற்குச்சம்மதிக்கநினைக்கலாமோ
சாமுடலுக்குறுதியுண்டோசத்தியத்துக்கழிவுமுண்டோதாரணியன்னு
நேமமிதுவோகரகம்வரும்வரும்நீநடக்கிலநதநெறிசொல்லேவனே.

வசனம்.

ஸ்ரீமகாலட்சுமியும்பூமிதேவியும்வாசஞ்செய்யாநின்ற உம்முடைய புசத்தின்மேலில்லாயிலும்கடையாகியநானேறத்தகுமோ நாகமல்லவே இடைக்கும்நான்படுகிறதுக்கத்தைப்பார்க்கமாட்டாமல் நீரப்படிசொன்னாலும் தெய்வம்சம்மதிக்குமா நீர்மாத்திரந்துக்கப்படாமல் நடந்தால் உம்முடைய பின்னே கூடவேநடந்துவருகிறேன்மகாராசனே.

நட்சத்திரத்தாகன்-வசனம்.

அடாய் அடாய் நேக்குசுகிறது நேக்குசுடுறது வேறுவைபிராணன் போறது நேக்கெப்படி நேக்கெப்படி சொல்லுபிள்ளாய்.

அரிச்சந்திரன்-வசனம்.

திரிகாலசத்தியாவந்தனந்தவறாமல் ஓமாக்கினிவளர்த்திக்கொண்டிராநின்றபிராமணாளே இந்தாணற்கடுமை யொன்றுஞ்செய்யமாட்டாது தேவரீர்பாதத்தைக்கையிலேந்திக்கொள்ளுகிறேன்சுவாமி.

நட்சத்திரத்தாசன்-வசனம்.

ஆர்ஆம்கேக்குமிப்போதுதான்சந்தோஷம்.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

ஈதென்னபொல்லாக்கால பெரிவனஞ்சுடுகாணற்குள்
பாதபவைத்திடப்பதைத்துப் பதறியோ முகிலாற்றுமே
சாதகவெறுப்புதேள்கட் டாணை நாம்புடையசெய்பூரந்
திதுடங்கத்தக்கச்சீறும் திருவிளையாட்டைப்பாரும.

வசனம்.

அரிகரி இதென்னபொல்லாதகாலம் இந்தக்கருமானவனத்திலே இந்தச்சுடுகாணலிலேகாம்படுகிறதுக்கந்தாவிருக்குதுஅதுபோதாதென்று தேள்பாம்புகட்டெறும்பு அரணைபூரான்குப்பல்கும்பலாய்க்காலைவைக்க இடமில்லாமல்சீறிக்கொண்டுவருகிறதிருவிளையாடலைப்பாரும்மகாராசனே.

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

கண்களுங்கூசுகிந்தக் காட்டினிற்காடிசெந்நாய்
வெண்புலிகரிகள்மற்றும் விசித்ரமிருகக்கூட்டம்
புண்படவதைக்கவோடிப் புரண்டிட்டாவருகுதையா
கண்புடனென்னைப்பெற்ற நாதனேஎன்னசெய்வேன்.

வசனம்.

ஓகோஎனதுபிதாவே பார்க்கின்றதற்குக் கண்கள்கூசத்தக்கதாக இந்தஆரண்யத்திலேகாடிகள்புலிகள்செந்நாய்கள்நரிகள்விசித்ரவிசித்ரமான அகோரமிருகக்கூட்டங்கள் இரைச்சலிட்டுவருகின்றதே என்ன செய்வேன்என்னசெய்வேனையா.

அரிச்சந்திரன்-கண்ணி-இ-ம்-புன்னாகவராளி-அடதாளம்.

சிவசிவா அந்தவிஸ்வாமித்திரர்செய்கையுமிதுவோ-நான்
செய்ததீவினைபனுபவித்திடத்தெய்வமும்பொதுவோ
தவறில்லாமற்காசிப்பட்டணந்தன்னைச்சேரவோ இந்தச்
சங்கடம்வந்துமாட்டிக்கொள்வதுந்தர்மம்நேரமோ
சகதலத்தினிலென்னைப்போலொருபாவிதானுண்டோ-நான்
தர்மஞ்செய்யக்கர்மம்வருமோகதியைக்கைக்கொண்டோ
மகன்படுந்துயர்கண்டுதாயார்மனதுவாடவோ-அந்த
வருத்தங்கண்டுநானுங்கூடமனந்தளாடவோ
நாடுநகரம்பூமிவாழ்வும்நலமும்விட்டேனே-எந்தன்
நல்வினைப்பயனென்றுநினைத்துநான்புறப்பட்டேனே

தேடுமியானைசேனைசெல்வச்செருக்கும்வென்றேனே-முன்
செய்த தீவினையொழிந்ததென்றுஸ்திரமாய்நின்றேனே
போனதெல்லாம்போகட்டென்றுகடனைக்கொடுக்கவே-நடந்து
போகொட்டாதவிதபதிகிலேனிந்தவினையைத்தடுக்கவே
ஆனதெல்லாமாகட்டுமிதென்னவிளைந்தகாரணம்-ஐயோ
ஆருமோவிஸ்வாமித்திரர்க்குமனதுபூரணம்.
விஷதத்தின்மிகுத்தபாம்புகளிதோகடிக்கவருகுதே-இந்த
விரியங்கத்திரிப்பாம்பைக்கண்டாநெஞ்சமுருகுதே
நிஷேதமாகநினைக்கப்போகுமோரிஷிகள்செய்ததை-நெஞ்சில்
நினைத்திந்தச்சித்ரவதைகள்செய்யநினைப்பாரோஇதைச்
சுறுக்குசுறுக்கென்றெரியவிஷங்கள்கடிக்கநேருதே-இந்தச்
சூழ்வினைநினைக்கப்பிரமைகொண்டெந்தன்தேகஞ்சோருதே
பொறுக்குமோசந்த்ரமதிதன்தேகம்தெய்வமில்லையோ-என்
பூர்வபுண்யவசமேயீதொருவார்த்தைசொல்லையோ.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-நீலாம்புரி.

செங்குளவிதேளரணை செம்பூரட்டை
வங்கைதொடுபாம்புகளடித்திடவருந்தி
இங்கெனதுதேகமுங் கறுத்ததுதடித்தே
பங்கைபடுமித்துயரமோற்றவசபாயோ.

வசனம்.

அரிகரிஇந்தத்தேள்களுங்குளவிகளுங்கொட்டுகிறதினாலேயும்இந்தஅட்டைஅரணைசெம்பூரம்பாம்புகள்மேலும்மேலும்விழுந்துகடிக்கிறதினாலேயுந்தேகமெல்லாங் கறுத்துவிஷமேறித்தழும்பாச்சுதே இனியென்பிராணநாயகிசந்திரமதிபடுகிற அவஸ்தையையெப்படிச்சகிக்கலாகும் ஈஸ்வராஈஸ்வரா.

சந்திரமதி-தரு-கண்ணி-இ-ம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

பாவிதெய்வமேநாட்டைப்பறித்துக்காட்டினில்விட்டுப்
பதைக்கச்செய்தாயேயிது போதாதோ
ஆவிதடுமாறவெங்களருமைகுலைந்தலற
அலையவிட்டாயெங்கள்மேலே வாதேதோ
பிறந்துமுன்பரதவித்துப்பெண்சென்மம்நான்வாழ்வதிலும்
பேசாமலிறக்கச்செய்ய லாகாதோ
மறந்திருந்தாரோ ஐயோமாயவிஸ்வாமித்திரமுனி
வஞ்சனையெங்களைவிட்டுப் போகாதோ

பேர்தெரியாப்பாம்புக்கூட்டம்பிடிக்கவுந்தாத்துணைபோ
பேதைநானென்னசெய்வேன் சதிநானே
பார்மிசைப்பெருகவெழுந்தசெங்குளவிபூரமட்டை
யற்றியெரியக்கடிக்க விதிதானே
மன்னன்படுந்துயரமும்மைந்தன்படுந்துயரமும்
மந்திரிபடுந்துயரமுந் தீராதோ
என்னசெய்வேன்பார்த்திருந்துமென்னுடம்புநோகுதையோ
இந்தவிதிவஞ்சகர்க்கு வாராதோ

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

என்னையாள்மன்னவுந்த வெழிற்மேனிவருந்துமுன்னே
என்னுயிரகன்றிடாதோ வென்செய்வேனையோவிந்தப்
பன்னியவிஷத்தின்பூச்சி பலபலவடிவாய்வந்து
மின்னுமார்படைக்கத்தேகம் வெதும்பவேகடிக்குதையோ.

வசனம்.

ஆ எனதுபிராணநாட்சகாநேவீர்படுகிறவருத்தத்தைப்பார்க்கிறத்துக்குமுன்னமேஅடியாளுடையபிராணன்போய்விடலாகாதாஇந்தசெங்குளவிசருங்குளவிபாம்புஅட்டைஅரணைஇதுகள்கடிக்கிறதினாலேமார்பிலடைக்கிறதுதேகமுங்கறுத்துத் தழும்பேறுகின்றது பிராணனும்போகவில்லையேஎன்னசெய்வேன் என்னசெய்வேன்பிராணநாயகா.

தேவதாசன் விருத்தம்-இ-ம்-முகாரி.

என்னநான்செய்வேனென்னை யீன்றதாய்தந்தைபாரோர்
இன்னல்சேர்வனத்திலிந்த விடர்படக்காண்பதுண்டோ
முன்னமேபிரமனிந்த முறையறிந்தெழுதிவிட்டான்
தன்மையில்லாதபாவித் தெய்வமுஞ்சதிக்குள்ளாமோ.

வசனம்.

ஐயையோஎன்னைப்பெற்றதாய்தந்தைபர்களிந்த அந்லானஆரண்யத்திலேயவஸ்தைபடுகிறதை நான்பிள்ளைபிறந்து கண்ணினாலேபார்த்தப்பாதவிக்கும்படியாச்சுதேபிர்மாவுக்குத்தான்முன்னமேதெரிந்துஇப்படி யெழுதிவிட்டாலும் பாபிஷ்டி தெய்வமுஞ் சதிசெய்ய லாகுமா அரிகரி.

சத்தியகீர்த்தி விருத்தம்-இ-ம்-வராளி.

ஒருமிக்கவுயிர்போனாலு மூறுதியாம்புண்யமுண்டு
வருமுக்ரபாம்புதேளின் மருந்தொன்றுமறிகிலேனே
உருகிச்சிந்தையும்வேறாகி யுடம்பெலாம்விஷத்தால்வெம்பி
கருகிச்செம்புண்ணுச்சென்ன காரணமுயிர்போகாதே.

வசனம்.

எங்களாண்டவராகிய இராசசக்ரேஸ்வரனும் அவர்பத்தினியாகிய சந்திரமதியம்மனும் படுகிறதுக்கத்திற் கழுவேனோ இந்தப்பாழும்பாம்பு தேள் முதலாகியதுகள்கடித்து விஷமேறித்தேகமெல்லாம் கறுத்துத்தழும்பேறின தற்கழுவேனோவிஷத்துக்கு மருந்துமறியேனே பிராணனும்போகவில்லையே இதைப்பார்க்கிலும் பிராணனைவிட்டுவிட்டாலும் புண்யமாகுமே அரிகரி.

நட்சத்திரத்தரகன் - விருத்தம் - இம் - மோகனம்.

விண்ணாணம்பேசியென்னை மிளுக்காகவழைத்துவந்து
தண்ணீரில்லாதகாட்டிற் றவிக்கச்செய்ததுமல்லாமற்
கண்ணறாத்தேள்பாம்பட்டை கருங்குளவிகள்செம்பூரம்
புண்ணாகக்கடிக்கச்செய்தாயுன்பொன்வேண்டாம்போறேனப்பா

வசனம்.

ஓய் ஓய் அரிச்சந்திரமகாராசனே நம்மைப்பசப்பியிந்தக்காட்டுக்குள்ளே யழைத்துவந்து சுட்டமணலிலே புரட்டியெடுத்தாய் அப்படியும் நான் சளியவில்லையென்று பாம்புதேளட்டை அறணைகருங்குளவி செந்நாளி நண்டுதூக்காய் வண்டு பூரம் செய்யான்சிற்றெறும்பு கட்டெறும்பு முதலாகிய துஷ்டசெந்துக்களை யேவினாய் அதுகள்கொட்டுறதுகொட்டுறது காணும் ஓய்கடிக்கிறதுகாணும் பிடுங்கிறதுகாணும் பிடுங்கிறதுகாணும் ஓய்கவ்வுறதுகாணும் கவ்வுறதுகாணும்பிராணன்போகிறதுகாணும் போகிறதுகாணும் ஓய் நம்மைமாத்திரம்விட்டுவிட்டால் எந்தஅறுதலைப்பொட்டிமகன் உன்னைப்பணங்கேட்டான் இதோபோய்விடுகிறேன் காணும்.

இராசன் வசனம்.

வஞ்சனையா சுவாமி நீர்வருந்தப்படவும் நாங்கள்சுகத்தையடைகிறோமா இதோசமீபத்தில் கோமதியாறிருக்கின்றது அங்கே போனாலாயாசந்தீர்த்துக்கொள்ளலாகுஞ் சுவாமி.

தரகன் வசனம்.

ஓய் ஓய் அரிச்சந்திரமகாராசனே தேகஞ்சொரிக்கிறதுகாணும் உடம்

மிடநினைவு ஆற்றங்கரைக்குப்போய்ச்சேருகிறத்துக்குள்ளேநேக்குப் பிராணன்போகப்போகிறது ஒருசனிவிட்டசென்று ஸ்நானஞ்செய்துபோட்டு அக்கரைபோகலாமென்றிருக்கிறீரோ இதுவேநல்லயோசனை நல்லயோசனை.

இராசன் வசனம்.

தேவரீருடைய பிராணன்போகிறபோது எங்கள் பிராணனையுங்கூட விட்டுவிடுவோமேயல்லது உயிருடனேயிருப்போமா சுவாமி மெள்ளநடந்துவாரும்.

தரகன்- வசனம்.

ஓய் ஓய் அரிச்சந்திரமகாராசனே யிந்தசென்மத்திலேயும்முடன்கூடத்தரகனும் வந்தநற்குக்காட்டிலேயிழுத்துவந்து சுட்டமணலிலே புரட்டிப் பாம்பு தேள் அட்டை அறணையைக்கடிக்கவிட்டு இவ்வளவுபரிவட்டனைகள் நடத்தினீரேயினிசெத்தும் உம்முடன் கூடப்பணத்துக்குவரவா நானுஞ்சாகவேண்டாம்நீருஞ்சாகவேண்டாம் பொன்னும்வேண்டாம் நானும்போய்விடுகிறேன்காணும்.

மந்திரி-வசனம்.

மாணவேநனைப்படுகிறபோது கூக்கிரார்நக்கு ஆஸ்திகேட்கிறுப்போலே காணுது கோபம்பண்ணும் கொஞ்சதூரம் நடந்துவாருஞ்சுவாமி.

தரகன்-வசனம்.

அடாய் அடாய் அந்தப்பசப்பனுக்குவசபபட்டமந்திரியல்லவா நீயிங்கேஉங்களுடனே யதிகமாய்ப்பேசினால் ஒருவேளை அப்படியிப்படிசெய்துபோட்டால சாட்சியார் வந்துதொலைககிறேன்.

அரிச்சந்திரன் விருத்தம்-இ-ம் பந்துவராளி.

கடன்வாங்கத்தரகனென்றே காவலாய்த்தொடர்ந்துவந்த
கொடுமையில்லாதநீதா கோமதியாறிதையா
அடவியிற்பட்டதுன்ப மாயாசமெல்லாந்தீரத்
திடமிடன்ஸ்நானஞ்செய்து தாகமுந்தீரலாமே.

வசனம்.

கேளுஞ்சுவாமி நட்சத்திரத்தரகரேநாமிந்த அத்வானவாரண்யத்திலேபட்டவாதனைசங்கடந்தீரஇதோ இந்தக்கோமதியாற்றிலே ஸ்நானஞ்செய்துஆயாசந்தீர்த்துக் கொள்ளலாஞ்சுவாமி.

தாகன்-வசனம்.

மகாராசனுயிருக்கக்கடவாய் மகாராசனுயிருக்கக்கடவாய் நம்முடையபிராணஅவஸ்தைதீர்த்துக்கொண்டு உங்கள்பிராணனுக்கு உலை வைக்கிறேன்.

இராசன்-வசனம்.

அப்படியே செய்யலாம்சுவாமி முன்னே ஸ்நானஞ்செய்துதாகந்தீர்த்துக்கொள்ளும் சுவாமி.

தாகன்-வசனம்.

சட்டவட்டமாய் ஸ்நானஞ்செய்து தாகந்தீர்த்துக்கொண்டேன் ஓய் அரிச்சந்திரமகாராசனேபொய்சொன்னாலும் பொருந்தச் சொல்லவேணும்நீச்சுகிலையில்லாதபொய்சொன்னீரென்னகாணும்.

இராசன்-வசனம்.

அதுவேதுசுவாமி அடியேன்வாக்கினலொருபோதும் பொய்வரமாட்டாது.

தாகன்-வசனம்.

ஆம்காணும் ஓய்ராசனே இப்போதுஅரைநாழிக்குமுன்னேநீங்களெல்லாஞ்சாகிறதாகக் கட்டிக்கொண்டழுதீர்களே நீர்செத்தீராஉம்மிடபெண்சாதிபிள்ளைசெத்தார்களா உம்மிடமந்திரிகூடச்செத்தானுவதுகாணும்வெறுமைபொய்வார்த்தை.

இராசன்-வசனம்.

உம்மைக்கடித்த தேளும் பாம்புந்தான் எங்களையுங்கடித்ததுநீர்பிராணன் போகுதென்று பட்டபாடுதான் நாங்களும்பட்டோம் நீர்செத்தீராசுவாமி நாங்கள் சாக.

மந்திரி-வசனம்.

நாம்சாகப்போகிறதில்லையென்று நமக்குத்தானன்றாய்த்தெரியுமே உங்களைப்போலே நாமேதாகிலுமழுதோமா.

இராசன்-வசனம்.

பிராணன்போகவில்லை ரூபமாறிப்போச்சுது இதுவெல்லாம் ஈஸ்வரரெத்தனம் நீர்பட்ட ஆயாசந்தீரச் சற்றுநேரம் பேசாமலிரும் சுவாமி.

சத்தியகீர்த்தி-விருத்தம்- இ-ம்-முகாரி.

ஏகவெண்குடைக்கீழ்நின்ற இசைபெறுமுலகையாண்ட
போகத்தின்மிகுந்தமன்னு பொன்மலர்சரணம்போற்றி
தேகத்தைக்காத்தல்லோயின் திரவியந்தேடவேணும்
ஆகையாற்கிழங்குகாய்க ளருந்தவேகொண்டுவந்தேன்.

வசனம்.

கேளும் இராசசக்ரேஸ்வரா திரேகந்தைக்காப்பாற்றிக்கொண்டல்லவோதிரவியஞ்சம்பாதிக்கவேணும் ஆகையால் காய்இலைகிழங்குபழங்கள்கொண்டுவந்தேன்பொசிக்க வெழுந்திரும் சுவாமி.

இராசன்-விருத்தம்-இ-ம்-சௌராஷ்டிகம்.

பெருந்தவப்பலன்போல்வந்த பிரியமாந்தாரகரேநீர்
வருந்திவந்தென்னோடிந்த வனத்தினிற்றுன்பப்பட்டீர்
அருந்தவென்மந்திரிதந்த அருங்கனிகிழங்குகாய்கள்
இருந்ததிற்பொறுக்கிவைத்தே னிதைப்புசித்தருளும்சுவாமி.

வசனம்.

கேளும் நட்சத்திரத்தாரகரே யென்னுடனேகூடவந்து யெனக்காக இந்தக்காட்டிலே மகாவருத்தப்பட்டீரே அதையெல்லாம் பொறுத்து என்மந்திரிகொண்டுவந்த கந்தமூலபலாதிகளில் நல்லகாய்கிழங்கு பழங்களையுமக்கென்று பொறுக்கியெடுத்து வைத்தேன் இதைப்புசிக்க எழுந்திருஞ்சுவாமி.

தாரகன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

பிறந்தநாள்முதலாயிந்தப் பிரியமாங்கிழங்குகாய்கள்
மறந்துபோகாமற்றின்று வயிற்றைநான்வளர்த்ததில்லை
திறம்படவுன்பின்வந்து தின்பேனென்றறிந்திருந்தால்
சிறந்தபாற்றயிர்நெய்சோறு கட்டோடேசாப்பிட்டேனே.

வசனம்.

ஓய்,ஓய், அரிச்சந்திர மகாராசனே நீர்வெகுநாளாய்ப் பிழைத்துக்கெட்டவர்தான் மோசமில்லை நான்பிறந்தநாள்முதல் புன்னைக்காய் புளியங்காய் காட்டிலேகிடக்கிறகள்ளிருக்கிலை காய்கிழங்கு இதுகளைச்சாப்பிட்டு வயிறுவளர்த்ததில்லைகாணும் உன்பின்னாலேவட்டாப்போல் இந்தக்காயிலைகிழங்கு தின்பேனென்றறிந்திருந்தால் சாதம் நெய் பால் தயிர் சறியமுதுகள் இதுகளெல்லா முன்னமே தள்ளிட்டுப்போடுவேன்காணும்.

இராசன்-விருத்தம் இ-ம்-தன்னியாசி.

தேவரீரறியாதுண்டோ தேவிபுமகனும்யானும்
பாவிகள்போலேயன்னம் பாலுடன்பட்சித்தோமோ
தாவியேசோறுதேடச் சமீபத்திலூர்தானுண்டோ
ஆவலாயிதைப்புசிப்பீ ரருந்துயர்படுகின்றோமே.

வசனம்.

சுவாமி நட்சத்திரத்தாகரே எங்களிடத்திலிருக்கின்ற பாக்கியம் உம்மையல்லாமல் வேறொன்றுண்டோஉம்மைவஞ்சனைசெய்து நாங்களேதாகிலும் பாலுஞ்சாதமுண்டோமா உமக்குமாத்திரம் சம்பாதித்துக்கொடுப்போமென்றாலும் சமீபத்திலூரிருக்கின்றதா கோபத்தைப்பொறுத்து எங்களாபத்தைப்பார்த்திந்த வேளையிதுவே யமுதமென்று போசிக்கவேணும் சுவாமி,

தாகன்- வசனம்.

ஓய், ஓய், அரிச்சந்திர மகாராசனேவாயைமூடுங்காணும் எனக்குச் சோறுபோடவுனக்குக் கெதியில்லாவிட்டால் இல்லையென்று சொல்லவேணுமேயல்லாமல் உன்னுடையவருத்தத்தைச் சொல்லிக்கொண்டதனாலே என்பசிதீருமா இதையெடுத்தெறியுங்காணும் என்னைவிடுங்காணும் விடும்,

சந்திரமதி-விருத்தம்-இம்-கண்டா.

பெண்ணுடனாணுடன்நீர் பிறந்ததுமிலையோஅய்யா
மன்முழுதாண்டமன்னன் வருந்தினலிரங்காதுண்டோ
கண்ணினற்கண்டாயெங்கள் காட்சியாங்கோலந்தன்னை
நண்புடன்பொறுத்தேயிதை நல்லமுதென்றுகொள்வீர்.

வசனம்.

ஆ நட்சத்திரத்தாகரே இந்தவுலகத்தையெல்லாமரசாண்டமகாராசனவர்இப்படிவணங்கியமுதால்உம்முடையமனதென்னசல்லாநீர்ஆணுடன் பெண்ணுடன் பிறந்ததில்லையா நாங்கள்படுகிற ஆபத்தெல்லாங்கண்ணினலே பார்க்கிறீரேயிந்தவேளையிதுவே யமுதமென்றுபொசிக்கவேணும் சுவாமி.

தாகன்- வசனம்.

ஓய், ஓய், அரிச்சந்திரமகாராசனே உன்னைப்பார்க்கிலும்பசப்பிகாணும்உன்னுடைய ஆம்புடையாள் இவளிபிள்ளைவாயைத் திறந்தாலெப்படியிருக்குமோதெரியாது நடக்கட்டும் நடக்கட்டும் இதுவுமென்னுடைய கர்மவசந்தான்,

இராசன்-வசனம்.

சுவாமி நட்சத்திரத்தாகரே சற்றேசயனித்துக்கொள்ளும்நாங்களும் சற்றே சயனித்துக்கொள்ளுகிறோம் சுவாமி.

தாகன்-வசனம்.

ஆம் ஆம் நேக்குநித்திரை வாராது நீரும்உம்மிட ஆம்புடையாளும் சற்றே தாலாட்டுங்கள் நானித்திரைபண்ணட்டும்.

இராசன்-வசனம்.

அப்படியேதாலாட்டுகிறேம்வித்திணைபண்ணும்சுவாமி.

தரகன்-வசனம்.

ஓய், ஓய், அரிச்சந்திரமகாராசனே நீர் கால்மாட்டிலேயும் உம்முடையஆம்புடையாள் தலைமாட்டிலேயுமிருந்து தாலாட்டவேணும்பிள்ளாய்.

தாலாட்டுகிற-தரு-இ-ம-நீலாம்புரி-ஆதிதாளம்.

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ

ஆராகிலும்பார்ப்பார்க் காசைசொல்லலாகாதே (ஆராரோ)
தானமென்றுகடனாகித் தரகனென்றுபின்கூட்டத்
தீனதயாளமில்லாத் தீர்க்கமனத்தோனே (ஆராரோ)
பாம்பரணைதேள்விஷங்கள் பற்றிக்கடித்ததிறற்
றேம்பியழும்போதுமுந்தன் சித்தமிரங்காயே (ஆராரோ)
பட்டபாடெல்லாம் பதறமறப்பார்த்திருந்தும்
இஷ்டமுடன்பாலுஞ்சோறுமெனக்களிப்பாயென்பவனே (ஆ(
மனையாளழுதாலும் மைந்தனழுதாலும்
வினையமேபேசி வெறுப்பவனேக்கண்வளராய். (ஆராரோ)

தரகன்-வசனம்.

ஓய், ஓய், ஏன்காணும் வெறுமைசாபித்துக்கொட்டுறது.

இராசன்-வசனம்.

இல்லை சுவாமி தேவரீர் குணத்தைப் புகழுகிறேம்.

தரகன்-வசனம்.

ஓய், ஓய், அரிச்சந்திர மகாராசனே எதுகாணும் சோக்கின்னம் இராசபட்டம்பேர்பெரிதாயிருக்கிறத்தினாலே அழைக்கிறது நேக்கு வருத்தமாயிருக்கிறதுகாணும்.

இராசன்-வசனம்.

அப்படிவேண்டாம்சுவாமி அரிச்சந்திரா என்றழையும்.

தரகன்-வசனம். அதுவுஞ்சொல்லமாட்டேன்.

இராசன்-வசனம்.

இல்லாவிட்டால் அரிச்சாவென்று கூப்பிடுஞ்சுவாமி.

தரகன்-வசனம்-அதுவுஞ்சொல்லமாட்டேன்.

இராசன்-வசனம். அப்பால் தேவரீர் சித்தம்சுவாமி.

தாகன்-வசனம்.

அடாய் அடாய் சந்தா சந்தாவென்று கூப்பிடுவேன்.

இராசன்-வசனம்.

சுவாமி சுவாமி மகாபாக்கியம் மகாபாக்கியம்.

தாகன்-வசனம்.

எதுகாணும் நோக்கப்படி மழைவந்ததே மழைவந்ததே இடியிடிக்கிறதே இடியிடிக்கிறதே நேக்குப்பயமாயிருக்கிறதே.

இராசன்-வசனம்.

பயப்படவேண்டாம் பயப்படவேண்டாம் உமக்கொருகுறைவும்வரமாட்டாது நாங்கள் நனைந்தால்நீரும்நனையும்சுவாமி.

தாகன்-வசனம்.

பல்லேக்கிட்டறதே குளிர்நடுக்கிறதே எப்படிகாணும் எப்படிகாணும்.

இராசன்-வசனம்.

இந்த ஆறு பெருகிக்கொள்ளுமுன்னே அக்கரைபோய் விடுவோம் சுவாமி.

தாகன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

வரச்சொன்னவிடத்துக்செல்லாம்வாவுநாளோபொன்னைத்
தரச்சொன்னவிடத்தில்நீயே தந்துபின்னடக்கவேணும்
நுரைசெறியாற்றில்மெள்ள நூழ்ந்தவோவழைக்கிறாய்நீ
துரைச்சிங்கமநீயேயுன்னைச் சூரனென்றறிகிலேனே.

வசனம்.

ஆம்காணும் ஆம் நீவைத்த ஆளோநான் நீவரச்சொன்னவிடத்துக்கெல்லாம் வரவும்போகவும்இப்போபெருகிவருகிற ஆற்றிலேயென்னை நூழ்ந்திப்போடப்பார்க்கிறயோசபாசுகாணும்துரைச்சிங்கமேயப்படிப்பட்ட சூதனென்றறியேன்காணும்நான் தரச்சொன்னபோதுபொன்னைத்தரவேணுமேயல்லாமல் நானுன்பின்னே வரவேண்டியதில்லேபோம்.

இராசன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

நீர்மனக்கொதிப்பரயென்னை நிந்தித்தாலெனக்குவேறே
ஆர்துணையென்பங்குக்கே யானதோர்துணையுநீரே
பார்மிசையென்னைப்போலும் பாவியார்பெறுத்திவ்வேளை
பேர்பெறுமாற்றைத்தாண்டப் பிரியமாய்வருகுவீரே.

வசனம்.

உம்முடைய கோபத்தினாலென்னை நிந்தித்தாலெனக்குவேறேகதியுடையார் என்பங்குக்கேதெய்வம்போற்றுணைப்பட்டீரேமுழுதும இரட்

சிக்கத்தக்கநாகிக் கிருபைசெய்துவாரும் இந்தஆற்றைத் தாண்டிப்
போய் விடுவோம் சுவாமி.

வசனம்.

ஓய், ஓய், இராசாவே அது அதிவேகமாய்மகாவெள்ளம் வாரதே,
நீங்களெல்லோரும் ஆற்றிலேபோய்விட்டாலும்என்னைமாத்திரங்க
ள்மாடுதலைமாடாய் தூக்கிக்கொண்டுபோய் அக்கரை சேர்த்துவிடு
கள் மகாபுண்ணியம்மகாபுண்ணியம் மகாராசனே.

இராசன்-வசனம்.

அப்படியேயெடுத்துக்கொண்டு ஒருசிந்தனையுமில்லாமல் அக்க
ரைசேர்க்கின்றோம் பயப்படாமல் வாரும்சுவாமி.

தரகன்-வசனம்.

மகாராசனே கரைவந்துசேர்ந்தேனுநீங்களார்போய்விட்டாலு
கரையில்வந்துபார்த்துக்கொள்ளுவோம் நான்மாத்திரங்கரைவந்துசே
ர்ந்தனு பாரும் பாரும்.

இராசன்-வசனம்.

நாங்களொருவரும் ஆற்றிலே போகவில்லைதேவரீரையுங்கரை
கொண்டுவந்து சேர்த்தோம்சுவாமி.

தரகன்-வசனம்.

அப்படியா அப்படியா மகாசந்தோஷம் மகாசந்தோஷம்

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

மாதவவிஸ்வாமித்திரன் மாயமாமாற்றைத்தாண்டி
சோதுழுதரகனோடுங் கூடவக்கரையைச்சேர்ந்தார்
காதகப்பசாசுஞ்சூழக்கறுவிக்கொக்கரித்துச்சீறி
வாதுசெய்தாவென்றோங்கி வந்ததுபூதந்தானே.

வசனம்.

அதேதெப்படியென்றால் கோமதியென்கிறஆற்றைத்தாண்
அரிச்சந்திரமகாராசன் தரகனோடுங்கூட அக்கரையேறின வுடனே
விஸ்வாமித்திரன்மாய்கையினாலே யனேகம்பசாசுக் கூட்டங்களு
னேகர்ச்சித்துப் பூதம்வருகிறவிதங்காண்க.

பூதம்வருகிற-தரு-இ-ம்-தேசிகதோடி-ரூபகதாளம்.

பூதம்வந்துதே - மகாபெரும் - பூதம்வந்துதே.

பாதகவிஸ்வாமித்திரன்செய்யபசாரத்தாலந்தபசா[illegible]
பதறப்பதறக்கதறப்பட்டதுசி தறச்சிதறச்சிதறத்[illegible]

ஒலியெங்கெழுந்திட-ராசகான்வந்து கூவ-மற்றொருநபராக
உருவபிசாசும்பியூவென்றுபின்னே லேவ
ஆவென்றுவாயைத்திறந்தோரபசாசு தாவ-பின்னொருபசாசு
அதனையுமுகளிக்கோவென்றிரைச்ச லேவ
யாவராகிலுமெதிர்ந்திறகக் கூடுமோ
அகப்பட்டாற்கொல்லாமல்தருமத்தைநாடுமோ
அறையக்கதவிக்கலுவிப்பிடி யெனக்
குழுகிப்பயலைத்தலையைக்கடி யெனப் (பூதப்)

காட்டிலுள்ளயானைகள் கண்டாங்கி-மற்றுமங்குள்ள
கடினமிருகங்களகலக்குமே கண்டேங்கி
நாட்டுமனிதரால்போகுமேபசி நீங்கி-ஆனாலும்வெகு
நாளாயப்பசிக்குதுநான்விடுவேனோபின்வாங்கி
நீட்டமாமிந்தப்பல்லுக்குப் போதாது
நேர்ந்ததைவிட்டிடநினைத்திட லாகாது
நிணமுங்குடலுந்தலையும் பொடிபட
நிறையுமுதிரம்பெருகியின் றெதிர்பட (பூதம்)

ஆரபாரத்தினால்தலைகளுங் குலுங்கக்-கைகளைநீட்டி
அட்டகாசமிட்டதிலண்டங் கலங்கக்
கோரமானவுக்ரதந்தங்க ளிலங்கக்-கண்களிலுங்
கோபத்திலெழுங்கனலாலெங்கு மலங்கச்
சாருமேகக்கர்ச்சனை யென்னத்
தழைத்துவளர்ந்து நிறதெறன்னத்
தரையுங்கடலுந்திசையும் விடவிட
அரையுங்காமுஞ்சிரமும் பொடிபட (பூதம்)

தூதகன்-வசனம்.

ஓய்ஓய் அரிச்சந்திரமகாராசனே நான்பிராமணன் நம்மைப்பூதம் கொல்லவந்தது நம்மையிரட்சிக்கவேணும கைகால்நடுக்கிறதே பயமாயிருக்கிறதே ஓய்என்னைத்தானே பார்க்கிறதுகாணும் நீகாராசனே.

இராசன்-வசனம்.

பயப்படவேண்டாம் பயப்படவேண்டாம் சுவாமியெங்களுக்கு ந டுவேயிரும்.

பூதம்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

ஆரடாமனிதாவந்த வந்தணன்நீங்களாகப்
பேர்பெறுமுங்கள்நாலு பேரையுங்கொல்லவேணும்
காரடஞ்செய்வதாலுங் கதறிநின்றழுவதாலுந்
தீருமோபசிமயனைக்குத் தின்னுமல்விடுகிலேனே.

வசனம்.

ஆரடா அடாமனிதா நானொருபெரும்பூதம் என்பின்னாலேநிற்கின்றதேவபசாசுக்கூட்டங்கள் அந்தப்பிராமணன் நீங்கலாகஉங்கள்நாலுபேரையுங்கொன்றுபசிதீரவேணும் நீங்கள்பண்ணுகிறகாரடிவித்தையினாலேயும் அழுகிறதினாலேயும் விட்டுவிடுவேனோ வாடாவா.

இராசன்-விருத்தம்-இ-ம்-ரேகுப்தி.

சாலவேபுண்ணியந்தான் தாபதமறையோன்றன்னைக்
கோலமாய்வதைசெய்யாமற் குறித்திட்டாய்நாலுபேரை
ஞாலமேற்பிறந்தபாண்டம் ஞாலத்திலுடைவதலலாற்
சீலமாய்நிற்பதுண்டோ சீக்கிரமபுசித்தால்நன்றே.

வசனம்.

பூதமென்றுன்னைச்சொல்லலாகாது இந்தப்பிராமணனைமாத்திரம் உயிருடனேவிட்டுஎங்கள்நாலுபேரையுங் கொல்லநினைத்ததினாலேயுன்னைப்புண்ணியபுருஷனென்று சொல்லவேணும் மண்ணிலே பிறந்தபாண்டம மண்ணிலேயுடையவேணுமாகையால் எங்கள் நாலுபேரையும் சீக்கிரமாய்ப்புசித்துவிடும் பூதமே.

தாகன்-வசனம்.

ஓய்ஓய் அரிச்சந்திரமகாராசனே உங்களைக்கொன்றபின்பு என்னையுங்கொல்லுமோவென்னமோதெரியவாது உங்களைவிழுங்கிப்போட்டபிற்பாடு என்னைமாத்திரங்கொல்லாமல் விட்டுவிடும்படியாக அதனிடத்தில்சத்தியஞ்செய்துகொள்ளும் மகாராசனே.

இராசன்-வசனம்.

அப்படிக்கெங்கள்பிராணன்போனாலும் உம்மைக்கொல்லாமல்விட்டுவிடும்படிபத்திரப்படுத்திக்கொள்ளுகிறோம்பயப்படாதேயுஞ்சுவாமி

பூதம்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

நானின்றுசொல்வேன்கேளும் நாலுபேர்நீங்கள்நிற்க
[illegible]ற்கொழுத்தபார்ப்பா னிவனைத்தந்திட்டாற்போதும்

னுடன்கொழுத்தூன்று யுறுதியாயிருக்குந்தேகம்
தானிதுபசியடக்குந் தப்பிப்போய்விடுங்கள்நீங்கள.

வசனம்.

ஓய்மனிதரேயுங்களைப்பார்த்தால் வீங்கலுங்தூங்கலுமா யிருக்கின்
ீர்கள் காட்டுப்பன்றியைப்போல் அந்தப் பார்ப்பான்கொழுத்துப் பரு
புகெய்யுந்தின்று தேகமுறுதியாய்இருக்கின்றான் அவனை தின்றாலே
ாபசிதீரும் அவனைக்கொடுத்துவிட்டு நீங்கள் ஓடிப்போய் விடுங்கள்.

## தாகன்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

இதுநல்லதருணம்புண்ய மெவர்கள்தானுன்னைப்போலும்
ததியினிலுபகாரஞ்செய் சத்யமன்னவர்களுண்டோ
விதவிதமாகவெந்தன் மெய்யெலாம்நடுங்கக்கைகால்
பதறுதென்செய்வேன்காத்தால் பரிச்சிதம்பொன்கேளேனே.

வசனம்.

ஓய்ஓய்அரிச்சந்திரமகாராசனே நேக்காலுங்கையுங்காலும் விடவி
ட்ன்றுஉதறுகின்றதுபிராணன்நிற்கிறதா இருக்கவில்லை என்னைக்காப்
ாற்றிட்சிக்கிறது உமக்குமகாசுகிர்தம் இந்தவேளை பூதத்தின்கையிற்
ாட்டிக்கொடாமற்காப்பாற்றினால் ஆணைப்படிக்குஉமமைப்பொன்கே
ளன் நீர்காப்பாற்றுவீரென்று நேக்குத்தெரியும் உம்மைப்போல்புண
ியபுருஷனிவ்வுலகத்திலுண்டோமகாராசனே.

## இராசன்-வசனம்.

எங்கள்பிராணன்போனாலும் உம்முடையபிராணனுக்குப் பயமில்
ல எங்கள்மத்தியிலிருஞ்சுவாமி.

## தாகன்-வசனம்.

ஆனாலென்னை யழுத்திப்பிடியுங்கள் உம்முடையஆம்புடையானை
ஞ்சறநேபிடிக்கச்சொல்லும்பத்திரமாய்ப்பிடியுங்கள்மகாராசனே.

## இராசன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

சத்தியமாய்ச்சொல்வேன்கேளாய் தகைபெறுபூதமேயென்
சக்கியத்துக்கிடாவராமற் றரும்வரமொன்றுண்டையா
சகதெனுமறையோன்றன்னைத் தப்பவைத்தெனன்றேகம்
ததிவீண்போகொட்டாமற் சாப்பிடத்துணிகுவாயே.

வசனம்.

கேளாய்மகாசத்தியமுள்ளபூதமே யெனக்கொருவரந்தரவேணும்

ஏன்சத்தியுத்துக்கொருகுறைவும்வராமல் இந்தப்பிராமணனைத் த
வைத்துஙங்கள்தேகம்வீண்போகாமல் பட்டணை பண்ணிவிடும்பூத

பூதம்-வசனம். ஆ அவனைவிடமாட்டோர்களா.

இராசன்-வசனம்.

நாங்கள் உமக்கிரையாகிறதேயல்லாமல் இந்தப்பிராமணனை வ
மாட்டோம்பூதமே.

இராசன்-வசனம்.

சுவாமிநட்சத்திரத்தரகரே பொழுதும்விடிந்ததுபூதமும்மறைந்
போய்விட்டதுசுவாமி.

தரகன்-வசனம்.

நன்றாய்ப்பார்த்துச்சொல்லு நன்றாய்ப்பார்த்துச்சொல்லும்
மாயிருக்கிறதே பயமாயிருக்கிறது மகாராசனே.

தாகன்-வசனம். அதோநிற்கிறதேபூதம்.

இராசன்-வசனம்.

அதுபூதமல்லசுவாமிஅடியேனிடபெண்சாதியல்லவா.

தாகன்-வசனம். இதோநிற்கிறதேபெரும்பூதம்.

இராசன்-வசனம்.

அடியேனிடமந்திரிசத்தியகீர்த்தியல்லவாசுவாமி.

தாகன்-வசனம். அதோநிற்கிறதேபக்கத்தில் குட்டிப்பூதம்.

இராசன்-வசனம்.

அடியேனிடகுழந்தைதேவதாசன்சுவாமி.

தாகன்-வசனம். ஓய்ஓப்தூரத்திலேநில்லுங்காணும்நீரார்.

இராசன்வசனம்.

சுவாமிசந்தனென்றுபேர்வைத்திரே அந்த அரிச்சந்திரனல்ல

தாகண-வசனம்.

ஆம்ஆம்நீக்குத்தெரியும் நம்மிடமந்திரசக்தியினாலே யல்லவா
மறைந்துவிட்டது பூ நம்மம்மிடபேரைச்சொன்னால் பேயேது பசாசே
து பூதமேதுகாணும் இனிமேல் நம்மிடரொக்கத்தைதக்கட்டிப் போட்
அப்புறமடியெடுத்துவையும்பிள்ளாய்.

இராசன்-வசனம்.

இதோ இந்தக்காடெல்லாம் தாண்டினவுடனே காசிப்பட்டணஞ் சேர்ந்து உம்முடைய பொன்னையெல்லாந்தந்து விடுகிறேன் சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம-மத்தியமாவதி.

கொல்லேவனென்றெதிர்த்தபூதங் குறித்தரிச்சந்திரன்றன்னை
வெல்வது அரிதென்றெண்ணி விலங்கியேபோனபின்பு
வல்வினைத்தரகன்செய்யும வருத்தத்துக்குள்ளாயங்கே
செல்வழிதனிலேகஞ்சஞ் செய்யுங்கோரிகள்வந்தாரே.

வசனம்.

இப்படிபூதமானது மறைந்துபோனவுடனே நட்சத்திரதாரகன் கையில்உபத்திரவப்பட்டுக்கொண்டுபோகும்போது விஸ்வாமித்திரரிஷி வருகிறவிதங்காண்க.

விஸ்வாமித்திரர்வருகிற-தரு-இ-ம-மத்தியமாவதி-தாளம்-ரூபகம்.

வினைவழியறியாமற்போனேனே-அருந்தவநதினில்
மிகுத்தவிஸ்வாமித்திரனானே

எனையொருவர்கள்செயிப்பதுண்டோ
எதிர்த்தான்வசிட்டனிலெனிலேதுண்டோ
இருக்கட்டும்பார்ப்போந்தெய்வமுமிவ
னெண்ணமேமுடியப்பண்ணுமோகொடிய (வினை)

அந்தரத்திலேசொர்க்கமுண்டாக்கினேனேவசிட்டபிள்ளைக
ளவிந்துசாம்பலாகப்போக்கினேனே
அந்தமூவருங்கண்டாற்கலங்குமற்றதேவரும்பயந்தோடி
யெதிரில்லாரேயிந்தப்பாதகனாலேயென்மனம்
ஏங்குதோயிவர்செய்தந்திரமிக்குடனே
விட்டேனோதப்புமோகுறியென்னமாய்ப்
போகுமோஎளிதமாகுமோஇதனால்
மனஞ்சிதறாமலேயிருந்தேமிகவருந்தாமலே
யெண்ணிக்கொடிமுடிந்தெறிகுவேன்
பண்ணக்கஷ்டமுமறிகுவேன் (வினை)

இராசன்-விருத்தம்-இ-ம-ஆனந்தபைரவி.

விலங்கருந்தவத்தின்விஸ்வாமித்திரமாமுனியேபோற்றி
மலர்ப்பதம்வருந்தவேண்டி வந்தகாரணமேதையா

அலைச்சலுண்டோநீராளு மயோத்தியிலுள்ளோராலே
கலக்கமுற்றிடுதேனெஞ்சங் கருணையாய்ச்சொல்லுஞ்சுவாமி.

வசனம்.

சரணஞ்சரணம்சுவாமி விஸ்வாமித்திரமகாரிஷியேதேவரீர் திரு
டிகள்வருந்த இத்தனைவேகமாய் அடியேனிடத்துக்குவந்தகாரியமேதே
தேவரீராளப்பட்ட அயோத்தியிலேமந்திரிபிரதானிகள் சேனாபதிகள்
டிகள்மற்றுமுள்ளபிரசைகளினாலே மனதுக்கேதாகிலுங் குறைவுண்
டோ அடியேனை யிரட்சிக்கும்பொருட்டாய்க் கிருபைசெய்துனாக்கவே
ண்டுஞ்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-அடானா.

நானாளும்நாட்டிலென்ன நலமிடர்விளைந்தென்வாழ்வு
போனாலும்போகட்டுன்னைப் புத்திகேட்பேனமன்னா
வானோர்கள்மதிக்கநாட்டை மன்னாநீயாளவேண்டும
நீநாட்டையாண்டால்புண்யம் நிலைக்கநான்றவஞ்செய்வேனே.

வசனம்.

கேளும்அரிச்சந்திரமகாராசனேநானாளப்பட்டநாட்டிலே நலம்வி
ளைந்தாலென்ன இடர்விளைந்தாலென்ன அதற்காகநீ புத்திசொல்லவே
ண்டியதில்லைமனுவிக்கியானந்தெரிந்தஇராசாக்களேபூமியாளவேணுமா
கையால்அந்தநாட்டைநீயேயாளவேணும் அதினாலேயென்தலைபாரந்தீ
ரவேணும்அந்தப்புண்ணியமுனக்குலபிக்கத்தக்கதாகயான்போய்த்தவ
ஞ்செய்யவேணும்மகாராசனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

தவத்தினில்மிகுந்தோரிந்தத் தவறுசொல்வாரோவையா
அவத்தினிலொழிந்திடாம லரியநாடுமக்கேதந்தேன்
பவத்தினிற்பிறந்தேபுண்யம் பலித்ததேசுனுவாய்பாவக்
கவுத்துவஞ்செய்தேவைக்கக் கருதினீர்போம்போம்சுவாமி.

வசனம்.

சரணம்சரணம்சுவாமி கோபமில்லாமற்கேளும்தவத்திலே மிகுந்த
பெரியோர்களிப்படியுஞ்சொல்லலாமா அரிகரியுமமை மகானுபாவராய்
எண்ணியுமக்குநாட்டைக்கொடுத்துச்சனுவிலேசம்பாதித்த புண்யத

தைதான்போக்கடித்துக்கொண்டுபோவதைதச்சம்பாதிக்கவல்லோ நீர்செ
ய்கிறதவுந்து வம்சானளித்தநாட்டைவாங்குவேனுபோம்போம்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

நாட்டைத்தான்வேண்டாமென்றாய் நானுறவஞ்செய்துதித்த
பேட்டினமயிலாரந்தப் பெண்களையாகிலுஞ்சோ
காட்டினிறபரசவித்துக் காசிக்குப்போனலங்கே
மூட்டையாய்ப்பொன்னைக்கட்டி முடிந்துவைத்திருக்கிறாயோ.

வசனம்.

இன்னமொன்றுசொல்லுகிறேன்கேளும் கொடுத்தநாட்டைவாங்
லச்சைபடுகிறாய்போகட்டும் நானருமையாகத்தவஞ்செய்துதித்த பெ
ண்களிருக்கிறார்களேயவர்களையாகிலும்விவாகஞ்செய்துகொள்ளும் இ
தயெல்லாந்தட்டிப்போட்டு இந்தக்காட்டிலேயவஸ்தைபட்டுக் காசிக்
குப்போனஇனுலேயானைமேல்நின்றுகவண் கல்லெறிந்தவுயரம் பொன்
னைக்கொட்டிக்கொடுக்கமூட்டையாகக்கட்டிவைத்துக்கொண் டிருக்கி
றாயோஇந்தப்பிடிவாதத்தைவிட்டுவிடுவிட்டுவிடு.

இராசன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

யில்நேரென்னுமனையாளு மகனும்யானுமடிந்தாலும்
யிர்போமளவும்பொய்சொல்லே னுரைக்கும்பிறமாதரைச்சேரேன்
பிர்சூழபோத்திகாடதனைப் பரிவாயநீரேயாண்டிடுவீர்
சயிர்சேருமதுகெடுப்படிக்கே ஸ்திரமாய்க்கடனைக்கொடுப்பேனே.

வசனம்.

சாணஞ்சாணம்சுவாமிஉமக்குக்கொடுத்த நாட்டையும்வாங்கேன்
ன்னியமாதரையுங்கூடேன்உம்முடையகெடுவுப்படிக்குப் பொன்னை
க்கொடுத்துவிடுவேனேயல்லது எங்கள்பிராணன்போனாலும் அசத்திய
துக்குட்படுவேனென்றுநினைக்கவேண்டாஞ்சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

எத்தனையிதஞ்சொன்னாலு மிடுக்கங்கள்வரச்செய்தாலும்
சற்றும்நெஞ்சிரங்கான்சொன்ன சத்யமுந்தவறானையா
சுத்தமாமிவனைப்பின்னுந் துக்கத்திலழுந்தச்செய்வேன்
பித்தன்போற் பிதற்றிப்போவான் பெருமைநா னடைகுவேனே.

வசனம்.

எத்தனைதந்திரங்கள் செய்தும் இதஞ்சொல்லியும் பிடிவாதமாய்த்

தானேயிருக்கிறான்நல்லதாகட்டும் இன்னமிவனைப்பிடித்துவிற பாட்டி
லேபொய்மாத்திரமாசொல்லப்போகிறான்வாயிலேவந்தபடியெல்லாம்பி
தற்றப்பேசுகிறான் நான்றான்கெலிக்கப்போகிறேன்.

மகாமாயசித்தன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

கோபாளிதலைமாட்டிற்பரிகாரியழுதழுதுகொண்டாற்போலும்
காயாதமரத்திற்வெகுகனியிருக்குமெனமலைக்குங்கசடர்போலும்
வாயாலேவந்ததெல்லாம்வாதருமுனிவர்குணத்தைவர்ணித்திங்கே
ஓயாமலழுவோமோவிழுவோமோ இவர்மதியையுரைசெய்வோமோ.

வசனம்.

சாகிறகோபாளியின்தலைமாட்டிலேகண்ணீர்விட்டழுகின்றபரிகா
ரிபோலவும் ஒருநாளுங்காயாதமரத்திலேயனேகம்பழமிருக்கிறதென்று
நினைக்கிறமூடன்போலும்இருக்கிறதப்பா இவர்சொல்கின்றது.

மகாமாயசாலி-வசனம்.

ஆம் அண்ணேயதற்குநாமென்னசெய்வோம்.

மகாமாயசித்தன்-வசனம்.

தம்பி மகாமாயசாலி நம்மிட ஐயர்பிதற்றுகிறதைப் பார்த்தால் ஒன்
றுங்காரியமில்லை.

மகாமாயசாலி-வசனம்.

என்ன அண்ணே நீசொல்லுகிறதொன்றுந்தெரியவில்லையே.

மகாமாயசித்தன்-வசனம்.

நம்முடையஐயா அழுகிறாரே.

மகாமாயசாலி-வசனம்.

அவரழுகிறதுந்தெரியும் அவர்பிதற்றுகிறதுந்தெரியும்.

மகாமாயசித்தன்-வசனம்.

அதைத்தான்சொல்லுகிறேன் தம்பி.

மகாமாயசாலி-வசனம் ஆனாற்சொல்லண்ணே.

மகாமாயசித்தன்-வசனம்.

சொல்லப்போனாற்சிரிப்புவருகின்றது இவர் தன்னைத்தானே வீறு
ய்க்கொண்டாடுகிறாரே இவர் பவுஷுங்குலைய இந்தவயிற்றெரிச்சலை
சொல்லியழுவோமாகட்டிக்கொண்டுகீழேவிழுவோமா இவரிழவை எ
ன்னென்றுசொல்லுகிறது ஐயையோ இம்மாத்திரந்தெரியாதா இத்தனை
பாடுபடுத்தியும்பொய்யாதவன் இனிமேற்பொய்சொல்லுவானா தம்பி.

மகாமாயசாலி-வசனம்.

அண்ணே ஐயருக்குவந்திருக்கிறதுகேடு.

விஸ்வாமித்திரர்-வசனம். இருக்கட்டுமடா துஷ்டப்பயலே.

மகாமாயசித்தன்-வசனம்.

உம்மைப்பார்க்கிலுமாரிருக்கிறார்கள்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஓய் ஓய் அரிச்சந்திரமகாராசனே தானாகவந்தசீதேவியைக் காலா
லுதைத்துத்தள்ளவேண்டாம்நீர்காசிக்குப்போகாமலென்னுடனே ச
வாரும்.

இராசன்-வசனம்.

நீர்போய்வாரும்நான்வரமாட்டேன்சுவாமி.

விஸ்வாமித்திரர்-வசனம்.

ஓய்நட்சத்திரத்தாகரேயும்மிடவிட்டுச்சமாச்சாரமொன் றிருக்கின்றதுவாரும் இரகசியமாகச்சொல்லுகிறேன்.

தாகன்-வசனம்.

நான் ஆக்கினைவிட்டுவந்து வெகுநாளாச்சுதே யென்னசமாச்சாரம்வந்தது தெரியச்சொல்லும் சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம-அட்டாணா.

தாகனுயும்மைவிட்டுஞ் சந்தைகளேதுங்காணோம்
வரவரவுரக்துக்கொண்டான் வலிமைகள்பேசுகின்றான்
ஒருவிசைப்போதானுலு மொழிவாகவிடாமல்நீயே
பரபரென்றுருக்கிப்பொல்லாப் படர்செய்தாற்பொய்யாகானே.

வசனம்.

ஏதுகாணும் நட்சத்திரத்தாகரே உம்மைச்சம்பளத்திற்குவைத்துக்கொண்டதில் ஒருபிரயோசனமுங் காணோம் வரவரஅவனுக்கு பணவுறுதியும் விருப்பமுமுண்டாகிறதே யதுவல்லாமலும் இழுத்துப்பறித்து உருக்கிமுருக்கி அடித்து இடித்து வசைபிசைக்கொண்டு விஷத்திலேதோய்த்தாற்போல நிலத்திலே கால்பாவவொட்டாமல் அவதிமேலவதியாய் மேலும்மேலும்உண்டாக்கிச் சித்திரவதைசெய்தால் குப்பல்குப்பலாய்ப்பொய்யைக்கொட்டானு.

தாகன்-விருத்தம்-இ-ம-காம்போதி.

இத்தனைகோபமென்மே லினிவேண்டாம்பொறுப்பீர்சுவாமி
சித்திரவதைமாத்திரம்நான் செய்வேனேயுயிரைவைத்துத்
தத்துறலாகிவெம்பித தடுமாறித்தவிதவிக்க
எத்தனைகோடிசித்ர விம்சைகள்செய்வேன்பாரும்.

வசனம்.

தேவரீருக்கிவ்வளவுகோபம்வேண்டாம் பொறுத்தாளும் இவர்களாலேவருகிற பாவத்துக்கு நான்பயப்படுகிறவனு இனிமேல் தயைதாட்சண்யமில்லாமல் இவனைப்படுத்துகிற அனேககோடி இம்சைகளில்

இவன்பிள்ளையழப்போகிறதும் பெண்சாதிகதறப்போகிறதும் மந்தி
வதறப்போகிறதும் அதைககண்டுஇவன்தடுமாறித் தவிககப்போகிறது
ம் நீரேபார்க்கப்போகிறீர்சுவாமி.

மகாமாயசித்தன்-வசனம்

ஐயையோ இந்தப்பார்ப்பானே யஷ்ட மச்சனிபிடித்துமூன்றுவே
வன்பண்ணின அதிகப்பிரசங்கத்தினாலேயொரு கண்ணுள்ளையாச்சுது
இப்போதிருந்தஇராசனாகிய புண்யபுருஷனாலே மற்றொருகண்ணும் கெ
ள்ளையாகுதோ அல்லதுநாசமாய்ப்போகிறதோ தெரியாது.

மகாமாயசாலி-வசனம்.

அண்ணே மகாமாயசித்தா இவருக்குக்கண்ணுள்ளையா.

மகாமாயசித்தன்-வசனம்.

கைப்புண்ணுக்குக்கண்ணாடியா இதோவிருக்கின்றான் பாரே.

மகாமாயசாலி-வசனம்.

ஆம்அண்ணே துலாம்பரமாய்த்தானிருக்கிறது.

விஸ்வாமித்திரர்--வசனம்.

வாருங்கள்சிஷ்யர்களே நாம்போவோம்.

சிஷ்யர்-வ-ம்.நாங்கள்வந்தழுகிறோம்நீரும்வந்துதொலையும்சுவாமி.

தாகன்-வசனம்.

அடாய்அடாய்சந்தா உம்மிடகையிலிருக்கின்றசீனிலங்காங்குறட
இப்பேர்ப்பட்டபரிவட்டணைகளெல்லாம் அறிவாயேயிங்கேதானேசோ
க்கத்தைக்கொட்டறையா யில்லாவிட்டாலிதையெல்லாம்ரோக்குப் பூட்
டிடட்டுமோசொல்லுங்காணும்.

இராசன்-வசனம்.

அதுவெல்லாம்வேண்டாம்அடியேன்சொன்னபடியே காசிப்பட்
டணம்போய்ச்சேர்ந்தவுடனேகட்டிப்போடுகிறேன்.

பொது-விருத்தம்-இ-ம்-சாவேரி.

வன்மமாய்விஸ்வாமித்ரன் மறைந்துசென்றேகிவிட்ட
வன்னியாம்நெருப்பாறந்த வனத்தினில்வலைத்துக்கொள்ள
மன்மகன்மனைவிமந்திரி வள்ளலுங்கலங்கியேங்கக்
கன்மமாந்தாகனோடுங் கதறியேயழுகின்றனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகவிஸ்வாமித்திரர்மாய்கையினாலே நெருப்பாறுவ
துவளைத்துக்கொள்ளஇராசாவும்பெண்சாதிபிள்ளையும்மந்திரியும்நட்ச
ந்திரத்தாகனோடுங்கூடப்பரதவிக்கிறவிதங்காண்க.

தாகன்-வசனம்.

ஏதுகாணும் ஏதுகாணும் ஓய்ஓய்அரிச்சந்திரமகாராசனே நெருப்
பபற்றிக்கொண்டுவாரதேவாரதே சுற்றிவளைத்துக்கொள்ளுறதேஐயை
யாபற்றியெரிபுறதே நேக்குப்பயமாயிருக்கிறதே யிந்தநெருப்பிலேநம்
மைத்தள்ளவாகொண்டுவந்தீர் நீங்களெல்லாருஞ் செத்தாலும் நம்மை
த்திரங்காப்பாற்றுங்காணும் நான்பிராமணன் மகாராசனே மகாரா
னே.

இராசன்-வசனம்.

எங்கள்பிராணன்போனாலும் உம்முடையபிராணனுக்கு ஒருசிந்த
யும்வாராமற்காத்துக்கொள்ளுகிறோம பயப்படாம லிருப்பீர் சுவாமி.

இராசன்-விருத்தம்-இ-ம்-கண்டா.

தவப்பயனாலேவந்த தையலேமகனேமந்திரி
அவப்படுமோவென்சத்தியம் அழியாமலிருக்கவேணுஞ்
சிவப்புறுநெருப்புக்கெந்தன் சீவனைக்கொடுப்பேனிந்த
சிவபெருமான்போல்வந்த செழுமறையோனைக்காப்பீர்.

வசனம்.

என்பிராணநாயகியாகியசந்திரமதியே அப்பாதேவதாசா ஆகாஅறி
மந்திரியாகியசத்தியகீர்த்தி இதோபற்றியெரிந்துவருகிற அக்கி
யிலேவிழுந்திறந்துவிடுகிறேன் இந்தப்பிராமணனைமாத்திரம்நீங்கள்
ப்பாற்றிக்கொள்ளுங்கள் ஏனென்றால் காட்டாறுபோலேசுற்றி வ
த்துக்கொண்டபடியினாலே நானொருவனதற்கிரையானால் மற்றவர்
தப்பிப்போகலாம்.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-நீலாம்புரி.

அருமாமுனிகடன்கொடுப்பாயறமூர்பிசகாய்புவியாள்வாய்
வருமேசகலபாக்கியமுமுன் மனதுக்கரனாருளாலே
ஒருகாரியமுமில்லாம லுழலும்நாயேன்வீழ்ந்திறந்தால்
திருமாமகனும்மனைபாளுஞ் சீவனிலைப்பாருன்னுடனே.

வசனம்.

கேளும்இராசசக்கிரேஸ்வராதேவரீர் அடியேனுக்குஉத்தரவுகொடுக்

கவேணும் அடியேனிந்த அக்கினிக்கிரையாலுல்நீங்க ளுயிருடனே தப்
லாம்தேவரீருயிருடனேயிருந்தால்தேவரீர் தருமத்துக்குஞ் சத்தியத்து
குங்காசிவிசுவநாதருடையகிருபையினலேசகலபாக்கியமு முண்டாக
போகின்றது அந்தவிசுவாமித்திரனுடைய கடனையுந்தீர்ப்பீர் இந்த
ம்மாள்சந்திரமதிதாயுங்குழந்தைதேவதாசனும்பிராணன் கிலேதிரு
பார்கள்நீரிலில்லும்நானிந்த அக்கினியிலேவிழுகிறேன் சுவாமி.

இராசன்-விருத்தம்-இ-ம்-புன்னுகவராளி.

வாழுமரசருடனிருப்பார் மந்திரித்தொழில்பெற்றிருப்பார்கள்
தாழும்வினைகண்டிடையாமற் சாகத்துணிந்தாய்தலைவிதியோ
எழுபுவியர்புகழ்நீயு மென்னேடிறந்தாலிவர்களுக்கே
குழுமூலகிற் றுணையுண்டோ தொடர்ந்தோரிடத்திற் சேர்வாரே

வசனம்.

கேளாயெனது அருமையுள்ளமந்திரிஇராசாங்கம் பண்ணுகிறவா
வையுடையஇராசாக்களை மந்திரிக்கூட்டங்களடைந்திருப்பார்கள் நா
டைவிட்டுக்காட்டில்வந்து அவதிபடுகிறஎன்னுடன்கூடத் தொடர்
சமயம்வந்தபோதுசாகவுந்துணிந்தாயிதுவுமுனக்குத் தலைவிதியோ இ
க்கட்டுமென்னுடன்நீயுமிறந்துவிட்டாலிவர்களை ஒரி த்திற் கொண்
போய்ச்சேர்க்கிறவர்களாராகையால்நீயிருமந்திரிநான் போய்விழுகிறே

இராசன்-சொச்சகம்-இ-ம்-புன்னுகவராளி.

ஐயோ போவென்செய்வோ மக்கினிதிவருகுதிதோ
தையலேமகனே மந்திரி தகிக்குதென்னகாரணமோ
வையகமெல்லாம்புகழும் வளரும்விசுவாமித்திரர்தாம்
செய்யும்வகையோவடியேன் திருவுளத்தின்செயலிதுவோ.

வசனம்.

பெண்ணேசந்திரமதி அப்பா அடா தேவதாசா மந்திரிசத்திய கீ
தி ஐயையோ இதென்னகாரணமோதெரியவில்லை இதோநமக்கெதிர
அக்கினியாறுவருகிறது அதனுல்சரீரமெல்லாம்வெந்துபோகிறதே அ
விசுவாமித்திரன் வஞ்சகமோவல்லது திருவுளத்தின்செயலோ என்ன
யவேன் என்னசெய்வேன் ஈசுவரா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-வராளி.

ஐயையோ கொடுமையெனைப்போலு மவனிதனிலேயார்செய்தார்
மெய்யோகாயம்புருடனையும் விட்டேயிருக்கத் துணிவாரோ
பொய்யோவாழ்ந்தவாழ்வெல்லாம் பிறகார்கொடுப்பார்நீரிறந்தாற்
செய்யோருதவிவேறுண்டோ திகையாதிரும்நான் வீழ்வேனே.

வசனம்.

அரிகரி தேவரீர் வாழ்ந்தவாழ்வெல்லாம் பொய்பாக்கி நீர்
ன்னேயிறந்தால்பிறகுஎங்களுக்கோ ராதாரமுண்டோ புருஷனைச்

கக்கொடுத்து உயிருடனே துணிந்திருக்கிறஸ்திரீகளுமுண்டா நீர் துணிந்தாலும் நான் துணிவேனோ அல்லது நீரிறந்தால் விஸ்வாமித்திரர்கடாக்ஷிருமா நீரிரும் என்னைப்போலே இந்தவுலகத்தில் கொடுமைசெய்தவர்களாருமில்லை ஆகையால் நானேயிந்த அக்கினிக்கிரையாகிறேன் பிராணரட்சகா.

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

பத்துமாதஞ்சுமந்துபெற்றபலனோநான் முன் பார்த்திருக்கப்
பற்றியெரியும்நெருப்பதனிற் பாய்வேனென்றாய்தாயேநீ
பெற்றகடனைத்தீர்ப்பவனே பிள்ளையதனால்முன்போவேன்
அத்தனருளோதந்தையும்போயன்னையும்போய்நானிருப்பேனோ.

வசனம்.

சேனாம்மா என்னைப்பெற்றதாயே பத்துமாதஞ்சுமந்து என்னைப்பெற்றதற்கோ நீயும் என்னையீன்றதகப்பனும் அக்கினியிலே விழுந்திறக்கவும் அதைப்பார்த்திருந்து உயிருடன் நான் வாழவுமா இதுவெல்லாம் விஸ்வநாதருடையசெயல்தானோ தாயே பெற்றவர்களுக்கு வந்ததுன்பங்களைத்தீர்க்கும்படியானகடமைபிள்ளைக்கல்லவோ ஆகையால் நான் முன்பாக அக்கினியில் விழுவேன் எனக்குச்செலவுகொடுத்திடுவாய்தாயே.

சந்திரமதி விருத்தம்-இ-ம்-நீலாம்புரி.

தரையைமெழுகியுண்டிருந்து தவஞ்செய்துன்னை நான் பெற்றெடுத்து
நிறையுஞ்செல்வத்துடன் வளர்த்து நிதமுமகிழ்ந்தேனருமகனே
மறைமாமுனிவன் வஞ்சனையால் வனத்திலெரியும்நெருப்புக்கோர்
குறையாயிரையாய்க்கொடுத்துன்னைநான் கொடும்பாவியைப்போலிருப்
(பேனோ.

வசனம்.

சொன்னார்சொன்னபடியெல்லாம் அருமையானதவங்கள்செய்து தரையைமெழுகி சோறிட்டுண்ணும்பரமசிவனருளினாலே உன்னைப்பெற்றெடுத்து இந்தவிஸ்வாமித்திரரிஷியினுடைய வஞ்சனையாலெரியப்பட்ட அக்கினிக்கிரையாகக்கொடுக்கநானென்னகுறைகள்செய்தேனோ நீயிந்தத்தீயினில்வீழ்ந்திறக்கவும்நான் பாவியிலு மகாபாவியாகப்பார்த்துமகிழவுமா அப்பா என்மகனே என்கண்ணே கண்மணியே,

தேவதாசன்-வசனம்.

தாய்தகப்பனுக்குவந்த துன்பத்தைத்தீர்க்காதபிள்ளையுமொருபிள்ளையா நானேயிந்த அக்கினியில்வீழ்கிறேன் உத்தரவுகொடுப்பாய்தாயே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அப்பாமகனேயித்துணிவு மறிவுமுனக்கேயடுத்தவிதஞ்
செப்பாய்பல்வீழ்ந்தில்லாயே செழித்தமுலைப்பால்மறக்கிலையே
ஒப்பாகுமோநீதான்வீழ்ந்தா லுந்தன்றந்தையுயிரதனை
வைப்பாரோநான்முன்வீழ்ந்து வார்த்தையுலகில்நிறுத்துவனே.

வசனம்.

அப்பாமகனேதேவதாசா இன்னம்பாற்பல்லுவிழுவில்லையே முலைப்பாலுமறக்கவில்லையேயுனக்கிந்தகோசரமானபுத்தியுமிருந்ததைதரியமுமெப்படியுண்டாச்சுநீதா அறியேன்நீ அக்கினியில்வீழ்ந்தாலுனதுதந்தையுயிர்வைத்திருப்பாராஉலகத்திலேகீர்த்திநிலைக்கும்படியாகநானேமுன்னதாகஅக்கினியிலேவீழ்கிறேனப்பாஎன்கட்டிக்கரும்பேயென்கண்மணியே.

தாரகன்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

கடித்தபாக்கிடாச்சிற்றப்பன் கடைத்தெருக்கோடிமட்டும்
அடித்துப்போய்வழிவிடுத்துத் தொடர்ந்தழுங்கதையைப்போல
அடித்துமேல்வீழ்ந்துநீங்க ளழுகின்றவிதத்தைப்பார்த்தால்
பிடித்தெனைத்தள்ளிப்போடும் புரட்டென்றுநினைக்கலாமே.

வசனம்.

ஓஹோ அரிச்சந்திரமகாராசனே கடித்தபாக்கிடாதசிற்றப்பன் கடைத்தெருமட்டும்வழிவிடுத்துத்தொடர்ந்தழுதகதையைப்போலுமிருக்கிறதுகாணும்ஆகா இப்போதுநீங்கள்ஒருவருக்கொருவர்கட்டிக்கொண்டழுகிறதைப்பார்த்தால்நீங்கள்செத்துஎன்னைமாத்திரம்காப்பாற்றப்போகிறதாகஎல்லோரும்நினைப்பார்கள் இந்தமாள்பசப்பியழுகிறதைப்பார்த்தால்மெள்ளவென்னை இந்த அக்கினிக்கிரையாகத்தள்ளிவிட்டு நீங்களோடிப்போகிறமார்க்கமாய்த்தான்காணுகிறது.

சந்திரமதி-வசனம்.

அப்படியொருக்காலும்நினைக்கவேண்டாம்நானேயிந்த அக்கினியில்முன்னேவீழ்கிறேன்நீங்களெல்லோருமுயிருடனேதப்பியிருக்கலாஞ்சுவாமி.

நட்சத்திரத்தாகன்-வசனம்.

ஆனால்பேதிவிரதைதான்பார்ப்போம்முன்னேநட.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-சங்காபாணம்.

மறைநெறிபிசகினலும் வருவிருந்திழந்திட்டாலும்
முறையிழிவெதுசெய்தாலும் மூப்பினையிகழ்ந்திட்டாலும்
பிறர்மனையிச்சித்தாலும் பிறர்மனம்நொந்திட்டலும்
குறைகளொன்றிருந்தாலென்னைக்கொல்வாய்காட்டெரிநெருப்பே.

வசனம்.

ஓ அக்கினிபகவானேசத்தியமாகவொருவார்த்தைசொல்லுகிறேன் கேளும் என்புருஷனிடத்திலேயாவது என்னிடத்திலேயாவது பாதாரத் துரோகம்பிறர்பொருளிச்சைபிறர்மனம் நோசச்செய்கிறது சொன்னசத்தியம்மறக்கிறது பெரியோர்களைநிந்திக்கிறது விருந்திழக்கிறது அதர்மம்அக்கிரமம்வஞ்சனைசூது குருநிந்தை தேவதாபக்தி மறக்கிறதுவேதவிரோதம் இப்படிப்பட்டதுகளிருக்குமேயானால்என்னையெரித்துப்போடக்கடவாய்அக்கினிதேவனே.

தேவதாசன்-வசனம்.

அம்மாஅம்மா என்னைப்பெற்றதாயே யுன்னுடனேகூடநானும்வருகிறேன்.

சத்தியகீர்த்தி-வசனம்.

அப்பாதேவதாசா நானும் உன்னுடனேகூட இதோவருகிறேன்

இராசன்வசனம்.

சந்திரமதிசொன்னசத்தியத்துக்கொருபழுதா நாமுங்கூடவேபோவோம்வாரும்நட்சத்திரத்தாகரே.

தாகன்-வசனம்.

ஓய்ஓய் அரிச்சந்திரமகாராசனேயேன்வீணிலேயெல்லோரும்வீழ்ந்துசாகப்போகிறீர்கள்நான்மனப்பூர்வமாய்ச்சொல்லுகிறேன் என்னைதிலேதள்ளிவிட்டால்நீங்களெல்லோரும்பிழைக்கலாம்யதார்த்தமானவார்த்தைகாணும்.

இராசன்-வசனம்

எங்கள்பிராணனெல்லாம்போனலும்போகிறதேயல்லாமல் அப்படியொருபோதுஞ்செய்யமாட்டோம்சுவாமி.

தாகன்-வசனம்

சுட்டுப்போடுகிறதுசுட்டுப்போடுகிறது இராசாவேநீரும்மந்திரியும் என்னையெடுத்துக்கொண்டுபோய்அப்புறத்திலேவிடுங்கள்சந்திரமதிஅக்கினிசேர்ந்தாளா.

இராசன்-வசனம்.

சந்திரமதியுஞ்சேர்ந்தாள் கூடப்பிள்ளையுஞ்சேர்ந்தது நாமும் வந்துசேர்ந்தோஞ்சுவாமி.

பொது-சொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

விசிக்கொழுந்துவிட்டு விரிந்தெழுந்தலக்கினியைப்
பேசியசத்யவார்த்தைசொல்லிப் பேணதசந்த்ரமதிகடக்க
வாசித்தருமறையோன் மந்திரிமன்னன்மகனுடனே
காசித்திருநகனாக் கண்டார்மனமகிழ்ந்தே.

வசனம்.

அயோத்தியாபுரியைவிட்டு நட்சத்திரத்தாகருடனேகூட வந்து
ட்டிலேமிருகங்களாலேயும்மழையினாலேயும் இடியினாலேயும் பூதத்தி
லேயும்அககினியாற்றிலேயும் நானாவித இம்சைகள்படடுக் களைபே
காசிப்பட்டணத்தைக்கண்டார்களென்றறிக.

அரிச்சந்திரன்-தரு-இ-ம்-தோடி-தாளம்-ஆதி.

தெரிசனஞ்செய்பெண்ணே-இதோகாசி-தெரியுதுபார்கண்ணே.

விரிசதுர்முகப்பிர்மம் விதியால்வினைந்தகன்மம்
வேதைதீரவுள்ளங்கொண்டு விருப்பமாதாவகண்டு (தெ

எத்தனைபிறவிகள் பிறந்தாலும்-புண்ய
மெய்துமோலோகாசார மறந்தாலுஞ்
சுத்தமாயாபாசந் துறந்தாலுஞ்-சுகம்
கனுவாய்க்காணுமோஎட்டிப் பறந்தாலுஞ்
சுத்தநிராதர்தூய பராபர
முத்தர்சடாதரமூர்த்தி கிருபாகர
முதல்வன்பிரணவநிலே மேவியதவ
முடிவிற்பொருளாயுறைவோன் வளர்சிவ (தெ

தவஞ்செய்வோர்பெருங்கதி யிதுவாமே-சென்ம
சாகரக்கடலொழித்திடர் போமே
தவறுசெய்விடமுண்டதிவர் தாமே
தலத்தைக்கண்டிடத்தவம்புரிந் தோமே
திவலையெறிக்குங்கங்கைதிவ்யதீர்த்தமாடித்
திணைக்குங்கவலைதீரச்சிவநா மங்கள்பாடித்
திகழ்வாளொடுமழுசூல முயேந்தும்
மகிழ்வாய்கரமேவரனு ருறைபதம் (தெ

வந்தவல்வினையென்பது தீரும்-உன்னுள்
வன்பழிபோகநன்னெறி நேரும்
அந்தரவர்க்கந்தன்னிலுறை வோரும்-மற்று
பரிபமாதவரெண்ணம்நிலே சேரும்

இந்தப்பொற்கோபுரமணிமதில்சோலையும்
இங்கிதபங்களுமாமலர்ச்சாலையும்
இகமாயறியிதுநலமாகியகதி
நிதமாமொருதனிமுதலோனுறைபதி. (தெரி)

இராசன்-வசனம்.

கேளும்பெண்ணே இதோகோபுரந்தெரிகின்றதே இது தான் காசிவிஸ்வநாதரிருக்கிற ஆலயம் நம்முடையகருமங்களெல்லாந் தீரக்தக்கதாகத்தெரிசனஞ்செய் பெண்ணே சந்திரமதி.

சந்திரமதி-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

வல்வினைபோம்விதியின் வசத்தாலவதிபடத்
தொல்வினைபோமினிமெது துயரம்போஞ்சுகம்பெறலாம்
செல்விவிசாலாட்சிமகா தேவிமகிழ்விஸ்வேசர்
நல்விருப்போடுறைகாசி நகரைக்கண்டபலனிதுவே.

வசனம்.

எனதுபிராணநாட்சகா நாம்பட்ட துன்பங்களெல்லாந்தீர இந்தக்காசிஸ்தலத்தைக்கண்டு தெரிசித்தோமிந்தப் புண்ணிய வசத்தினாலே இனிமேல்நாம் சுகத்தையடையலாஞ்சுவாமி.

இராசன்-வசனம்.

ஆனால் இந்தக்காசிப் பட்டணத்தினுடைய அலங்காரமும் இந்தமகாதேவராகிய விஸ்வநாதசுவாமி விசாலாட்சியம்மன் ஆலயத்தினலங்காரமுங் காட்டிக்கொண்டுவருகிறேன் பாரும்பெண்ணே.

இராசன்-தரு-இ-ம்-புன்னாகவராளி-தாளம் - திரிபுடை.

வானளவுதாவுமிந்தவண்ணப்பொன்மதில்பாராய் மயிலே
யிளமாங் குயிலே
ஆனைசேனைதானடத்துமழகுவாசற்படிபாராய் அனமே
நான்படைத்த தனமே
விப்ரகுலவேதசாஸ்திர விதிமறையோர்வீதிபாராய் மின்னே
ஆசைக்குகந்த பொன்னே
செப்புமொழிதவறுதஇராசவீதிபாராய்-சேல் விழியே
எந்தன்தேன் மொழியே
பொன்னைக்கொண்டுபொன்னைவிற்கும்பொன்படைத்தோர் வீதிபாராய்,பூஷணமேயின்பசம் பாஷணமே
நன்னயமாய்வாழுஞ்சூத்ரநல்லவீதிகண்ணுறப்பாராய் நாயகியே
பிராண நாயகியே

சதுரங்கசேனைநிறைதாபரமாம்வீதிபாராய் தவநிலையே
எந்தன் தவநிலையே
புதுரவரத்னமணிபொருந்துமண்டபங்கள்பாராய் பொற்கிளியே
மதுரசொற் கிளியே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-சாவேரி.

புண்ணியதலமாமிந்தப் புநிதமாநகரையின்று
கண்ணினுற்கண்டபாக்யங் கருதுமுற்பயமேயாகும்
வண்ணமாமுமையாள்பாகம்வளர்விஸ்வநாதர்வாழும்
திண்ணமாந்தலத்தின்காட்சிதெரிசிப்பேனுணாசெய்வீரோ.

வசனம்.

கேளுஞ்சுவாமி இந்த மகாபுண்யஸ்தலமாகிய காசிப்பட்டணத்தைகண்டு சந்தோஷமானேன் அதுவும் நான்முன்சென்மத்திலே செய்தபாக்கியம் இன்னமிங்குண்டாகிய வதிசயங்களும் இந்தமகாதேவராகிய விஸ்வநாதசுவாமி வாசம்பண்ணுகிற ஆலயத்தைக்கண்டுதெரிசனம்பண்ணுவோம்சுவாமி.

இராசன்-வசனம்.

அப்படியே சொல்லிக்கொண்டு வருகிறேன் பார்த்துத்தெரிசனம் பண்ணும் பெண்ணே.

இராசன்-தரு-இ-ம்-பைரவி-ஆதிதாளம்.

காசிநகரைக்கண்ணுற்கண்டாயேயின்னங்
காட்சியநேகமுண்டு காண்பாயே-பெண்ணே
மாசில்லாராசவீதிவளமும்பலவளமும்
வரிசையாக்கண்டுமகிழ் பூண்பாயே
இந்திரலோகம்போலேயிருக்குமிந்தநக
ரெதுபெரிதெதுசிறிதுனா நோய்-கண்ணே
அந்தக்குபேரன்வாழுமளகாபுரியுமீடோ
அளவிலாக்கடைவீதியினைப் பாராய்
சூழ்வினைப்போகுமிந்த சொர்ணகோபுரங்கண்டால்
தொழுதுநீயேநமஸ் கரிப்பாயே-மின்னே
தாழ்வுவருமோஇந்தநந்திகேஸ்வரர்பாதந்
தலைமேல்வைத்தன்புமனந் தரிப்பாயே
அன்னைவிசாலாட்சி ஐயர்விஸ்வநாத
ரரியபொற்பதங்களிற் பணிவாயே-பொன்னே
முன்னஞ்செய்தீவினைபோமிந்நாட்படுந்துயர்போ
முச்யுமானகுறை தணிவாயே

இராசன்-வசனம்

இவர்தான் நம்முடைய ஆண்டவராகிய விஸ்வநாதசுவாமியு
ம் விசாலாட்சியம்மனும் இவர்களைத்தெரிசனஞ்செய்யும்பெண்ணே
சந்திரமதி.

இராசன்-விருத்தம்-இ-ம்- சங்கராபரணம்.

வேடன்வாயெச்சிலுண்டாய்விருந்துக்கோர்பிள்ளையுண்டாய்
ஆடரவதனைப்பூண்டாய்அணிவிடையேறிக்கொண்டாய்
நீடரும்புகழ்சேர்காசி நித்தனேவிஸ்வநாதா
வாடவோவடியேனுள்ளம்வருத்தந்தீர்த்தருள்செய்வாயே.

வசனம்.

சிவசிவசம்போமகாதேவா மான்மழுகாலகண்டகிரிசேத்ர சடா
தர காசிவிஸ்வநாதீஸ்வரா தீனரட்சகா அடியேன் படுகிறவருத்தங்
களைத்தீர்த்துரட்சியும் சுவாமி.

இராசன்-தோத்திரம்-அகவல்-இ-ம்-எதுகுலகாம்போதி.

சிவசிவசம்போதிகழ்சடையாளா
தவநிலைப்பொருளே சதுர்மறைமுதலே
மதிநுதற்குமுத வாய்விசாலாட்சி
துதியிடப்பாகந் தோன்றியபரனே
மான்மழுவேந்து மலர்க்கரத்தோனே
வான்படர்கங்கை வளர்சடையோனே
தீனதயாளா திரிபுரதகனா
ஞானவாரிதியே நற்றவப்பலனே
காலனையுதைத்தசகாரணப்பாதா
தொண்டர்க்கிறங்குந் தூயநன்னேயா
கண்டிடப்பணிவோர் களிக்குஞ்சகாயா
திரைசெறிகங்கை செழிக்குநல்வளமும்
விரிதருங்காசி விஸ்வநாதீசா
அடியனுன்பட்டவவதியைக்கேட்பாய்
படிமிசைபுகழும் பதியெனுமயோத்தி
திருநாடுகரந் செல்வமுமிழந்தே
அரிவைநான்மகனுமருங்கடன்தீர்க்க
வரும்வழிதனிலேமழையிடிகாற்றும்
பெருவிஷப்பாம்பும்பெருந்தவெம்புலிகள்
கட்டெறும்பானை சருகுகளவிகளும்
மட்டிலாத்தேளும் வரும்பலசெந்தும்

கொட்டிடடக்கடிக்கக் கொதித்துத்தள்ளாடிச்
சுட்டிடுமணலிற் சோர்ந்துமெய்வெதும்பி
பூதப்பசாசின் போர்தனிலுழன்று
சேதப்படாமற் செந்தழல்கடந்து
காயிலையருந்திக் கருதிநெஞ்சுழன்று
ஓய்விலாத்துயரமுள்ளிருந்தலைக்க
மகன்முகநோக்கி மங்கைதானழவும்
மகிழ்சுகமாதென் மலர்முகநோக்கத்
துக்கமேவீட்டுத் தோகையின்முகத்தை
நெக்குவிட்டுருகி நின்றுநான்பார்க்கக்
கதறியேயழுவருங்கலங்கிநின்றழுதே
பதறுதல்கண்டும்பாதவித்திடாமற்
கடன்றரச்சொல்லிக்கடிந்திடுமிவர்கோ
ருடன்படிக்கையின்மே லுறுதியொன்றுரைக்க
வழியேதுமின்றி மயங்குமிவ்வேளை
ஆழிவிலாதுந்த னருட்பதியல்லை
வந்துமாமதிலும் வளர்கோபுரமும்
முந்திநான்காண முடுகியதுயரால்
வாடியமனத்தின் வருத்தமுங்கவியு
மோடியதையா வுமையொருபாகா
மிகுதவவிஸ்வா மித்திரனென்னை
வெகுவெகுமாயவித்தைகளின்னம்
எத்தனைசெயினுமேங்காதிருந்து
சத்தியமாக்கடனைத்தரும்வகையருள்வாய்
அரும்புலிகன்றினுக் கமுதளித்தாண்டாய்
வருங்கரியுரிதசேவல்வினைதீர்த்தாய்
இத்துயர்தீர்ப்பதெவ்வளவுமக்குப்
பித்தனென்றுரைத்தபெருமைகொண்டோனே
அத்தனே காசியரும்பதிவாழ்வே
சித்தமேயிரங்குந்தேவநாயகனே

வசனம்.

இதுதான் அடியேன் பட்ட துன்பங்களெல்லாம் சுவமி.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

எந்தநாளொழியுமிந்த விடர்படுந்துயரமெல்லாம்
சந்திரன்விளங்குமம்பொற்சடையணிவிஸ்வநாதா
மைந்தனுமியானுமெந்தன் மன்னனும்வருந்தந்தீர்ந்து
சிந்தைநான்மகிழ்ச்சியாகத்திருவருள்புரிந்தாள்வாயே.

வசனம்

ஆ நாதா காசிவிசுவநாதீஸ்வரா நாங்கள் படுந்துன்பமெந்த நாளிலொழியும் எங்கள்துக்கத்தைத் தீர்த்துக்கிருபைசெய்து இரட்சிக்க வேணும்சுவாமி.

தேவதாசன்சொல்-தேவாரப்பண்-கொல்லி.

தேசுதேர்மதிதரிக்குஞ்செஞ்சடாதரனேபோற்றி
வாசுதேவன்விரிஞ்சன் வந்திக்கும்விமலாபோற்றி
தாசரட்சகனேபோற்றி தற்பரசிவனேபோற்றி
காசிவாழ்விஸ்வநாதாகமலத்தாள்போற்றிபோற்றி.

வசனம்.

ஐயா எங்களைப்பாதுகாத்து ரட்சியும் சுவாமி.

இராசன்-வசனம்.

இந்தமகாதேவராகிய விஸ்வநாதனையும் விசாலாட்சியம்மனையுந் தெரிசித்தோமே சற்றுநேரம் இந்தவசந்தமண்டபத்திலிருந்து ஆயாசந்தீர்த்துக்கொள்ளுவோம்வாருங்கள்.

தரகன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

பட்டினியிருக்கநீங்கள் பயப்படவேமாட்டீர்கள்
ஒட்டியேயிடந்துகால முபாயமாய்க்கழித்ததாலே
நட்டியேதுங்களுக்கு நான்பசிதாளமாட்டேன்
கட்டியேமுடிப்பாய்ப்பொன்னைக் ட்டாமல்விடுகிலேனே.

வசனம்.

அடாய் அடாய் சந்தாய் நீ உன்னும்புடையாள் நோக்குப்பிறந்தபிள்ளைநோக்குத்துணைப்பட்ட மந்திரிநீங்கள்நாலுபேரும் பட்டினியிருந்துலோலாய்ப்பட்டுவயிற்றைக்காயப்போட்டுக்கொண்டிருக்கிறதுவாடிக்கைதானே மோசமில்லையதனாலுங்களுக்குக் கூடுதலேயேயல்லது நஷ்டமில்லைநேக்குத்தயிர்பால்நெய்மொத்தைமொத்தையாய்ப்பருப்பும்பச்சரிசிச்சாதமும் சாப்பிட்டுவெப்பமிட்டுக்கொண்டிருக்கிறது போய்ப்பட்டினியிருக்கத்தலைவிதியாயிருக்கட்டும் ஆனாலிட்டதுகிரகசாரம்காசிப்பட்டணம்போனவுடனே நம்மிடரொக்கத்தைக்கொட்டுறேனென்றுசாதித்தாயே யொரேசாதனையாயில்லை யென்றுசாதிக்கிறையா அதெல்லதுநம்மிடரொக்கத்தைக்கொட்டறையா இனிவிடேன் விடேன்விடேன்.

இராசன்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

சொன்னதுமெய்தானையா தொலைதூரப்பயணந்துவந்த
சென்மவிடாய்கள்தீரக்ஷணப்பொழுதிங்கிருந்து
மன்னர்கள்வணிகர்மற்றுவலைசவைநயிங்குள்ளோரை
இன்றைக்கென்றறிந்துநாடி இங்குப்பொன்றருதலேயோ

வசனம்

கேளும் நக்ஷத்திரந்தரகரே தொலைதூரம் நடந்துவந்த ஆயாசந்தீரக்ஷணப்போதிந்த மண்டபத்திலிருந்து இப்பட்டணத்திலுண்டான பாக்கியவான்களை இன்னாரினியாரென்று விசாரித்து அவர்களைக்கண்டுபாசகம்பண்ணிஉம்முடைய கடனைக்கொடுத்துவிடுகிறேன்கோபஞ்செய்யாமற் பொறுத்துரட்சிக்கவேணுஞ்சுவாமி

தரகன்-விருத்தம்-இ-ம்-தும்பகாம்போதி

பட்டாடையிரவலீந்துபலகையொன்றெடுத்துக்கொண்டு
புட்டத்தின்பின்னேபோன புதுமைபோலுனைத்தாங்கியே
வட்டமோவட்டியோவுன்வசம்வைத்தபொன்னுக்கிந்த
சிட்டைகள்செய்யவேணும் தெருவிலிங்கேநிற்பாயே

வசனம்

அடாய் அடாய் சந்நாய்நீகதைகேட்டதில்லையோபட்டுப்படைவை இரவல்கொடுத்து மனையைத்தூக்கிக்கொண்டு பின்னேதிரிந்தது கேட்டிலையோ அந்தன்மைபோல் நம்மிடரொக்கத்தை உன்கையிற்கொடுத்துவிட்டுஉன்பின்னே திரியலாச்சுது ஆயிரத்துக்கு ஐந்நூறுவட்டமோ நூற்றுக்குப்பத்து வட்டியோ அதுவெல்லாமிருக்கட்டும்இதோநம்மிட கையிலேஇருக்கிறமோகனமாலைகைக்காப்பு முதுகுகவசம்மீசைமுறுக்கிப்புநுமந்தச்சேர்வை இதுவெல்லாம் நோக்குச்சாதிக்கவேண்டியிருக்கிறது ஆகையாலிந்தக்கொடிய வெய்யிலிலே சுடுகிறமணலிலே நடுத்தெருவிலே இந்தக்கோட்டுக்குள்ளே அசையாமலிரும்பிள்ளாய்

இராசன்-விருத்தம்-இ-ம்-தோடி

தாரைவார்த்திட்டபொன்னைத்தருவதற்கைப்முன்போ
ஆரைநான்கொடுமைதீமையனியாயஞ்செய்திட்டேனோ
பாரையாளரசன்முன்னேபட்டபாடிதுவோவித்தைத்
தீரையோதெய்வமேயுன்சித்தமுங்கல்லுதானோ

வசனம்

சரணஞ்சரணஞ்சுவாமி தானங்கேட்ட ரிஷிகளுக்குக்கொடுத்த பொன்னைப்பிராணன்போனாலுமில்லை யென்றுசொல்வேனோ ஐயையோ ஆரையிந்தக்கொடுமை செய்தேனோ அந்தப்பாவ மிப்படியனுபவிக்கிறேன் தெய்வமே இந்தச்சங்கடத்தைத்தீர்க்காயா உன்மனது கல்லாகொஞ்சமாகிலுமிரங்காதாதெய்வமே

தரகன்-வசனம்

அடாய் அடாய் சந்நாய் உன்னைப்போல் வீட்டில் பணந்தந்து
[illegible]

தென்று முழிக்கிருயோ மாப்பிள்ளைபோலே நிற்கிறவத்தேனே
புதனுலேயோகுனியும்பிள்ளாய்சரப்பளிபோடட்டும்.

இராசன்-வசனம்.

சுவாமிசுவாமியும்முடையசித்தமென்பாக்கியம்அரிகரி அரிகரி.

இராசன்-தரு-இ-ம்-சாவேரி-அட தாளம்.

சிவசிவாகாசிபுரிவாசாவிஸ்வேசா
திருவுளச்செயலொன்றுமறியேனே
எவர்களுக்கெந்தவினை யெப்படிசெய்தேனோ
எனக்குலபிக்குமென்று குறியேனே
தான்செய்தகர்மமெல்லாந் தானேயனுபவிக்கத்
தர்மசாஸ்திரஞ்சொல்வது மெய்தானோ
வான்பதியானதேவர் மாதவர்மறையோர்கள்
மனதுநொந்திடக்குறை செய்தேனோ
அடைக்கலம்வைத்தபொரு ளபகரித்தேனோதெய்வமே
ஆலயம்பாழாகக்கண்டு சகித்தேனோ
தடைக்குள்ளிருக்கும்பாம்பைத் தடிகொண்டடித்தேனோ
தழுவிப்பிறர்தாரத்தைச் சுகித்தேனோ
தாழ்ந்தவறுமையினுற் றளர்ந்தமனிதர்மனந்
தத்தளித்துக்கொதிக்கநான் வைதேனோ
சூழ்ந்தரணக்களத்திற் றோற்றுமுதுகிட்டோரைத்
துரத்திப்பாணங்களினு லெய்தேனோ.

தாகன்-வசனம்.

அடாய்அடாய்சந்தா நீயழுகிறத்திலேநேக்குமானாயுனேக்கிறது
மிடரொக்கத்தைக்கொட்டறையாரோக்குக்கையிலேகாப்புமாட்ட
டுமா.

இராசன்-வசனம்.

தடையில்லாமற்கொடுக்கிறேன் என்பேரில் கோபஞ்செய்திப்
பர்க்கொத்தவருத்தங்கள்செய்யவேண்டாம் இன்றைக்குவிடும்நட்ச
திரத்தரகரே.

தாகன்-தரு-இ-ம்-பர்துவராளி-அட தாளம்.

விடுவேனோபாரும் இனிமேல்நான் விடுவேனோபாரும்.
விடுவேனோகபடத்தை விடுவேனோதருணத்தில்
விடுவேனுஇவனொந்து மெலியும்வேளைய்திந்து
விடுக்கும்வெகுதந்த்ர மிருக்குமரிச்சந்த்ர
விரனுருகினும்கோரம்பெருகினும் (விடுவே)

உண்மைசொற்பாராட்டிஇவன்பெண்டாட்டியுருகிருக்சீராட்டி
அண்ணுந்தாளைப்பூட்டிக்கையைநீட்டிபதிற்கிட்டிக்கோலைமாட்டி
கண்ணீர்விட்டழுதாலுங்கைகூப்பிந்தொழுதாலும்
கசக்கியிறுக்கிச்சாறு கச்கச்செய்திடையூறு
காட்டிப்பம்பரமாட்டிக் கடுவினையைமூட்டிக்
கதறிமனைவியுமகனுஞ்சுழலவேகருகிபிவன்மனமதிலுழலவே
கடினமுனியெண்ணமுடியவெகுவண்ணங்
காலனுஞ்சனிபோலுமுனிந்தினிவிடுவேனோபாரும் இனி (விடு

தாகன்-வசனம்.

அடாய்அடாய்நோக்குவருத்தமுண்டானலன்றோ நம்மிடரொக்கத்தைக்கொட்டுவாய்கையைநீட்டும்பிள்ளாய்காப்புமாட்டட்டும்.

இராசன்-வசனம்.

இப்படிக்கெல்லாம்வருத்தப்படுத்துவதினல் பொன்வந்துபோமோசுவாமி.

தாகன்-வசனம்.

இருக்கட்டும்பொன்னைக்கொட்டடாகொட்டு.

இராசன்-தரு-இ-ம-கண்டா-அடதாளம்.

இந்தவிதிபெந்தனுக்குவரலாமோ-ஒகோ
இன்னமென்னவிதியோஐயையோதெய்வமே
வந்தவிதியெல்லாந்தானேமனுக்களன்னல்வசமோ
வரட்டும்வாட்டுமையையோதெய்வமே
செங்கோல்பிடித்தகையிற்கிட்டிக்கோல்நெரிக்கவுஞ்
செய்தேனேதவங்களையையையோதெய்வமே
அங்கமெல்லாநொந்துஆவிதடுமாறுதே
அரிகரியிதென்னஐயையோதெய்வமே
ஓட்டைச்சாண்கயிற்றிலேயண்ணுந்தாள்மாட்டிக்கொண்டே
உபத்திரவப்படவிட்டாயையோதெய்வமே
சட்டமண்ணிலொற்றைக்காலில்தொடுத்தஅண்ணுந்தாள்கிட்டு
தொலையவிதியுண்டோஐயையோதெய்வமே. (க்கோ

இராசன்-வசனம்.

அரகரா சிவசிவாசம்போ காசிவிஸ்வநாதா இந்தவருத்தப்படவென்னல்முடியுமாகிருபைசெய்திரட்சியும்சுவாமி.

தாகன்-வசனம்.

இதோபொய்சொன்னன்இதோபொய்சொன்னன் இதோபொய்சொன்னன்இதோபொய்சொன்னன்பாருங்கள்.

தாகன்-வசனம்.

அடாய்அடாய் சந்தா அண்ணுந்தாள் போடக்கூடாதென்றும் இடிக்கோல் போடக்கூடாதென்றும நம்மிடஆக்கினைக்குட்படக்கூடாதென்றும் சொன்னையே அதுபோதும் அதுபோதும்.

இராசன்-வசனம.

தெய்வத்தை வேண்டிக்கொண்டேனே யல்லது உம்மைச்சொல்லவில்லை சுவாமி.

தாகன்-வசனம்.

ஆனல் சந்தோஷம் கண்ருப்க்கிட்டிக்கோல் நெரிக்கிறேன்.

இராசன்-வசனம். அரிகரி அரிகரி.

சந்திரமதி-தரு-இ-ம்-புன்னுகவாரளி-தாளம்-ஆதி.

றையவரேஜயோவுமதுமனமுங்கருங்கல்லோ இந்த
மன்னர்படுந்துயரங்கண்டால் வையகமிரங்காதோ
றைகளொன்றுஞ்செய்தறியோங்கோபஞ்செய்யலாமோ இந்த
குழந்தைபடுந்துயரங்கண்டால் கொஞ்சமுமிரங்காதோ
பண்ணுடனே ஆணுடனேபிறந்ததுவுமில்லையோ இந்தப்
பேதைபடுந்துயரங்கண்டால் பேயுமிரங்காதோ
ண்மையாகக்கடன்கொடுக்க வுடன்பட்டுவந்தோமே நல்ல
உத்தமரேயெங்கள்துக்கங்கண்டால் சித்தமிரங்காதோ
காராசனரிச்சந்திரமகிபாலன் படும்
வாதைகண்டாலுமதுபஞ்ச பூதமிரங்காதோ
கசரீரமகாகெம்பீர துரையரிச்சந்திரமன்னன் இந்த
துக்கப்படக்கோபிக்குமுமது சொல்லு மிரங்காதோ
ன்னைக்கொன்றுகோபந்தீரு மெந்தன்மணவாளன் ஐயோ
இத்தவருத்தம்பட்டாற்பூமி யெல்லா மிரங்காதோ
கண்ணஞ்சிறுகுழந்தையிவன் திகைத்தழுகின்றன்பாரும் நீர்
செய்யுங்கோரத்தால்மரங்களுஞ்செடிகளு மிரங்காதோ

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

என்செய்வேனையாகைதனிற்கிட்டி யிறுக்கவும்நீயழுதேங்க, மு
பின்னேர்துணைகளில்லையோதெய்வமுமழுதஞ்சோதிப்பதுவிதியோ,
ன்மமோவடியேன்கதறிகின்றழுதாற் கருங்கல்லுமிரங்குமேயிந்த,செ
மகாதகர்க்குக்கொஞ்சமும்பொல்லாச் சித்தமுமிரங்குவதில்லையோ.

வசனம்.

ஐயையோ என்னைப்பெற்றஐயனே இந்தவருத்தமுமனுப்பவிக்கத் தப்வமுஞ்சம்மதிக்குமா என்னைப்போலொருபிள்ளை யேங்கி யழுகிற

தைக்கண்டால் கருங்கல்லுமுருகுமே இந்தநட்சத்திரத்தாகருக்குச்சித்தமஇரங்கவில்லையோ ஐயையோதெய்வமே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-புன்னாகவராளி.

என்னருமகனேயென்றவப்பலனே யென்செய்வேனுன்னைப்பெற்றெடுத்த, மன்னவனிந்தவருத்தமுந்துயரமும் வந்ததின்றழுவதைக்கண்டு, உன்முகம்பார்த்துநானழுதிடவு மொழுங்கின்றழுவதுநீயெங்கிஎன்முகம்பார்க்கிலென்செய்வேனப்பாவி துவுமுன்செயவினைமகனே

வசனம்.

அப்பாமகனேதேவதாசா அருமையாயுன்னைப்பெற்ற தகப்ப னிந்தத்துக்கப்படவும் அதைப்பார்த்து நீயழுவும் உன்முகத்தைப்பார்த்துநானழுவும் இப்படியுந் தெய்வஞ்செய்ததே என்னசெய்வோம் என்னசெய்வோமப்பா.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-முகாரி.

நெருங்கியசேனைக்கடலிலேபுகுந்து நெருப்பெனப்பாணங்கள் மழைபோற், சொரிந்தமர்வெல்லுமன்னர்கள்மன்னா குதிலாமனம்படைத்தோனே, கருங்கல்லோவிந்தமறையவனெஞ்சங் கடுமையாய்வருத்தங்கள்செய்தால், அருங்கடன்தீர்க்கவகையெனக்குண்டோ வையையோ பாவிநானேனே.

வசனம்.

இரதகசதுரகபதாதிகளுடனேகூட எதிர்த்தமகாபலசாலிகளையெல்லாம் வெட்டிச்செயம்கொண்ட இராசராசனை உமக்கிப்படிப்பட்ட துன்பமும் வரலாகுமா இந்தத்துக்கத்தைக்கண்டுமிரக்கமில்லாமல் மனதைக் கருங்கல்லாக்கி வைத்திருக்கிறாரே யிந்தமகானுபாவர் இவருக்கு நானிந்தக்கடனைத்தீர்க்க வகையில்லாமல்பாவிபோலப் பார்த்திருக்கிறேனே அரிசி.

தாகன்-வசனம்.

அடாய் அடாய் சுந்தா உன்மந்திரி சொல்லுகிறத்திலே நீஎன்னமோவெட்டிக் கொலைசெய்தவனும் அதைக்கேட்கவே நேக்குப்பயமாயிருக்கிறது நீசண்டைபண்ணுகிற இராசாவாணத்தினாலே புதுக்கோயிந்தஅர் புறுத்தாணி வைத்துக்கொண்டாய் இப்போதுபார்த்தையா முக்குக்குமாலே விரலுக்குப்பவுத்திரம் சட்டமாயிருக்கிறது கிட்டிகொக்கட்டும்பிள்ளாய்.

இராசன்-தரு-இ-ம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

போதும்போதுமிந்தத்துக்கம்பொறுக்களன்னால்வசமோ காசிவிஸ்வநா ஏதுகாரணமோநான் முன்னே என்னபாவம்செய்தேன் காசிவிஸ்வநாதா (த

பதியிழந்துபலமிழந்துபன்னுாடிழந்தேன் காசிவிஸ்வநாதா
கதியிழந்துபோனாலுங்கடனைத்தீர்க்கவந்தேன் காசிவிஸ்வநாதா
சந்தனஞ்சவ்வாதுபூசுஞ்சரீரம்நோகுதே காசிவிஸ்வநாதா
தந்திரஇந்திரசெகசாலப்புரட்டறியேன் காசிவிஸ்வநாதா
அந்தவிசுவாமித்திரர்க்கோரக்ரமமுஞ்செய்தேனோ காசிவிஸ்வநாதா
செந்தளிர்விரல்நசுங்கத்தேகமநோகுதையோ காசிவிஸ்வநாதா

வசனம்.

சிவசிவா சர்வசீவரட்சகா தயாபரமூர்த்தி விசாலாட்சிநேசா காசிவிசுவநாதீசா கையிலேகிட்டிக்கோல் கெரிக்கிறத்திலே மாணவாதைள்த்து விரல்களெல்லாம் பஞ்சுபஞ்சாய் நசுங்கிறதே கழுத்தொடிந்துபோகிறதே இடுப்புவிட்டுப்போகிறதே இனியிந்தவருத்தப்பட என்னால்முடியாது கிருபைசெய்து ரட்சியும் சுவாமி.

தாகன்-வசனம்.

வாத்தியாரே வாத்தியாரே பிள்ளைக்கென்ன வருமென்றால் அவளாயினையவிக்க அவனுக்கேதுவருமோ நேக்குத்தெரியாது நேக்குமாதம்முணுசின்னபணம வருமென்கிறதைக் கேட்டதில்லையோ நீஇப்படி அழுகிறத்திலேயும் உன்னும்புடையாள் பாசாங்குகாட்டுகிறத்திலேயும்இந்தக்கள்ளப்பயல் கண்ணைச்சிமிட்டுகிறத்திலேயும் நம்மிடரொக்கத்தைவிட்டுவிடுவேனோ நீரொக்கத்தைக் கட்டப்போகிறதுமில்லை நான்விடப்போகிறதுமில்லை இதுநல்லதருணம் கொடுத்தநாட்டை யில்லையென்று ஒருபொய்மாத்திரஞ்சொன்னால் உம்மைத்தூக்கிக்கொண்டுபோய் அயோத்தியில் பட்டங்கட்டிவைக்கிறேன்.

இராசன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

கொடுக்கென்றேயெனதுபிராணன்போனாலுமொருபொய்சொல்லேன்
இடுக்கண்களெதுவந்தாலு மென்றலைவிதியேயல்லால்
படுக்கவிகொண்டிடவதைத்து நறுக்கியேபிழிந்திட்டாலும்
அடுக்குமோநாட்டைவாங்க அருங்கடன்தீர்ப்பேன்சுவாமி.

வசனம்.

இதைப்பார்க்கிலும் குரூரமானவருத்தங்கள்செய்து என்னைநறுக்கிநசுக்கிப்பிழிந்தாலும ஒருவருக்குத்தானங்கொடுத்த நாட்டைவாங்கஅடுக்குமோ பொடுக்கென்றுபிராணன்போனாலும் ஒருபொய்சொல்லமாட்டேன் எவ்விதத்திலேயும் உம்மிடபொன்னைச் செலுத்திப்போடுகிறேன்சுவாமி.

தாகன்-வசனம்.

அடாய் அடாய் மனிதனுக்குச் சந்தோஷம் வந்தபோது யாசித்துவந்தவர்களுக்குவேணதெல்லாந் தருகிறேனென்று சொன்னான் சங்க

டம்வந்தபோது அதைநினைக்கிறதா இன்னம் நோக்குவருத்தம்போது
துஇதோ அனுமந்தசேர்வையும் மீசைமுறுக்கியுங் கொடுக்கிறேன் பெ
ரும்பிள்ளாய்.

இராசன்-வசனம்.

தேவரீர்சித்தஞ் சுவாமி வந்ததெல்லா மனுபவிக்கக் காத்திருக்கிறே

தாகன்-வசனம்.

படுகளத்திலெப்பாரியா பணத்துமுன்னையா தாட்சண்யம் நா
விடேன் விடேன்.

இராசன்-வசனம்.

சுவைகூலிகொடாத பாவியாக்களும்நான் ஆசையால்இந்தவாதனை
யும் வருத்தமும்படவந்தது அரிகரிஅரிகரி.

சந்திரமதி-தரு-கண்ணி.

இ-ம்-எதுகுலகாம்போதி-தாளம்-ஆதி.

தருமமில்லையோநீதிசத்யமில்லையோ இது
தலைவிதிதானேஐயோ தெய்வமே
கர்மவசமோஎந்தன்கணவன்படுந்துயரம்
கண்ணாற்காணவோவைத்தாய் தெய்வமே
ஆரையடித்துநாங்களலங்கோலஞ்செய்தோமோ
அன்றிவிதிவினையோ தெய்வமே
வாரங்குடிகளுக்குவழங்கினதற்குறையோ
வான்முறைதப்பினேமோ தெய்வமே
தாயில்லாப்பிள்ளைகளைத்தளரவெடுவெடுத்துத்
தள்ளிநிந்தித்தோமோஐயோ தெய்வமே
சாயும்நிழல்வழியிற்றழைத்திருந்தமரங்களைத்
தறித்தோமோநாங்களையோ தெய்வமே
பாலடைக்குப்பால்வாமல் பாலர்நொந்துகதறியழப்
பார்த்திருந்தோமோஐயோ தெய்வமே
காலஞ்சென்றபெரியோர்மனங்கலக்கம்படச்செய்தோமோ
காரணமோஅரிகரி தெய்வமே

தாகன்-வசனம்.

சந்தி சந்தி நோக்குத் துக்கம் வந்ததிலே நேக்கு ரொக்கம் வந்த
வந்தது.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

தூணைப்போலுயர்ந்ததோளா துவண்டுநீவருந்துந்துக்கம்
காணப்போமிவர்போல்நெஞ்சம் கருங்கல்லாயிருப்பவர்க்கே
காணிப்பொன்னிருக்கச்சொந்தக் கணவனையிழப்பாருண்டோ
நாணச்சஞ்சலப்படாமல் நாயேனைவிறபாய்சுவாமி.

வசனம்.

கேளு மெனதுபிராணரட்சகரே இப்போதுநீர்படுகிறவாதனையை நட்சத்திரத் தரகனைப்போலக் கருங்கல்லுககுச்சமதையானநெஞ்சமபடைத்தவாகள்பார்க்கலாமேயல்லது என்கண்ணிறைலபார்க்கத்தகுமா காணிப்பொன்னிருக்கக் கணவனையிழப்பார்களா எவ்வளவுஞ்சஞ்சலப்படாமலடியாளைவிற்றுத்தேவரீர்கடனைத்தீர்த்துப்போடுஞ்சுவாமி.

இராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

கண்ணினுண்மணியேயின்பக் கரும்பெனுமதுரமானே
பெண்களின்மிகுந்ததோரென் பெருந்தவப்பயனேகேளாய்
எண்ணுமென்கருத்துக்கேற்ற வெண்ணம்நீகொண்டாய்மெய்யே
வண்ணமாயுன்னைவிற்று வாழ்வேனோமனந்துணிந்தே.

வசனம்.

கேளாய்பெண்ணேசந்திரமதி நான்சொன்ன சத்தியந்தவறுதபடியேநீயும்நினைத்தாய் அதுசரியேபிராணநாயகியான உன்னைவிலையறவிற்று அப்பாலிந்தப்பூமியிலிருந்து உயிருடனேவாழ்வேனே என் கண்ணின்மணியே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

வாழ்வதுபொய்யேயாகும் வையசந்தனிற்பிறந்தோர்
ஊழ்வினைதொலைக்கவேணு முறுதியாய்மகனோடென்னைத்
தாழ்வறவிலையாய்விற்றுத தாகற்கேபொன்னைத்தந்து
கேள்வியின்மிகுத்தசத்ய கீர்த்தியோடிருந்துவாழ்வீர்.

வசனம்.

கேளு மெனதுபிராணரட்சகரே பூமியிலேபிறந்தவர்களெல்லாம் வாழ்கிறதுபொய்யுஞ்சாகிறதுமெய்யுமென்பதுதெரிந்திருக்குமே ஊழ்வினைப்பயனையனுபவித்துத்திரவேணும் என்னையும்மகனையும்விலையறவிற்றுஇந்தத்தரகருக்குக்கடனைத்தீர்ததுத்தேவரீர்மந்திரியுடனேகூடச்சுகமாயிரும்சுவாமி.

இராசன்-வசனம்.

சத்தியமேநித்தியம் காயமேயநித்தியம் அப்படியேசெய்குவேன் பெண்ணேசந்திரமதி.

தாகன்-வசனம்.

அடாய் அடாய்சந்தா கேக்கு இடுப்புவிட்டுப்போகிறது வகை
வலிக்கிறதுகழுதனைநோகிறது ஆகையால்ரொக்கத்தைக்கொட்டறை
கொட்டறையாதாரையாநெருக்கிறேன் இன்னம்நெருக்கிறேன் குனி
னி அசையாதே அசையாதே வைவை.

இராசன்-விருத்தம்-இ-ம்-தன்னியாசி.

முடிந்ததோசெய்யவேண்டு முறையெலாமின்னமுண்டோ
கடிந்ததால்வருவதுண்டோ கலங்கிறேன்கண்ணுறக்கண்டீர்
படிந்தசொல் மகனொடுநதன் பத்தினிதனையுமவிற்று
விடிந்தசூரியன்போமுன்னே மிகுங்கடன்தருவேன்சுவாமி.

வசனம்.

ஆச்சுதாசுவாமி நட்சத்திரத்தாகரே படுத்தவேண்டியஉபத்திரவ
களெல்லாம்படுத்தினீரா இன்னமிருக்கின்றதா.

தாகன்-வசனம்.

ஓகோகோ இன்னம்வேண்டிய விசித்திரங்களெல்லா மிருக்கின்
றே அதையெல்லாமெங்கேகண்டாய்.

இராசன்-வசனம்.

அப்படி யினிமேலென்னையொன்றும் வருத்தப்படுத்தவேண்டா
இக்தமட்டுக்கும்நான்பட்ட அவஸ்தைஅந்தவிஸ்வாதாறியாரா உம்மி
மணதென்னகல்லா அரிகரிஇந்தமட்டோடேயென்னைவிட்டுவிடும் எ
பெண்சாதிபிள்ளைகளைவிலைகூறிவிற்று உம்முடையபொன்னைக்கொடு
துவிடுகிறேன் சுவாமி.

தாகன்-வசனம்.

ஆகாஆகாஆகாஆகா அடாய் அடாய்சந்தா நோக்கேதடா வெட்
மில்லை ஆம்புடையாளையும்பிள்ளையையும் விற்கப்போகிறாய் இவளையு
ந்தப்பயலையுங்கண்டால் ஒருகாசுகொடார்கள்.

இராசன்-வசனம்.

வந்ததெல்லாமென்னதிர்ஷ்டம உனக்கேனந்தவழக்குஉம்முடை
யபொன்னைக்கொடுத்துவிடுகிறேன்சுவாமி,

தாகன்-வசனம்.

ஆனல் விற்றுக்கொடும்பிள்ளாய் சந்தா.

சந்திரமதி-கொச்சகம் - இ-ம்- புன்னாகவராளி.

கன்னல்வில்வேளனுமிந்தக் காளையுடனேயெனையும்
இன்னம்விலைகூறு திருப்பதென்னவகையறியேன்
என்னவகைவேறே யிருக்குதிலர்கடன்கொடுக்க
சொன்னமொழிதவறாற் றுணிந்துவிலைகூறரசே.

வசனம்.

கேளுமென துபிராணநாட்சகரே தேவரீர் சொன்ன சத்தியத்துக்குப் ழுதில்லாமல் என்னையும் இந்தப்பிள்ளையையும்விற்று விஸ்வாமித்திரர் டனைத்தீரும் வேறேயென்ன விருக்கின்றது அவர் கடனைத்தீர்க்கத்த டசெய்யாமல்விலைகூறுஞ்சுவாமி.

இராசன்-வசனம்.

அப்படியேசெய்கிறேனடீ தோ இந்தத்துரும்பைக்கிள்ளியுங்கள் தலை லேவைக்கிறேன் நீங்களசத்தியமாய் விலைப்படவேணுமென்று முன் னாநடவுங்கள்பெண்ணே சந்திரமதி அப்பாதேவதாசா.

சந்திரமதி-வசனம்.

அப்படியேநடக்கிறோம் சுவாமி.

இராசன்-தரு-இ-ம-புன்னாகவராளி-ஆதிதாளம்.

காசிநகரில்வாழுங்கனத்தகுடிகளேயென்
காதலியைக்கொள்ளுங்கள்விலை கூறினேன்-பட்ட
கடன்தீர்க்கவேமனந் தேறினேன்
ஏச்சுண்டோவென்மகனை யென்மனைவிதன்னைநானே
இன்றுவிற்ககூறிவிலை விதித்தேனே-வந்து
இடருக்காய்விற்கமனஸ் கரித்தேனே
வீசுமபுகழ்பிரமகுல வேதியாரானுலுஞ்சரி
வேறெவர்கள்வந்துபொன்னைக் கொடுத்தாலும்-விற்பேன்
விடுவாரோதலைவிதி விடுத்தாலும்
மாசில்லாக்ஷத்திரியகுல மன்னராநாலுஞ்சரி
வந்துபொன்கொடுத்துக்கொள்ளத் தடையுண்டோ-யார்க்கும்
வரும்விதிவெல்வதுமன்னர் மதிகொண்டோ
காணிகாணியாகத்தேடிக் கோடிகோடிசெலவழிக்கும்
கருத்துள்ளவைசியகுல நிதியாரோ-எந்தன்
கடனுக்கிதல்லால்வேறே கதியாரோ
நிலத்தையுழுதுபயிர் நிலைக்கச்செய்துயிரைக்காக்கும்
நிறைபெறுச்செல்வமுள்ள குடியோரோ-இவளை
நிதிகொடுத்துக்கொள்வீரிந்தப் படியோரோ
தேரோடும்வீதிமற்றத் தெருவீதிகடைவீதி
செப்பும்பலவீதிகளி லுள்ளோரோ-கடன்
தீரக்கொள்வீரிவர்பொறுத்துக் கொள்வாரோ
ஆனாயிந்தப்படிசெய்தேனே அரசிழந்துபெண்டுபிள்ளை
யடங்கலும்விற்கத்துணிந்த பாவிநானே-இந்த
அவதிதீரக்கொள்வீரென்று கூவினேனே

தாகன்-விருத்தம்-இ-ம்-தோடி.

உழுகிறகுண்டையானு லுள்ளூரில்விலைப்போகாதோ
அழுகிறாயூரைச்சுறறி யார்கொள்வாரிவளைமன்னு
தொழுதுநீவிஸ்வாமித்ரர் சொற்படிச்செய்தாயானூற்
பழுதுண்டோகடனுந்தீரும் பாக்யமுமடைவாய்சொன்னேன்.

வசனம்.

அடாய் அடாய்சந்தா ஏன்விருதாவிலே தெருத்தெருவா யிவர்களை யிழுத்துக்கொண்டலைகிறாய் அலைக்ததினாலேயார்வாங்குகிறார்கள் உழுகிறகுண்டையானால்உள்ளூரில்விலைபோகாதா இந்தத்தொந்தனாநீபடமாட்டாய்கடனுந்தீரமாட்டாது விசுவாமித்திரர்க்குநீகொடுத்தநாட்டை இல்லையென்றொருபொய்சொல்லுவாயானல் இராச்சியபட்டாபிஷேகமுனைக்குவாங்கித்தருகிறேன் இந்தக்கடனையும்விட்டுவிடுகிறேன் இதைச் சத்தியமாய்நாபு நேக்கானல் ரொம்பவும் பரிதாபமாயிருக்கிறது ஆனைப்படிக்குயதார்த்தம்யதார்த்தம்.

இராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

எரிகிறநெருப்பின்மீதி லெண்ணெய்விட்டாற்போலென்மேற்
சரிகிறீருருக்கமெய்யே பாவத்துக்கஞ்சவேணும்
தருகிறேனுமதுபொன்னைச் சட்டமாயிவளைவிற்றே
வருகிறகன்மமெல்லாம் வரினும்பொய்சொல்லேனையா.

வசனம்.

நீர்பரிந்துபேசுகிறதைப்பார்த்தால் எரிகின்றநெருப்பில் எண்ணெயைவிட்டாற்போலிருக்கின்றது பாவத்துக்கஞ்சாமற் பொய்சொல்லேனே என்னகர்மம்வந்தாலும்வரட்டும் இவர்களைவிற்றுஉம்மிடகடனைத்தீர்க்கிறேன் சற்றுநேரங்கோபம்பண்ணாமலிரும் நட்சத்திரத்தாகரே.

தரகன்-வசனம்.

உள்ளத்தைச்சொன்னல் லொள்ளென்றுவீழ்கிறாய் உன்பாடுபெண்ணைபிறக்கூழ கொட்டாங்கச்சியெப்படியாகிலும் நம்மிடமொரக்கத்தைக்கொட்டறதேநமக்குப்பெரியகாரியம் இனியிதவிடத்தைகவிட்டு எடுத்தடியைவையேன் உன்பின்னூலேதிரிந்துதிரிந்துநேக்குக் கால்வலிக்கிறது.

இராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

இந்நகரத்தரசிதன்னி லிருக்கின்றபாக்கியவான்கள்
வந்திவர்தம்மைக்கொள்வீர்மறையவர்கடனால்நொந்தேன்.

எந்தச்சாதியாரானாலுமிவர்கடன்கொடுத்தேயிந்தச்
சுந்தரமாதோடெந்தன் சுதனையுங்கொள்ளுவீரே.

வசனம்.

கேளுங்கள் இந்தக்காசிப் பட்டணத்திலுண்டாகிய புண்ணிய வான்களாகிலும் பாக்கியவான்களாகிலும் யாராகிலும் எந்தச்சாதி யாராகிலும் இவருக்குநான் கொடுக்கவேண்டியகடனைக்கொடுத்துவி ட்டால் இந்தஸ்திரீயையும் பிள்ளையையும் விலையாகக்கொடுத்துவிடு கிறேன் இரக்கமுள்ள உத்தமர்களே.

பொது-விருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

மகனொடுமனையாள்தன்னைவருந்தியேயந்தக்காசி
நகரெலாந்திரிந்துகூவி நாடியேவிலைதான்கூற
மிகுதவவிஸ்வாமித்ரன் வினையவஞ்சனையாலாங்கோர்
திகழ்மறையவன்போலக்னிதேவர்தாம்வருகின்றாரே.

வசனம்.

அகோதெப்படியென்றால் அரிச்சந்திரமகாராஜன் காசிப்பட்ட ணத்தில் வீதிவீதியாய் விலைகூறிவருகிறபோது விஸ்வாமித்திரர்மா ய்கையினாலேயக்கினிதேவர் பிராமணரூபமாய் வருகிறவிதங்காண்க.

காலகண்டகன்-வருகிற-தரு-இ-ம்-பந்துவராளி-அடதாளம்.

காலகண்டகவேதியர்வந்தார்-வந்தாரிதோ
காலகண்டகவேதியர்வந்தார்
நீலகண்டசதாசிவன்விழிவளர்
நெருப்புப்பொறியெனநினைவிற்செறிமன (காலகண்)
லீலமான அக்கினிப்பொறியெனுந்தேகம்விளங்கமகாப்ரசங்கங்கண்டு
நிகழ்சதுர்வேதமும்நாவிலே துலங்க
ஆலகாலவிஷம்போல்நிருகண்க ளிலங்க - வெடுவெடென்று
அருகினில்வருகிறபேர்களுங்கண்டுவிலங்க
காலங்கண்டபெரியோரிலும் நானே
கைகண்டயாகமனேகஞ்செய் தேனே
சாலப்பெண்டுபிள்ளைவிற்கிறே னென்று
தவித்தவனெங்கேகொள்வே னின்று
நடதடென்றோடிநடந்துதள்ளாடித்
தத்தடியிட்டுத்தாவிக்கூப்பிட்டுக் (காலகண்ட)

காலகண்டகன்-விருத்தம் இ-ம்-ஆனந்தபைரவி.

உசிதமாய்த்தெருவில்நின்றேயொப்பனையிட்டேகூவிப்
பசுவைவிற்பவர்கள்போலப்பரிந்திங்கேவிலைதான்கூறி
இசையுடனழுததாரோஇவன்றானோநீயோஆரோ
கசியுங்கண்ணீரோதுர்தன் கருத்தேதோவுரைசெய்வாயே.

வசனம்.

ஏதடா அடா இங்கேபசுமாட்டை விலை கூறுகிறதுபோலே இருந்தது நேக்கு ஆரீடா கூவியழுதவன் நீயா அடாய்நீயாய்அடா ய் நீயேதுக்கடாஅழுறாய் நீ கூப்பிட்டகாரியந் தெரியச்சொல்லும் பிள்ளாய்.

இராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

மறையவரோநீர்கேளும்மனைவியைமகனைநானே
நிறைமனதுடனேவிற்கநெடுந்தெருவெங்குஞ்சென்றேன்
பொறையுடன்கொள்வீராலுல்புனிதமாங்கடனுந்தீரும்
குறைவிலையிதுதான்சேதிகுணமுடனுரைத்திடீரோ.

வசனம்.

கேளும் சுவாமி பசுவுமல்ல கன்றுமல்ல என்பெண்சாதியையு ம்பிள்ளையையும்விலைகூறினேன் நீர்கொண்டால்மகாவுத்தமம் என்க டனும் தீரும் புனிதனாவேன் சொல்லுஞ்சுவாமி.

காலகண்டகன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

பையலோடிவளைக்கொண்டாற்பணத்துக்கோர்லாபமுண்டோ
கையிலேயிருக்கும்பொன்னைக்கரைத்திடப்பார்க்கிறாயோ
மெய்யோதானிவளைநீயேவிலைகூறிவிற்றபின்பு
பொய்யாமோநேக்கேதேனும்புனசுருட்டுகளுண்டாமோ.

வசனம்.

அடாய் அடாய்நீசொல்லுகிறதைப்பார்த்தால் நேக்குப்பயமாயி ருக்கிறது என்கையிலேகொஞ்சந்திரவியம் இருக்கிறதைக் கரைக்க ப்பார்க்கிறாயோ இவளையுமிந்தப்பயலையுங்கொண்டால் பணத்துக்கே தாகிலும் லாபமுண்டோ அல்லது புனசுருட்டுகளேதாவதுண்டோ மெய்யாகவிற்கிறாயாசொல்லும்பிள்ளாய்.

இராசன்-வசனம்.

ஆம் சுவாமி நிச்சயமாய்க்கடனுக்காகவேவிற்கிறேன்.

காலகண்டகன்-வசனம்.

அடாய் அடாய் நீவிற்றுப்போனபிற்பாடு இன்னமொருவன்ஏ ன்பெண்சாதி பிள்ளையென்றுவந்தால்நேக்கெப்படி.

இராசன்-வசனம்.

அப்படிவித்தியாசம் வாராதுதேவரீர்சந்தேகப்படாமற்கொள்ளு சந்தேகமுண்டானால் நடுத்தெருவிலேவிலைகூறுவேனேசுவாமி.

காலகண்டகன்-வசனம்-ஆனால்விலைசொல்லும்பிள்ளாய்.

இராசன்-விருத்தம்-இ-ம்- தோடி.

பலவானோரானையின்மேற்பற்றிநின்றுயரநோக்கி
விலகாதுகவண்கல்விட்டவிசைதூரம்நிறைந்தபொன்னை
நலமாகயிவர்க்குத்தந்தால் நான்பட்டகடன்தான்தீருங்
குலமனையாளோடிந்தக்குழந்தைக்கும்விலையிதாமே.

வசனம்.

விலைசொல்லுகிறேன் கேளுஞ்சுவாமி யானையின்பேரில்பலசா நின்றெறிந்த கவண்கல் போகுந்தூரம் பொன்னையிவருக்குக்கொடு கவேணும் அதுதான் இவளுக்கும்இந்தக்குழந்தைக்கும்விலைசுவாமி.

காலகண்டகன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

இந்தநற்சிறுவனோடுமிவளையும்விலையாய்விற்க
வந்ததோர்கருமமென்னவரலாறேதறிகிலேனே
வந்தவாறுரைத்தால்வாங்கமனதுசம்மதிப்பேன்பொன்னைத்
தந்துனைமகிழச்செய்வேன்தரும்விலைக்கிவர்களீடோ.

வசனம்.

அடாய் அடாய் நீசொல்லுகிறவிலைக்கு இந்தப்பிள்ளையுமிவளு ஈடுபொறுதுபொறுது ஆனால் நீபடுகிறத்தைப்பார்த்தால் நேக் விசனமாகவிருக்கிறது உன்முகத்தைப்பார்த்துப்பொன்கொடுக்க வணுமேயல்லது இவர்களைக்காசும்பெறமாட்டார்கள் அதிருக்க டும் நோக்கிவ்விதிவந்தவிதமென்ன தெரியச்சொல்லும் பிள்ளாய்.

இராசன்-விருத்தம்-இ-ம்-நீலாம்புரி.

வரலாறுகேட்கவந்தமறையோரேசொல்லக்கேளும்
வரமிகுமயோத்தியாண்டமன்னனுமரிச்சந்திரன்பேர்
தரணியையீந்தேன்முன்னே தானமாய்க்கொடுத்தபொன்னைத்
தாசொன்னார்விஸ்வாமித்ரர்தவிக்கிறேனதினாலையா.

வசனம்.

அயோத்தியையாண்ட அரிச்சந்திரன்என்பேர் என்னுடெகாமு ம்விஸ்வாமித்திரர்க்குக் கொடுத்தேன் அதற்கு முன்னேகொஞ்சம் பொன்னைத் தானம்வாங்கியென்னிடத்திலேதானேவைத்தார் அந்த ப்பொன்னைத்தரச்சொல்லி இவரைக்கூட்டினார் அந்தக்கடனுக்காகதத விக்கிறேன்சுவாமி.

காலகண்டகன்-வசனம்.

அப்படியா அப்படியா அந்தக்கடனை இவருக்குக்கொடுக்கிறே மென்று நாமேற்றுக்கொண்டால் நேக்கிவர்களை விலையாய்விற்றுப் போடுகிறையா இப்படிப்பட்ட இராஜஸ்திரீ நம்மிடகிழப்பிராமண த்திக்கும் நமக்கும் உள்ளவேலை யெல்லாஞ்செய்வாளா செய்வாளா.

இராசன்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

வேதவேதியரோநீர்சொல்வேலைகளெல்லாஞ்செய்வாள்
தீதிலாச்சிறுவன்றானும் தேவரீர்க்கேவல்செய்வான்
யாதொருகுறைவுஞ்செய்யாரிவர்களைவிலையாய்க்கொண்டே
வேதனைதீர்த்தேயென்னைவிடுதலைபண்ணுவீரோ.

வசனம்

தேவரீருத்தாரப்படியே இவளும் இந்தப்பிள்ளையும் நீங்கள் கா விலேகாட்டியவேலையைக்கையினாற்செய்வார்களேயல்லதுவேறில் லையாகையாலென்கடனைத்தீர்த்து என்னைப்புனிதனாக்கி இவர்களைக் கைக்கொள்ளும்சுவாமி.

காலகண்டகன்-வசனம்.

ஓய் நட்சத்திரத்தாரகரோ நேக்குத்தந்தால் நோக்குத்தந்தாற்போ லேதானேபிடியுங்கையையடிக்கிறேன்.

தாரகன்-வசனம்.

ஆம் சுவாமி அப்படியே வந்தது வந்தது நேக்குமோக்ஷம் வந் தது வந்தது.

காலகண்டகன்-வசனம்.

ஓய் உம்மிடபேரென்ன.

இராசன்-வசனம்.

என் பேர் அரிச்சந்திரன்சுவாமி.

காலகண்டகன்-வசனம்-இவள்பேரென்ன.

இராசன்-வசனம்.

இவள்பேர் சந்திரமதிசுவாமி.

காலகண்டகன்-வசனம்-இந்தப்பிள்ளைபேரென்ன.

இராசன்-வசனம்-இவன்பேர்தேவதாசன்சுவாமி.

காலகண்டகன்-வசனம்.

இவளும் இந்தப்பையனும் உமக்கென்னவேணும்.

இராசன்-வசனம்.

இவளென்பெண்சாதி இவனெனக்குப்பிள்ளைசுவாமி.

காலகண்டகன்-வசனம்.

ஆனால் முறிச்சீட்டெழுதும் பிள்ளாய்.

இராசன்-வசனம்.

இதோஎழுதினேன் இந்தாருஞ்சுவாமி.

காலககண்டன்-வசனம்.

நேக்குச்சாலேசரம்நீதானேவாசியும்பிள்ளாய்.

இராசன்-விருத்தம்-இ-ம்-நீலாம்புரி.

கதிர்குலத்தரசனயோத்தியையாண்டோன்
காதல்சேர்திரிச்சங்குமைந்தன்
சதிரிச்சந்திரன்றன்மகன்மனையா
டம்மைதன்னவசரநிமித்தியம்
விதிவசவிஸ்வாமித்திரர்தன்கடனால்
விற்றனன்காசியில்வாழும்
துதிதருமறையோன்காலகண்டகர்க்கே
சூழிவர்சாட்சியாய்த்தானே.

வசனம்.

இன்னவருஷம்இன்னமாதம் இத்தனையாந்தேதிகாசிப்பட்டண
ந்திலிருக்கும்பிராமணரில்காலகண்டகஐயருக்குஅயோத்தியாபுரியை
யாண்டதிரிச்சங்குமகாராசன்புத்திரனான அரிச்சந்திரன்எழுதிக்கொ
டுத்தவிற்கிரயச்சீட்டுஎன்னவென்றால் என்பெண்சாதிசந்திரமதியை
யும்என்பிள்ளைதேவதாசனையும்விஸ்வாமிததிரமகாரிஷிகையிலேநான்
பட்டகடனுக்காகஇந்தநாள்நம்மிடகையிலிவர்களைவிலையறவிற்றபொ
ன்யானையின்பேரில்நின்றுகவண்கல்லெறிந்தவுயரங்கொட்டியபொன்
இதற்கிவர்களைவிலையறவிற்றுப்பொருளறக்கைக்கொண்டேன்இந்தப்
படிக்குஎன்மனோராசியில்எழுதிக்கொடுத்தபெண்டுபிள்ளைவிற்கிரயச்
சீட்டுஇதற்குச்சாட்சிநட்சத்திரத்தரகர்சத்தியகீர்த்தியிவர்களறியஎழு
தினஎன்மைக்குசுகஸ்தலிகிதம்.

காலகண்டகன்-வசனம்.

ஓய்இராசனேசீட்டைத்தாரும்பெண்சாதியையும்பிள்ளையையும்
கூட்டிக்கூட்டும்.

இராசன்-வசனம்.

இந்தாரும்சுவாமிசீட்டுஇந்தாரும்பெண்சாதி இந்தாரும்பிள்ளைசு
மாயழைத்துக்கொண்டுபோம்சுவாமி.

சந்திரமதி-தரு-கண்ணி-இ-ம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

கொண்டகணவன்தானேபெண்டுபிள்ளையைவிற்கும்
கொடுமைவிளைந்ததையோ மன்னவனே

பண்டுநான்செய்தபழிபாவமோநமக்கிந்த
பாடுவிளைந்ததையோ மன்னவனே
காராம்பசுவுங்கன்றுங்கதறக்கதறப்பொல்லாக்
காதகர்க்குவிற்றேமோநாம் மன்னவனே
ஆரும்படாதகடன் அருங்கடன்பட்டோமோநாம்
ஐயோஇதென்னவிதி மன்னவனே
வாடியென்றழைப்பாரேமகனும்நானுமாயெங்க
வந்ததோகாலமையோ மன்னவனே
தேடிவந்துமாலையிட்டுச்சேர்ந்துவாழ்ந்திருந்ததெல்லாம்
தீர்ந்ததோசொப்பனமாச்சோ மன்னவனே
என்றும்பிரியேனென்றேயிருந்தேன்விதிவசத்தால்
இப்படியாச்சுதோஐயோ மன்னவனே
இன்றுகண்டதிருமுகத்தையென்றுகாண்பேன்ரொணவழிக
ளிதுதானோஐயோ மன்னவனே

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-எதுகுலகாம்போதி.

பஞ்சணைமீதிற்பாதம் பட்டிடில்வருந்துமென்றே
அஞ்சவில்கரத்தாலேந்தி யருமையாய்மடிமேல்வைத்த
தஞ்சமுமறந்தபிள்ளை தன்னையுமறந்துநீரும்
பஞ்சையானீரோநாங்கள் பாவத்தால்முறிபட்டோமே.

வசனம்.

ஆ என்பிராணரட்சகாபஞ்சணைமெத்தையின்பேரிலென்பாதம்
வைத்தால்நோகுமென்று அணைத்தெடுத்துமடிமேல்வைத்துக்கொள்
வீரேயப்பேர்ப்பட்டபட்சமுமறந்துதவஞ்செய்து பெற்றபிள்ளையை
யுந்துறந்துநீரொருபரதேசியைப்போலேபோகவும்நாங்கள்விலைப்பட்
டுமுறியாகவும்தலையெழுத்துவந்ததா அரிகரி அரிகரி.

இதுவும்-சந்திரமதி-வசனம்.

அப்பாமகனேதேவதாசாநமக்கிப்படியும்வந்ததா என்புத்திரசி
காமணியே.

தேவதாசன்-தரு-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

ஐயையோஇந்தவிதி வரலாமோ-ஐயா
தெய்வஞ்செய்திட்டசதி அதுபோமோ
செய்யும்வகைகளேதும் அறியேனே-ஐயா
திகைக்கிறேனுன்சின்னஞ் சிறியேனை

தாயும்பிள்ளையுமாகப் பிரிவோமோ-ஐயா
சதிவருமென்றுமுன்னந் தெரிவோமோ
முத்தமிட்டுஉச்சியைமோந் திடுவாயே-ஐயா
முகம்பார்க்கவுதயத்திற்கூப் பிடுவாயே
ஆனானையாவென்று தாவுவேன்-ஐயா
ஆர்முகம்பார்த்தினியு லாவுவேன்
நாடிழந்தோமென்றுசொல்லி தளர்ந்தேனே-ஐயா
நானுன்னைப்பிரியவீணாய் வளர்ந்தேனே
அப்பாமகனேயென்று அழைப்பாரார்-ஐயா
ஆதரவாயெங்களுக் குழைப்பாரார்
அடிமைப்படுத்திவைக்க வளர்த்தாயோ-ஐயா
அறிவும்ஊழ்வினையினால் இளைத்தாயோ

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

பிள்ளையென்றென்னைப்பெற்றுப் பிரியமாய்வளர்த்தெடுத்துத்
கள்ளமாம்விஸ்வாமித்திரர் கடனுக்கேயொப்பித்தாயே
உள்ளநாள்மட்டுந்தாங்கி யொழியாமலிருந்தபாரம்
மெள்ளவேதொலைத்திட்டாயே விட்டதோதுன்பமையா.

வசனம்.

ஆஎன்னைப்பெற்றஐயாவேஎன்னைப்பிள்ளையென்றுபெற்றெடுத் அருமையாய்வளர்த்துவிஸ்வாமித்திரக னுக்காகவிற்று ஒப்புவிடு ப்போட்டீரோநானுமென்தாயும் உமக்குத்தீராச்சுமையாயிருந்தா ச்சுமையைத்தொலைத்தீரா இனிச்சுகவாயிருப்பீரா என்னைப்பெற்ற யனே.

காலகண்டகன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

குவலயந்தனிலேவிற்ற குதிரைக்குப்புல்லெடுக்கத்
தவறிலாதுனக்கேன்வீணாய்த் தலையெழுத்தோதான்மன்னா
இவனுடனிந்தப்பையவிருவருமுறிப்பட்டாரோ
சிவனொன்றெழுதிட்டாலுந்த்ரணப்பொழுதினிவிடேனே.

வசனம்.

ஓய்ஓய்வெகுகாலமாய்ப்பிழைத்துக்கெட்டவன்தான் நீமோசமி லேவிற்றுப்போட்ட குதிரைக்குப்புல்லுசுமக்கத்திரிகிறாய் இந்தப்பைய ம்இவனும்எனக்குமுறிபட்டார்களோ இல்லையோ ஆகையாலிவர்க ப்படிஅழுதாலும்நிமிஷமாவதினிவிடுவேனா இனிவிடுவேனோவா கள்வாருங்கள்.

இராசன்-தரு-இ-ம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

தலைவிதியெவராலுந்தவிர்க்கவொண்ணாதென்று
சாஸ்திரங்கள்சொல்லுவதுமெய் யாச்சுதோ - எந்தன்
தவப்பலன்களுந்தப்பிப் போச்சுதோ.
விலைபாகப்பெண்டுபிள்ளைவிற்கவும்வந்துதித்த
விதிவசகாலமோதான் கலிகாலம்-அந்த
விஸ்வாமித்திரர்விதித்த அலங்கோலம்
வாங்கினோர்க்குண்டோவாய்தான் விற்றேனோர்க்குண்டோவெட்க
மறையோனைச்சேர்ந்ததாலே திருமோ-கடன்
வழக்குவழியாய்வந்து நேருமோ
தாங்குவான்பிள்ளையென்றுதளராமலேவளர்த்துத்
தாணியோர்பலன்காண்பார் நான்பாவி-யுன்னை
சலியாமல்விற்றேனையா விலைகூவி
மான்போல்விழியணங்கேம்யிலேயின்பக்குயிலே
வலியவுன்னைவிற்க லானேனே-உந்தன்
வாஞ்சையைமறந்து போனேனே
தேன்போல்மொழியேயுன்னைத்திகைக்கமகனுடனே
தெய்வம்பிரித்ததைதயோ தரிப்பேனோ-இன்னஞ்
சீவனஞ்செய்யாமல்மனஸ்க் கரிப்பேனோ
மைந்தனலறியழமனைவிகதறியழ
மரம்போல்நான்பார்த்திருக்க விதித்தாயோ-இந்
வஞ்சனைக்கேதெய்வமோசம் மதித்தாயோ
எந்தப்பிறப்பிலினியிவர்களுடனேகூடி
ஏகபோகமாகவாழ்வேன் அணிநாகா-கிருணை
இதுவோவிஸ்வேஸ்வரனே யுமைபாகா

இராசன்-விருத்தம் இ-ம்-எதுகுலகாம்போதி.

காசிவாழ்விஸ்வநாதா கடவுளேயுலகத்தோர்கள்
பாசமாம்பெண்டுபிள்ளை படைத்ததிற்பலன்காண்பார்கள்.
ஆசைசேர்மனையாள்மைந்தன் அமைத்துமேபிரிந்துபோக
மோசமோசதியோகாலமுடிவிதுதானோஐயோ.

வசனம்.

அகாகாகா விஸ்வநாதா உலகத்திலே யுள்ளவர்கள் பெண்சா
ரைக்கொண்டு பிள்ளைகளைப்பெற்று அதனாலேயனேக பலன்க
யனுபவிப்பார்கள் எனக்கெல்லாமமைத்து மிப்படிப்பறிகொடுத்
ப் பாதவிக்கவும் வந்ததா சிவசிவா இது ஆர்செய்த மோசமே

ய்வந்தானிப்படிசதிசெய்ததோ அல்லது இதுதான் முடிந்தவிபாகிாலமோ ஈஸ்வரா ஈஸ்வரா.

சத்தியகீர்த்தி விருத்தம்-இ-ம்-முகாரி.

பெருவிதிபிறிதென்றெண்ணிப் பேதைமோர்கலங்கலாமோ
அரிவினிலுயர்ந்தவெங்களரசனே பொய்சொல்லாத
நெறிபிசகாமற்சத்யம் நிலைக்கவே நினைக்கவேணும்
செறிதருபெண்டுபிள்ளை ஸ்திரமோ காயமெய்யோ.

வசனம்.

இப்படியும் விசனப்படுவாருண்டோ மகாராசனே உம்முடையசத்தியம்நிலைக்கவேண்டி யொருபொய்சொல்லமாட்டாமல் பெண்சாதிபிள்ளையைவிற்றுக் கொடுத்தீர் அதினாலேசத்தியமும் கீர்த்தியு நிலைச்சுது காயம்நிலையாமா பெண்சாதிபிள்ளை நிலையாமா மனதைத்திடப்படுத்திக்கொள்ளு மென்றேண்டவனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

தகும்பொருளாகவல்ல சத்தியகீர்த்திகேள்
புகழுக்கோர்குறைவுமில்லை புண்ணியந்தாழ்ந்திடாது
மகிழ்சந்திரமதியுமென்றன் மனைவியுமகனையெந்த
யுகத்தனிற்காண்பேன்யாரை யுதவென்பேன்பாவிநானே.

வசனம்.

கேளாயென தன்புக்குரிய அறிவுள்ளசத்தியகீர்த்தி யெப்படியாகிலுஞ்சத்தியமேபெரிது தருமமே மகிமைக்குங் காயம்நிலையாது மெய்யே எமனதுக்கிசைந்த குணவதியான சந்திரமதியையும் அருமையானசீவனைப்போல் வளர்த்ததேவதாசனையும் எந்தயுகத்திலே காணப்போறேன் என்னிலும்பாவி யொருவருண்டோ மந்திரி.

சத்தியகீர்த்தி-வசனம்.

கேளும்மகாராசனே யெல்லாந் தெய்வச்செயலேயல்லாமல் நம்மிசெயலொன்றுமில்லை சுவாமி.

தாசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

முனிவர்க்குச்சொன்னபொன்னை முக்காலேயும்கொண்டே
உனையவர்கொடுக்கச்சொன்னாருன்பெண்டுபிள்ளைதன்னை
விலையதாய்விற்றதாலே மிரக்கமுடையோனினைகொண்டாயோ
தனியிருந்தழுகிறாயே சத்யவான்நீதான்மெய்யே.

வசனம்.

ஓய்ஓய் நேக்குத்தெரிந்ததுகாணும் நேக்குத்தெரிந்ததுகாணும் நீயேதோ பசாங்குபோட்டுக்கொண்டு பெண்சாதிபிள்ளையை விற்றிறவரைப்போல் சம்மிடுக்கோக்கர்னை விட்டுவிடுவேனென்றுவேஷம்போட்

டால் நான்விடுவேனோ இப்போதுநீ மூக்காலே யழுகிறதும் பெண்
களைப்போல ஒண்டிக்குரலாயழுகிறதும் பார்த்தால் உன்னைப்போல் ச
த்தியவானொருவருமில்லை முன்னேதானே யில்லையென்று ஒருபொ
சொன்னால் இந்தத்துக்கம் வருமாவருமா.

இராசன்-வசனம்.

அதற்காக அழவில்லை சுவாமி யிப்படியும்வந்ததா தலைவிதியென்
றுவிதிககழுதனேயல்லது வேறில்லை யும்மிடகடன் தீர்ததா நட்சத்தி
ரத்தரகரே.

தாகன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

தவமுனிவிஸ்வாமித்திரர் தாகனுன்கடனவர்க்கே
எவளவுங்குறைவில்லாம லீந்திட்டாய்மோசமில்லை
தலைன மட்டாயுன்பின்னே சலியாமற்றிரிந்தகூலி
இவளவென்றீகுவாயோ வில்லையோசொல்லுவாயே.

வசனம்.

நமக்கேதுங்காணுங்கடன் விஸ்வாமித்திரருடையபாக்கியைக்கொ
டுத்தாய் மோசமில்லை அவர்விட்டதாகன் நான் இத்தனைநாளாய்நீவா
சொன்னவிடமெல்லாம்வந்து நீசொன்னபடியெல்லாங்கேட்டு உன்
ன்னேதிரிந்தகூலி யிவ்வளவென்று நேக்குள்ளதுகொடுப்பாயோ இல்
லையோசொல்லும்பிள்ளாய்.

இராசன்-வசனம்.

அரிகரி அரிகரிஅப்படியாசுவாமி இது வுர்ஈசுவாயத்தனந்தான் இவ
வளவுதரவேண்டுமென்று கேட்டால் தருகிறேன் நட்சத்திரத்தாகரே

தாகன்-வசனம்.

உம்முடையசொத்து நேக்கதிகம்வேண்டாம் நேக்குப்பதினாயிரம்
பொன்னுண்டு.

இராசன்-வசனம்.

அப்படியேதருகிறேன்சுவாமிநட்சத்திரத்தாகரே.

இராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

வருகிறகர்மமெல்லாம் வழிதனில்நிற்பதுண்டோ
தாகனுமிவர்க்குக்கூலி சத்யமாய்க்கொடுக்கவேணும்
உருகுமென்னகையில்வேறே யுனையறியாததுண்டோ
ஒருபதினாயிரம்பொன் னுதவுவாயென்னைவிற்றே.

வசனம்.

கேளாய்சத்தியகீர்த்தி இனியென்னயோசனைவருகிறகர்மம் வ
யிலேநிற்குமா வந்ததெல்லா மனுபவிக்கத்தானேவேணும் இந்நட்

ரோத்தரகருக்குள்ளகூலிபதினாயிரம்பொன்கொடுக்கவேணும் அரற்கு
கூலிட கையிலென்ன விருக்கிறது ஆகையாலென்னைவிற்றுக் கொடுத்து
விடும் அப்பாசத்தியகீர்த்தி.

சத்தியகீர்த்தி-தரு-கண்ணி

இ-ம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

...தத்கோரானிக்காளமட்டும்உம்மைப்பிரியாமலே
இருந்ததுமையோ ஐயோ மன்னவனே
இப்படிசற்பனே யொப்புமோதெய்வம்
எப்படிப்போமிது எவ்வகையாமோ
என்னதான் செய்வேனையோ மன்னவனே
திக்குநானுதவிபோலேசதிக்குள்ளாகவிருந்து
தவிக்கப்பார்த்திடவோஐயோ மன்னவனே
சத்தியமித்தனே சித்தவிசித்திரம்
உத்தமமோதெய் வத்தொழிலேமெய்
தயக்கச்செய்தாயோஐயோ மன்னவனே
ள்ளநாளுள்ளமட்டும்உன்னுடைமையுண்டுதானே
உடம்பெடுத்தேனேஐயோ மன்னவனே
ஒட்டியதீவினே கெட்டியிழுத்திட
விட்டிடுமோசனி பட்டழிவேமினி
உம்மைநான்விலைகூறவோ மன்னவனே
ள்ளவுந்தடையில்லாமல்என்னைவிற்கமனம்வராமல்
இப்படியுஞ்செய்வாருண்டோ மன்னவனே
இச்சகமோவிது மெச்சுவதோசொலும
அச்சமில்லாமலெ னைச்சுளுவாய்விலும்
அட்டியொன்றுண்டோஐயோ மன்னவனே
வி போல்நான்பார்த்திருக்கப்பரதேசிபோல்கீரிந்தப்
பதியில்விலைப்படவோஐயோ மன்னவனே
பாத்திரமோநான் தோத்திரஞ்சொல்லளம்
மாத்திரமிநற்கனே மாத்திரம்வில்லும்
பாங்காகாதோஐயோ மன்னவனே
விஞனும்மைவிலைகூறவும்வ ய்வருமோ
கொடுமைக்காளானேனையோ மன்னவனே
கொத்தடிமைத்தொழில் பெற்றவெனக்கினி
சித்தமிரங்கிவி டத்தகுமோதான்
கூறையாளன்னைவிலே மன்னவனே
ல்போல் னைவியையும் மகனையும்விற்றுயென்னை
வாழ்துணையென்றுநம்பி மன்னவனே

வஞ்சகமோபிர    பஞ்சவிநோத
தஞ்சமென்றுன்னையி    றைஞ்சினோமேயென்
பகிழ்வையென்னைவிற்பாய்    மன்னவனே
உயிர்போனாலுடலிருந்துஉபயோகமுண்டோவென்னை
உறுதியாய்முன்னேவிற்பாய்    மன்னவனே
உற்பனமோவிது    விற்பனமன்று
சிற்பயமாய்வில்    அற்புதமாகும
உள்ளபடிதானையோ    மன்னவனே

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-எதுகுலகாம்போதி.

நாராசங்காய்ச்சிவெந்த னடுச்செவிதனில்விட்டாற்போல்
ஏராதவார்த்தைசொன்னாலேற்குமோதெய்வமன்று
பாராளுமன்னனீயே படைத்திடுவாய்தானென்னைத்
தாராளமாகவிற்றுத் தாகனையொழித்திடாயே.

வசனம்.

கேளுநீர் இராசசக்ரேஸ்வராதேவரீர்வளர்த்தநாய்க்குட்டியாகிய என்னைவிற்று இவருக்குத்தாருகூலிகொடாமல்உம்மை விற்கச்சொன்னவார்த்தைஎன்காதில் நாராசங்காய்ச்சிவிட்டாற்போலிருக்கின்றது அப்ப சொன்னால்தெய்வத்துக்கேற்குமானன்னையே விலுந்து சத்தியபரா சொல்லுகிறேன்சுவாமி.

இராசன்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

அவரவர்செய்தகர்மமவரவரனுபவித்துப்
பலவினையொழிக்கவேணும்பாரினிற்பிறந்தோரெல்லாம்
நவையறுமந்திரிநீதானடியேயென்னைவிற்றே
இவர்கடனொழித்தாலென்னைஈன்றதாயதந்தைநீயே

வசனம்.

கேளாய்சத்தியகீர்த்திபூமியிற் பிறந்தவர்களெல்லாம் அவரவர்கள் செய்தகருமத்தைஅவரவர்களேயனுபவிக்கவேணும்ஆதலால்நான்பட்டகடனுக்குஉன்னைவிற்கிறதுதருமமல்லஅதற்குநானொப்பமாட்டேன் என்சொல்லைத்தடுக்காமல்என்னைவிற்றுஇவர்கடனைத்தீர்த்தால்நீ என்தாய்தகப்பன்நீவிசனப்படவேண்டாம்மந்திரி.

தாகன்-விருத்தம்-இ-ம்-தோடி.

பண்ணைக்காரனாய்வந்த பரிந்தழுமந்திரிநீகேள்
கண்டதார்சதயத்தாலே காண்பனோவின்றுன்மோட்சம்

பெண்டுடன்பிள்ளைநாடும் பெறச்செய்வேனெனக்குக்கூலி
உண்டென்றுவாங்கேனோர்பொய்யுரைசெய்தால் முழுகிப்போயேன

வசனம்.

ஓய் சத்தியகீர்த்தி வெகுநாளாய் உறவென்று பரிந்துபரிந்தழுகிறா ய இராசனாகிய இந்தப்பயித்தியக்காரன் என்னமோட்சங்காணப்பார்க்கி றான் இப்போதுகொடுத்தபொன்னையாவது எனக்குக்கொடுக்கவேண் டியகூலியையாவது இல்லையென்று இரகசியமாகவொருபொய்யாகிலுஞ் சொன்னால்முழுகிப்போகின்றதா இந்தக்கூலியையும்விட்டுவிடுகிறேன் பெண்சாதிபிள்ளையிராச்சியம்யாவற்றும்வாங்கித்தருகிறேன் இதுசத்திய மானவார்த்தை இத்துடனேசரி இதுசமயந்தப்பினால்வாராதுமோட்சத் தைக்கண்டதார் சத்தியத்தைக்கண்டதார் இதுபயித்தியம்பயித்தியம் வீ ண்வீண்கண்டதேகாட்சியுண்டேயுறுதி சொன்னேனென்சொன்னேன்.

சத்தியகீர்த்தி வசனம்.

என்னாண்டவன் வளர்த்த நாய்க்குட்டிகாலிருக்க அவனையெப்படி விற்பேனென்று அழுதேனேயல்லது அவர்சொன்னசத்தியத்துக்கொ ருகுறைவுண்டா அவனையேவிற்றுத்தருகிறேன் சுவாமி நட்சத்திரதா கரே.

தாகன்-வசனம்.

நேக்கென்னகொட்டமதுமகளே வல்லாண்மை யென்பதுபோல நேக்குள்ளகூலியைக்கொடும்கொடும் ஓரேகுப்பலாகக்கொட்டும்.

இராசன்-வசனம்.

கேளாயெனதுமனதுக்கிசைந்தசத்தியகீர்த்தி அவருடனேயென்வீ ண்பேச்சுப்பேசுகின்றாய் என்தலையிலேயொருதுரும்பைவைத்துவிலை கூறும்மந்திரி.

சத்தியகீர்த்தி-வசனம்.

அப்படியேசெய்கிறேன் விதிவசம்விடுமா என்னாண்டவனே.

சத்தியகீர்த்தி-தரு-கண்ணி

இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

| | |
|---|---|
| உன்னாலின்னாளூழ்வினைக்கடனிது | பாரீர்-இந்த |
| ஊரிலுள்ளபேர்மகாவீரனிவனைக்கொள்ள | வாரீர் |
| கண்மணிபோல்மகனையுமனைவிதன்னையும்விற்றார் | முன்னே-அந்தக் |
| கடன்தீர்த்தகூலிக்காகத்தன்னைவிற்கிறாரிதோ | பின்னே |
| மாதவரிஷிவிஸ்வாமித்திரமாமுனி | மாயந் திர |
| வனையுண்டோவிலைப்படவந்தார்கொள்வீர் | சகாயம் |

பாதகனுனிந்தமகாராசன் றனைவிற்க லாச்சே-நான்
புண்ணும்புண்ணியமெல்லாம்பலியாமலேபொய்த்துப்போச்சே
பொன்பதினுயிரம்பெரிதல்லவிவர்தம்மைக் கொள்ளுவீர்-நல்ல
புண்யபலனைக்கொண்டுபாவத்துயரமெல்லாம் விள்ளுவீர்
என்போற்பாவியிருந்துமிவர்க்கோருதவியுஞ் செய்தறியன்-யான்
இந்தவுதவிசெய்யவந்தேனறிவில்லாத சிறியேன்
மேல்வீதிவடவீதிகீழ்வீதிதென்வீதி நீதி-ராச
வீதிமுதல்மற்றவீதிகளறியவோ சேதி
நாலுந்தெருவும்விலைகூறிவந்தேனிந்த வூரில்-எங்கள்
நாயகன்றனைக்கொள்ளயாருமில்லையோ பெரியோரில்

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

முன்னர்நான்செய்தகர்ம முடிவினுலென்னையாண்ட
மன்னனைவிலையாய்விற்க மனங்கொண்டேன்காசியோரே
என்னசாதியாராலு மெவர்களாயினுநான்சொன்ன
பொன்னைத்தந்திவனைக்கொள்வீர் புண்ணியங்கைக்கொள்வீரே.

வசனம்.

கேளுங்கள் காசிப்பட்டணத்தில்வாசஞ்செய்யாநின்றபிர்மக்ஷத்திரிய வைசிய சூத்ரபஞ்சமசர்வசனங்களே இந்தமகானுபாவனை என்னுடைய அவசரநிமித்தியமாக விலைபறவிற்கத்துணிந்தேன் தேவையானபேர் தடையில்லாமற்கொள்ளலாம் வாருங்கள்.

பொது-கொச்சகம்-இ-ம்-புன்னுசவராளி.

மன்னனரிச்சந்திரனை மந்திரிவிலைகூறியந்த
நன்னகரமாங்காசி நாலுதெருவுந்திரிய
முன்னைவினைப்பயனுலே முடிந்துவிஸ்வாமித்திரர்தாஞ்
சொன்னநெறிப்படநமனுந் தோட்டிவந்துதோன்றினனே.

தோட்டிவருகிற-தரு-இ-ம்-பந்துவராளி-ஆதிதாளம்.

தோட்டிநானே சாமி தோட்டிநானே.
உடம்புகும்பிக்கூம்பிப்பார்மிசைத்
தேம்புவனேவீரச்சாம்புவனுகிய (தோட்டி)
கேட்டிரேயொருசேதிமுன்னுளிலே கிச்சுனனுகியவிச்சுனுதானந்த
நவிதீர்மாபெலிதலேமே லளந்திட்ட-நல்ல
கிட்பறைகொட்டிவலனுய் வருகெட்டி (தோட்டி)
வதிஷ்டரொருபெண்ணைச்சக்கிலிவளவிலேகொண்டாரே அந்த
வழக்குத்தொடுத்தகனுலென்னைவந்து வேண்டிக்கொண்டாரே

அதிஷ்டமென்செய்வேன்குறப்பெண்ணுவாளோ வள்ளி
யாருமறியாரோவள்ளுவாவருடன்பிறந்த கள்ளி
பதட்டமாய்வேலர்கல்யாணமுடித்திட்ட
பவனியிலானையேற்பறைதானடித்திட்ட (தோட்டி)

அமுரங்கடைந்திட்டார்தேவ ரங்கும்பறையடித்தேன்-தெய்வ
யானைகல்யாணத்தில்சாமி அங்கும்பறையடித்தேன்
விமலர்கூத்தாடுகையில் காளிவெட்கப்பறையடித்தேன்
சகலவேதசாஸ்திரமும்ஆண்டே விளங்கப்பறையடித்தேன்
சமயத்துக்கெல்லாம்நான்முதற்பாதம்
சாதிபேதந்தன்னில்நானொருநாதம் (தோட்டி)

ஆண்டைகளேயெந்தன் நல்லஅருமைகள் தெரியாதோ-கட்டை
அஞ்சாறும்வைத்தால்கூடி ஆடுக்கா யெரியாதோ
மாண்டவர்போனாலும்ஆண்டேமற்றவ ரறியாரோ-நாங்கள்
மாடுகள்தின்றாலும்ஆண்டேவங்கிஷ மறியாரோ
தீண்டாப்பறையனானாலும்ஆண்டே திருமாலயனுஞ்சிவனுமாண்டே

தோட்டிநானே-சாமி-தோட்டிநானே.

தோட்டிசொல்-விருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

ஆரையாஆண்டேயிங்கே யாள்விலைகூறக்கேட்டேன்
பேரென்னவூர்தானென்ன பேசியவிலைதானென்ன
பாரினிற்பறையனானே பணத்தையுங்கொடுத்தாலிந்தத்
தீரனுமாளைவிற்கச் சித்தமுண்டாமோசொல்வாய்.

வசனம்.

ஏ ஆண்டே ஏ ஆண்டே ஆரையா இங்கே ஆளை விலைக்குவிற்கிறது நான்தோட்டிசாமிநான்பணத்தைக்கொடுத்தால்,விற்கிறதுக்குமனசுண்டா அப்படியானாலெந்தவூர்பேரென்ன விலையென்னசெலவைபா சொல்லு.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

சித்தமாயிவரைநானே தெருவினில்விலைபேசுமி
விற்றிடவந்தேன்மெய்யே விலைநீதான்கொடுப்பாயானால்
சத்தியமாகவிற்பேன் சாதியுமூரும்பேருங்
குற்றமில்லாமற்சொல்லிக் கொண்டிடில்மிகவுநன்றே.

வசனம்.

ஆமப்பா இவரைத்தான் விலைக்குவிற்கவந்தேன் நீகொள்ளும்போ நிருந்தால்மெத்தசந்தோஷம் உன்னைப்பார்த்தாலெனக்குச்சந்தேகமாயிருக்கிறது உன்சாதியூர்பேர்தெரியச்சொல்லவேணுமப்பா.

வசனம்.

அகாதே அகாதே ஆண்டேநானுபலவந்தம்பண்ணவந்தேனு க
டத்தெருவிலேகூவினபடியினாலே கேக்கவந்தேன் எங்குலத்தையு
பேனையுங்கேட்டு அகாயே உன்குலத்தையும் பேரையுஞ்செல்லு
னக்குச்சம்மதியானுல்உள்ள காசைக்கொடுத்துவாங்கிக்கொள்ளுகி
றன் ஆண்டே.

இராஜன்-விருத்தம்-இ-ம்-கண்டா.

ன்பேரோஅரிச்சந்திரன்று னிருந்தவூரயோத்தியப்பா
பான்பதினுயிரந்தான்போதவேயிவர்க்குத்தந்தால்
ன்பணிவிடைநான்செய்வேனுனக்கேநானடிமையாவேன்
ன்பின்பார்த்திடாமற் பொன்னைமுடிப்பாய் வைத்தெனைக்கொள்
(வாயே.

வசனம்.

நானேசொல்லுகிறேன் கேளப்பாஎன்பேர் அரிச்சந்திரன் நா
ிருந்து அரசாட்சிசெய்தவூர் அயோத்தியாபுரி யதிலேயென்குல
தைத் தெரிந்துகொள்ளப்பா நீமாத்திரம் பதினுயிரம்பொன் இவ
க்குக்கொடுத்துவிடுவையேயானுல்உனக்குநானடிமையாகிறேன் நீ
சான்னஏவலுஞ்செய்கிறேனப்பா.

வீரவாகு-விருத்தம் இ-ம்-ஆனந்தபைரவி.

எனக்குச்சம்மதியானுலுமெனக்குள்ளதோட்டிச்சிதன்
மனக்குறைதீரவேலைவரிசையாய்ச்செய்யவேணும்
தனித்தரசாட்சிசெய்தசக்கிரோசாவுன்னைநான்றன்
குனித்ததோரேவல்கொண்டாற்கொள்ளுமோகோபமாமோ.

வசனம்.

என்னத்துக் காண்டேபத்துப்பேச்சு எம்பெண்டாட்டியானு
லென்ன உம்பெண்டாட்டியானுலென்னநீகொண்டஆள்உம்பெண்
ாட்டிக்குவேலைசெய்யவாணுமாஅப்படிதான் எனக்குவேலைசெய்ய
வணும் எம்பெண்டாட்டிக்கும் வேலைசெய்யவேணும் அதுக்குச்
ம்மதியா.

இராசன்-வசனம்.

பத்துவிதத்துக்கும்எனக்குச்சம்மதிதானப்பாவீரவாகுவே.

வீரவாகு-வசனம்.

உன்னைப்பார்த்தால்பெரும் பூதம்போலிருக்கிறுய்மேலும் இரா
வாயிருக்கிறுய் எனக்கடிமைப்பட்டால்மாடுரிக்கவேணும் வடக்க
டுபோடவேணும்பிணங்களைச்சுட வேணும்இதுவெல்லாம்உனக்கு

லேயுமா ஆண்டையென்னும் அடிமையெண்ணுந்தெரிந்திச்சுதானு ல்தெண்டிக்கவேணும் அதுஉனக்குச்சம்மதியாசெல்லு.

இராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

பழுதுவாராதுசொன்னேன்படைத்தநீயாண்டையானல்
நழுவாமல்வேலைசெய்வேனுன் தப்பிநடந்தேனுனல்
தொழுமரம்போடுதெண்டிசுறுககிட்ச்சொன்னுற்பின்னும்
அழுததாற்றீருமோதான்அடிமையிற்பிசகேனப்பா.

வசனம்.

கேளப்பாவீரவாகுவேகொண்டயசமான் தெண்டிக்கவுஞ்செல் லும்திட்டவும்செல்லும் சொன்னவேலையைச்செய்யாவிட்டால்தொ ழுவிலேபோடவுஞ்செல்லும்அடிமைப்பட்ட நான்கோபம் பண்ணு வேனுநெறிதப்பாமல் நடப்பேன்கொள்ளுமப்பா கொள்ளும்.

வீரவாகு-வசனம்.

அப்படியானல் முறிச்சீட்டெழுதுமையா

சத்தியகீர்த்தி-வசனம்.

அரிகரிஅரிகரிஇப்படியுமிருந்ததாயத்தனம்ஈஸ்வராஈஸ்வரர்

இராசன்-வசனம்.

விசனப்படவேண்டாம் என்தலையிலேயிருக்கிற துரும்பையெ டுத்து அவன்கையிலேகொடுத்து அச்சாரந்தட்டிக் கொள்ளுமப்பா மந்திரி.

சத்தியகீர்த்தி-வசனம்

இந்தா அப்பாவீரவாகுவே

வீரவாகு-வசனம்.

ஆண்டே ஆண்டே லுத்தப்புணங்கள்ரொம்பவந்திருக்குது சுடு காட்டுக்குநான்துருசாய்ப்போகவேணும் சீட்டெழுதும்ஆண்டே.

சத்தியகீர்த்தி-அகவல்-இ-ம்- எதுகுலகாம்போதி.

காசிவாழ்புலேயன்கனநிதியுடைய
மாசிலாவீரவாகுவுக்கின்று
வாசவன்போல்வாழ்ந்துலகாண்ட
பூசிதஅயோத்திப்புரவலன்றன்னைக்
கோதிலாத்தரகன்கூலிக்காயடிமைச்
சாதனமெழுதும்சாரம்யாதென்றல்
இந்நாளிவனையிசைந்துவிற்திடவே

பத்தியபொன்னோர்பதினாயிரந்தான்
சத்தியகீர்த்திநான்பற்றலானேன்
சித்தமாயிவரைவின்புறமளித்தேன்
சாட்சிநட்சத்திரத்தாகருமிவருங்
காட்சியாநானேகையெழுத்துடனே
அடிமைச்சாதனத்தையன்புடனெழுதித்
திடமுடனீந்தசீட்டிதுதானே.

சத்தியகீர்த்தி-வசனம்.

இந்தச்சீட்டைப் பறையன்கையில் மணதொப்பியெப்படிகொடு ப்பேன் சுவாமி.

இராசன்-வசனம்.

அரிகரி அரிகரி இப்படியுஞ்சொல்லலாமா சத்தியபங்கமாமேஉ டனேயவன்கையிற்கொடுத்துவிடும்மந்திரி.

சத்தியகீர்த்தி-வசனம்.

இந்தா அப்பாவீரவாகுபொன்னைக்கொடுத்துச்சீட்டைவாங்கிக் கொள்ளப்பா.

வீரவாகு-வசனம்.

பொன்னையார்கையில்கொடுக்கவேணும்ஆண்டே.

சத்தியகீர்த்தி-வசனம்.

இந்தப்புண்ணியவான்கையிற்கொடுத்துவிடுமப்பா

வீரவாகு-வசனம்.

இந்தாசாமிபாப்பார ஆண்டே கொள்ளிக்காசுகூடக்காசுவாய்ச் சரிசிநோம்பிச்சோறுதுண்டம் விற்றகாசிபெல்லாமிதிலேயிருக்குது என்னைத்தீண்டாதே தூரப்போசாமிபாப்பார ஆண்டே.

தாகன்-வசனம்.

அடாய் அறுதலைத்தேவடியாள்பிள்ளாய் பொன்னுக்குத்தி[illegible] டாநாய்விற்றகாசுகொலைக்கிறதாதொடாமல்வையடா எடுத்துக்கொள் ளுகிறேன்.

வீரவாகு-வசனம்.

ஓஆண்டேவிலைப்படாதஆண்டே நீ இந்தக்கணக்குப்பார்[illegible] கோநீயா விலைப்பட்டஆண்டே இந்தத்தோல் காவடியையெடுத்துக் கொண்டுபறைச்சேரிக்குமுன்னே நடபோ.

இராசன்-வசனம்.

காவடியுமெடுத்துக்கொள்ளுகிறேன் முன்னேபும்[illegible] [illegible] னிமேல்நீயெனக்கு ஆண்டே நானுனக்கடிமையப்பா.

தாகன்-விருத்தம்-இரு-தோடி.

விருதுக்குவேட்டை யாடும்விவேகமில்லாதமன்னா
வருகிறபாக்யமெல்லாம்வாயினுலிழப்பாருண்டோ
ஒருபொய் மாத்திரம்நீசொன் னுனக்கொருகுறைதானுண்டோ
பெருமையோபறையனுக்குப்பிணத்தொழில்செய்வதையா.

வசனம்.

ஐயையோமகாராஜனே ஒருபொய்சொன்னமாத்திரத்திலேஉன
க்குக்குறைவுவருமாவருகிறபாக்யமெல்லாம்வாயினுலே போக்கடித்
துக்கொள்ளுவாருண்டோ ஒருபொய்சொல்வதற்கஞ்சிப்பறையனுக்
குஅடிமையாவார்களாபிணஞ்சுடவும்மனதொப்புவார்களா இப்போத
வதுஒருபொய்சொல்லும்பார்ப்போம்சகலமும்உம்முடையதாகப்ப
ண்ணுகிறேன்நேக்குஉம்மைப்பார்க்கமிகவும் துக்கம்வாரதே அரிகரி

இராசன்-வசனம்.

போதும் போதும் புண்ணியபுருஷா இரக்கமுள்ள மகானுபா
வாஉம்முடையகூலிவந்து சேர்ந்ததாசொல்லும்சுவாமி.

தாகன்-வசனம்.

ஆம் ஆம் இனியும்முடைய தலைப்பாடு எனக்குத்தாருக்கூலிவ
ந்ததுநேக்குஉத்தரவுகொடுக்கிறீரா என்தாகிலகப்பட்டவர்களொரு
நிமிஷத்திலாயிரம் பொய்சொல்லிப்போடுவார்கள் உன்னைப்போலு
ஞ்சத்தியவான் இந்த ஈரேழுபதினாலுலோகத்திலுமில்லை நேக்கு உ
த்தரவுகொடுமகாராசனே.

இராசன்-வசனம்.

சுவாமிநக்ஷத்திரத்தாகரே அடியேனொருவிண்ணப்பம்புலையன்
வீட்டிலடிமைப்பட்டுச்சுடாதபிணங்களைச்சுட்டுவாய்க்கரிசியையான்
சமைத்துப் புசித்தாலும் இன்னம் இதிலுமதிகமானயிடர்கள்வந்து
வாய்த்தாலும் பொய் சொல்லமாட்டேன் அதுவிஸ்வாமித்திரருடை
யஅருளென்று நான்சொன்னதாகச்சொல்லும்சுவாமி தயவிருக்கட்
டும்போய்வாரும்.

தாகன்-வசனம்.

அப்படியேசொல்லுகிறேன்நான்போய்வருகிறேன்மகாராசனே.

வீரவாகு-வசனம்.

அடாபோடா இது ஏதடாபெருசுளுக்காயிக்குது இனிபார்நா
ன்வாடாபோடாஎன்பேன் ஒவிலேப்படாத ஆண்டே நீ அங்கேதானே
நில் தோட்டிச்சிறுக்கி பாத்தாக்காகோபிச்சுக்குவா விலைப்பட்ட ஆ

ன்டே நீமுன்னே நட அட ஆரடா இவன் கால்வாங்கிநடக்கப்பெருசு
நக்காயிக்குது.

இராசன்-வசனம்-நடக்கிறேனடாபாவீரவாகுவே.

மந்திரி-விருத்தம்-இ-ம்-முகாரி.

இதற்கோநான் கூட வந்தேனென்னையாள்மன்னுவுன்னை
பறைதக்கவேபறையன்கையிற்பற்றறவிலையாய்விற்றேன்
கதித்தமாட்டிறைச்சிதோலுங்காவடிதனிலேதாங்க
விதித்ததோவெனையும்நீங்கும்விதஞ்செய்யலாமோதெய்வம்.

வசனம்.

ஐயையோஇராசசக்ரேஸ்வரா நீயொருபறையனுக் கடிமையாகி
மாட்டுத்தோல்மாட்டிறைச்சிகாவடியைச்சுமந்துகொண்டுபறைச்சே
ரியைச்சேரவும் வந்ததாஎன்னையும் பிரித்துவிடலாச்சுதா இதற்காக
வாநான்காத்திருந்தேன் இப்படியுஞ்செய்யுமாபாவிதெய்வம் அரிகரி.

பொது-விருத்தம்-இ-ம்-சங்கராபரணம்.

மந்திரியிவ்வாறழுதுதளர்ந்துகாசி
வளாகரிநடுத்தெருவில்மறுகிநிற்க
விந்தைபெறுதோட்டியெனும்விரவாகு
விளங்குமரிச்சந்திரனைவிலையாய்க்கொண்டு
தந்திரமாய்க்குடியிருக்குஞ்சேரிநோக்கிச்
சடசடெனத்தானடந்துபோமவ்வேளை
வந்தனங்களறியாதஅந்தத்தோட்டி
மனைவியெனுந்தோட்டிச்சிவருகின்றாளே.

வசனம்

இந்தவிதமாக அடிமைப்பட்ட அரிச்சந்திரமகாராசனைத்தோட்
டியழைத்துக்கொண்டு பறைச்சேரிக்கு வருகிறபோது தோட்டிச்சி
வருகிறவிதங்காண்க.

தோட்டிச்சி-வருகிற-தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

நானேதோட்டிச்சி-ஆண்டேமாரே-நாதான்னேதோட்டிச்சி
வானோர்புகழிந்தக்காசியிலேகாணியாட்சி
மாறுதிருக்கிறசொந்தம்ஆறுப்பெருக்கமகிழ்ந்த (நானே

எருமைத்தோலாயிரம்பொன்-வருஷத்தில்
எருதுத்தோலாயிரம்பொன்
எருமைக்கொம்பாயிரம்பொன்-வருஷத்தில்
எலும்புகளாயிரம்பொன்

வரும்பிணஞ்சுட்டகட்டை-மீந்தது
 வருஷத்திலாயிரம்பொன்
தரும்பணங்காலுண்டுபிணத்துக்கிரு
 சாண்சீலையுமுண்டு
அருமையோபணங்காசுசக்களத்தி
 அவளுக்குப்பாகிபோச்சு
நிரம்பிச்சுவீடெங்குந்தோட்டிக்கு
 நினைவுண்டோகுறித்தங்கு
அரும்புபோனாலும்விடேன்
 தோட்டியைவிட்டுப்படேன்
கரும்பொன்போலென்தோட்டிவந்தாரோ
 கண்டதுண்டோ ஆண்டைமாரே. (நானே)

தோட்டிச்சி-விருத்தம்-இ-ம்- ஆனந்தபைரவி.

பார்ப்பான்வீட்டெருமைக்கண்ணும்பட்டன்வீட்டெருதும்செத்து
சாப்பாடில்லாமலூரார்தவிக்கிறரென்றழைத்த
கூப்பாடுகேக்கப்போனகூலிதானெங்கேகேட்டால்
சோப்பாளமேண்டாதோட்டிநுழைந்ததெங்கேசொல்வாயே.

வசனம்.

டோடாதோட்டி யெம்புருசாடா எங்கூட்டுக்காராடாசாமிஉன்னைக்காணுதே வூட்டிவிக்கிறப்போலே இங்கிறவாசலிலே யிங்கிறப்போலேஇக்கிறசட்டிமேலேஇக்கிதா பானைமேலேஇக்கிதாபிள்ளைமேலேயிக்கிதாஎன்மனசு

தோட்டி-வசனம்

டீ இவளே டீஇவளே டீதோட்டிச்சி இநறிஇநறியென்பெஞ்சாறி டீயெம்பெஞ்சாறி

தோட்டிச்சிவசனம்

டா நல்லது இக்கட்ருபாப்பான்வீட்டிலேசெத்ததும் அந்தப்பட்டன்வீட்டிலேசெத்ததும் அதுக்குநீபோனதும் அதையெடுத்துப்போட்டபின்பு அவங்கசாப்பிடத்தானேகூப்பிட்டாங்கோ.

தோட்டி-வசனம்.

பார்ப்பான்வீட்டிலேயும் பட்டன்வீட்டிலேயும் ஒருத்தருஞ்சாவில்லேயொருகண்ணும்ஒருஎருதுமல்லோசெத்தது.

தோட்டிச்சி- வசனம்.

அடா இக்கட்டுமடா உனக்குசோப்பாளம் வாங்காறரோவாரது உன்னைப்போல ஓட்டியேயா யெபிதிப்படிச்சேன் அந்தக்கூலியெங்கே அந்தத்தோலெங்கே கண்ணுக்குட்டிக்காலெங்கே பெருதுவா

மங்கேஇப்படிசாக்குவைச்சிக்கினு சின்னபறைச்சிவீட்டுக்குப்போ
யோ.

தோட்டி-வசனம்.

டீ தோட்டிச்சியதுவெல்லாம்வொண்ணுமல்லடியுனக்கும்என
நம்அடிமைவேலைசெய்ய இவனை விலைக்குவாங்கிக்கினுவந்தேண்டி.

தோட்டிச்சி-வசனம்.

கண்ணுக்குட்டித்தோல் வித்தகாசைக் கொடுத்துட்டையா இவ
என்னவிலை.

தோட்டி-வசனம்.

டீயேயதெல்லாமடிபத்தாயிரம்பொன்னுமடி ஆண்டைமார்சொ
ன்னார்களே.

தோட்டிச்சி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

இவன்நமக்குதவுவானு இளைக்காமல்வேலைசெய்து
சவஞ்சுடுஞ்சுடலைகாத்துச் சத்தியமாயிருப்பானோதான்
இவனையுங்கேட்போமெண்ணுமெண்ணுமல்வாங்கிப்போட்டாய்
கவலையோவுனக்குக்காசுகருத்துண்டோகணக்கிதாமோ.

வசனம்.

இதுவும்மும்பட்டகடனேபவிசுகெட்டவனே இவனுக்குப்பத்
யிரம்பொன்கொடுத்தாயேதோலைவுரிப்பானு மாட்டையிசிப்பானு
ஞ்சுடுவானுதோட்டிவுடைமையைத்திருடாமலிருப்பானுஇவனை
வேலைசெய்வானெனண்ணுகொண்டாபோடாபவிசுகெட்டவனே.

இராசன்-விருத்தம்-இ-ம்-காம்போதி.

எள்ளளவாகிலும்நீரென்மீதோரையமாக
உள்ளத்திலெண்ணவேண்டா முறுதியாயேவல்செய்வேன்
கள்ளமுங்கபடுமெண்ணேன் கருத்தையுங்காணலாகும்
உள்ளவேலைகளேதேதோ உரைசெய்தாற்றலையாற்செய்வேன்.

வசனம்.

ஐயாவீரவாகுவேயென்பேரிலெவ்வளவுஞ்சந்தேகம் நினைக்கவே
டயதில்லைகள்ளங்கபடுஎன்னிடத்தில்வராது என்னவேலையிடுகிறீ
இடுந்தலையாற்செய்கிறேன் உம்முடையமனதுக்கேதெரியவரும்.

தோட்டிச்சி-வசனம்.

டாயெஞ்சாமிஇவனைநீதானேவேலைவாங்கவேணும் இவனைப்பா
க்காளெனக்குபயமாயிக்குது.

தோட்டி-வசனம்.

டீ இவளேநீசும்மாயிரடியிடுப்புநவர அவன்கையிலேவேலைவாங்கி றேண்டி.

தோட்டிச்சி வசனம்.

டாசாமிதோட்டிசாமிஉம்பாடுஅவம்பாடு.

தோட்டி-வசனம்.

அதெல்லாம் இக்சட்டும்உம்பேரென்ன.

இராசன்-வசனம்.

என்பேர் அரிச்சந்திரனப்பாவீரவாகு.

வீரவாகு-வசனம்.

நல்லா இருக்கிச்சு அந்தப்பேராவச்சுக்கிறுஇன்னமிக்கிறு எங்குலத்தைக்கெடுக்கப்பாக்கிறுயோ.

இராசன்-வசனம்.

நீஇட்டபேரைநான்வைத்துக்கொள்ளுகிறேனப்பா.

வீரவாகு-வசனம்.

இப்போசந்தோஷம் எங்கதோட்டிச்சிக்குஞ்சந்தோஷம் டீயிவளேயிவனுக்கென்னபேரிடலாமடி.

தோட்டிச்சி-வசனம்.

டாயிவனேடாதோட்டி எப்பவும்நான் வைச்சாத்தானேயுனக்கொச்சரியாயிக்கிது.

வீரவாகு-வசனம்.

அதாண்டிஎம்பெஞ்சாதிவுனக்கும்எனக்கும்பண்ணிவைச்சாப்போலேதானேயிக்கும்.

தோட்டிச்சி-வசனம்.

டாசாமியிவனுக்குஅனிச்சத்தோட்டியென்னுவைக்கலாண்டா.

வீரவாகு-வசனம்.

எம்பெஞ்சாதிவைச்சதேஎனக்குச்சரியாப்போச்சுதுவுனக்குஅனிச்சத்தோட்டியென்னுபேருவைச்சேன்.

இராசன்-வசனம்.

ஆனாலெனக்குச்சந்தோஷமப்பாநீயிடுகிறவேலையைச்சொல்லும்.

வீரவாகு-விருத்தம்-இ-ம்-நாட்டை.

விடுவிடுவீண்பேச்சென்ன விறுவிறென்றேடியிவ்வூர்ச்
சுடலையிலிருந்தேயங்கே சுடவரும்பிணங்களுக்கு
இடுமுழத்துண்டும்பிண்டம் எரிகொள்ளிக்காசும்வாங்கி
அடிகூமநீகைக்கொள்ளாம லவையெல்லாமனுப்புவாயே.

வசனம்.

நீசரேலென்று விறுவிறென்று நடந்துபோய் இந்தவூர் சுடுகாடு போய்ச்சேரு அங்கேயிரு அங்கேசுடவார பிணங்களுக்கு வாய்க்கரிசி நோம்பிச்சோறு முழச்சீலை கொள்ளிக்காசு கொடுப்பார்களதைவாங் கியெனக்கனுப்பிவிட்டு பிணங்களைசுட்டு நீறும் நெருப்புமாக்கிப்போட்டு மீந்தகட்டை முட்டையும் அனுப்பிவிடு எம்பேலாயும் என்னூரையும்எம்பவிசையும் எங்குலத்தையும் கெடுத்தாலும் கெடுக்கிறா எங்தோட்டிச்சிபவிசைமாத்திரங்கெடுக்காதே.

இராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

கயிறுகள்கொம்புநாறு காஷ்டத்தின்மீந்தகட்டை
வயணமாய்ச்சேர்த்துக்காசு வாய்க்கரிசிகளுஞ்சீலை
நியமமாயனுப்பச்சொன்ன நெறிப்படிச்செய்வேனென்றான்
வயிறுதான்வளர்க்கவேணும் வகையெனக்குரைசெய்வாயே.

வசனம்.

கேளாயென் ஆண்டைத்தோட்டியாகிய வீரவாகுவே நீசொன்னபடியே சுடலையிற்காத்திருந்து அங்கேசுடவருகிறபிணங்களுக்குக் கொள்ளிக்காசு வாய்க்கரிசி முழச்சீலை பிண்டச்சோறும் வாங்கியனுப்புவேன் மீந்தகட்டைமுட்டை பாடைக்கொம்பு முதலானதும் அனுப்பிவிடுவேன் பிணங்களை புஞ்சுடுவேன் என்வயிறு வளர்க்கவேணும் அதற்கொரு வழிசொல்லப்பா.

வீரவாகு-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

நல்லது நோம்பிச்சோறு நானுனக்களிப்பேனென்றான்
நல்லதல்லாகொடுக்க நாயமுமல்லாநீயும்
புல்லியபசியெடுத்தாற் புசிக்கவாகாரம்வேணுஞ்
சொல்லும்வாய்க்கரிசிபான சுதந்திரங்கைக்கொள்வாயே.

வசனம்.

டா அரிச்சந்தோட்டி அங்கே வேறேயென்ன இக்குது நோம்பிச்சோறுதானிக்குது அதுபோதுமா வுனக்கு.

தோட்டிச்சி-வசனம்.

டாசாமி தோட்டிப்பறையாகுத்திரனைக்கொண்டுவந்து பறைச்சாதியிலேபோட்டு எம்பவிசையுங்கெடுத்துக் குலத்தையுங் கெடுத்தாயே போதாகுறைக்கோ இது நோம்பிச் சோற்றையும் அசலிலேகொடுப்பார்களா நம்பச்சாதியிலே கேட்டாக்கா உம்பவிசும் எம்பவிசுங் கெடுத்துப்போட்டாங்களா.

வீரவாகு-வசனம்.

டே யிவளே அப்பாணே சாமியாணே அதைக்கொடுப்பேனடா அரிச்சந்தோட்டி அந்தவாய்க்கரிசியை நீயெடுத்துக்கோமைத்ததெல்லா மிவகையனுப்பிவிடு எம்மனசாரக்கொடுத்துவிடேன் நடநட.

இராசன்-வசனம்.

அப்படியேசெய்கிறேனப்பாவீரவாகுவே.

இராசன்-தரு-கண்ணி-இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

திகழுஞ்சூரியகுலந்திரிச்சங்குவயிற்றினில் பிறந்தேனே - நல்ல
செல்வவயோத்தியைச்செங்கோல்செலுத்தியேசிறந்தேனே
சுகாதியாஞ்சந்திரமதியைமனைவியாகப் படைத்தேனே-என்தன்
சுகிர்தத்தாலேதேவதாசன்மகனாகக் கிடைத்தானே
சதுரங்கசேனைகள்சூழக்கொலுவிருந்து வாழ்ந்தேனே-அந்தத்
தவமுனிமாயத்தால்தாழ்ந்தவர்க்கெல்லாநான் தாழ்ந்தேனே
பதியையிழந்தபின்புபத்தினிதன்னையு மிழந்தேனே-அந்தப்
பத்தினிதன்னுடன்பாலனையுமிழந்து குழைந்தேனே
மறையவர்க்கவர்களைவிற்றுப்பரதேசிபோ லானேனே-என்ன
மாயன்தோட்டிவீரவாகுவுக்கடிமையா யானேனே
பறையர்க்கடிமையாகப்படைத்தானோபிரமா வெனும்பாவி-அந்தப்
பறையன்சுடலைகாக்கப்போவென்றுரைத்தானே எனைக்கூவி
திருமேவுனக்கிதுசிவசிவாகாசி விஸ்வநாதா-என்றன்
தாயார்விசாலாட்சிமேவியனுதினம் வாழ்சமேதா
இதுவேகாசிபுரியூருக்கடுத்தவோர் சுடுகாடு - எனக்
கெழுந்திதுவோபிணஞ்சுடவுமமைந்தது தலைப்பாடு.

வசனம்.

சிவசிவகாசிபுரி விஸ்வநாதா அடியேன்வாழ்வெல்லாம் போய்ப் பெண்சாதிபிள்ளையுந்துறந்து நானொரு பறையனுக்கடிமையாகி இந்தச் சுடுகாட்டிற் காத்திருந்து பிணஞ்சுடவும் விதித்ததா இந்தமட்டுக்கும் தேவரீர்திருவுள்ளம் பூர்த்தியாச்சுதா சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

நாரியைமகனையந்தப் பார்ப்பானுக்கடிமையாக்கி
வீரவாகுவுக்குத்தானும் விலைப்பட்டுப்பாடைக்கொம்பால்
தாரைவார்பந்தலிட்டுச் சுடுகாடுகாத்திருக்குந்
தீரனைச்சத்தியகீர்த்தி தேடியேவருகின்றானே.

வசனம்.

சுடுகாட்டிலே இராசனானவன் அங்குள்ளபாடைக் கொம்புகளா லபாணைகட்டிக்கொண்டு அதின்மேலேறி அந்தச்சுடலை காத்திருந் தபோது முன்னேபிரிந்துபோன சத்தியகீர்த்தி யானவன் அரிச்சந் திரமகாராசனைத்தேடி யழுதுகொண்டுவருகிறவிதங்காண்க.

சத்தியகீர்த்தி-தரு-கண்ணி.

இ-ம்-சண்டா - ஆதிதாளம்.

அறுதுமென்னைப்போலே
யரும்பாவிதானுண்டோ தெய்வமே-ஓ
நானேதான் கொடும்பாவி
நாட்டினிலின்னமுண்டோ தெய்வமே-ஓ
தாயுந்தந்தையுமவர்
தானென்றிருந்தேனேயோ தெய்வமே-ஓ
ஆயுஞ்சுத்தமுதலா
யனைத்துமவரென்றிருந்தேன் தெய்வமே-ஓ
நாடிழந்துநகரிழந்து
நல்வளமுந்தானிழந்தார் தெய்வமே-ஓ
பாடுபட்டுக்காசிவந்து
பத்தினிதனையும் விற்றார் தெய்வமே-ஓ
அத்துடன் விட்டதோசனி
அருமைமகனையும் விற்றார் தெய்வமே-ஓ
பித்தனைப்போலேதவித்துப்
பேதைபோற்கலங்கினாரே தெய்வமே-ஓ
பாவம்பெரிதாகினும்
பறையனுக்கடிமையானார் தெய்வமே-ஓ
கூலிகானவரை விற்றுக்
கொடும்பாவியானேனேயோ தெய்வமே-ஓ
ஊரைச்சுற்றிச்சேரியெங்கு
முழன்றுதேடினேனேயோ தெய்வமே-ஓ
யாரைக்கேட்டாலுங்காணே
மென்றாரென்னையையோ தெய்வமே-ஓ

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-காம்போதி.

ஐயையோவையோத்தியாண்ட வரிச்சந்திரமகிபாநீமுன்
செய்ததோர்வினையோநாங்கள் செய்திட்டபாவந்தானோ

# அரிச்சந்திரவிலாசம்.

அடமுடையகாலகண்டனவர்களைக்கொண்டேமனைக்கு
மடமடென்றுவந்தவன்முன் மனைவிவந்துதோன்றினளே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக மந்திரிசபையல்பண்ணிப்போட்டுச் சாப்பிட்டுக்கொண்டு இராசனுனவர்சுடலைகாத்திருக்கச் சந்திரமதியையுந்தேவதாசனையும் விலையாய்க்கொண்ட காலகண்டகன் அவர்களைவீட்டுக்கழைத்துக்கொண்டுபோகும்போது அவன்பெண்சாதியான காலகண்டகிவருகிறவிதங்காண்க.

காலகண்டகி-வருகிற-தரு

இ-ம்-பந்துவராளி - ஆதிதாளம்.

ஏதுநானும்பட்டுக்கிடப்பானே இங்கே போனீரோ
என்னைவிட்டேவளாத்துக்குப்போகவெண்ணியானீரோ
குதும்வாதுங்கற்றுக்கொண்டீரோபட்டுக் கிடந்தீரோ - நான்
சோபனம்பாடப்போனதுகண்டுளட்டி நடந்தீரோ
அண்டையாத்துக்குமசலாத்துக்கும்போகலானீரோ நேக்கும்நோக்கும்
மாகவெட்டமாறபண்ணுவாள்வார்த்தையைக் கேட்கலானீரோ
அண்டைவீட்டுச்சேஷையங்காரைப்பகைத்துக்கொண்டீரே நேக்கு
அவாளால்வருக்கம்போச்சுதென்னபலனைக் கண்டீரோ
மாட்டையுங்கன்னையும்பார்த்தாலதெல்லாமறந்துபோகாதோ-இடைய
வாாவிட்டாற்கன்னைவிட்டுப்பால்கறந்தாலாகாதோ (ன்
வாழாப்பெண்ணுக்குசரிசமேனு நோக்கென்ன போச்சு - ஊரார்
வசைசொல்வாரேயதனல் நாணம்நேக்கல்லோ வாச்சு
சிப்பிப்பியென்றுசெல்லுக்குத்திமுட்டை தட்டியே-காட்டில்
திரிந்தங்குள்ளவிலைகள்பறித்துவிறகுஞ் சட்டியே
தப்பிலிகோமுட்டிக்கடையில்விற்றுரொக்க மாகியே-நோக்குத்
தளிகைசாதித்தால்சாப்பிட்டுத்திரிகிறீர்காலம்போக்கியே.

காலகண்டகன்-வசனம் அடிசேவி அடிசேவி.

காலகண்டகி-வசனம்.

உன்குடுமிபறந்தாயே பட்டுக்கிடப்பன்.

காலகண்டகன்-வசனம்.

ஏதடிசேவி நேக்கு ஒருக்ஷணப்போதாகிலும் உன்னைவிட்டிருக்கிறதற்கு மனசுவாரதில்லை என்னைக் காணாவிருந்தால் நோக்கு மப்படிதானே இருக்கிறது.

காலகண்டகி-வசனம்.

ஆம் அதுதானே நினைத்துக்கொண்டு நேக்கு அடிவயிற்றிலேபக்குக்கென்று இருந்தது அண்டைவீட்டுச்சேஷைபங்கார்வந்தார் அவளைவத்துக்கொண்டு சோபனம்பாடிக்கொண்டிருந்தேன்.

காலகண்டகன்-வசனம்.

நேக்குமெத்தசந்தோஷம் அந்தசோபனஞ்சற்றேபாடி இப்படிண்கேட்கட்டும்.

காலகண்டகி-வசனம்.

வேறேயாரோபுருஷாளிருக்கிறுளே நேக்கு நாணமாயிருக்கிறதே.

காலகண்டகன்-வசனம்.

நாணம் ஓதுக்கடிநீயறியாதபுருஷர்களுண்டா.

காலகண்டகி-வசனம்.

உம்மையறியாமல் நேக்குஆரிருக்கிறுர்கள்.

காலகண்டகன்-வசனம்.

ஓரடிசேஷி காலகண்டகி குப்பணையங்காரோ.

காலகண்டகி-வசனம். ஆம்ஆம் அவர்தான் வேறேயார்.

காலகண்டகன்-வசனம். சுப்பாசாஸ்திரியோ.

காலகண்டகி-வசனம். ஆம்ஆம் அவர்தான் ஒன்னு.

காலகண்டகன்-வசனம். அப்பணையங்காரோ.

காலகண்டகி-வசனம்.

ஆம் ஆம் அவனையல்லாமல் வேறேயாரிருக்கிறது இதையெல்லாருஷாள்சொல்லுவாளா.

காலகண்டகன்-வசனம்.

இருக்கட்டுமடிசேஷிகாலகண்டகி சற்றேசோபனப்பாட்டுபாடிபோம்.

காலகண்டகிசோபன-தரு-இ-ம்-சாவேரி-ஆதிதாளம்.

சோபனம்ஸ்ரீமகாலட்சுமியாகிய
தேவிக்கும்பூமாதேவிக்குமிதஞ் (சோப)
அத்தங்கார்தம்பியணேவோரும் வாழ்க
அந்தாத்துலட்சுமணேபங்கார் வாழ்க
எந்தேசகாலமுநேகக்குள்ளபேரெல்லாம்
என்நாளுமென்னுடன்பிரியாமல் வாழ்க (சோப)
கொண்டபுருஷனிருந்தால்பய மென்ன
குடும்பத்தாரெல்லாமிருந்தால்பய மென்ன
அண்டைவீட்டுச்சுப்பாசாஸ்திரி மாத்திர
மறியாதிருந்தால்நேக்குச்சந் தோஷம் (சோப)

நெட்டைச்சேஷையங்கார்கட்டைக் குப்பையங்கார்
நேக்குதவிசெய்தபாக்கிய வான்களும்
வட்டாரம்பெருத்துவாழ்ந்திருந்தா லது
மகத்தானபாக்கியம்நேக்கு மெத்தாசை(சோப

காலகண்டகன்-வசனம்.

அந்றுடிசேஷிகாலகண்டி நேக்குத்திருப்தியாச்சுது அதிருக்க டிர் இவளைக்கண்டாயோ.

காலகண்டகி-வசனம்.

நீர்பட்டுக்கிடந்திரோ அதேதுகாணும்பாடுங்கண்ணுமாக இழுத் வந்திர்.

காலகண்டகன்-வசனம்.

அந்றுடிசேஷிகாலகண்டகிநேக்கிளு நோக்கந்தப்பயலும்மன் வேலைசெய்வதற்குக் கொண்டுவந்தேன்.

காலகண்டகி-வசனம்.

நேக்கெதுக்கு இந்த அறியாதபயல் நோக்கேதுக்கிவள் ஏது னும் விசித்திரம்பேசுகிறீர் இவாள்வெறுமைகிடைத்தார்களோ.

காலகண்டகன்-வசனம்.

வெறுமையந்றுடி வெதுமைஅந்து இவன்நாலுகாசும் இந்தப்ப இரண்டுகாசும்.

காலகண்டகி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

ஊரினில்மாட்டின்பின்னே வுழன்றுநான்றிரிந்துசாணம்
வாரியேமுட்டைதட்டி மாறுமல்விற்றகாசு
தேறுதென்றறிந்தோகாசைச் செலவழிதிடநினைத்தீர்
ஆரிதைக்கொடுப்பாரிந்த வணியாயமுண்டோகூகூ.

வசனம்.

நேக்கு அடிவயிற்றைப்பற்றியெரிகிறதே நாலுரண்டும் ஆ சுதெருவில் வெறுமைகிடக்கிறதா யந்தமாட்டின் பின்னேலதிரி சாணமெடுத்து முட்டைதட்டிவிற்றகாசு என்கையிலிருக்கிறதை இ டி அனியாயமாகச்செலவழிக்கலாமா நேக்குவயிற்றைக்கலக்கிறதே அடபட்டுக்கிடப்பன் இப்படியுஞ்செய்யலாமா கூகூ.

காலகண்டகன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

சாணமுமெடுப்பள்முட்டை தட்டுவள்வேலையெல்லாம்
கோணலில்லாமல்நெல்லுங் குத்துவள்கால்பிடிப்பள்
வீணல்லபயலுங்கொண்டன் விறதுடன்ரமிதையெல்லாம்
வேணதுசுமப்பனேலல் விவரமாய்நித்திடாயே.

வசனம்.

அந்நாடிசேஷி காலகண்டி நோக்கப்படி நஷ்டம்வரச்செய்வே
ஏதிவளாச்சணாத்தட்டிமுட்டையாக்குவள் செல்லுங்குத்துவள்கா
லபிடிப்பள் சகலவேலையுஞ்செய்வள இந்தப்பயலோ செண்டனுக்
விதகுசமினா இவ்விருப்பையுமதலாகிபிதெல்லாங்காட்டிலெ ஒன்
மல்நம்மிடவீடெல்லாங்காடாக்குவான் ஆகையால்நோக்கிஷ்டமா
டிவேலையிடலாம்வயிற்றுக்குமாத்திரமளதுவாகிலும்மிஞ்சவொட்
மல்விசாரித்துக்கொள்ளடிசேஷி.

காலகண்டி-வசனம்.

அந்நுகாலும் காசைக்கொடுத்ததுமல்லாமல் இவள்வயிற்றுக்கு
ப்படைக்கவேணுமாகல்லது இவள்பேரென்ன.

காலகண்டகன்-வசனம்.

இவள்பேர்சந்தி.

காலகண்டகி-வசனம்.

நும்இவள்பேர்தெரிந்து கொண்டேன் அந்தப்பயல்பேரென்ன.

காலகண்டகன்-வசனம்.

இந்தப்பயல்பேரென்னவென்றால்நம்முடையதாசன்.

காலகண்டகி-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

இரவினில்மூன்றுஞ்சாம மெழுந்திருந்திங்குண்டான
எருமைகள்பசுக்கள்சாணமெடுத்துமுற்றத்தில்கூட்டிப்
பரிவுடன்குப்பையெல்லாம் பள்ளத்திலெடுத்துக்கொட்டி
விரைவுடனின்னுஞ்செய்யும் வேலைகள்சிலதேசந்தி.

வசனம்.

அடிசந்தி அடிசந்தி இங்கேநம்மிட ஆத்தின்வாயிலிலேபடுத்திருக்
ணும்இராத்திரிமூன்றுஞ்சாமத்திலெழுந்திருந்து இந்தத்தொழுவ
லகட்டியிருக்கிற எருமைச்சாணம்பசுஞ்சாணங்கள் கன்றின்சா
மல்லாமெடுத்துஒன்றாய்ச்சேர்த்துநன்றாய்த்துவைத்துமுட்டை
வேணும்(கா-ன்-வசனம்) ஒன்று(கா-கி-வசனம்) தெருமுத்தம்
நித்தொழுவம் அங்கேயெல்லாஞ் சாணந்தெளித்து அந்தக்குப்
யெல்லாம்பெருக்கிநம்மிடபள்ளக்குழியிலே கொட்டவேணும்
ன்-வசனம் ஒன்று(கா-கி-வசனம்) இன்னங்கொஞ்சம்வேலைசுளு
ருக்கிறதுசொல்லட்டுமாசந்தி.

சந்திரமதி-வசனம்.

அம்மாநீரென்னவேலைகட்டளையிட்டாலும்செய்யக்காத்திருக்கி
ம்மா.

காலகண்டகி-விருத்தம்-இ-ம்-எதுகுலகாம்போதி.

மந்தையிற்சாணமெல்லாம் வாரியேமுட்டை தட்டிச்
சந்ததம்வீட்டில்நெல்லுத் தாளிவைத்தவித்துக்கொட்டிப்
பந்தமாய்ப்பதின்கலந்தான்பற்றறக்குத்தவேணும்
வந்துகால்பிடித்துக்கூழை வார்க்கவுண்டிருக்கவேணும்.

வசனம்.

சேளடிசந்திவீட்டுவேலைதீர்ந்தவுடனே மந்தைமாட்டின்பின்னாலேபோய்ச் சாணமெல்லாம் வாரிக்கொண்டுவந்து முட்டை தட்டவேணும்.

காலகண்டகன்-வசனம்-ஒன்று.

காலகண்டகி-வசனம்.

தினம்பதின்கலம்நெல்அவித்துக்கொட்டிஉலர்த்தி அண்ணடைகுத்தவேணும்.

காலகண்டகன்-வசனம்-ஒன்று.

காலகண்டகி-வசனம்.

நேக்குத்தள்ளாதவேலைகளெல்லாம்நீசெய்யவேணும் நேக்குச்சற்றேகால்பிடிக்கவேணும் நோக்குச்சட்டமாய்கூழ்சாதிக்கிறேன் நீரேவேளையாய்ச்சாப்பிட்டுக்கொண்டுநம்மிடஆத்துவேலையில் சாக்கிரதையாயிரடிசந்தி.

சந்திரமதி-வசனம்.

அம்மாகிருபைபண்ணிக்காலாலே காட்டினவேலைகளெல்லாம்கையாலேசெய்யவேகாத்துக்கொண்டிருக்கிறேனம்மா.

காலகண்டகி-வசனம்.

ஏதோநோக்குக்கைபழகியிருக்கிறதுதெரியட்டும்இந்தத்தெருமுற்றத்துக்குச்சாணந்தெளியடிபார்ப்போம்.

சந்திரமதி-சாணந்தெளிக்கிற-தரு-கண்ணி.

இ-ம்-கெண்டா-ஆதிதாளம்.

வண்ணப்பொற்கிண்ணந்தன்னிற் சந்தனங்குழைத்தணிந்தகைகளாலே-இந்த,மாட்டுச்சாணமெடுத்துவாரிக்கலாச்சே தெய்வமே
எண்ணவெண்ணுதாதிமார்களேவல்செய்யவீற்றிருந்தகைகளாலேன்,எடுத்துச்சாணஞ்சட்டியிலின்றுகரைக்கலாச்சே தெய்வமே
சவ்வாதெடுத்துனாத்தாற்றுனேசிவக்குமென்தன்கைகளாலே-நாறுஞ்சாணங்கரைக்கவென்தன்தலைவிதிவரலாச்சே தெய்வமே
இவ்வாறுவருமென்றெவ்வளவும்நானறியேன்விதியினாலே என்னை
இப்படியடிமையாக்கியேங்கவைத்தாயோஐயோ தெய்வமே

சந்திரமதி-வசனம்.

சாணங்கரைத்துத்தெளித்தாச்சுதம்மா.

காலகண்டகி-வசனம்.

அடிசந்திஏதடிகட்டியுங்கிட்டியுமாயிருக்கிறதுஇருக்கட்டும்இந்தக்கட்டைத்துடைப்பத்தாலேமுற்றம்பெருக்கடிபார்ப்போம்.

முற்றம்பெருக்குகிற-தரு-கண்ணி.

இ-ம்- புன்னுகவராளி-ரூபகதாளம்.

பாவிதெய்வமேஐயோவுனக்கு கண்களில்லையோ-எந்தன்
பரிதாபந்தீரவந்தொரு வார்த்தைசொல்லாயோ
ஈவிநக்கமோரொள்ளளவாகிலுந் தெய்வத்துக்கிராதோ-ஐயோ
வேழையர்நொந்தால்தெய்வமேயுனக்கிரக்கம்வாராதோ
விட்டகுறையோஐயோதெய்வமே விஸ்வாமித்திரமாயம்-ஒரு
வினையுமறிவாயெனக்கிந்த விதிவருவதோநாயம்
அஷ்டதிசையும்புகழும்ராஜஸ்திரீ யாகியகோலம்-இன்று
கட்டைத்துடைப்பம்பிடித்துப்பெருக்கலாச்சுதேகாலம்.

சந்திரமதி-வசனம்-முற்றம்பெருக்கியாச்சுதம்மா.

காலகண்டகி-வசனம்.

அடிசந்திரதடிகட்டைத்துடைப்பத்தை முற்றமெல்லாமிறைத்துவிட்டாய்இருக்கட்டும் இந்தச்சாணத்தையெல்லாங்கூட்டிமிதித்து முட்டைதட்டிபார்ப்போம்.

முட்டைதட்டுகிற - தரு - கண்ணி- இராகம்.

எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

வேணப்பணிவிடைகள்வெள்ளாட்டிமார்கள்செய்ய
வீற்றிருந்தேனே ஐயோ தெய்யமே
சாணிப்புழுக்கள்காலிற்படவுமிதிக்கலாச்சே
தலைவிதிதானேஐயோ தெய்வமே
காணவேணுமென்றுவந்தால்தெய்வலோகஸ்திரீகளுக்குங்
காணவரிதானமேனிஐயோ தெய்வமே
சாணமிதிக்கவந்துதெருவிலெல்லோருங்காண
தயங்கச்செய்தாயோஐயோ தெய்வமே
காணிக்கையாகராஜஸ்திரீகள்மல்லிகைச்செண்டு
கட்டிக்கொண்டுவந்துகாண்பார் தெய்வமே
சாணியுருண்டைகளைச்செண்டுபோலுருட்டத்
தலைவிதிவந்ததையோ தெய்வமே
மாணிக்கப்பந்துகட்டிமாதருடன்விளையாடி
மகிழ்ந்திருந்தேனே ஐயோ தெய்வமே
சாணிப்பந்துதிரட்டிப்பார்ப்பாத்திமனதுக்கு
சரிச்சொல்லலாச்சுதையோ தெய்வமே

சந்திரமதி-வசனம்.

சாணமெல்லாமிதித்துஉருட்டித்தட்டியாச்சுதம்மா.

காலகண்டகி-வசனம்.

அடிசந்திதட்டினமுட்டையெல்லாம்நீ பிண்டுவிழுந்தாற்போலப்பிண்டுவிழுந்துபோறதுவதடி இருக்கட்டும் இந்தநெல்லைக்குத்தடிபார்ப்போம்.

நெல்லுகுத்துகிற-தரு-கண்ணி-இ-ம்-எதுகுலகாம்போதி ஆதிதாளம்.

சித்திரப்பதுமைக்குவிசித்திரவுடைமைபூட்டிச்
சிங்காரஞ்செய்திருந்த கைகளாலே-இன்று
சித்தநொந்துருகிநெல்லைக்குத்தவுமாச்சுதேஐயோ தெய்வமே
மொத்தமலர்ச்செண்டுகளைப்பத்தியெரியச்சிவக்குங்கைகளாலே
இடுப்பிற்றுவிழமார்புளைக்கஇந்தநெற்குத்துவனோ தெய்வமே
கைச்சிவந்துகொப்பளித்துக்காய்ப்பேறியுதிரங்கள்
கசியநெற்குத்துவனோ தெய்வமே
மையெடுத்துக்கண்ணுக்கிட்டால்கைசறுக்குமென்றிருந்தேன்
மனமுங்கறுத்துதையோ தெய்வமே
கதம்பப்பொடிதிமிர்ந்தாற்களைக்குமெனதுதேகம்
சப்புதேதவிடையோ தெய்வமே
விதம்விதமாய்ப்பன்னீர்பூசும்மேனியில்வேர்வைசிந்த
விதித்தாயோவிதியையோ தெய்வமே

சந்திரமதி-வசனம்.

நெல்லைக்குத்தி அரிசிவேறு உமிவேறு தவிடுவேறு பிரிந்துவைத்தேனம்மா.

காலகண்டகி-வசனம்.

அடி-சந்திவதடி அரிசியெல்லாம்நொய்யாக்கிப்போட்டாய் கொட்டணைபோதங்கூழ்சாதிக்கிறேன் சாதிச்சுக்கொள்ளடி சந்தி.

சந்திரமதி-வசனம்.

கூழைச்சாதித்தாலும்தேவாமிர்தமாய்ப்புசிக்கிறேனம்மா.

காலகண்டகன்-வசனம்.

வந்துடி-அடி-காலகண்டகிநீதான் இவளுக்குவேலைசட்டமாயமைத்துக்கொண்டாயே இந்தப்பயலுக்குநானேவேலையிடுகிறேன்.

காலகண்டகி-வசனம்.

நீர் பட்டுக்கிடந்தீரோ குடுமையறுப்பன் நீர்தானே இந்தப்பய
யுச்குவேலையிடும் நேக்குச்சந்திபோதும்.

காலகண்டகன்-விருத்தம்-இ-ம்-தோடி.

விலையென்க்கானபிள்ளாய்விடியுமுன் னெழுந்திருந்தே
இலையுடன்விறகுமற்றுமெக்கியசமிதைகொண்டு
நிலைமையாய்வரவும்வேணும்நேக்குள்ளவேட்டிதன்னை
இலகவேதோய்த்துகூழுண்டிருந்துகால்பிடிப்பாய்நித்தம்

வசனம்.

அடாபிள்ளாய் நம்மிட தாஸாய் நேர்க்கு வேலையிடுகிறேன் கே
ட்டாய்.

தேவதாஸன்-வசனம்.

தேவரீர் என்னபணிவிடைகளைக்கட்டளையிட்டாலும் தலையா
'ல செய்யக்காத்திருக்கிறேன் கட்டளையிடும்சுவாமி.

காலகண்டகன்-வசனம்.

ஆனால் கேளடாய் அடாய் அடாய் நம்மிட தாஸாய்வெடியச்சா
த்திற்கெழுந்திருந்துகாட்டுக்குப்போய் விறகு இரண்டுசுமை இலை
ஒன்றுசுமைதருப்பை ஆறுசுமை சூரியனுதயமாகு முன்னமேகொ
ண்டுவரவேணும் இதல்லாமல் நமக்குஎதுவேளையுஞ்சற்றுநேரம்ஓன்
னைச்சாமமட்டும்கால்பிடிக்கவேணும் அடாய் அடாய் நம்மிட தா
ஸாய் நமக்கிருக்கிறது மூணுவேஷ்டி ஏழு உத்தரீயம் ஆறுதுண்டு
களபீணம் விலைகளுவாய்முழமதிகமாய் வாங்கினது அதுகளை மூ
னுவேளையுந்தோய்க்கவேணும் நோக்குச்சட்டவட்டமாய்க்கூழ்சாதி
பார்கள்கொட்டைப்பாக்கவ்வளவு நம்மிட ஆம்பிடையாள்நிதநித்
த்தம் ஒருவேளையாய்ச் சாப்பிட்டுப்போட்டு ஜாக்கிரதையாயிரும்
ள்ளாய்.

தேவதாசன்-வசனம்.

தேவரீர்வார்த்தகூழைச்சாப்பிட்டு நீரிட்டவேலையைச்செய்வே
சுவாமி.

காலகண்டகன்-வசனம்.

அடாய் அடாய் நம்மிட தாஸாய்நீஇந்த மூன்றுகன்றுக்குட்டிக
யுஞ்சற்றுநேரம்மேய்த்துக்கொண்டிருடா இதற்குள் அசலாத்துபி
ள்ளைகள் காட்டுக்குப்போகவருவார்களுடனே கூடப்போய்வா.

தேவதாசன்-வசனம்.

அப்படியேமேய்த்துக்கொண்டிருக்கிறேன் சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

விதிவசத்தாலேயந்தவேதியர்வீட்டிற்சந்திர
மதியுடன்மகனுமிந்தவாறுள்ளவேலைசெய்து

மதிமருண்டிருக்கக்காசிவாழ்மறையோர்தம்மைந்தர்
சதிருடன்காட்டுக்கேகச்சட்டமாய்வருகின்றனரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச் சந்திரமதியம்மனுந்தேவதாசனும்காலசண்டகவேதியர் வீட்டில்பணிவிடைசெய்துகொண்டிருக்க அந்தக்காசிப்பட்டணத்திலுள்ளஅசலாததுப்பிள்ளைகள் காட்டுக்குப்போகவருகிறவிதங்காண்க.

அசலாத்துப்பிள்ளைகள்-வருகிற-தரு.

இ-ம்-தோடி-ஆதிதாளம்.

பிரம்மசாரிகள்வந்தா-ரிதோ-பிரம்மசாரிகள்வந்தார்.

பிர்ம்மகுலத்திலுதித்துவேதப்பிராமணரானமகத்வாதித
தருமார்த்தகாமமோட்சசதுர்விதமுறுஞ்சிவகடாக்ஷ (பிரம்ம)

மின்னும்பட்டுஞ்சுவேஷ்டிசட்டமா யுடுத்தி- வியாகரணத்தின்
விரிவெல்லாந்தங்கள்மனதினில்வசப்படுத்தி
நன்னயமாகமுப்புரிநூலை
நன்றாய்த்திருத்தி மார்பில் பொருத்தி (பிரம்ம)

பின்குடுமிகள்தட்டிமுடித்துக் துலங்க-பஞ்சாட்சரத்தின்
பிரணவப்பெருமைநாவிலுச்சரித் திலங்க
அன்புடனிதமோதுங்காவியம்
அங்கையிலெடுத்துச்சங்கையை விடுத்து (பிரம்ம)

அரகாசிவசம்போவென்று துதித்து-சமிதைகொய்ய
அடவிக்குநாம்போவோமென்று குதித்து
திருவெண்ணீறுநுதலில்விளங்கத்
தீர்க்கமாகஅதிவிவேக (பிரம்ம)

சுப்பாசாஸ்திரி-விருத்தம்-இ-ம்- மோகனம்.

வாரையோசேஷாய்நீதான்வரமாட்டேனேக்காளோநான்
வாரையோவாதாய்நீதான்வழிதெரியாதோநேக்கு
வாரையோகுப்பாய்நீதான்வருவாள்நோக்குள்ளபேர்கள்
வாரையோநாணுப்நீதான்வருவான்நோக்குள்ளபேர்கள்.

சுப்பாசாஸ்திரி-விருத்தம்-இ-ம்-மோகனம்.

வழிதெரியாதோநோக்குவறட்டோழிபிள்ளாய்நோக்கு
பழகினவழியேயின்னும்பார்க்கிறேனிவாளும்நீயும்

நுழைகரிபோலக்காட்டில்நுழைந்தலைந்திடப்போநீர்கள்
மழுமழென் நிலையிருக்கும்மரங்களைக்காட்டுவேனோ.

வசனம்.

அந்நுடாய் அடாய் சேஷாய் இவாளெல்லாங் கூடவரமாட்டோமென்றுரளே இவாளோடேகூடநீயும்வரமாட்டோமென்னுறையே சோக்கிந்தக்சாருபழக்கமோவழிநன்றுயறிவையோமழுமழென்னுபளபளப்பாயிலைகளிருக்கிறதே அந்தமரங்களைக்காட்டுவேனோநோக்குக்காட்டமாட்டேன்.

சேஷன்-வசனம்.

அடாகுப்பாய்வரதாய்சுப்பாய்நாணுய் நம்முடைய காலகண்டகன் ஆத்திலே எவளாகிலுங்காட்டுக்குவாரதுண்டோ.

சுப்பர்சாஸ்திரி-வசனம்.

ஆம் ஆம் அந்தமூட்டுத்தேவடியாள்பிள்ளை ஆம்புடையாளிருக்கிறுளே காலகண்டகி அவள்தான்காட்டுக்குவாறது.

சேஷையர்-வசனம்.

ஆனாலழைத்துப்பார்ப்போமே ஓய் ஆர்காணும் ஆத்திலேகாட்டுக்கு நீர்வாரீரோ உம்மிட ஆம்புடையாளை எங்களோடே கூட்டிவிடுகிறீரோ.

காலகண்டகன்-வசனம்.

ஏதடாமூட்டுத்தேவடியாள் பிள்ளைகளாநம்மிட ஆம்பிடையாளுக்குவேலைவைத்துப்போட்டீர்களா அடாபிள்ளைகளாநம்மிட அடிமைப்பயலேஅனுப்புகிறேன்கூட அழைத்துக்கொண்டுபோங்கள்.

அசலாத்துப்பிள்ளைகள்-வசனம்.

அவனார்காணும் அவனார்காணும் அவனெவனோ பார்க்கட்டும் அனுப்பும்.

காலகண்டகன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அந்நுடிசந்திரிந்தஅசலாத்துச்சிறுவரோடே
கன்றுகள்மேய்க்கப்போனகட்டையாம்பயலேக்கூட்டிப்
பன்னுநல்லெரிகரும்புபரிவுள்ள இலைகள்தர்ப்பை
இன்றுபோய்க்காட்டிற்கொய்தேயெடுத்துவந்திடச்செய்வாயே

வசனம்.

அடிசந்திரம்மிடகன்றுகளைமேய்க்கப்பட்ட அடிமைப்பயலே இந்தஅசலாத்துப்பிள்ளைகளுடனே கூட்டிக்காட்டுக்குப்போய்க்கொஞ்சமாய்த்தானே ஆளொடுப்பதற்கிரட்டிப்பானசுமையாய் ஒருசுமைவிறகும்தருப்பையிலைகானாமுன்னைமுசட்டை நவசமித்துகளும் மூன்றுசுமையிலேஇதுகளெல்லாம் பறித்தெடுத்துக்கொண்டு குடுகுடென்றுவாரச்சொல்லடி.

சந்திரமதி-விருத்தம்-இ-ம் முகாரி.

வாயினில்மூலைப்பாலின்னம்மாறவுமில்லையையா
பேய்நரிபூதமியாளிபெரும்புலிநிறைந்தகாட்டிற்

போயிலேவிறகுதர்ப்பைபுனிதமாய்க்கொடுவாவென்று
நீயிசைந்திவனைப்பார்த்தால்நெஞ்சிரங்காதோசுவாமி.

வசனம்.

ஐயையோ இன்னம்வாயிலேமூலைப்பால்நாற்றமாறவில்லையே யோர டிபுலி சிங்கம்யாளிபேய்பூதம் இவைகள் நிறைந்தகாட்டுக்கனுப்பி இவைதருப்பைவிறகுகொண்டுவரச்சொல்லுகிறீரே இவனுக்குத்த தமானவேலையிடலாகாதா இவனைநீர்காணும்போதும்உமமிடமனதுக்குச் சற்றும்இரக்கமில்லையாசுவாமி.

காலகண்டன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

நோக்கென்னபொன்னைக்கொட்டிநோயாளிப்பயலைக்கொண்டால்
நேக்கந்நோஷ்டியுன்னைநீதியாசொல்லச்சொன்னார்
பாக்யவான்மகனொன்றாலும்படைத்தவர்க்கடிமையந்நோ
சாக்கிரிசெய்வதற்குத்தடையுண்டோஅனுப்புவாயே.

வசனம்.

அந்நுடிசந்தி அடிசந்தி அந்தப்பயல் தின்கிறத்தையும் தின்னுப் போட்டு இப்படிநோய்கொண்டவனைப்போலிருந்தால் பொன்னைக் கொட்டிவிலைக்குவாங்கினநேக்கந்நோஷ்டிகோக்கென்னடி நியாயஞ் சொல்லவந்தாய் குபேரனுடையபிள்ளையானாலும் அடிமைப்படைத் தவர்களுக்கு பிர்ம்மாண்டமோஅசலாத்துப்பிள்ளைகளுடனே அனுப் படி அனுப்பு.

சந்திரமதி-வசனம்.

தேவரீர் சித்தத்தில் கோபம்வேண்டாம் வந்த விதியெல்லாம்அனுபவிக்கக் காத்திருக்கிறோம் உள்ளபடியாகின்றது அனுப்புகிறேன்சுவாமி.

காலகண்டி-வசனம்.

அந்நுடிசந்திஇந்தப்பட்டிக்கிடப்பன் நான்முட்டைதட்டிவிற்று காசெல்லாம்கொட்டிக்கொடுத்துஉங்களைக்கொண்டதுவைத்துபூசை பண்ணவோஅனுப்படி அனுப்பு.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

பூதலமாண்டஅந்தப்புரவலன்றவத்தால்வந்த
காதல்சேர்மகனேயெந்தன் கண்மணிநீயேவாடா
பாதகப்பிர்ம்மதேவன் பரிந்தன்றேயெழுதிவிட்ட
சாதகப்படிபேகட்டைசமிததிலைக்கிவாள்பின்போடா.

வசனம்.

அப்பாமகனேதேவதாசா என்கண்ணேகண்ணின்மணியேஅந் தப்பாவிபான பிர்ம்மதேவன்எழுதிய எழுத்தின்பிரகாரம் இந்தப்பிள் ளைகளுடனேக் கூடகாட்டுக்குப்போய் உன்னாலே னைசக்கியமுள்ள

ாட்டுஞ் சமிதை விறகு தருப்பை இலை இதுகள்சேகரம்பண்ணிக்கொ
ண்டுவாடா அப்பா.

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

வாழ்வினில்மிகுத்திருந்த மகிழ்ச்சியைநினைக்கலாமோ
சூழ்வினையொழிவதுண்டோ துயரத்தைவிடுவாய்தாயே
வேழ்விசெய்புண்யமாகும் வேதியர்க்கடிமைசெய்தால்
தாழ்வல்லவிவர்கள்பின்னே தைரியமாயனுப்புவாயே.

வசனம்.

கேளும் என்னைப்பெற்றதாயே விதியொருவரையும் விடாது பி
ரமனுக்கென்ன ஆழியஞ்செய்தாலும் யாகஞ்செய்த புண்ணியஞ்
ெத்திக்கும் ஆகையால் நீவிசனப்படாமல் தயிரியமாகச் செலவுகொடு
ம்மாதாயே.

சந்திரமதி-தரு-இ-ம்-மோகனம்-ஆதிதாளம்.

கேளடாமகனே-நான்சொல்லும்புத்தி-கேளடாமகனே

நாளடாநமக்கினிநலிந்துவாடவும்பொல்லா
நடுக்கங்கொண்டிடத்தெய்வம்
கெடுக்கவுமென்ன செய்வம் (கேள)

டக்கும்வழியிலிந்த அசல்வீட்டுப்பிள்ளைகள்
நடக்கும்வழியைவிட்டு நடவாதே-அப்பா
டக்கும்வழியிலொருவேலையிவர்களிட்டால்
நான்செய்யமாட்டேனென்று கடவாதே-மகனே
டுக்குங்கிளைவழிகள்குறுக்கேயனேகம்வரும்
தப்பிப்போய்ப்பின்னேவழி தடவாதே-அப்பா
டுத்தம்பேசுவார்நீயுங்கூடப்பேசினாலுந்தன்
சாமர்த்தியமங்கேயொன்றும் நடவாதே-மகனே
தடுத்துநடந்தகாட்டிற்சுமைகளவர் கட்டும்போது
சுளுக்காய்நீசுமைகட்டித்தொடர்வாய்காம்செய்வதேது
புடுத்துச்செய்யுமோ அந்தப் பாழுந்தெய்வமுஞ்சூது
ஐயர்சொல்லைக்கடக்கலாமோ விதிபொல்லாது (கேள)

ழங்களிநக்குதிந்தமாத்திரிலென்றுசொல்லிப்
பறிக்கப்பனைத்துமிஞ்சி யேறாதே-அப்பா
விப்பாயோ நீயென்றுபத்தயம்பேசுவார்கள்
பதட்டமாம்பந்தயங்கள் கூறாதே-மகனே

முழக்குமோசையிதென்னபார்ப்போமென்றுநுழைவார்
முந்திபுதருக்குள்ளே நுழையாதே-அப்பா
மோசமென்னக்ஷத்திரியர்க்குரோஷமில்லையோவென்றெண்ணி
முகங்கடுத்திவர்களைச் சீறுதே-மகனே
வழங்கும்பேரிகைபோலச்சீறுங்காடி புலி
வரக்கண்டாலெவருக்கும்பிடிக்குமேபிராண கிலி
மழுங்கிப்பதுங்கவிட்டால்வாங்கிக்கொள்ளுமே பெலி
வயிற்றில்நெருப்பிடாமல்வந்துதீர்ப்பாய்பிள்ளை கலி (கேள்)

புற்றுகளைச்சுற்றிகிற்குந்தர்ப்பைப்புற்களைக்கண்டால்
பொடுக்கென்றுமுந்திவெட்டிப் பறியாதே-அப்பா
பொழுதுபோகுதென்றுதனியேயிலைவிறகு
போதாதென்றுபறிக்கக் குறியாதே-மகனே
செத்துக்கிடப்பதுபோற்கிடக்குமிருகங்களதைத்
தெறியாமல்கல்லுகளா லெறியாதே-அப்பா
திடுக்கென்றெழுந்துகொல்லுந்தப்புவதரிதப்பா
செழித்துவளர்குருத்தை முறியாதே-மகனே
பித்துப்பிடித்துநான்வழிபார்த்து வேசார
பேதலிப்புச்செய்யாமல்வருவாயென் களைதீர
பத்துமாதஞ்சுமந்துபெற்றவிந்த சகோர
பலனைக்கண்டவயிறுபதைக்காமல் களிகூர (கேள்)

தேவதாசன்-விருத்தம்இ-ம்-ஆனந்தபைரவி.

சிவனருளாலேவேறு தியக்கங்கள்நினைக்கவேண்டாம்
இவர்கள்பின்வனத்துக்கேகி யிலையுடன்விறகுதர்ப்பை
நவையறுசுமையாய்க்கட்டி நான்கொண்டுவருவேனேதுங்
கவலைகள்நினைக்கவேண்டாங் களிப்புடனிருப்பாயம்மா.

வசனம்.

கேளும் என்னைப்பெற்றதாயே சாம்பசிவமூர்த்தியா ருடைய கிரு பையினாலே ஒருகுறைவும்வராது கீர்விசனப்படாமலிரும் இந்தப்பிரா மணப்பிள்ளைகளுடனேகூட நான்போய்த் தருப்பை சமித்துகள் கொண்டுவருகிறேனம்மா.

அசலாத்துப்பிள்ளைகள்-வசனம்.

ஏதுகாணும் இவாள்சம்பிரமத்திலே போதுபோறது வாரையே வரமாட்டாயோ.

சங்கிராமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

போவென்றுசொல்லநெஞ்சம் புழுங்குதென்செய்வேனப்பா
தீவிரஞ்செய்யுமிந்தச் சிறுவர்களுடன்போய்மீண்டு

நீவரும்வழியைப்பார்த்து நிலைதளர்ந்துருகிநிற்பேன்
காவலார்தெய்வமல்லாற்கண்ணேநானென்னசெய்வேன்.

வசனம்.

அப்பாமகனே தேவதாசா இந்தச்சிறுவர்களுடனே வனத்துக்கு ப்போய்வருகிறபரியந்தம் வழிபார்த்து வழிபார்த்துப் பாதவித்துக்கொண்டேயிருப்பேன் இந்தப்பிராமணப்பிள்ளைகளை யிடைவிடாமல் கூடவேவந்து சேரப்பா உனக்குத்துணைதெய்வமேயல்லது நானென்னசெய்வேனடாமகனே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-மோகனம்.

என்பிள்ளையல்லவப்பா விவனுங்கள்பிள்ளை சொன்னேன்
என்வயிற்றினில்நெருப்பை யிடாமலேபதனமாகப்
பின்வரசெய்துகாட்டிற் பிரியாமற்சமிதைசேர்த்து
நன்மையாய்க்கொண்டுவந்து நான்காணச்செய்குவீரே.

வசனம்.

அப்பா அசலாத்துப்பிள்ளைகளே இந்தக்குழந்தையைப் பத்திரமாக அழைத்துக்கொண்டுபோய் உங்களோடொப்பந்தம் இலைவிறகு தருப்பை சமிதை முதலானதுஞ் சேகரித்துக்கொண்டு யாதொருசிந்தையுமுவராமல் உங்கள்பிள்ளையாகப்பாவித்து மறுமடியுமென்கண்ணிற்கொண்டுவந்து காட்டுங்களப்பா.

சுப்பாசாஸ்திரி-வசனம்.

அடாய் சேஷாய் இவளழறத்தைப்பார்த்தால் நேக்குவிசனமாயிருக்கிறது.

குப்பையர்-வசனம். ஆம்ஆம் நேக்குமப்படிதான்.

வரதையர்-வசனம். ஆம்நேக்குமப்படிதான்.

சுப்பாசாஸ்திரி-வசனம்.

அடாய்சுக்திரப்பிள்ளாய் நீகூடவாரையோடா.

தேவதாசன்-வசனம். ஆம் சுவாமிகூடவருகிறேன்.

காலகண்டகன்-வசனம்.

அந்நுடிசந்தி அந்தப்பயல்காட்டுக்குப்போய் விறகு கொண்டுவந்தானு.

சந்திரமதி-வசனம்.

இதோ அனுப்பிவிட்டேன்சுவாமி அன்னசெய்வேனடா அப்பா மகனேஉன்னைவிட்டெப்படியிருப்பேன்மகனே.

அசலாத்துப்பிள்ளைகள்-வசனம்.

நாங்கள்கொண்டுவந்துஉங்கள்கையிலொப்புவிக்கிறோம் நேக்குள்

ளவிறகில் பாதிதருகிறேன் ஆம்ஆம்கேக்குள்ளஇலையிம்பாதி தருகிறே
ன் நீக்குமப்படியே.

சந்திரமதி-வசனம்.

போய்வருகிறையாஎன்னப்பாகண்மணியே.

தேவதாசன்-வசனம்.

அம்மா நீவிசனப்படவேண்டாம் நான்போய் வருகிறேன் தாயே.

காலகண்டகி-வசனம்.

அடிசந்திநோக்கேதுக்கடி அசலாத்துப் பிள்ளைகளுடனே வார்த்தைஇந்தச்சாணத்தையெடுத்து முற்றத்திற்கொட்டடி.

சந்திரமதி-வசனம். இதோவந்தேனம்மா.

அசலாத்துப்பிள்ளைகள் விருத்தம்-இ-ம்-மோகனம்.

ஏதடாவுன்னைப்பார்க்கி லிராஜராஜன்போற்றோன்றச்
சோதியுமழகுங்காட்டித் துலங்கிறாயுன்னைப்பெற்ற
மாதுமோர்மன்னர்முன்னன் மகள்போலுமிருக்கின்றாளே
ஓதுமுன்னாரும்பேரு முபத்ரம்வந்ததுஞ்சொல்வாய்யே.

வசனம்.

அடாய்சிறுபிள்ளாய்உன்னைப்பார்த்தால் இராசகுமாரனைப்போலு முன்தாயைப்பார்த்தால்இராசகுமாரத்தியைப்போலுமிருக்கின்றீர்களே உங்கள்பேருமூரும்உங்களுக்குவந்தவிபத்துந்தெரியச் சொல்லிக்கொண்டுநடவும்பிள்ளாய்நமக்குவழியுந்தொலையவேணுமே.

தேவதாசன்-தரு-கண்ணி-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

என்னென்றுசொல்லுவேனெங்கள்தலைவிதியை ஐயமாரே-என்னை
ஈன்றவனரிச்சந்திரமகாராசனென்பார்கள் ஐயமாரே
தன்மையாலெனைப்பெற்றதாய்சந்திரமதியென்பார் ஐயமாரே-நாங்கள்
சத்தியந்தவறாமலேதாரணியையாண்டிருந்தோம் ஐயமாரே
வஞ்சனையாய்விஸ்வாமித்திரமுனிவர்வந்தார் ஐயமாரே - அவர்
மகத்யாகமொன்றுசெய்யத்தனங்கேட்டார் ஐயமாரே
மகிழ்ந்துகொடுத்தாரதைவாங்கிவைத்துவைத்தார் ஐயமாரே - பொல்
மாயமிருகங்களால்வனத்திலிழுத்துவிட்டார் ஐயமாரே (லா
கொடியநீசப்பெண்களைக்கூடிப்புணரச்சொன்னார் ஐயமாரே-அது
கூடாதெனவயோத்திநாடெல்லாம்வாங்கிக்கொண்டார்ஐயமாரே
வாங்கிக்கொண்டுமுன்னேவைத்தபொன்னைக்கேட்டார் ஐயமாரே-காசி
மறையோர்க்கெங்களை விற்றுமாமுனிகடன்தீர்த்தார் ஐயமாரே

மந்திரியுமவருமாய் மறுதேசம்போனூர்கள் ஐயமாரே-எந்தன்
மாதாவுநானுமாய் மறையோர்க்கடிமையானோம் ஐயமாரே

சற்றுமிரக்கமுந் தாட்சண்யமில்லாமல் ஐயமாரே-எந்தன்
தாய்க்குக்கொடியவேலைதாரைத்தார்கள்செய்கின்றுள் ஐயமாரே

குழந்தையென்றெந்தனைக்குறியாமலுங்கள்பின் ஐயமாரே-காட்டிற்
கூடப்போய்விறகுகள் கொண்டுவரச்சொன்னூர் ஐயமாரே

தாயும்நீங்களெந்தன் தந்தையுநீங்களென் ஐயமாரே - பிர்மா
தலையிலெழுதினது தப்புமோயெவருக்கும் ஐயமாரே

அசலாத்துப்பிள்ளைகள்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

விறுவிறென்றிந்தகாட்டில் விடாமலேயனேகதூரம்
நெறநெறென்றோடிவந்தோம் நில்லுங்களிங்குண்டான
விறகுகள்சமிதைநல்ல விஸ்தாரமிலைகளுண்டு
பறியுங்கள்நமக்குமிந்தப் பயலுக்குங்கூடத்தானே.

வசனம்.

அடாய்சேஷாய் சுப்பாய்குப்பாய்நாணூய்நாமானூல் வெகுதூரங்காட்டுக்குள்ளேவந்துவிட்டோம் இங்கேநன்றாய்விறகுகளிருக்கின்றது சமிதைகளிருக்கின்றது சட்டவட்டமாயறுத்துச்சுமைகட்டுங்கள் இந்தப்பிள்ளையைப்பார்த்தால் நேக்குப்பரிதாபமாயிருக்கின்றது இவனுக்குஅவாளவாள் கொஞ்சங்கொஞ்சங்கொடுப்போம்.

பிராமணப்பிள்ளைகள்-வசனம்.

ஆம்ஆம் அப்படியேசெய்வோம் நேக்குஞ்சந்தோஷம்நேக்குஞ்சந்தோஷந்தான்.

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

தீனமாந்தயாளருள்ள செழுமறையோரேநீங்கள்
தானமாய்விறகுகட்டுந் தலைச்சுமையிலையுந்தந்தீர்
ஞானவேதியர்க்குத்தர்ப்பை நான்கொய்வேனிதுபோதாது
வானுயர்புற்றின்மீது வளர்ந்திட்டசெழிப்பைப்பாரீர்.

வசனம்.

கேளுங்கசுவாமிகளே நீங்கள்கொடுத்த இலைபுல்விறகும் எசேஷ்டமாச்சுது எங்களையருக்குத்தருப்பைபோதாது அதோபுற்றின்மேலேசெழிப்பாய்த் தருப்பைவளர்ந்திருக்கின்றதே அதை ஒருக்ஷணப்போதிலே அறுத்துக்கொண்டுவருகிறேன் சற்றேநில்லுங்கள் சுவாமிகளே.

பிராமணப்பிள்ளைகள்-வசனம்.

அடாய்பிள்ளாய் இதுபோதுமென்னாலுங்கேட்கமாட்டோமென்கிறாய் எங்களுக்கானால்போதுபோறது இனி இங்கே மிருகங்களுடைய வுபத்திரவமுண்டு சீக்கிரமாய்வாடா.

தேவதாசன்-வசனம்.

இதோக்ஷணத்திலேவருகிறேன் சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

இத்தகைமறையோர்மைந்த ரியம்பவுமெதிரேநிற்கும்
புற்றின்மேலேறிதர்ப்பைப் புல்லைக்கொய்தேவதாசன்
சித்துசெய்விஸ்வாமித்ரர் செய்கையால்விளைநசர்ப்பம்
கொத்தியேகடிக்கக்கூவிக் குலைந்துகீழ்வீழ்ந்தானன்றே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகக் காட்டுக்குவந்ததேவதாசன் வீட்டுக்குவருகிற தருணத்தில்தருப்பையை அறுக்கப்போகையில் அங்கேவிஸ்வாமித்திரர்மாய்கையினாலேவந்திருந்தசர்ப்பங்கடித்திடத்தேவதாசன்பிராமணப்பிள்ளைகளைக்கூவி அழுகிறவிதங்காண்க.

தேவதாசன்-வசனம்.

அரிகரி அரிகரி ஐயையோ என்னுடன்கூடவந்த பிராமணப்பிள்ளைகளே ஓடிவாருங்கள்.

அசலாத்துப்பிள்ளைகள்-வசனம்.

ஏதுகாணும் அந்தப் பிள்ளை அழறான் அழுறான் அடாய் சுப்பாய்குப்பாய் சேஷாய்காணப் ஏதென்றுபார்ப்போம் வாருங்கள்.

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-முகாரி.

என்குலத்தெய்வம்போலு மென்னுடன்கூடவந்த
பொன்புரிநூல்விளங்கும் புநிதவந்தணரேகேளீர்
என்விதிமுடிந்ததிங்கே யிருந்ததோர்காளசர்ப்பம்
என்னுயிர்வாங்கத்தீண்டி யேறுதேவிஷமென்செய்வேன்.

வசனம்.

கேளுங்களெனக்குத் துணையாய்வந்தபிராமணப்பிள்ளைகளே எனக்கு இங்கேதானேவிதிமுடிந்தது இந்தத்தருப்பைகொய்யவந்தவிடத்திலே ஒருகாளசர்ப்பமிருந்துதீண்டி விஷமேறுது என்னசெய்வேன் என்னசெய்வேன் சுவாமிகளே.

அசலாத்துப்பிள்ளைகள்-வசனம்.

ஐயையோபசுவைத்தூக்கிவிடப்போய் கிணற்றிலேதள்ளினாற்போலாச்சுதே இதற்கென்னசெய்வோம் அரகரா அரகரா.

மந்தரப் பன்னிரு புயாசலா சங்கரி
மாதங்கி யருள்புதல்வனே
வாலவடிவான முருகேச சுந்தர மாக
வந்தருள்செய் வடிவேலனே (8)

தங்கமதி னுற்றளஞ் சமைத்து நீலம்புஷ்ப
ராகக்கல் வரியெழுப்பி
தக்கபவ ளத்தூ ணிறுத்திமேற் கோமே
தகப்போதிய லமைத்து
மங்காத வைரவுத் தரமிட்டு வைடூர்ய
மாப்பலகை யட்டைவேய்ந்து
மதிஞணு முத்துச்சுணந் தேய்த்து பச்சைமா
ணிக்கமில காலையத்தில்
தங்கியெக் காலுமுயர் வானவர் சேனபதி
தமிழினு லுன்துபுகழைத்
தாணேது மடியவர்கள் மனம்நினைத்தது மருள்செய்
சண்முகா வதிலொருவன்யான்
மங்காம லென்குலம் விளங்க வருதெய்வமே
வளமிகு மரும்பழத்தின்
வாலவடிவான முருகேச சுந்தர மாக
வந்தருள்செய் வடிவேலனே (9)

சாமிக்கு முபதேச குருவாக வந்தவா
தயங்குகதிர் வேல்கையுளவா
சர்ச்சனர்கள் மனமதனி லுற்றுவளர் கின்றவா
சாயுட்சிய மருள்செய்பவா
பூமியெல்லாம் படைத் தமர்சுக மளித்தவா
புகழடியர் முன்னின்றவா
பொன்முத ஐங்கரக் கடவுள்பின் சார்ந்தவா
பொருசூர் மடித்திட்டவா

நேமியுரு கையனது மருகவா முருகவா
    னினதடியர் தனிலொருவனும்
நேயன் முத்தப்ப னருள்பாலன் குழந்தைவேல்
    னினதருள்செய் பாமாலையை
மாமிக்க புயமதனிலே யணிந் தடியேன்
    மணம்புரிய வருள்புரிகுவாய்
வாலவடிவான முருகேச சுந்தர மாக
    வந்தருள்செய் வடிவேலனே. (10)

முதலாவது பதிகம் முற்றுபெற்றது.

---

உ

# அரும்பழம்

# வால தண்டாயுதபாணி பெயரில்

## சரசக்கழில் நெடில் ஆசிரியம் விருத்தம்.

## காப்பு.

வெண்பா.

அந்தமிக வோங்கு மரும்பழத்தின் வாழுகின்ற
கந்தன் சரசக் கழில்நெடிற்கே—முந்தமகிழ்
தந்தைதரு மாங்கனிக்குத் தந்தை தனைவலஞ்செய்
தந்திமுகன் றாளே சரண்.

## ஆசிரியம்.

அட்டமா சித்தி யகத்தியற் குணைத்து
        மங்கைவேல் கொண்டசு ரானை
பதஞ்செய்து விதியைச் சிறையினி லடைத்தும்
        அடவியிற் கீரனுக் காக
இட்டமே வைத்து வரையினைப் பிளந்தும்
        இயல் தமிழஞ்செவி யேற்றும்
எங்கணும் நிறைந்து பிரகா சித்திடுமுதல்வா
        எழியெனக் குறுதி சொன்னதனை
திட்டமாய் மறந்தத் தெருவிலோர் பெண்மேற்
        றினந்தின மோகமே கொண்டு
திரிந்தவள் மனைக்கே அனுதினம் நடப்பாய்
        சீர்த்தியோ யெனைவிட வழகோ
வட்டமாங் குயஞ்சேர் வள்ளிதெய் வானை
        மணாளனே யெனைநிதம் ஆள்வாய்
மகிதலம் புகழு மரும்பழ நகர்வாழ்
        வரதனே தண்டபா ணியனே (1)

எத்தனை கோடி விதமெனக் குரைத்து
        மென்மனை தன்னிலே வந்து
எனைத்தழுவியு மென்சுக மறி யாம
        லின்னோர் பெண்மேல் மனம்வைத்துப்
பித்தனைப் போலின் னொருமனை நாளைக்
        கொருமனை பெயர்வது மழகோ
பேயனார் மகனீ யானதா லந்தப்
        பேதமைப் புத்திவந் ததுகாண்
சித்தம் வைத்தினி பாகிலும்வழி பிசகா
        தென்னையாள் சொன்னசொற் போலே
தினமுமென் மனையிற் கனமுடன் மேவி
        தேவபோ கத்தினையருள் வாய்

மத்தமு மதியு முடித்தவர் பாலா
வள்ளிகுஞ் சரி மணவாளா
மகிதலம் புகழு மரும்பழ நகர்வாழ்
வரதனே தண்டபா ணியனே (2)

கூச்சமி லாதென் கொங்கையைப் பிடிக்கப்
கொண்டவன் போலவே வாரீர்
குவலைய மதில்நான் மாமனார் மகளோ
கொஞ்சமும் வெட்க மதிலேயோ
ஆச்சுது வயதோ கணக்கிட முடியா
தப்படி யாகியும் பால
னெமென வுலகு புகழ்ந்திட விருந்தீ
ரதிசெய மதிசெயங் காமக்
காச்சலோ கொண்டென் கரமதைப் பிடித்துங்
கையினா லணைக்கவும் வாரீர்
காங்கேயா வுமது கருத்தினை யறிந்தேன்
கையைவிட் டப்புறஞ் செல்லும்
மாச்சர்ய மாமோ மெந்தனை யாள
வருவது மருமையோ மதிப்பாய்
மகிதலம் புகழு மரும்பழ நகர்வாழ்
வரதனே தண்டபா ணியனே, (3)

செஞ்சிலம் பொலியுந் திருவடி யழகும்
சீரா று வதனத்தி னழகும்
திகழ்கதிர் வேல்கை புயாசலத் தழகும்
தேசொளிர் மேனியி னழகும்
கஞ்சனைச் சிறையில் வைத்திடு மழகுங்
கருணைகூர் நோக்கின தழகுங்
கருதுமார் படைவீ டதிலுப ரழகுங்
கனவடி யாருனை யழகும்

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-கெண்டா.

கடித்தவாய்கடித்துமார்பிற் கதுமெண அடைத்துக்கைகால்
ஒடித்ததுபோலேசோர்ந்தே னுயிர்நிலைகலங்குதையோ
வடித்தகண்ணீராளெந்தன் மாதாவுக்கிதைப்போய்ச்சொல்வீர்
பிடித்தேனுனீசன்பாதம் பிறவிநோய்தொலைந்ததையா.

வசனம்.

அரிகரி கடித்தவாயிலேகடித்து விஷம்சரசரென்று ஏறிமார்பிலே அடைக்கின்றது கைகால்சோருகின்றதுபிராணன்கலங்குகின்றது என்னைப்பிறப்பித்த ஈஸ்வரருடையபாதாரவிந்தம்போய்ச்சேருகிறேனிந்தச் சேதியைஎன்னைப்பெற்றதாயாருக்குப்போய்ச்சொல்லுஞ் சுவாமிகளே.

பிராமணப்பிள்ளைகள்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

எங்களைத்துணையாய்ப்பற்றி இந்தக்காட்டுக்குள்வந்தாய்
வங்கையோபாம்புக்குன்மேல் மலரயன்விதியோவப்பா
வங்கியவிஷத்துக்கேற்ற வகைமருந்தறியோம்நாங்கள்
எங்கேயென்மகனென்றுக்கா லென்சொல்வோமுனதுதாய்க்கே.

வசனம்.

அப்பாதேவதாசா இந்தப்பாம்புக்குன்மேல் ஏதாகிலும் வங்கையுண்டோ அல்லது பிர்மதேவனுடையவிதிதானோ இதற்காகவா எங்களைத்துணையாகக்கொண்டு காட்டுக்குவந்தாய் இந்தவிஷத்துக்கேற்ற மருந்துகளுமறியோமே என்மகன் எங்கேயென்றுகேட்டால் உன்தாய்க்கு என்னசொல்லுவோமப்பா.

சேஷைய்ர்-வசனம்.

அடாய் அப்பா ஏதடா இந்நேரமட்டுக்கும் சுவாமியை நினைத்தழுதானே இப்போ சுவாசமிழுக்கிறதே அடா என்ன. ாஅதையுங்காணோமே அரகரா அரகரா.

அசலாத்துப்பிள்ளைகள்-தரு-இ-ம்-கெண்டா-தாளம்-ஆதி.

பார்த்திருக்கும்போதேபிராணன்பறந்துபோச்சுதேஅப்பா (தேவ)
தூர்த்தயமன்போலேபாம்புகாத்திருந்ததோஅப்பா (தேவ)
பேயுமிரங்குமேநீபேசும்வார்த்தைகேட்டாலப்பா (தேவ)
மாயமோயெவர்கள்செய்தவஞ்சகமோஐயோஅப்பா (தேவ)
முத்துமுத்தாய்வார்த்தைசொல்லும்முகமுங்கறுத்ததையா (தேவ)
சற்றுமசைவில்லாமல்சரீரமுமறந்தையோ (தேவ)
உயிர்த்தோழனென்றுசொல்லிஉடன்கூட்டிவந்தோமப்பா (தேவ)
வயிறெரியவுன்தாய்க்கிந்தவார்த்தையெப்படிசொல்வோம் (தேவ)

வசனம்.

ஆனக்கண்மணியானமக்களாபொழுதுபோயிருட்டாகிறபட்டு இரு குருக்கொருவர் சண்டைசெய்தீர்களா அல்லது விளையாட்டோ என் மகனைக்கேஉங்களோடஸ்காரஞ்செய்து கூட அனுப்பினதை மறந் துகாட்டிலெங்கே தவிக்கவிட்டீர்கள் சொல்லுங்கள்பிள்ளைகளே.

சேஷையர்-வசனம்.

அடாங் சுப்பாய்நீசொல்லும்பிள்ளாய்.

சுப்பாசாஸ்திரி-வசனம்.

அடாய்சேஷாய் நேக்குவயிற்றைப்பற்றியெரிகிறதுநீதான்சொ ல்லும்பிள்ளாய்.

குப்பையர்-வசனம்.

அடாய்நாணுய்நேக்குதோஷமில்லைநீயாகிலுஞ்சொல்லடாய்.

நாணையர்-வசனம்.

அடாய் குப்பாய் அறுதலைத்தேவடியாள் பிள்ளாய் நேக்காணல் சையுங்காலுமுதறுகிறதுநாமெல்லோரும்ஒரேமுகூர்த்தத்திலே சொ ல்லுறதும்கூடறதுமாயிருக்கவேணும்ஆம்ஆம் அதுவேசரி.

அசலாத்துப்பிள்ளைகள்-விருத்தம்-இ-ம்- ஆனந்தபைரவி.

தேம்பியழுதாலென்ன செய்குவோமம்மாவுந்தன்
பூம்பசுமேனியான புதல்வனையழைத்துப்போனோம்
காம்பிலைவிறகுதர்ப்பைகட்டியேயாஞ்சுமையுந்தந்தோம்
பாம்பினுக்கிரையாய்மாண்டான்பார்த்தழுதேங்கிவந்தோம்.

வசனம்.

நாங்களென்னசெய்குவோமம்மாஉன்மகனைக் காட்டுக்குக்கூட வேஅழைத்துப்போனோம் எங்களோப்பந்தமாய்ச் சுமையுங்கட்டி கொடுத்தோம்தருப்பைகொய்யஅவன்சுதாவிற்போய் பாம்புகடித் இறந்துபோனானம்மா.

சந்திரமதிவிருத்தம்-இ-ம்-செஞ்சுருட்டி.

இறந்தயோமகனேபாரடா வென்னையுந்தெருவில்விட்டு
மறந்தையோவெனக்குச்சொல்லு மனதிட வுறுதியெல்லாம்
பறந்தையோவெனைப்பூமிக்கே பாரமாயிருக்கவைத்துத்
துறந்தையோதாய்மேலன்புதுடித்தழக்கைவிட்டாயோ.

வசனம்.

ஐயையோமகனேஎன்னை இந்தபூமிக்குப்பாரமாகவைத்துப் பரதேசிபோலத் தெருவிலேயிவிட்டு எனக்குச்சொன்ன தயிரியத் தையுமறந்துநீமாண்டுபோயிறந்தையோ அப்பாதேவதாசா.

அசலாத்துப்பிள்ளைகள்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

கால்கள்நொந்திடுதேயெங்கள் கழுத்தயர்ந்திடுதேயம்மா
நால்வரோடொத்தபாடாய் நாங்களுமழைத்துப்போனோம்
வேல்விழிபாயுன்பிள்ளை விதியினாற்செத்தான்மண்ணின்
மேல்விழுந்தழுவதாலேமீண்டினிவருகுவானோ.

வசனம்.

கேளுமம்மா உன்பிள்ளைவிதியினாலே அநியாயமாய்ச்செத்துப்போனான் அவனைநினைத்துமண்ணின்மேல்விழுந்தழுவதினாலே வருவானா நாங்கள் பிராமணாள் தலையின்மேல்சுமையிருக்கிறது கழுத்துகள் வலிக்கிறது போதுபோறது.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆநந்தபைரவி.

கூடியேநீங்களெந்தன் குழந்தையைத்தனியேவிட்டு
நாடியெவ்விடம்போனீர்கள் நலிந்தவன்தனித்ததெங்கே
தேடியேபாம்புவந்து தீண்டினவிடந்தானெங்கே
வாடியேநான்போய்க்காண வழியதுவுரைப்பீரப்பா

வசனம்.

ஐயையோஎன்மகன் உங்களுடனேகூட வந்தவனைத்தனிக்கும்படியாகவிட்டுநீங்களெங்கேபோனீர்கள் அவனைப்பாம்புகடித்தவிடமெங்கே அதற்குவழியெப்படி சற்றேதெரியச்சொல்லுங்களப்பா.

அசலாத்துப்பிள்ளைகள்-விருத்தம்-இ-ம்-ஆநந்தபைரவி.

புறப்படும்பொழுதில்தர்ப்பைபோதாதென்றேயெடுப்புமதில்
நிறைப்படத்தர்ப்பைகொய்யவிளைத்துப்போய்மடிந்தானம்மா
மறுப்படாவிசாலஆலமரமொன்றில்வழியிலுண்டு
குறிப்புடனதின்வடக்குக்குறுக்கேதெற்கேகாண்பாய்

வசனம்.

ஆனாற்சொல்லுகிறோம்கேளுங்கம்மா இந்தவழியோடேநாம் அங்கேநடுக்காட்டிலேஒரு ஆலமரம்வழியிலே இருக்கப்பட்ட அந்தத்துக்குநேர்தெற்கேஒருபுற்றுகிட்டேநின்று அதிலேதர்ப்பையை வாங்கிக்கொய்யப்போய்பாம்புகடித்திறந்துபோனான் அங்கேதேடிப்பார்த்தாலிருப்பான் உன்பிள்ளை.

சேனையர்-வசனம்.

அடாயிதப்பாய்நோக்கத்தெரிகிறது அந்தஅடையாளம் அந்தம்மாளுக்குத்தெரியவேண்டாமா.

குப்பையர்-வசனம்.

நோக்குத்தெரிந்ததைத்தான் சொல்லிக்கொளுத்தேண்டாபோ துபோறது.

சந்திரமதி-வசனம்.

ஆராகிலுந்தெரிந்தவர்கள் சற்றேதெரியமாய்த்தெரியச்சொல்லுங் களப்பா.

அசலாத்துப்பிள்ளைகள்-விருத்தம்-இ-ம்- ஆனந்தபைரவி.

வழியிதுதானோராலமரமுண்டுவடக்கேபார்த்தால்
நழுவாமலதற்குத்தெற்கே நாடிநைப்புற்றொன்றுண்டு
செழுமையாய்த்தர்ப்பைகிற்குஞ்சிறுதிடஞ்சுற்றிப்பார்த்தால்
எழுதியவிதியாற்பாலனிறந்ததைக்காண்பாயம்மா.

வசனம்.

அம்மா நீவிசனப்படவேண்டாம் இந்தவழியேபோனால்அதோ அங்கேஒருஆலவிருட்சமிருக்கிறது அதற்குவடக்கேகொஞ்சந்தூரம் போட்இதோ இப்படிப்பார்த்தால்தெற்கேஒருபுற்றிருக்கிறது அதை ச்சுற்றிதர்ப்பையிருக்கிறது அவ்விடத்தில்தான்செத்துக்கிடக்கிற னம்மா.

சுப்பாசாஸ்திரி-வசனம்.

அடாய் சேஷாய் அடாய் நாணுப்அடாய்குப்பாய்-நேக்குப்போ துபோறது எடவுங்கள் ஆம் ஆம்.

சந்திரமதி-தரு-கன்னி-இ-ம்-பைரவி-தாளம்-ஆதி.

மாறுமற்றவன்செய்து வயிற்றிலிடங்கொடுத்து
மகிழ்ச்சியாய்ப்பெற்றேனடா மகனே-மகனே-மகனே
ஆறுதேறிந்தத்துயரம் ஆராலினிமேற்றீரும்
ஐயோநானென்னசெய்வேன் மகனே-மகனே-மகனே
தேற்றுவாரில்லையயோ ஆற்றுவாரில்லையினி
செய்வினைந்சதிசெய்ததே மகனே-மகனே-மகனே
தேற்றிக்கொண்டாலுமனந் தேறுமோபபொவித்
தெய்வத்துக்கென்னசெய்தேன் மகனே-மகனே-மகனே
வயிறுதனாறுண்டால் வளராளே மகனென்று
வளர்த்தேனிதற்கோஅப்பா மகனே-மகனே-மகனே
பயனல்லோநாண்பாரிந்தப் பாரினிற்பிள்ளைபெற்றோர்-நான்
பாம்புக்கிரைகொடுத்தேன் மகனே-மகனே-மகனே
தரைமேல்மெழுகியுண்டு தவஞ்செய்துபெற்றபாலன்
தாலியிலார்க்குண்டென்போல் மகனே-மகனே-மகனே

குறையென்னசெய்தேனையோ கொடும்பாவிபிர்மதேவன்
கோவிலிடியொணுதோ மகனே-மகனே-மகனே
வயிறுதுடிக்குதெந்தன் மணிக்குடல்பதறுதே
மதியுமயங்குதையோ மகனே-மகனே-மகனே!
பயமில்லையென்றிருந்த பாவியென்னெண்ணமெல்லாம்
பாழாச்சேவிதியாலே மகனே-மகனே-மகனே
நீண்டவுலகையாள நீமணிமுடிசூட
நிலைக்குமென்றிருந்தேனே மகனே-மகனே-மகனே
மாண்டாயென்றுன்பேர்சொல்லிமறையோர்கள்வந்துரைக்கும்
வார்த்தைதான்கேட்டேனப்பா மகனே-மகனே-மகனே
கூலிபழுதாலையர் கோபஞ்செய்வாரோஐயோ
குலைவிதென்னெஞ்சமப்பா மகனே-மகனே-மகனே
பாவியவர்மனையாள் பழிபாவமென்னுவாளோ
பதைத்துப்புழுங்கிறேனே மகனே-மகனே-மகனே
உன்னுயிர்போனசேதி யுரைத்தவர்சொல்லுமுன்னே
உயிர்விட்டாலல்லோநான்றாய் மகனே-மகனே-மகனே
என்னுயிர்பெரிதல்ல விருந்தாலும்லாபமென்ன
இதோநான்வருவேனடா மகனே-மகனே-மகனே

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-பைரவி.

இவ்விதிவருமென்றெண்ணமெள்ளளவறிந்தாலுன்னை
ஒவ்விநானனுப்புவேனோவுறுதியாய்வனந்துக்கப்பா
கவ்வியேவிஷவாய்ப்பாம்புகடித்துநீமாண்டாயென்னும்
கவ்வையாஞ்சேதிகேட்கக்காத்திருந்தேனேஐயா.

வசனம்.

ஐயையோ மகனே இந்தவிதியுனக்குவருமென்றுஎள்ளளவுமறியேன் அறிந்தாலுன்னைக்காட்டுக்கனுப்புவேனோ இரத்துன்பமானசேதிகேட்கவாதெருவிலேதானேகாத்திருந்தேன்பாம்புகடித்தா இறந்தாய்மகனே.

காலகண்டகன்-வசனம்.

அந்தடிசந்திஅடிசந்தி ஏதடிதெருவிலேதானே நிற்கிறாய்வநாலும்அசைவுண்டோ.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கெண்டா.

தெருவினில்நிற்கத்தானேதெய்வமும்விதித்ததையா
பெருகவேபுத்ரசோகம்பெண்ஜென்மமெடுத்தபாவி

கருநிறவனத்திலேதன் தலையனோர்பாம்பின்வாய்க்கே
இரையெனமாண்டானென்று என்செய்வேனென்செய்வே.

வசனம்.

தேவரீர்கோபம்பண்ணுகிறீர் என்வயிற்றெரிச்சலைக்கேளும் உம்முடைய அடிமையாகிய என்னருமைக்கண்மணியான மகன்தேவதாசன்காட்டிலேசர்ப்பந்தீண்டி இறந்தானென்று அசலாத்துப்பிள்ளைகள்சொன்னார்கள் என்னசெய்வேன் என்னசெய்வேன் சுவாமி.

காலகண்டகன்-வசனம்.

செத்தவன்வீட்டிலேகெட்டவனோடிசந்தோஷமாய்ச்சொல்லுகிறாப்போலேக்குவ பிறந்தைப்பத்தியெரிகிறது நோக்கேதுக்கடி துக்கந்துறத்துக்கொண்டுவாராது.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கெண்டா.

துக்கம்வாராதோஐயோசுமந்துனைபத்துமாதம்
அக்கிரப்பாம்பால்மாளஅவனைநானனுப்பினேனே
மிக்கவேஷமன்போய்பாலன்மேல்விழுந்தழுதிடாமற்
பக்கென்றேயெரியுங்கும்பிபதைப்பதுதீராதையா.

வசனம்.

துக்கம்வாராமலிருக்குமாசுவாமி பத்துமாதஞ்சுமந்து பெற்றேனே பெற்றகும்பிபற்றியெரிகின்றதே நானே அநியாயமாய்க்காட்டுக்கனுப்பிச்சாகக்கொடுத்தேனே செத்தபிள்ளையின்மேல் விழுந்தழாமல் என்துக்கந்தீருமா சுவாமி.

காலகண்டகன்-விருத்தம்-இ-ம்- மோகனம்.

எத்துமுன்மொழியைப்பார்த்தாலென்னையேமாத்திப்போட்டு
சித்துசெய்தோடிப்போகத்திருட்டடியெடுக்கின்றயோ
மெத்தவும்பணத்தைக்கொட்டிவிழலப்பறேனேனெனக்கு
நித்திரைவருமோவுன்னைநீங்கநான்விடுவதுண்டோ.

வசனம்.

ஏண்டிசந்திரி அடிசத்தியமாய்ப்பேசுகிறசொல்லையும்நீயெடுத்ததிருட்டடியையும் நீபண்ணுகிறசிந்தையும் பார்த்தால் நீயோடிப்போகநினைக்குற எத்தனம்போலக்காணுகிறதுவிருதாவிலே என் கையிலிருந்தகாசைக்கொட்டிக்கொடுத்து நான்விழலப்பறனேன் அதுதான்கண்டது அதைநினைத்துக்கொண்டால்நேக்குநித்திரைவருமா பயலைஅனுப்பிமோசம்போனேனே இனிஉன்னையும்விடுவேனோ.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-முகாரி.

பணத்திற்கடிமையாகப்படைத்தநீதனக்கொப்பநான்
கணத்திலிப்போபோபக்கக்காட்டிப்பேசலாந்தேதடிக்

குணத்தவனுகுமென்சேய்கொடியவெவ்வரவால்மாண்ட
பிணத்தைக்கண்டடக்கஞ்செய்துபிசகாமல்வருவேன்சுவாமி.

வசனம்.

தேவரீர்பணத்தைகொடுத்து அடிமையாகப்பட்டதாலும் பெற்றபிள்ளைசெத்தானென்றுக்கேட்டால்பெற்றவயிறு பத்தியெரிந்து கொதிக்காதாகாட்டிலேதிக்கில்லாமற்கிடக்கிறபிணத்தைக்கண்டு அடக்கஞ்செய்துவுடனேவந்துவிடுகிறேனசத்தியந்தப்புவேனோசுவாமி

காலகண்டகன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

செத்தவன்குழந்தை நீபோய்த்திருப்பிப்பார்த்தென்னசெய்வாய்
சத்யமாய்வருவேனென்றுரைப்பதற்குமென்னசெய்வேன்
சித்திரப்பிதுவோவையல்செத்தது பொய்யோமெய்யோ
மெத்தவுமலட்டவேண்டாம்விடிந்தபின்பார்ப்போம்போடி.

வசனம்.

அந்நாடிசத்தி செத்தவன்குழந்து கிழக்கிலிருந்தாலென்னமேற்கிலிருந்தாலென்னநீபோய்திருப்பிப்பார்த் தென்னசெய்கிறது சத்தியமாயவருவேனென்றுசொல்லுறாய் வராவிட்டால்நானென்னசெய்கிறது இந்தசித்திரிப்புதந்திரியாவசமெல்லாம்நானறிவேன் நேக்குநித்திரை வாராது நம்மையலட்டினுல்கோபம்வரும்எல்லாம்போதுவிடிந்தால்பார்ப்போம்போடிபோ.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-செஞ்சுருட்டி.

தெய்வத்துக்கடுத்திடாது திருவுளம்பொறுத்திடாது
ஐயுமிவ்வேழைக்குப்பிரிந்துதான்கொதிக்குதையா
மெய்யுரைபிசகமாட்டேன்விடியுமுன்வருவேனென்முன்
செய்தவப்பாலன்மாண்டசேதிகேட்டிருக்கின்றேனே.

வசனம்.

ஐயோநீர்சொல்லுகிறவார்த்தைதெய்வத்துக் கடுக்குமாதிருவுளந்தான்பொறுக்குமா ஒருக்காலுஞ்சத்தியந்தப்ப மாட்டேன்பொழுதுவிடியுமுன்னேவந்துசேருகிறேன் பெற்றவயிறுகொதிக்கின்றதுதடைசொல்லாமல்உத்தரவுகொடுஞ்சுவாமி

காலகண்டகன்--விருத்தம்-இ-ம்- மோகனம்.

பூனையும்வீட்டைவிட்டோடிப்போய்விடும்பிராணன்செத்தால்
ஆனையாம்பாவமென்பாரதுபோலவந்துநோந்தாய்
நினல்லசமர்த்திபோபோநேக்குள்ளவேலையெல்லாங்
கூனமில்லாமற்செய்துகொட்பெண்விடிமுன்வாராய்.

வசனம்

ஆஹாஹா நேர்த்தியாயிருக்கின்றது நீசொன்னவார்த்தை ஒருவீங்கப்பூனையானது தொட்டாலும்போய்விடும் செத்தாலுந்தோஷம் அதுபோலநேக்குநேரிட்டாய் இருக்கட்டும் சட்டமாய் ஆத்திலுள்ளவேலையெல்லாஞ்செய்துபோட்டுபோது விடியுமுன்னமே ஆத்துக்குவாவேணும் அடி சந்திரீ முத்தமெல்லாம்பெருக்கியெடுக்கலையா.

சந்திரமதி-கண்ணி-இ-ம்-பைரவி-ஆதிதாளம்

பெற்றவழிநெறியப்புத்ரசோபத்தாலே
 முத்தம்பெருக்கிவைத்தேன் மறையோனே
செத்தமகனைப்போய்க்காணத்தத்தளித்துத்தடுமாறி
 முத்தம்பெருக்கிவைத்தேன் மறையோனே

காலகண்டகன்-வசனம்

ஆமடி சந்தி விசித்திரம் விசித்திரமாய்ப்பேசுகிறாய் கோலமிட்டையாடி.

சந்திரமதி-தரு-கண்ணி.

பாலன்செத்தசேதிகேட்டுக்காலயர்ந்துமனம்வாடி
 கோலமிட்டுவைத்தேனையா மறையோனே
ஓலமிட்டழுதாலுமக்குச்சாலவுங்கோபமாமென்று
 கோலமிட்டுவைத்தேனையா மறையோனே

காலகண்டகன்-வசனம்.

அந்தடி சந்திரீ முத்தம்பெருக்கினதிலேயுங்கோலமிட்டதிலேயும்பார்த்தால் திருவிளக்குஏத்திவைக்கமறந்தாற்போலக்காணுகிறது

சந்திரமதி-தரு-கண்ணி

திருவிளக்கையேற்றிவிட்டால் தீவினையொழியாதென்றே
 திருவிளக்கையேற்றிவைத்தேன் மறையோனே
ஒருவிளக்கேசோதிவிளக்கொத்தமகன் மாண்டானென்றே
 திருவிளக்கையேற்றிவைத்தேன் மறையோனே

காலகண்டகன்-வசனம்

அந்தடி சந்திரி நேக்கு நம்மிட ஆம்பிடையானுக்கும் பஞ்சணைமெத்தையெல்லாம் உசிதப்ரமஞ்சம் அலங்காரம்பண்ணிவைத்தாயா

நெஞ்சுருகியறிவழிய நிலைகுலைந்தேயழுதழுது
பஞ்சணையலங்கரித்தேன் மறையோனே
பஞ்சையைப்போலிறந்தமைந்தன் பாசத்தாலேபாதவித்துப்
பஞ்சணையலங்கரித்தேன் மறையோனே

காலகண்டகன்-வசனம்.

அந்நுடிசந்தி நோக்குவேலையிட வேணுமானல் நேக்குமன துவராமலிருக்கின்றது நோக்குத்துக்கந் துறத்துக்கொண்டுவாரது போதுவிடியுமுன்னே நீவந்துசேரவேணும போடிபோ.

சந்திரமதி-வசனம்.

இம்மாத்திரம் உத்தரவுகொடுத்திரே அதுபோதும் சுவாமி.

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

விடியுமுன்வாபோவென்ற வேதியன்சொல்லைக்கேட்டுக்
கடுகியேநடந்துகாசிக் கடிநகர்முழுதுந்தாண்டி
அடிதெரியாமலேங்கி யரையிருட்பொழுதிற்காட்டிற்
கொடியெனத்துவண்டுசென்று குலைந்துநொந்துருகின்றாளே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச் சந்திரமதியம்மனானவள் காலகண்டகவேதியரிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு காசிப்பட்டணமெல்லாம்தாண்டிக் காட்டிலேவந்து இருட்டிலே வழிதெரியாமல் பாதவிக்கிற விதங்காண்க.

சந்திரமதிபுலம்பல்-தரு-இ-ம்-அசாவேரி-தாளம்-ஆதி.

ஐயையோபழிகாரத்தெய்வமேயென்னையிந்த
அவதிப்படச்செய்தாயோ தெய்வமே
வையகம்புகழுமன்னர் மன்னனரிச்சந்திரன்பெற்ற
மகனைப்பாம்புகடிக்க வயிறெரிந்துநான்றுடிக்க
வருமோவருமோ கொடுமைசெய்தேனே
தருமம்பொறுவோ நெறியிதுதானே (ஐயை)

கொடுமைசெய்தவர்களில்நான்றானே முதற்பாதம்
குருடோதெய்வத்துக்குக்கண்ணில்லையோ என்னபேதம்
தொடுவழக்கிட்டவிஸ்வாமித்திரர்செய் விகாதம்
தொலைந்ததென்றிருந்தேனீதென்ன விநோதம்

கடுவாய்ப்புலிகரடிகாளிகூளி சிங்கம்
கழுவிநரிநாயோநரிவாநடுங்குதென் ணங்கம்
கரைசேர்கிலேயொன்றறியே னொருமா
முரைசேர்வதுவுமுன்னருளோ வாகா (ஐ)

கொள்ளிவாய்ப்பேயலேந்துஓகோவென்று கூவி
குலேநடுநடுங்கவேசீறுதேயெதிர் தாவி
அள்ளிமணலேத்தூவியதட்டுதோர்பேயை யேவி
அடிதெரியாதேவழியறிவேனோநான் பாவி
வெள்ளநடப்போமென்றுற்றெபொழுதுவிடிந்து போமே
விஷத்தாலிறந்தமகனிருப்பிடங்கா ணேமே
விதியோபழவினையிதுவோ சரிசரி
சதியோவயிறுசெய்தவமே அரிகரி (ஐ)

எங்கெங்குங்கருகருத்திருக்குதேயிந்தக் காடு
இதுவோஆலமாமிதுவோபுற்றின் மேடு
தங்குமாலமரத்தைக்காணுமற்றடு மாறி
தமியேன்றவிப்பதிதுதானென்னகதி மீறி
இங்கேதானேயிரவாச்சுதே யந்த
இடத்தைக்காணுமட்டுமிருக்குமோபிராண னிந்த
இடர்தான்றொலேவதுவிசமோ கிசமோ
திடமாய்மனநிலேப்படவுமென் வசமோ (ஐ)

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

எங்களுக்கென்றேகால மிசைந்ததோர்விதிவசத்தால்
இங்கொருமாமுண்டென்று ரெதிரொருபுற்றுண்டென்றார்
அங்கவர்சொல்லிப்போன வடையாளமொன்றுங்காணேன்
சங்கடந்தீர்க்கொணாதோ தயாபராவிஸ்வநாதா.

வசனம்.

ஐயையோ காசிவிஸ்வநாதா அடியாள்படுகிற சங்கடவேதனையைத்தீர்க்கலாகாதா தயாபரமூர்த்தி அந்தப் பிராமணப் பிள்ளைகள் சொன்ன ஆலமரத்தையும் காணேம் புற்றையுங்காணேம் அடையாளமுங் காணப்படவில்லையே யென்னசெய்வேனென்னசெய்வேன்

சந்திரமதி-தரு-கண்ணிகள்-இ-ம்-கவரோஸ்-தாளம்-திரிபுடை.

என்னைப்போல்பெண்சென்மமெடுத்தவர்களுண்டோ தெய்வமே
ஈதென்னகாரணம்

இன்னமுமென்னபாடுலபிக்குமோ தெய்வமே
வழியுங்காணமலென் மனமுந்தயங்குதே தெய்வமே
பழிபாவஞ்செய்திந்தப் பாரிற்பிறந்தேனே தெய்வமே
காலுமயர்ந்தென்கைகளுஞ்சோருதே தெய்வமே
கால்வைக்குமிடமெல்லாங்கனமுள்ளாயிருக்குதேதெய்வமே
தடவிவழிநடக்கத்தடமொன்றுங்காணேமே தெய்வமே
அடருமிருட்டிற்பொல்லாவடவிக்குளானேனே தெய்வமே
பாழும்நரிகளென்னைப்பற்றிப்பிடுங்காதோ தெய்வமே
சூழும்புலிகளெனைத்துடுக்காகொன்றுவிடாதோ தெய்வமே
காரைசூரைமுள்ளின் காடாயிருக்குதே தெய்வமே
தூரப்பார்த்தால்நல்லவழிபோலுங்காணுதே தெய்வமே
கிட்டிநடந்தால்வழி தட்டிப்போவதென்ன தெய்வமே
கட்டிப்பிடிப்பதுபோற் பேய்கள்பயங்காட்டுதே,தெய்வமே
ஆசைக்கரும்பாமென் னப்பனைக்காணேமே தெய்வமே
பாசமாவளர்த்தவென் பாலனைக்காணேமே தெய்வமே

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

வழியினுக்கருகேயால மரமுண்டுவடக்கேயென்றுஞ்
செழுமையாய்ப்புற்றென்றங்கே தெற்கினிலிருக்குமென்றார்
வழிபதுபிசகினேனே மாயமோநான்முன்செய்த
பழியிதுதானேவென்ன பாவமோவதனைக்காணேன்.

வசனம்.

ஐயையோ தெய்வமே இதுவென்ன பாவம் அந்தப் பிராமணப்பி ள்ளைகள் சொன்னது இந்தவழியேபோனல் வடக்கேயொரு ஆலமர முண்டென்றும் அதற்குத்தெற்கே புற்றிருக்கிறதென்றும் அங்கேமக னைக்காண்பாயென்றும் சொன்னார்களே அந்தவழிதான் தப்பிப்போ சுதோ அவைகளைக்காணமல் தவிக்கிறேன் ஈஸ்வரா ஈஸ்வரா.

சந்திரமதி-தரு-கண்ணிகள்-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

மெருத்தமலைகளாக விருக்கிறீர்களோநான்
பெற்றமகனைக் கண்ணுற் காணீர்களா

வருந்தமறியீர்களா கொடும்பாவிபுலிகளா
மகனைக்காட்டில்நீங்கள் காணீர்களா

அருமையாய்நான்பெற்ற மகனிறந்தானேயிந்த
அடவிநரிகாள்நீங்கள் காணீர்களா
ஒருமையாய்ப்பிள்ளைகுட்டியுடன்வாழுமான்களே
யுற்றமகனைக்கண்ணுற் காணீர்களா
ஆடுமயில்காளிந்த அடவிதனிலிறந்த
ஆசைமகனைக்கண்ணுற காணீர்களா
ஓடுங்காடைகளே யுங்களைக்கும்பிடுகிறேன்
ஓகோஎன்மகனைக்கண்ணுற் காணீர்களா
கூவுங்குயிலினங்கா ளன்னங்காள்நீங்களெந்தன்
குழந்தையிறந்திடத்தைக் காணீர்களா
பாவிநான்சுமந்துபெற்ற பாலன்றன்னுடல்தனைப்
பறவைகாள்நீங்கள்கண்ணுற் காணீர்களா

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

சந்திரமதியிவ்வாறு தள்ளாடிக்கலங்கியேங்கி
அந்தவல்லிருளிற்காட்டி லலைந்தலைந்துளம்வெதும்பிச்
சிந்தைநொந்தலையும்போது சிறுவன்றன்காலிற்றட்ட
மைந்தனென்றறிந்துமேலே மறுகிவீழ்ந்தழுகின்றாளே.

வசனம்.

இந்தப்பிரகாரம் சந்திரமதியம்மனானவள் அந்த இருட்டிலே காடெல்லாம் தேடி நானாவிதச் சங்கடப்பட்டுக் காலினாலே வழிதடவி வரும்போது காலிலே தட்டுப்பட்ட மகனுடைய வுடலைக்கண்டு தன்மகனென்றறிந்து மேல்விழுந்து அழுகிற விதங்காண்க.

சந்திரமதி-தரு-கண்ணிகள்-இ-ம்-கண்டா-ஆதிதாளம்.

மகனே-மகனே-மகனே-மகனே-மகனே.

சுகசரீரமாச்சோஅப்பாதுரையேஎந்தன்துரையே-யென்னைச்
சுழலவிட்டேயிந்தப்புழுதியில்விழப்பட்டாய் சுதனே

பாம்புக்கோபால்கொடுத்து வளர்த்தேனானே-இந்தப்
பழிபாவங்காணவோவுடம்பெடுத்தேன்

வீம்புக்காரவிஸ்வாமித்திரன் விளையச்செய்திட்டமாயம்-விடுமோ
விடுமோஅடடாநான்பெற்ற மகனே

பத்துமாதஞ்சுமந்துபெற்றிட்ட லாபம்
பலித்ததோஐயோநான்செய்துவைத்த பாவம்
செத்தபினுன்முகங்காணவும்வைத்ததே திமை
திமையிதுவோநான்பெற்ற (மகனே)

உன்னைக்கடித்தவதற்குன்மேலென்ன வீம்பு
உன்னைப்போலென்னையுங்கடியாதோஅந்தப் பாம்பு
என்னமாய்த்துணிந்திருப்பேனெப்படியுயிர் தரிப்பேன்
இதுவோஇதுவோகடனோநான்பெற்ற (மகனே)

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கெண்டா.

வயிற்றிடமாகவுன்னை வைத்தொருபத்துமாதம்
பயன்பெறலாமெனறெண்ணிப் பரிவுடன்பெற்றுப்பின்னர்
இயல்புடன்வளர்த்துப்போற்றி யியெறும்புறுமறகாத்தேன்
கயநரிபுலிகள்சூழுங் காட்டில்வாழ்பாம்புக்கோதான்.

வசனம்.

ஆஎன்மகனே ஆஎன்கண்ணின்மணியே பத்துமாதஞ்சுமந்துபெற்றேனே அந்தப்பாவமாநாளொருமேனியும் பொழுதொருவிதமாய்வளர்த்தேனே அந்ததோஷமா உன்னை இந்தக்காட்டிலே பாம்புக்கிரையாகக்கொடுத்தேன் அப்பாமகனே.

சந்திரமதி-தரு-கண்ணிகள்-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பாம்புக்கோவுன்னை இரைகொடுத்திட வளர்த்தேன் படு
பாவிஎன்னைப்போலாரினி இந்தப்பாரினில் மகனே
தேம்பித்தேம்பியழுதுபதைத்துத்திகைத்திட்டாயோ மனந்
திடுக்கிட்டலறியோடிவிழுந்துசெத்தாயோ மகனே
படம்விரித்தந்தப்பாவிப்பாம்புபதறிக்கடித்ததோ மார்பிற்
படுக்கென்றேவிஷமடைத்துப்பிராணன்பறந்ததோ மகனே
தொடர்ந்துவந்தத்தோழருன்னைப்புரட்டிப்பார்த்தாரோ ஆவி
சோர்ந்துபிரேதமாச்சுதென்றுசொன்னாரோ மகனே
பஞ்சணைமிசைமலர்கள்தூவிப்பள்ளிகொள்வாயே வெய்ய
பருக்காங்கல்லுகள்மீதிலிங்குபடுத்தாயோ மகனே
மஞ்சத்தில்நித்திரைவாராதென்றுபொன்னூஞ்சலாடுவாய் இப்ப
பஞ்சம்புல்விளைப்புழுதியில்நித்திரைவந்ததோ மகனே

குத்துவிளக்கெரிந்தாலுங்கண்கள்கூசுமென்பாயே இங்கே
கொள்ளிவாய்ப்பேய்கள்வெளிச்சத்திற்கண்கள்குளிர்ந்ததோமகனே

சுத்தியாயிரந்துரைகள்சூழ்ந்தாலும்போதாதென்பாயே இந்தத்
துஷ்டமிருகங்கள்சூழ்ந்துகூடவுந்துணிந்தாயோ மகனே

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-முகாரி.

அம்மாவென்றழைக்கும்வார்த்தை யயர்ந்துநீமறந்திட்டாயோ
விம்மியேபால்சுரந்து வேதனைசெய்யுதப்பா
நம்மைமீட்டிடவேமன்னன் நாடிவந்துன்னைக்கேட்டால்
வெம்மைசேர்பாம்பால்மாண்டவிதஞ்சொன்னாலுயிர்வைப்பாரோ

வசனம்.

ஆ என்னாசைக்கரும்பான என்மகனே இனியாரென்னை அம்மாவென்றழைப்பார்கள் முலைப்பால்சுரந்துவேதனைசெய்யுதே பாலுண்ணவாகிலும் எழுந்திரடா அப்பாஉன்தகப்பனார் ஒருவேளை மீட்டுக்கொள்ளும்படியாகவந்து என்மகன்எங்கேயென்றுகேட்டால் பாம்புகடித்துஇறந்தானென்றுசொல்லவா அப்பாசொன்னால்பிராணனைவைத்துக்கொண்டிருப்பாரா என்னசெய்வேன் என்னசெய்வேன்மகனே.

சந்திரமதி-தரு-கண்ணிகள்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

நானோபழிகாரி-எந்தன்-நாயகமேயென்னமாயமிதார்செய்
யுபாயமென்னவிதுமாயவினோதம்

ஏனோஇதுநேரம்-நா-னெண்ணியவெண்ணமும்பண்ணியபுண்ணியமு
மண்ணிலழுந்தியிவ்வண்ணமதாமோ

விதியேதலைவிதியே-இந்த-மேதினிமேல்வருமாதவரேன்போலொரு
பாதகரார்வினைசூசகமோயேனிது

சதியோஎவர்செய்சதியோ-தெய்வந்-தானில்லையோ உண்மைதானில்லையோ
தானில்லையோதர்மந்தானில்லையோகர்மம் (வண்மை

எமக்கென்றெதிர்ச்சே-பூமி-இழந்தேனேபதியிழந்தேனேநிதி
இழந்தேனேபுனையிழந்தேனேயென்னைத்

தனியேயழவைத்தாய்-பொல்லா-சற்பனேபோயெவர் கற்பனைசெய்தவர்
உற்பனமோஇதுசொற்பனமானது

மானேயெந்தன்மகனே-என்ன-வாறிதுசீரவாலுயிர்போனது
கூறவும்வேறில்லைகாரணமோவிது

தருமோவிதுதருமோ-பரி-தாபமெண்ணுமலே பாவிப்பிர்மாவெனைச்
சோபமிதுந்தழவோபுவிமேல்வைததோஷப் என்னதோஷம்.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-நாதநாமக்கிரியை.

விதிவசமெனவோவிஸ்வா மித்திரன்செய்வினையென்பேனோ
மதிமோசமெனவேதெய்வ வஞ்சனைதானென்பேனோ
மதிமுசமகனைப்பார்த்தேன் வயிறெரிந்தழுதத்தாலே
இதிலொருபயன்றானுண்டோ வெரிமூட்டும்வகைசெய்வேனே.

வசனம்.

ஆ கொடுமைசெய்தாயேதெய்வமே இந்தஅகோரம் விதிவசமாஅந்தவிஸ்வாமித்திரருடையசூதா தெய்வவஞ்சனையா அல்லது மதிமோசமா அப்பாமகனே இனிநானும்மைப் பார்த்துக்கொண் டழுதத்தினலே தீருமா இருக்கட்டும்சுடலைக்கரையிலேயாகிலும்கொண்டுபோய்ப்பெற்ற கடன்திரத்தகனஞ்செய்கிறேன் வாடாஎன்கண்மணியே.

சந்திரமதி-தரு-கண்ணிகள்-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

என்னருமைமகனே-மகனே-அப்பா-என்னருங்கண்மணியே.

உன்னையு
உள்ளம்நொந்து
இழந்தேனே-மகனே-மகனே - நான்
குழந்தேனே

பெற்றவயிறெரிந்து
பேசுவதுன்காதில்
குழையாதோ-மகனே-மகனே - நான்
நுழையாதோ

சுற்றுமலையுங்காடு
சூழநாய்நரிகளும்
மூறவாச்சோ-மகனே-மகனே-யுன்னைச்
வாலாச்சோ

பாருமற்றபாவிநா
ஆண்துணைக்கும்வழியில்லாமற்போனேனே
ஞனே-மகனே-மகனே - ஒரு

தீருமோநான்செய்தபாவம்
சித்திக்குமென்பாரல்லோ
உன்னாலே-மகனே-மகனே-புண்யம்
பின்னாலே

கள்ளுந்தண்ணீருமெனக்
இருதயமகிழவே
கிறைப்பாயே-மகனே-மகனே-எங்கள்
நிறைப்பாயே

கொள்ளியெனக்கிடாமல்
கொள்ளியுனக்குவைக்கத்-தொடர்ந்தாயே
நடந்தாயே-மகனே-மகனே - நான்

அள்ளிவாய்க்கரிசிநீ
அம்மாவென்றழுதுகூப்
பிடுவாயே-மகனே-மகனே-என்னை
பிடுவாயே

கர்மஞ்செய்வாயென்றிருந்தேன் மாண்டாயே-மகனே-மகனே -என்ன
கர்மஞ்செய்தேனென்றோஎன்னைவேண்டாயே
பால்குடிக்கமடியில்லவைத்துச் சுமந்தேனே-மகனே-மகனே-உன்னை
பாடைகட்டிநானெடுக்க அமைந்தேனே
காலிலிட்டதண்டைகொஞ்ச விளையாடி-மகனே-மகனே - வருங்
காட்சியுமறந்துபோச்சோ மறந்தோடி
திஷ்டிசுற்றிநான்வளர்த்த ப்ரயாசம்-மகனே-மகனே- எங்கே
சிதறவிட்டுநீமடிந்தா யென்னமோசம்
சிஷ்டிசெய்தபிர்மாவொரு படுபாவி-மகனே-மகனே - பெண்
செனமமெலைக்களித்தான் பழிதாவி
எனழுதாயம்மாவென்று கேட்பாரார்-மகனே-மகனே - பெண்
இடுக்கந்தீர்த்துத்துக்க மீட்பாரார்
ஆனமறையோனல்லாம லவன்தேவி-மகனே-மகனே-விடிந்தா
லாக்கினைசெய்வாளேயந்தப் படுபாவி

சந்திரமதி-வசனம்.

ஆ டுபாவி தெய்வமே பிள்ளையின்கையினாலே பேறடையலாமெ ன்றிருந்தேனே பிள்ளைக்கு நானுவுரிமைசெய்யவந்தது இங்கேயிரடா என்கண்ணின்மணியே கட்டைமுட்டைகள் சேர்க்கட்டுமப்பா.

சந்திரமதி-தரு-கண்ணிகள்-இ-ம்-பைரவி-ஆதிதாளம்.

வெட்டிவேர்மயில்விசிறிமலரணைமீது
மெள்ளசித்திரைகொள்ளவைத்தாயுள்ளமுந்தளருதென்பாய் - மகனே-
(மகனே

விதவிதமாய்மலரெடுத்துமிருதுவாய்பஞ்சணைசேர்த்து
மெத்தென்றுவைத்தேனதில்சித்திரைகொள்ளடாகட்டி-மகனே மகனே

பட்டு ர்க்கவஸ்திரங்கள்பட்டவுடன்சகியாமலே
பக்குவமெனக்கிது சகிக்கவசமல்லவென்பாய் மகனே-மகனே

பட்டெரிந்துவிட்டகட்டைமுட்டைகளடுக்கிவைத்தேன்
பத்திரமாய்ச்சற்றசைந்துசித்திரைகொள்ளடாகட்டி மகனே-மகனே

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

கண்டதோர்கோவிலெல்லாங் கையெடுத்ரதைக்கும்பிட்டு
உண்டென்றுகெர்ப்பமானவுடன்வெருகானஞ்செய்தே
அண்டருர்புகழப்பெற்றே யருமையாய்வளர்த்துன்றலே
கண்டிப்பலஞேசெய் கர்மம்நான்செய்தேனப்பா.

வசனம்.

ஆ என்மணியானமகனே கண்டகண்ட கோவில்களுக்கெல்லாங் கையெடுத்துக்கும்பிட்டு நீ வயிற்றிலே தரித்தமாத்திரத்திலே அநேகதானதருமங்கள் செய்து பெற்று வளர்த்து நீயெனக்குக்கொள்ளிவைப்பாயென்றல்லோ இருந்தேன் உனக்கு நானே கொள்ளியும் வைத்தேனப்பா.

போது-விருத்தம்-௩-ம்-தோடி.

சுடுகாடுதேடியேதன் தோளின்மேல்மகனையேந்தித்
தடுமாறிச்சுடலைகண்ட சந்திரமதிதானங்கே
விடுபாடாம்விறகுசேர்த்து மெள்ளவேதணலைமூட்டிச்
சுடுமதையுதைத்துத்தள்ளித் தோட்டிமன்னவன் சொல்வானே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச் சந்திரமதியம்மனானவள் அந்தச்சுடுகாட்டிலே பிணஞ்சுட்டுமீந்திருந்த விறகுகளெல்லாம் சேர்த்துத் தணலை மூட்டிப்பிள்ளையைத்தகனஞ்செய்யும்போது அரிச்சந்தோட்டியாகியஇராசனானவன் பிள்ளைவேறு காஷ்டம்வேறாக வுதைத்துத் தள்ளிச் சந்திரமதியைப்பார்த்துச் சொல்லுகிறவிதங்காண்க.

அரிச்சந்தோட்டி-விருத்தம்-௪-ம்-நாட்டை.

இரவினில்நடுச்சாமத்தி லெங்குள்ளசுடலைதன்னில்
திருடிபோல்வந்தநீயார் செத்ததோர்பிணமிதேது
மருவுமென்காவலுக்குள் மறைந்துநீசுடுவதேது
திருடிநீசெய்ததாலே தீயினிமூட்டவொட்டேன்.

வசனம்.

ஆரடி இந்தநடுநேரத்திலே என்காவலுக்குள்ளே இந்தச்சுடுகாட்டில் என்னுத்தரவில்லாமல் பிணஞ்சுடுவதேது நீயார் இந்தப்பிணமேது இந்தவேளைநீதிருடியாக நீ எனக்கறிக்கையில்லாமல் காஷ்டமூட்டினதால் இதோ இந்தக்காஷ்டத்தையும் பிள்ளையையும் உதைத்துத்தள்ளிவிட்டேன் நீயிங்கே சுடக்கூடாது அப்புறம் நட.

சந்திரமதி-விருத்தம்-௫-ம்-கண்டா.

காவல்நீயிருப்பாயென்றுங் காட்டிலேபிறந்தபிள்ளை
சாவுனக்கறியச்செய்து சயந்தனைச்சுடுவதென்றுந்

தாவிச்சொல்வாருண்டானாற் றனியநான்வருந்துவேனோ
பாவிநானேனழையிந்தப் பாலனைச்சுடுவாயையா.

வசனம்.

கேளையாவீரவாகுவே காட்டி 'லிறந்தபிள்ளையைச் சுடுகாட்டிலே கொண்டுவந்து கொளுத்தவேண்டுமானால் நீஇங்கேகாவ லிருக்கின்ற தென்றும் உனக்கறியச்செய்து கொளுத்துகிறதென்றும் தெரிந்துசெய்ய ஒருமனுஷர் திக்குண்டானால் இந்தஅர்த்தராத்திரியிலே நானே பிணத்தைச்சுமந்துவந்து சுடுவேனோ நான் ஆருமற்றபாவியாகையால் இந்தக்குழந்தையைத் தகனஞ்செய்யச் செலவு கொடுமையா.

அரிச்சந்திரதோட்டி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

ஆருமிலாதபாவி யானேனென்றுரைத்ததாலே
தீரமாய்நீதான்செய்த தீமையைப்பொறுத்தேன்கண்டாய்
வாரமாமரிசிதுண்டு வழங்குகாற்பணந்தானுண்டு
பாரமோவிதைக்கொடுத்துன் பாலனைக்கொளுத்துவாயே.

வசனம்.

ஆனால்நானென்றுசொல்லுகிறேன்கேள் நீதிக்கில்லாதஏழையென்றுசொன்னதால் நீஎன்னிடவுத்தரவில்லாமற் கஷ்டமூட்டின குற்றத்தைப்பொறுத்தேன் நமக்குச்சேரவேண்டிய வாய்க்கரிசி முழத்துண்டு காற்பணம் இதுகளைக்கொடுத்துவிட்டு உன்மகனைச் சுகமாய்த் தகனஞ்செய்துகொள்.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-தோடி.

வினையினாற்பாம்புதீண்டி விஷத்தினாலிறந்தபிள்ளை
தனையினிச்சுடவோர்துண்டு சமையும்வாய்க்கரிசிமேலும்
புனைதருபணங்காலென்றும் புகன்றனையெங்கேபோவேன்
மனதுகீயிரங்கவேணு மலரடிபோற்றிஐயா.

வசனம்.

கேளுமையா தோட்டியாரே நான்செய்தபாவத்தினாலே பாம்பு கடித்துஇறந்தபிள்ளையைத் தகனம் பண்ணவேணுமென்றால் வாய்க்கரிசியும் முழத்துண்டும் காற்பணமும் கேட்கிறீர் எனக்குக்கொடுக்கவகையில்லையே நானெப்படிகொடுப்பேன் எப்படியாவது தயவுசெய்து தகனஞ்செய்யச் செலவுகொடுமையா.

அனிச்சத்தோட்டி-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

துடிதுடித்தழுதுநீதான் சொல்வதுமெய்யானாலும்
அடிமைநானெனக்கோராண்டை யவர்க்குள்ளகாசுதுண்டும்
தடையின்றிக்கொடுக்கவேணுந் தருமத்துக்கரிசிவிட்டேன்
மிடியனைமிடியன்பார்த்து மெலிவதாலாவதுண்டோ.

வசனம்.

ஆனால் உனக்கொன்று சொல்லுகிறேன்கேள் நான்ஏழையென்றும் எனக்கு மனிதர்திக்கில்லையென்றும் நீசொல்லியழுகிறதைப் பார்த்து உனக்கிரங்கவேணுமென்று நினைத்தாலும் நானொருவருக்கடிமை எனக்கெசமான்வீரவாகு அவர்தான் பெரியதோட்டி அவருக்குச்சேரவேண்டிய காற்பணமும் முழச்சீலையும் கொடுத்துவிட்டால் எனக்குண்டானவாய்க்கரிசியை விட்டுவிடுகிறேன் தரித்திரனைத் தரித்திரன்வருத்தினால் என்னபிரயோசனம் அதுதான் என்னாலேயானவுபகாரம்

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

காசுடன்சீலைத்துண்டுங் கட்டளைப்படிகொடுத்து
வீசிடவிருந்தாற்கூட்ட மென்னுடன்வாராதோஜம்பம்
பேசியபறைகள்கொட்டிப் பெருத்தபல்லக்கில்வைத்து
மாசுறுமசானந்தன்னில் மகனைநான்கொளுத்திடேனோ.

வசனம்.

கேளுமையா தோட்டியாரே காற்பணமும் முழத்துண்டுங் கொடுக்கிறதற்கு எனக்குவழியிருந்தால் என்னுடன்கூடப் பத்துப்பேர் தம்பலாகவாரார்களா ஒருபல்லக்குக் கிடையாதா கொட்டல்முழக்கம் வாராதா அதற்குள்ள சம்பத்துடனே தகனஞ்செய்யேனா ஒருகாசுக்கும் வழியில்லையையா.

அனிச்சத்தோட்டி-விருத்தம்-இ-ம்-காட்டை.

தந்திரவிந்திரசால சமர்த்தினில்கெட்டிக்காரி
இந்தமண்ணுலகமெல்லா மீடுண்டோவுனக்குப்போபோ
மைந்தனைச்சுடவுங்காசு வழியில்லையென்றுயுந்தன்
விந்தையையறிவேன்தாலி யின்னுதேவிற்கொணாதோ.

வசனம்.

ஆஹாஹா! ஸ்திரீசாதிகளிலே உன்னைப்போலிப்படிப்பட்ட இந்திரசாலமகேந்திரசாலதந்திர சாமர்த்தியம் கற்றவர்களை நான்கண்டதில்லை பிள்ளையிறந்துபோனதென்றும் அழுகிறாய் அதற்குக்காசு கொடுக்கவழியில்லையென்றும் அழுகிறாய் இதுநல்லவித்தைதான் உன்கழுத்திலிருக்கிற தாலியைப் பார்த்தால் விலையிடக்கூடுமா அதிலே கொஞ்சம் விற்றுக்கொடுக்கலாகாதா போபோ மோசக்காரி

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கெண்டா.

பாழான தெய்வமேநீ பறந்துபோயொளித்திட்டாயோ
தாழ்வான மனிதர் தம்மைத் தாழவும்விதித்திட்டாயோ
சூழாதவினைசூழ்ந்தாலுந் தோட்டிக்குமெளிதானேனே
வீழாதநெருப்பில்வீழ்ந்து வெந்தாலுந்தீர்ந்திடாதே.

வசனம்.

ஐயையோ பாழானதெய்வமே நீஎங்கேபறந்தொளித்தாய் தாழாதகுலத்திலேபிறந்தும் அடிமைப்பட வைத்தாயே அதுபோதாதா இந்தச்சுடலை காத்திருக்கிற தோட்டிக்கு மெளிதாகவைத்தாயே என்னுடையதேகத்தை நெருப்பிலேபோட்டாலும் இந்தத்துக்கந்தீருமா ஆருக்கும்வாராதவிதி யெனக்குத்தானா வந்தது தெய்வமே தெய்வமே.

சந்திரமதி-தரு-இ-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

சூரியகுலத்தில்வந்து தோன்றியிவ்வுலகையாண்ட
துரையரிச்சந்திரன் கண்ட — தாலி-இந்த

சுடலைக்கரையிற்குடியிருக்கும்புலையன்காணத்
துலங்கலாச்சுதேவென்றன் — தாலி

ஆரியர்மறையோரெல்லா மாசீர்வாதங்கள்செய்த
அருமைபெருமையுள்ள — தாலி-இந்த

அடவியிற்சுடுகாட்டி லமைந்தபுலையன்காண
ஆச்சுதேவெளிப்பட்டென்றன் — தாலி

ஆதிபரமசிவனனுக்கிரகஞ்செய்துவைத்த
அழகுமிகுந்தவென்றன் — தாலி-இந்த

அசட்டுப்புலையன் கண்ணாற்காணவோ விருந்ததெந்த
ஞசையன் புமிருந்த தாவி

நீதிநெறியில்லையோ நிசமும்பொய்யாச்சுதோ
நித்யமாயிருக்குமென்றன் தாவி-இந்த

நீச்சப்புலையன் காணவாய்ச்சதோ கற்புடைய
நீதிமகாப்பிரகாசத் தாவி

மன்னன் பிரிந்துபோனுன் மகனுமிறந்தான்யானும்
மாளவோதெரிந்ததென்றன் தாவி-இந்த

மாடுதின்னும்புலையன் காணவந்ததோ நாளும்
மகிமையாய்மறைந்திருந்த தாவி

என்ன செனனம்நானெடுத்தேன் காசிவிஸ்வேசா
இதுவோவுன் கூத்துக ளையா-இந்த

ஏழைதலைவிதியிதுவோ நானினி
இருந்துவாழ்வதெல்லா மெய்யா

தாயேவிசாலாட்சிதனமேயுமையவளே
தயைதானிதுவோ அம்மாபடு பாவி-இந்த

சண்டாளப்புலையன் கண்ணிற்றூலியைத்தெரியவைத்துச்
சதிசெய்யலானுயே மாதேவி

மதிதயன் தவத்துமகிபன் திரிச்சங்குமைந்தன்
மனைவியாய்வேதியர்க்கடிமையா னேனே-இந்த

மகனைப்பாம்புகடிக்கமங்கல்யம்பறையன்காண
வந்ததோவிதியின்வசந் தானே

பொது-விருத்தம்-இ-ம்-தோடி.

சந்திரமதிதான் சொல்லித் தயங்கியேயழுததெல்லாஞ்
சுந்தரவரிச்சந்திரன்றான் றுலங்கவேமுழுதுங்கேட்டு
மைந்தன்றானிறந்தானென்று மனைவியினழுகைகேட்டு
வந்திடும்விதியென்னென்று மண்ணில்வீழ்ந்தழுகின்றானே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச்சந்திரமதியம்மனானவள் அழுகின்ற வார்த்தையைக்கேட்ட அரிச்சந்திரமகாராசனானவன் இறந்தது தன்பிள்ளையென்றும் அழுகிறவள் தன்பெண்சாதியென்றும் தெரிந்துபிரலாபிக்கிறவிதங்காண்க.

அரிச்சந்திரன்-புலம்பல்-தரு-இ-ம-சகானா-ஆதிதாளம்.

மகனேயுனக்கிந்தவிதியிந்நாளில்
  வருமென்றறியேனடா மகனே-மகனே
சகதலமெல்லாம்நீயாள்வாயென்றிருந்தவெண்ணந்
  தப்பிப்போச்சுதோ அப்பா மகனே-மகனே
மகிமைசேர்திரிச்சங்குமகனாநான்பிறந்தேன்
  மகனென்றுநீபிறந்தாய் மகனே-மகனே
தகைபெறுஞ்சூர்யகுலந்தழைக்குமென்றிருந்தேனே
  தடமாறிவிட்டாயோ அப்பா மகனே-மகனே
என்வயிற்றில்நீபிறந்துஎன்னபலனைக்கண்டாய்
  இந்தப்பலன்காணவைத்தேன் மகனே-மகனே
என்னையுமென்றனையுமிவர்க்குவிற்றுக்கடன்தீரு
  மேன்விதனமென்றுரைத்தாய் மகனே-மகனே
முன்னொருப்பாற்றில்நீபோயென்னைக்கரைசேர்ப்பேனென்ற
  மொழியுமறந்தாயடா மகனே-மகனே
முன்னமொருபூதம்வந்தால்முந்திநானிறப்பேனீங்கள்
  மூடுகிடந்தேகுமென்றாய மகனே-மகனே
பேடிபோல்நான்பெண்டுவிற்றுப்பிள்ளைவிற்றுமகிழ்ந்திருந்தேன்
  பேதகஞ்செய்தாயோ அப்பா மகனே-மகனே
கோடிகாலமானாலென்ன குறைவருமோவென்றிருந்தேன்
  குழந்தையேநானுன்னைநம்பி மகனே-மகனே
காட்டுக்குநீவருவாயென்றுசடிப்போமென்றெண்ணிப்பாம்பு
  காத்திருந்தமாயமென்ன மகனே-மகனே
மேட்டுப்புற்றிலந்தபாம்புகாத்திருந்துகடித்தபோது
  விதியைநினைந்தழுதாயடா மகனே-மகனே
பாம்புக்கிரையாய்வளர்த்தபாவியென்றென்னைநினைந்து
  பதைபதைத்துயிர்விட்டாயோ மகனே-மகனே

தேம்பித்தேம்பியழுதுநாலுதிக்கையும்நீநோக்கிப்பார்த்துச்
சிவசிவாவென்றுயிர்விட்டாயோ மகனே-மகனே

செத்தபிணஞ்சுட்டகட்டைசிதறினத்தைச்சேர்த்ததன்மேற்
றீயைமூட்டிவைக்கலாச்சோ மகனே-மகனே

சற்றுமிதைபாரேன்சென்னியுற்றுப்பார்த்தறிந்திடாமற்
றரையில்விழவுதைத்தேனப்பா மகனே-மகனே

அரிச்சந்தோட்டி--விருத்தம்-இ-ம்-ஆகிரி.

மாணிக்கக்கிரீடம்பூண்டு வையகமாள்வாயென்று
காணிக்கைகொடுத்தேதெய்வக் கடாட்சத்திலுன்னைப்பெற்றேன்
வீணுக்கோவளர்த்துப்பாம்பின் விஷத்துக்கோதாரைவார்த்தேன்
காணக்கிட்டாதசெல்வங் கண்டிழந்தவர்போலானேன்.

வசனம்.

ஐயையோ மகனே அனேகதெய்வஸ்தலங்களுக்கெல்லாம்பிரார்த்தனைசெய்து தெய்வகடாட்சத்தினாலே உன்னைப்பெற்றுவளர்த்துப் பாம்புக்கிரைகொடுத்தேன் அதுஎப்படியாச்சுதென்றால் கிடையாதபாக்கியங்கிடைத்து உடனேபறிகொடுத்தவர்போலாச்சுது நானென்னசெய்வேனடாமகனே.

பொது--விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

வரத்தினாலுதித்தமைந்தன் மாண்டானென்றறிந்துமன்னன்
கருத்தழக்கண்டுகொண்ட கணவனென்றறிந்துகொண்டு
சிரத்தினால்வணங்கிப்புண்யஞ் சிதையுமோவிலையோகாயம்
வருத்தமேனென்றுசந்த்ரமதிதொழுதுரைசெய்வாளே.

வசனம்.

இந்தப்பிரகாரம் பாம்பினாலே இறந்தபிள்ளையைத் தனபிள்ளையென்றறிந்துகொண்டு துக்கப்படுகிற அரிச்சந்திரமகாராசனைச் சந்திரமதியம்மனானவள் தன்புருஷனென்றறிந்து வணங்கித் தைரியஞ்சொல்லுகிற விதங்காண்க.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

எங்களைவிற்றபின்னரிந்தவாறுமக்குவந்த
சங்கடமென்னமன்னா தலைவிதிக்கழுவாருண்டோ
தங்குமோகாயம்வாழ்வு தவிருமோதெய்வவெண்ணம்
பங்கமர்சத்யத்துக்கே பழுதுவாராமற்காரும்.

வசனம்.

அரிகரி யிதுவென்னகாரணம் சத்தியத்துக்குப்பழுதுவாராமற் காப்பாற்றவேண்டும சத்தியமே பெரிது காயமும வாழ்வுஞ்சத மல்ல நீரிப்படியழுகிறது தருமமல்ல மனதுதேறிக்கொள்ளும் எங்களைப் பிராமணரிடத்தில் விற்றபின்பு உமக்கிந்த விதிவந்தவிதம் என்ன தெரியச்சொல்லும் மகாராசனே.

அரிச்சந்திரத்தோட்டி-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

மகனையுமுனையும்விற்ற மகாநிதிமுதலுக்கென்றார்
தகைபெறுதாருக்கூலி தாச்சொல்லித்தடுத்துக்கொண்டார்
புகைபடுசுடலைகாக்கப் புலையனுக்கடிமையானேன்
மகிழ்வுடன்றாருக்கூலி வந்ததென்றவரும்போனார்.

வசனம்.

கேளாய் பெண்ணே யென்றலைவிதியா லுன்னையும் மகனையும் பிராமணனுக்கு விற்றுக்கொடுத்த பொன்னை யெல்லாங் கடனுக்காச்சுதென்றார் அதற்குமேல் தாருக்கூலி கொடுக்கச்சொல்லிமறித்துக்கொண்டார் நானொருபறையனுக் கடிமையாகி அவனுதாருக்கூலிகொடுத்தேன் அந்தப்பறையன்இட்டவேலை சுடலைகாத்திருக்கிறேன் இதுதான் பெண்ணேயென்னிடவரலாறு.

சந்திரமதி-தரு-இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

துரைமக்கள்நவரத்னமுடிபட்டடிபணிந்த பாதம்-இந்தச்
சுடலையெலும்புகள்பட்டிடவந்ததென்னவி நோதம்

சரிகைப்பட்டயஞ்சமுநாடுசெங்கோல்கொண்ட பாணி. இந்தச்
சுடலைக்கரையிற்பிணஞ்சுடவந்ததோரணம் நாணி

அரசர்பந்திபர்ந்தி யர்ச்சூழக்கொலுவிருந்த வீரா-இந்த
அடிமைப்படவும்விதியமைந்ததோராசகெம்பீரா

இரத்னபுசகிருகிபெற்றிலகியராச தீரா-இந்த
செத்தபிணங்களிடையுற்றிருப்பாயோவசீரா

ச்சசத்திரக்குடையின்கீழ்ப்பூமியையாண்ட உல்லாசா-இந்த
புகைசூழ்பிணநாற்றம்பொறுத்திருப்பாயோமகாராசா

நீசத்யவானென்றுநெஞ்சமிரங்காதோ தெய்வம்-இந்த
நீசச்சுடலைகாக்கவாய்ச்சதினியென் செய்வம்

ற்றிபெரியுதெந்தன்பாழ்நெஞ்சுருகிப்புண்ணு யையோ இந்த
பாடுதொலையுமென்றுநம்பநமக்குச்சத்ய மெய்யோ

ரதேசிபோலநீர்பாதவித்தழுவதைக் கண்டு-இந்த
பாழும்பிராணன்விடாமலிருப்பேனோவதைநம்பிக் கொண்டு

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

பாவியென்பவர்களுக்குட் பாவிதானெனைப்போலுண்டோ
தேவியென்றறிந்தீர்பிள்ளைசெத்ததுங்கண்டீரையா
சீவன்போனாலுஞ்சத்யஞ் சிதறவொண்ணாதுதேறித்
தாவியமகனைவைத்துத் தகனஞ்செய்திடுகுவீரே.

வசனம்.

கேளும்மகாராசனேஎன்னைத்தேவரீருடைய பெண்சாதியென்றும்செத்துக்கிடப்பவன்உமதுபிள்ளையென்றும்அறிந்தீர் இனிசெத்த பிள்ளையைவைத்துக்கொண்டழுததினாலே சாரமென்ன பிராணன் போனாலுஞ்சத்தியத்துக்குத்தாழ்வுவராமல்பிள்ளையைத் தகனஞ்செய்யும்படியானவிதந்தேடிமனதைத்தேற்றிக்கொள்ளும் மகாராசனே.

அரிச்சத்தோட்டி-விருத்தம்-இ-ம்-தோடி.

செய்வேனோதகனநான்றான்தெய்வத்தின்செயலினாலே
பொய்சொல்லாதிருந்தவெண்ணிப் புலைபனுக்கடிமையானேன்
தையலேகாசுந்துண்டுந் தரச்சொல்லிமறையோன்கையில்
பையப்போய்வாங்கிவந்தால்பாலனைத்தகனஞ்செய்வேன்.

வசனம்.

ஆனால்நானென்றுசொல்லுகிறேன்கேளும்பெண்ணே நீபிள்ளையைத்தகனஞ்செய்யச்சொன்னதினாலேநான் செய்வேனோ ஒருபொய் சொல்லமாட்டாமற்றானே பறையனுக்கடிமையானேன் உன்னையடிமைகொண்டபிராமணனிடத்துக்குப்போயக்காற்பணமும்முழச்சீலையும்வாங்கிவந்தால் தகனஞ்செய்வேன்பெண்ணே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-தோடி.

மைந்தன்போய்மாண்டானென்றால்மனமிரங்காதபாவி
இந்தசொற்கேட்டிரங்கியீவானோதுாசுங்காசும்
மைந்தனைக்காத்திருப்பீர்வழியோட்டமாகநான்போய்
நொந்துரைத்தவர்கொடுத்தால் நொடிக்குள்ளேவருகுவேனே.

வசனம்.

விஷந்தீண்டிப்பிள்ளைகாட்டிலேயிறந்தானென்று சொன்னால்சற்றுகிலுமனதிரங்காமற்போனானே அந்தப்பாவிப்பிராமண னவனே துகொடுக்கிறதுநானேதுவாங்கிறது ஆனாலும்நான்போயென்னாலே ஆனமட்டுக்கும்இதஞ்சொல்லிக்கேட்கிறேன்கொடுத்தால் வாங்கிவருகிறேன்நீரிந்தப்பிள்ளையைப்பத்திரமாய்க்காத்திரும்மகாராசனே.

சந்திரமதி-தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

ஒவிதிவசமேயெனக்கினியொப்பார்விதிவசமே

பூவையரிலென்போலொருபாவி
பூமியிலிருப்பாரோநாமமுந்தரிப்பாரோ

பொருந்துமுளமினியுறுதியதுசொல
அருகிலொருதுணையறியேனரிகரி (ஓவிதி)

பார்ப்பானுங்குணவானே-சற்றும்பழி-பாவத்துக்கஞ்சானே
காற்பணத்துக்காசுங்கணக்காயோர்முழத்தூசும்
ஏற்கவேகொடுப்பானோவெரிந்துகடுகடுப்பானோ

இரவும்விடியுது இதையமடியுது
அரவுங்கொடியது அதர்மமுடிவிது (ஓவிதி)

அர்த்தராத்திரியாச்சே-இந்நேரத்தில்-யாசிப்பதும்போச்சே
கர்த்தத்துரோகஞ்செய்தேனேகண்ணில்லோனைவைதேனே
வித்தகப்பெரியோர்நேசவெறுத்தேனேதாழ்வாக

வினையின்செயலிது — விடுவதில்லையது

முனிவனினைவது — முடிவின்விளைவிது (ஓவிதி)

மகனுக்கழுவேனோ-சுடலைகாக்கு-மன்னர்க்கழுவேனோ
தகனஞ்செய்யக்கூடாததடைவந்தேதயடாத
பகைவர்செய்யப்படாத பழிவந்ததேவிடாத

படருமடருது — இடருந்தொடருது

அடியுமிடருது — மிடியும்படருது (ஓவிதி)

பொது-கொச்சகம் இ-ம்-புன்னாகவராளி.

கலங்கியந்தசந்திரமதிகாசிநெடுவீதிவரத்
துலங்குமந்தநகராளுந்துரைமகனைக்கள்ளர்கொன்றே
இலங்கவெறிந்ததைக்கண்டேயிவன்மகனேவெனப்பார்க்கப்
பலங்கொள்பாளயக்காரபதிவீதிவர்தனரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச்சுடலையிலேமகனைவைத்துக்காசுந்துண்டும்
பாக்கிலரப்பிராமணனிடத்திற்குவருகிறவழியிலே காசிராசன்பிள்ளை
பைகள்ளர்கொன்றுளறிந்துபோனதைக்கண்டுமகனேவென்றுசந்தி
மதிபம்மன்குனிந்துபார்க்க அந்தருணத்திலே காசிப்பட்டணத்துப்
பாளையக்காரர்கள் நகரிசோதனைக்குவருகிறவிதங்காண்க.

பாளையக்காரர்வருகிற-தரு-இ-ம்-பந்துவராளி-அட-தாளம்.

நகரிக்காவல்பாளையக்காரர்நாங்களே-இரு

நாலெட்டுத்திசைக்குமேலெட்டிப்பார்க்கும் (நகரி)

ஜகதலமெல்லாம்புகழுங்காசித்

தலத்திலேமிகும்பலத்திலேகெட்டி (நகரி)

கொள்ளையிட்டெடுத்துவந்துகொட்டிவைத்துடைமையெல்லாம்
விள்ளப்பங்கிட்டுக்கொள்ளும் வேளைபோல்நினைக்கின்றேனே

வசனம்.

கேளுங்கள் அண்ணமார்களேமனுஷர்காற்றுவீசுகிறசாடையைப்பார்த்தால்கள்ளர்சஞ்சரிக்கிறது போலக்காணப்படுகின்றது அல்லாமலும்ஊரிலேகொள்ளையிட்டுக்கொண்டுவந்தவுடைமையெல்லாம் பங்கிட்டுக்கொள்ளுகிறஜாடைபோலுங்காணுகிறதுகூட்டாய்பாருங்கள்

சண்டப்பிரசண்டதிண்டிமிண்டன்-விருத்தம்-இ-ம-ஆனந்தபைரவி.

ஜாடையுஞ்சரிதான்சொல்லுஞ்சமயமுமெய்தானிந்த
வாடையில்தருநிழற்கீழ் மறைந்துசற்றிருந்துகின்றால்
ஆடையாபரணமெல்லா மவரவர்பகர்ந்துகொண்டே
ஓடவேவழிபார்ப்பார்களுடனேபோய்ப்பிடித்துக்கொள்வோம்.

வசனம்.

தம்பிஉற்பாதமிண்டகண்டபோண்டா நீசொல்லுகிறதெல்லாஞ்சரியேநீங்களெல்லோரும் இந்தமரத்தின்நிழலில் மறைந்துநில்லுங்கள்அந்தக்கள்ளர்கள்கொள்ளையிட்டதைப்பங்கிட்டுகொண்டு ஒருவன்போனவழியொருவன்போகாமல் ஓடநினைப்பார்கள் அந்தத்தருணத்திற்போய்நாம்பிடித்துக்கொள்ளுவோம்சாக்ரதையாயிருங்கள்.

தூர்த்தண்டகார்க்கோடநாய்க்கன்- விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

இறைச்சலேனிடுகிறீர்களெனக்கேற்கப்பார்த்தாலங்கே
நிரைச்சலுக்கருகேமாடுநிற்பதாய்த்தோற்றுதல்லால்
நரைச்சநாலென்னசாரம்நான்சொல்வேனவ்விடத்திற்
சுரைச்செடியிருப்பதாலேசோரனங்கிருக்கவேண்டும்,

வசனம்.

அண்ணே சண்டப்ரசண்டதிண்டிமிண்டநாய்க்காஇதெல்லாம் வீணுமேலாக்ளை எனக்கேற்கப்பார்த்தால் அங்கேவெள்ளையாயிருக்கிறப்

பட்டது ஓலைகிராச்சல்போல்காண்கிறது அதற்கடுத்தாற்போல்நிற்கின்றது மாட்டைப்போலுமிருக்கின்றது அல்லாமலும் அங்கேசுரைச்செடியிருப்பதால் அகத்தியந் திருடனிருக்கலாம்உங்களுக்குநரைச்சதுமாத்திரமேயல்லதுநிலைவரந்தெரியாது.

கண்டாரகண்டசண்டப்பநாய்க்கன்-விருத்தம்.

இ-ம்-காம்போதி.

சிரிச்சாலுர்திராதுங்கள்திறமைநானென்னசொல்வேன்
பெரிச்சாளிதன்னைப்பூனைபுரட்டியேகடிக்கின்றாற்போல்
கிரிச்சானசத்தங்கேட்டேன்கிழவிபைப்பாட்டியென்றே
உரைச்சாலுந்தெரிந்துகொள்ளீருறுதியென்வசனந்தானே.

வசனம்.

கேளடா அண்ணேதூர்த்தண்டகார்க்கோடநாய்க்கா இம்மாத்திரசாடைதெரியாதவுங்கள்பேச்சைக்கேட்டாலெனக்குச் சிரிப்புவருகிறது ஆவறாவறா கிரிச்சென்றுசத்தங்கேட்கிறது அதனாலேபெரிச்சாளியைப்பூனைகடிக்கிறதென்றுநினைக்கவேண்டும்அதற்கொருசந்தேகமுமில்லை இழவிபைப்பாட்டியென்று உங்களுக்குளத்தனைதரமுரைத்தாலும் தெரிந்துகொள்ளப்புத்தியில்லாதவர்களாயிருக்கின்றீர்கள்.

பாளையக்காரர்கள்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

நீங்கள்சொன்னதிலேயொன்றும்நிலைவரந்தோற்றவில்லை
ஈங்கிவன்சொல்லைப்பார்த்தாலென்குறிக்கதுதான்மெய்யாம்
ஓங்கியேநீங்களெல்லாமொதுங்கியோநாலுதிக்கும்
பாங்குடனேங்கத்திட்டிப்பற்றியென்னுடன்குழுங்கள்.

வசனம்.

அடாதம்பிகண்டாரகண்டசண்டப்பநாய்க்காநீங்கள்சொல்லுகிறதெல்லா நிலைவரப்படவில்லைநம்முடைய உற்பாதமிண்டகண்டபேண்டன்சொன்னதேசரியாய்க்காணுகின்றது ஆகையால்நீங்கள் நாலுதிக்குமேலயும்பதுங்கியொதிங்கிநெருங்கி அடிமேலடிவைத்து என்னுடன்கூடவேவந்துஒரேமாப்பாய்கவிந்துகொள்ளுங்கள்.

பாளையக்காரர்-தரு-இ-ம்-கல்யாணி-ரூபகதாளம்.

சிக்கிக்கொண்டதே-களவுகள்-சிக்கிக்கொண்டதே.

சிக்கிக்கொண்டது வலைக்குட்பட்சிகள்
திக்குமுக்கிட்டுத்திகைக்கிருந்போல (சிக்கிக்)

பங்குகள்பிரியாமற் கள்ளர்கள்தி — கைத்து - இவள்
பத்ரகாளியென்றேயெதிர் — வைத்து
இங்கோம்வருஞ்சாடையைக் — கண்டு
ஏக்கம்பிடித்துக்கலங்கி — மிரண்டு
தங்கிப்பிடிப்பார்க — ளென்றேபயங்கொண்டு
காலோட்டங்கொண்டார்கள் — களவிங்கேயுண்டு (சிக்கிக்)

முன்னேபார்த்துச்சொன்னவன்நான் — தானே-இவன்
முடுக்கிப்பின்னேவரவுமேபயந் — தானே
குன்னமோவுனக்குப்பங்குந் — தகாது
கொள்ளைக்குப்போனாலுங்கூட்டுற — வாகாது
அன்னியராருமறியவும் — போகாது
அரைப்பங்கென்னுதுனக்கதுவுந் — தகாது (சிக்கிக்)

பூதமோபெரும்பேயோவிதென்ன — ரூபம்-மனிதப்
பூச்சிகளைத்தின்னும்ராக்ஷசியோவென்ன — பாவம்
பேதாளங்களுநடுங்குமிவ் — வேளை
பிகோமாய்நின்றுபார்க்குதே — யாளை
பாதாளம்போனாலும்விடுமோ — நாளை
பட்டதுபடுவோமுருவடா — வாளை (சிக்கிக்)

உற்பாதமிண்டகண்டபோண்டநாய்க்கன்-வசனம்.

அண்ணே கண்டாரகண்ட சண்டப்பநாய்க்கா கிணறுவெட்டப் போனவிடத்திற்பூதம்புறப்பட்டாற்போலாச்சே.

கண்டாரகண்டசண்டப்பநாய்க்கன்-வசனம்.

தம்பிஉற்பாதமிண்டகண்டபோண்டா பூதமுமல்லபேயுமல்லரா ட்சசியடாராட்சசி.

தூர்தண்டகார்க்கோடநாய்க்கன்-வசனம்.

எனக்குக் காலோடே சலபாதைக்கு வருகிறது.

சண்டப்ரசண்ட திண்டுமிண்டுநாய்க்கன்-வசனம்.

அண்ணே எனக்கு வேறொருபயமுமில்லை சிவன்போய்விடுமே யென்கிறபயந்தானென்று.

தளபதி-வசனம்,

அடா ரம்பிசண்டப்ரசண்ட திண்டுமிண்டுநாய்க்கா இந்தப்பயித்தியக்காரர்களைப்போல நான்பயப்படுவேனோ ஆறுலொருசாமாத்திரம்பெரியசலபாதையாச்சுது இருக்கட்டும் எல்லாருமாகக்கூடிமேலே விழுந்துபிடிப்போம்வாருங்கள்.

தளபதி-விருத்தம்-இ-ம்-முகாரி.

சொல்லையோகொள்ளைதெய்வக் குறையுண்டோநம்மையாளும்
வள்ளலாமன்னன்பெற்றமகனையோகொன்றுணிந்த
கள்ளிதன்கையிற்பிள்ளை கண்டோம்வேறென்னசாட்சி
அள்ளடாசதையைககட்டி யடிபடாவுதிரங்கக்க.

வசனம்.

அடாதம்பிதூர்த்தண்டகார்க்கோடநாய்க்கா இந்தக்காசிஸ்தலத்துக்கிராசாவாகியகம்முடைய அரசன்பிள்ளையைத்தானு கொல்லவேண்டும் இந்தப்பாவிபிள்ளையைத்தின்கிறவளைப்போலக் கையில்வைத்திருக்கிறாளே இதற்கொருசாட்சியும்வேணுமா இவளைப்பின்கட்டாக இறுக்கிக்கட்டடா அடாசண்டப்ரசண்ட திண்டுமிண்டுநாய்க்கா இந்தப்பிள்ளையை இவள்மடியிற்கட்டடா அடாதம்பி இவளைச்சதையச்சதைய அடிமேலடி இடிமேலடியாய் இடியடா குண்டிகுபிலென்றுரத்தங்கக்கட்டும்.

தூர்த்தண்டகார்க்கோடநாய்க்கன்-விருத்தம்

இ-ம்- ஆனந்தபைரவி.

மடலொடுமடலைச்சேர்த்துமளமளென்றிறுக்கிக்கட்டிக்
குடுகுடென்றுதிரங்கக்கக்குத்தியேபிடித்தடித்தோம்
திடமுடன்பிள்ளைதன்னைச்சிறுவனைமடியிற்கட்டி
சடசடென்றிவளைக்கொண்டுநாதன்முன்விடுவோம்வாரீர்.

வசனம்.

கேளுங்கள் அண்ணமார்களே இவளைமடலோடுமடலொடிய இறுக்கிக்கட்டி ரத்தங்கக்கத்தக்கதாக இடிமேலிடிபிடித்தோம் இந்தப்பிள்ளையையும் இவள்மடியிலேதானேகட்டினோம் இனியிவளைநடத்திக்கொண்டுபோய் நம்முடைய அரசன்முன்னேவிடுவோம் வாருங்கள்.

தளபதி-விருத்தம்-இ-ம்-நாட்டை.

இந்தமட்டோடேநீங்க ளினைத்திடவேண்டாம்நின்றால்
பிந்திநின்றடித்துவாயால் பேசினாலுதிரங்கக்கச்
சந்துசந்தெலும்புகீல்கள் சதையவேயடித்துவெட்டிப்
பந்துகட்டாகவிந்தப் பாவினைநடத்துவீரே,

வசனம்.

மகாபாவியானஇவளை இந்த மட்டோடே விட்டு இளைக்கவேண்டாம் இன்னமும் நன்றாயிறுக்கிக்கட்டி எலும்பின்சந்துகள் கீல்களெல்லாம் நொறுங்க அடிமேலடியாய்க் கோடைகாலத்திடிபோல இடிக்கிறத்திலே யிரத்தந்துடந்துடமாய்க் குபீல்குபீலென்று கக்கவேணும் இந்தப்பிரகாரமாகச்செய்யுங்கள் தம்பிமார்களே.

ஆர்த்தண்டகார்க்கோடநாய்க்கன்-வசனம்.

அதற்கொருதடையா நீதூளியென்றால் நாங்கள்ளிர்த்தூளி செய்வோமே சகலமுஞ்செய்கிறோம் பாரும் நடவடி நட.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கெண்டா.

என்னையீன்றெடுத்ததாயே யென்னையேன்பெற்றாயம்மா
சென்மமானெடுத்ததுக்கஞ் செகத்தினிலொருவர்க்குண்டோ
என்னமாய்ப்பொறுப்பேன்சிவனென்னைவிட்டொழிந்திடாதோ
தன்மைதானில்லாத்தெய்வ சற்பனையிதுவோவானவையோ.

வசனம்.

அம்மாஅம்மா அடிபாவி யென்னையேன்பெற்றாயடியம்மா என்னைப்போல் பெண்செனனமெடுத்தவர்களில் யாராகிலுமிப்படிப்பட்ட துன்பத்தையனுபவிப்பார்களா இந்தஅடியுங்கட்டுமிடியும்பொறுக்கஎன்னால்முடியுமா பாழானதெய்வத்தின்சர்ப்பனையோ அப்பாஎன்னையாரேவெட்டாய்வெட்டியாகிலும் பிராணனை வாங்கிப்போடுங்கள் என்சீவனும்போகவில்லையே ஐயையோஐயையோ.

தளபதி-வசனம். அடிஉழுததுபோதுமடிநீலி நடவடிநட.

சந்திரமதி-தரு-கண்ணிகள்-இ-ம்-கண்டா-அடதாளம்.

தெய்வமேஐயோபாழுந்தெய்வமேபடுபாவி
தெய்வமேயெனைக்கிந்தத்தீங்குவரலாமோ

செய்வினையின்னமென்ன தீவினையாரால்வந்த
　　தீவினைபெண்ணாய்வந்துசென்மமெடுத்தேனே　　தெய்வமே
திக்குண்டோவெனக்கொருதிக்குண்டோபனுஷர்கள்
　　திக்குண்டோவெனக்கிந்ததீமைவிளைந்ததோ　　தெய்வமே
சக்கிஷமிவர்கள்செய்சக்கிஷமூதிரங்கள்
　　சக்கின்றேனெனக்கிந்தகர்மமவரலாமோ　　தெய்வமே
ஒடியுதேயெலும்புகளொடியுதேயுடம்பெங்கு
　　மொடியுதேயெனக்கிந்தயுதைகள்வரலாமோ　　தெய்வமே
வடியுதேகண்ணீராறாய்வடியுதேயுதிரங்கள்
　　வடியுதேயடிகள்வசமோவென்னலையோ　　தெய்வமே
ஏனென்றுகேட்பாரரிங்கேதர்மந்தானெங்கே
　　சத்யந்தானெங்கேபோச்சுதோ　　தெய்வமே
நானென்றுநினைத்தால்தெய்வந்தானென்றுநினைத்ததேயிந்த
　　நலங்கண்டேனையோ　　தெய்வமே

தளபதி-விருத்தம்-இ-ம்-நாட்டை.

சிணுங்கிசின்றழுகின்றாயே திருடர்க்குக்குருவோநீதான்
பணங்களைத்திருடினாலும் பாலனைக்கொல்வாருண்டோ
பிணந்தின்னும்பேய்நீகண்டாய் பேசாதேமடமடென்று
சனுவுகளெலும்பெலும்பாய்க் கழற்றுவேனடந்துவாடி.

வசனம்.

ஆமடி ஆம்நீகற்றசித்துவித்தைகளெல்லாங்காட்டிச் சிணுங்கி நின்றால்விடுவோமோ உன்னைப்பார்த்தால் திருடர்க்கெல்லாம் குருபீடம்போலிருக்கின்றாயேபணத்திற்காகஆசைப்பட்டு உடைமையைத்திருடிக்கொண்டாலும் பிள்ளையைக்கொல்லுவார்களா சொன்றதுமாத்திரமா இன்னவும்பார்த்தாயே நீபிணந்தின்னுகிறபேயல்லது மனுஷபாநடக்கிறையா அல்லதுகளுவெலும்புகள்யாவற்றும் ஒடியும்படியாக இருப்புலக்கையாலேயடிக்கட்டுமா.

பாளையக்காரர்-வசனம்.

அடியடா அடி இடியடா இடி குத்தடா குத்து வெட்டடா வெட்டு.

சந்திரமதி-தரு-இ-ம்-ஆனந்தபைரவி- ஆதிதாளம.

காரணமேதொன்று　　மறியேனே-இந்தக்
காரணமேதொன்று　　மறியேனே
பூரணனேகாசிபுரிவாழ்　　சதுர்மறைப்
　போதாவோவிஸ்வநாதா　　கமலபாதா　　(காரண)
நானொருபெண்சென்ம　　மெடுத்தேனே-இவர்கள்
　கறுக்கிப்பிழியவுடல்　　கொடுத்தேனே
தானேபோமுயிரென்றாசை　　விடுத்தேனே-இருப்புத்
　தடியடியால்நடக்கத்　　தொடுத்தேனே

தீனதயாபரதிருவுள மிரங்காயோ
ஞானமுவதற்கிவர்களிரங்காமைநான்செய்த திதோ(காரண)

அடிதாளவுடம்பினிற் சதையுண்டோ-இவர்கள்
அடிக்கததுணிந்தாரென்ன பழிகண்டோ
கொடியபாவியரிவர்க் கென்னையிண்டோ-என்னைக்
கொல்லாமற்கொல்வதென் பகைகொண்டோ
அடியற்றமாம்போலே அலைந்தழுமண்மேலே
அடிகள்படவொருக்காலே அவதிவந்துநேர்ந்ததாலே(காரண)

வாயாலுதிரங்கக்க வாய்ச்சுதே-சத்ய
வார்த்தைகளெல்லாம்பொய்த்துப்போச்சுதே
ஓயாமலடிபட வாய்ச்சுதே-தெய்வம்
உறவுபோலிருந்தென்னை யேய்ச்சுதே
காயம்நிலையல்லவென்றேயுயிரைவிடுவோ மென்றால்
கைகள்மடவிறுகக்கட்டியடித்துக் கொன்றால்(காரண)

பாளையக்காரர்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

பார்க்கின்றபேர்களுக்குப் பரிதாபமாகவேநீ
சேர்க்கின்றசொல்லுங்கட்டுஞ் சிதையாமலழுவதாலே
தீர்க்கமாய்விடுவதில்லை சிறுவனைக்கொன்றதோஷம்
ஆர்க்கும்பொல்லாதுநெஞ்சம் நடுங்குதேயடிநீவாடி.

வசனம்.

பார்க்கின்றபேர்களெல்லாம்ஐயோவென்றிரக்கப் படுவதாகக்கட்
டூட்டாய்ச்சொல்லியழுகிறாய் அப்படியழுதத்தினாலேவிடுவோமாசிசு
ஹத்திசெய்தால் அந்தத்தோஷம் யாரையும்விடாது அதுதான் உன்ம
னை இப்படிதவிக்கப்பண்ணுகிறது நடவடிநட.

சந்திரமதி-வசனம்.

அரிகரிஅரிகரிதெய்வமேயென்னை யிப்படிக்கெல்லாம் பரிசோதி
வேணுமாதெய்வமே.

பொது-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

மாசிலாமணத்தாள்சந்திர மதிதனைக்காவலாளர்
கூசிநின்றழவேகட்டிக் கொண்டுவந்திடும்வேளை
பூசிதமறைகளோதும் புராதனமுனிவர்போற்றுங்
காசிவாழரசன்வாசற் கட்டியக்காரன்வந்தான்.

வசனம்.

இந்தப்பிரகாரமாகச் சந்திரமதியம்மனைக்கட்டிக்கொண்டுவருகிற

போதுகாசிப்பட்டணத்திலே காசிராசன்சபையிற் கட்டியக்காரன்வருகிறவிதங்காண்க.

கட்டியக்காரன்வருகிற-தரு-இ-ம்-மத்தியமாவதி- ஆதிதாளம்.

மகாபுனிதஸ்தலவாசன்-காசிராசன்வாசற்-கட்டியக்காரன்வந்தான்
காசிராசன்வாசற்கட்டியக்காரன்வந்தான்.

சகாதிஸ்தலங்களில்தருமொருபரநெறிவருவருங்கிலையறி
தலத்தின்மிருததமகத்வசுகிர்த
சலத்தின்நலத்தின்கிலத்தின்தலத்தின்
தனங்கரிலையெனவுனதமொடுலோகன
தாரதாங்களிலுஞ்சராசராங்கள்சொலும் (மகா)

உச்சிக்கொண்டைசுருட்டியொயிலாயுரு மாலைகட்டி
உச்சிதமாய்முந்துத்தூராய்வைத்திலங்கவே பகட்டி
மெச்சியசவ்வாடிபொட்டுமினைமேமீசை முறுக்கி
ெ ருவச்சபையைப்பார்த்துமிரட்டிக்கண்ணு லுறுக்கிக்
கச்சிதக்குழைதிருத்திக்கனகமணி பொருத்திப்
பச்சைப்பட்டுத்தட்டிக்கட்டிப்பளாசபர்செஸ் பதட்டிப்
பரிதியினெளிதிகழ்கரிகை வலையமது
பளபளவென்றுமிகவள மிகுந்திலக
பரிவுடனதிசுபசெயமென நிறைபடு
பலநவமணிமுடியரசர்கள் புகமொடு
பார்த்தபேர்மனவலியது நெறிதர
தூர்த்தானவரிடைதர சுபகர(மகா

கட்டியக்காரன்-வசனம்.

கேளுங்கள் சபையோர்களேமகாராஜராஜகெம்பீரராசமார்த்தாண்டனுகிய காசிராசர் கொலுவுக்குவருகிறார் வெகுபராக்கு.

பொது-விருத்தம்-இ-ம்-சாவேரி.

மந்திரயாகவோமம்வரிசைமாதவர்கள்மற்றும்
இந்திரன்முதலோர்போற்று மிசைபெறுதலத்தையாளும்
சுந்தரக்காசிவேந்தன் அதிதருகொலுவிருக்க
மந்திரிமார்கள்சூழ மகிழ்வுடன்வருகின்றனே.

வசனம்.

அகோசெப்படியென்றால் காசிப்பட்டணத்தை யாளப்பட்ட காசிராசன் மந்திரிகளுடனேகூடக் கொலுவுக்குவருகிறவிதங்காண்க.

காசிராசன்வருகிற-தரு-இ-ம்-சாவேரி-ஆதிதாளம்.

ராசாதிராசர்புகழ்ராசவசீகரன்-காசிராசனிதோவந்தானே.

வாசவன்முதல்மற்றமன்னர்மண்டலீகர்
வரையெனவுயர்புய வலிமைபுகழினிய
மதிதருகிரணமிதெனவுலகினி விறை
மாசில்லாதவுல்லாசநேசபோசன்
வருகுடைநிழலுறை தருமநன்னெறி முறை
மயங்குமதிசய மூயங்குமதிநய
வளமிகுந்துநலசுபகாதல நிதி
வுளமகிழ்ந்துவளர் சிவனகாதி பதி(ராசாதி)

சிங்காரமாமுடிபுனைந்து அனுதினமினியநல்லுனாயுடனேவரு
மகிலமகிபர்துதிமிகு-மகிமைகள்தரு-சயப்பிரதாபத்தை நினைந்து
தங்கும்புசகிரிதிரித்துவீர முனிந்து
தளதளவெனநயமணியொளிதாநிறை
சகலமணியணிகளிலகிடவழகுற
சாப்பளிபூண்டுபட்டாடை வணைந்து
துங்கவாகுவலயம் சரிகையம்புறத் தாணி
ஸ்தூலவில்லுமகரகுண்டலஞ்சமு தாணி
எங்குமபளபளென்னவெழில்வீரகண்டா மணி
இலகவேராசசொல்லாமியம்புஞ்சிரோ மணி
இருகைக்குவியப்புரவிப்புடையிற்பலபற்பலவிதவிசைகள்சொலிவர
இடுகுமுருடுமொலிஅடிமுரசுகள்வலி
இசைபடுதிசைதிசைவிசயமெனவரிசை (ராசாதி)

காசிராசன்-விருத்தம்-இ-ம்-சாவேரி.

பார்மிசைவானமாதம் பரிந்துமும்மாரிபெய்க
சீரிதுவேதசாஸ்திர தெய்வசந்நிதிதழைக்க
போபெறுமிசையின்முப்பத் திரண்டறம்வளரச்செங்கோல்
ஏருடன்பொலிகவென்றே யிறைவன்றாட்கமலம்போற்றி.

முதல்மந்திரி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

தீரர்களதீராபோற்றிச் செயமுடனுலகையாளும்
வீரர்கள்வீராபோற்றி மேதினிக்காசேபோற்றி
சூரகெம்பீராநீதித் துறையெலாந்தெரிந்தகோவே
தாரணிபுபனேகாசித் தலைவனேபோற்றிபோற்றி.

இரண்டாவதுமந்திரி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

நால்வகையிரதமேறி நடாத்தியேபகைவர்தம்மைத்
தோல்வியையடையச்செய்தே தொல்புவியாள்வோய்போற்றி

நால்வகைத்தருமநீதி நுட்பங்களறிந்தாய்போற்றி
வேல்விழிவில்லம்பேந்தும் விறல்காசிமன்னாபோற்றி.

கட்டியக்காரன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலவுத்தண்டசூரமார்த்தாண்டாபோற்றி
நிஷ்டுரக்கண்டகர்களையடக்குமதிதீரநிர்பயவேந்தாபோற்றி
அஷ்டதிக்குள்ளோர்கள்வாழ்த்தியேபோற்றிடுமதிவீரசூராபோற்றி
இஷ்டமுடனேகாசிநகரையாள்மதியூகியினியமாமன்னாபோற்றி.

வசனம்.

கேளுங்கள்சபையோர்களே காசிப்பட்டணத்தை யாளப்பட்டகாசிராஜாவானவர்கொலுவாயிருக்கிறார் வெகுபராக்குவெகுபராக்கு.

பாளையக்காரன்-வசனம்.

நடவடிநட ஓடிபோடு இந்தப்பாசாங்குகளிலேயெல்லாம் நாங்கள்பயப்படுவோமா அடியடாஅடி இடியடாஇடி வெட்டுவெட்டு குத்துகுத்து தள்ளுதள்ளு.

சந்திரமதி-கொச்சகம்-இ-ம்-புன்னாகவராளி.

நீதியறிந்தோரிலையோநிசமிலையோபூமியின்மேல்
மோதிவிழவடிக்கும் முறையேதறியேனே
தீதுசெய்தோனெனைப்போற் றேசத்திலொருவருண்டோ
ஆதிமறையோனெழுத்தோ வறியேன்விதிவசமோ.

வசனம்.

ஐயையோதெய்வமேபூமியிலே நீதியில்லையாசத்தியமில்லையா ஒருகாரணமுமில்லாமல் என்னையிப்படிவதைக்கிறார்களே பொல்லாங்குசெய்தவர்களிலே எந்தத்தேசங்களிலேயாவது என்னைப்போற்கண்டதுண்டாஇப்படியுமிருக்குமா பிரமன்விதித்தவிதி தெய்வமேதெய்வமே.

கட்டியக்காரன்-வசனம்.

சத்துசத்துகூப்பிடாதேகூப்பிடாதே யார்காணும்பாளையக்காரநில்லுங்கள்நில்லுங்கள்.

பாளயக்காரர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

மூதணிகுடைகீழ்நின்றே மூவுலகத்தோர்போற்ற
இதலமாளநின்ற விறைவனேநின்றாள்போற்றி
சுற்றியேநகரிதன்னைச் சோதிக்குமூழியத்தைப்
பெற்றிடுங்காவலாளர் பிறங்கிடவந்தோஞ்சுவாமி.

வசனம்.

சரணஞ்சரணம்காசிராஜேஸ்வரா நகரிசோதிக்கும் காவற்காரர்வந்தோம்சுவாமி.

காசிராசன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.

நகரிசோதிக்கும்நல்ல நயமுள்ளவீரர்கீங்கள்
பகலுமேயிரவுமாகப் பதுங்கியேயங்கங்குள்ள
தகையிலாச்சூதுகன்னஞ் சர்ப்பனையெவைகண்டீர்கள்
பகர்வீர்கள்நடுநோத்திற் பரிந்துவந்ததுஞ்சொலவீரே.

வசனம்.

கேளுங்கள் நகரிசோதிக்கும் காவலாளர்களே நீங்களிரவும்பகலுமாக அங்கங்கேபதிவிருந்து சோதித்துத் திரிகிறீர்களே சூதுகன்னக்கோல் இவைமுதலாகிய அதிசயங்களென்னென்னகண்டீர்களோ நீங்களிந்தநடுநோத்தில் வந்தகாரியமென்னமோ தெரியச்சொல்லுங்கள் காவலாளர்களே.

தளபதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

எங்களையாளுமன்னா என்னென்றுசொல்வோமிந்த
தங்கிபகள்ளியுன்றன் றகைமைசேர்மகனைக்கொன்றாள்
பொங்கமாமுடைமையெல்லாம்புதைத்திட்டாள்கண்ணிற்காணு
மிங்கிவள்பிணத்தைத்தின்னு மிராட்சதகணத்தாளையா.

வசனம்.

கேளும்இராசபரமேஸ்வரா இதோநிற்கிறாளே இந்தக்கள்ளிஇவள்தேவரீர்பிள்ளையை நித்திரையிலே தூக்கிக்கொண்டுபோய் உடைமையெல்லாங்கழற்றிப்புதைத்துப்போட்டுப் பிள்ளையைக் கொன்றுபோட்டாள் இவள்பிணத்தைத்தின்கிற ராட்சசிஐயா.

காசிராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

பெண்ணாகப்பிறந்தவிந்தப் பேதையென்மகனையிந்த
வண்ணமாயக்கொன்றாள்கண்ட வாறென்னவகையாயின்னங்
கண்ணாடிபார்க்கக்கண்ணிற் காட்டியவொளியைப்போல
மண்மீதிலிருந்துபொய்யை வழங்காமல்நிசஞ்சொல்வீரே.

வசனம்.

கேளுங்கள்நகரிகாவலர்களே இந்தப் பெண்ணைப்பிறந்தவர்களென்மகனைக்கொன்றவிதமென்ன நீங்களெப்படிகண்டீர்கள் மண்ணின்மேலிருந்துபெண்ணோஞ்சொல்லவேண்டாம் கண்ணாடிகாட்டு முகச்சாயைபோலஇருக்கவேண்டும்விவரமாய் எதார்த்தமாகச்சொல்லுங்கள்.

தளபதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

கொன்றதுபொய்யோநாங்கள் கூடிப்போய்ப்பார்க்கும்போது
குன்றெனநின்றாளுந்தன் குழந்தையைமடியில்வைத்துத்
தின்றனள்சதையைக்கையால் கிராட்டியேயுதிரமுண்டாள்
வென்றிவேல்மன்னாநாங்கள் வெருவியேபிடித்துவந்தோம்.

வசனம்.

மகாராசசக்கரேஸ்வரா ஐயையோநாங்களப்படிபொய்சொல்லுவோமாபெண்பாவம்பொல்லாதே எங்களுக்குத்தெரியாதா தேவரீருடையகுழந்தையைக்கொன்று மடிமீதுகிடத்திக்கொண்டுவாயினலேசதையைக்கடித்துக்கையினலே இரத்தத்தைவாரிக்குடிக்கும்போது கண்ணுக்கண்டோம் முதல்நாங்கள்பார்க்கிறபோது பெரியராட்சசியைப்போலவிருந்தாள்பிராணனுக்குவொட்டிப்பயந்துபோய்ப்பிடித்தோமகாராசனே.

காசிராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

ஆரம்மாவுன்பேரென்ன ஆதியாமூனூரெங்கே
திரமாகிசியிலிக்கத் தெருவினில்வந்ததென்ன
கோரமாய்ச்சிறுவன்றன்னைக் கொன்றதார்சபத்தைக்கிழ்வை
சாரமாயெனக்கிதெல்லாஞ் சந்தேகமறச்சொல்வாயே.

வசனம்.

ஆரம்மாநீஉன்பேரென்ன நிவாசமாயிருக்கிறவூரெங்கே நீ இந்தகிசவேளையிலேதனித்து வீதியிலேவரவேண்டியதென்ன இந்தப்பிள்ளையைக்கொன்றதார் அதைக்கிழேவைத்து நீயறிந்தகாரியங்களை விவரமாகச்சொல்லுமம்மா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-நாதநாமக்கிரியை.

சொல்லுவதென்னகாசித் துரையேநானராட்சசப்பெண்
எல்லையில்பிணங்கள்தின்றே யென்காலங்கழித்திருந்தேன்
புல்லியமதுரமாமூன் புத்ரனைத்தின்னவெண்ணி
வல்லிருள்தன்னிற்கொண்டேன் வந்திவர் பிடித்துக்கொண்டார்.

வசனம்.

ஐயாநானென்னென்றுசொல்லுவேன் என்குலம் ராட்சதக்குலந்தான்நானும்ராட்சசிதான் எப்போதுஞ் சிறுபிள்ளைகளைக் கொன்றுதான்வயறுவளர்த்துக்கொள்ளுகிறது அதிலேயும்இராசகுமாரனை உனதுமகனுடையமாம்சம் நல்லருசியாயிருக்குமென்றுதான் இருட்டிலேயெடுத்துக்கொண்டுபோய்க்கொண்டேன் இவர்கள்கண்டுபிடித்துக்கொண்டார்கள் இதுதானடந்தகாரியம்மகாராசனே.

காசிராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

ஈதென்னமந்திரிமார்களே பிறந்தோர்பிள்ளை துக்கம்
போதவேவந்திதிந்தப் பூவையாய்மொழியைக்கேட்டால்
ஏதகரெவரோசெய்த பழியல்லாலினிச்சொல்ல
நீதியோகுறிகாட்டாதோ நிலவாமறிகிலேனே.

வசனம்.

கேளுங்கள்மந்திரிமார்களே புத்திரனிறந்துபோனானென்கிறது க்கம்பெரிதாயிருக்கிறது இந்தம்மாள்வாய்மொழியைக்கேட்டால் பிள் ளையைக்கொன்றவளாகத்தோற்றவில்லை இவள்கொன்றதுநிஜமேயா னல்சிசுவதை பண்ணினவர்களுடையமுகக்குறிகண்குறி வசனக்கு றி இவையெல்லாம்இவளிடத்திலிருக்கவேணும் அதுகளொன்றுமிவ ளிடத்திற்காட்ட வில்லை மனிதரூபமாகவேயிருந்து ராட்சசியென்று சொல்லுகிறாள்கொலைசெய்தவள் கொலைசெய்தேனென்று சொல்ல மாட்டாள் இதுவெப்படிஅறிந்துசொல்லுங்கள்மந்திரிகளே.

முதல்மந்திரி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

அலைகடலாழமேலுமதின்கரைமணல்கள்வானில்
நிலைபெறுமீன்கள்தம்மைநேர்ந்தளந்தெண்ணினாலும்
மலர்நிறைமுகத்தாரானமாதர்கள்மனதையாரும்
நிலைகண்டுசொல்லொணாதுநிசம்பொய்யெவ்வாறுசொல்வேன்.

வசனம்.

கேளும்மகாராஜசக்ரேஸ்வராசமுத்திரத்தை ஆழங்கண்டாலும் அதன்கரைமணலையெண்ணினாலும் ஆகாசங்களிலுள்ளநட்சத்திரங் களைக்கணக்கிட்டாலும்ஸ்திரீகளுடையமனதை இன்னவிதமென்று கணக்கிடக்கூடாது ஆனாலுமிந்தக்காரியத்தை இவள்செய்தாளென்று ஞ்செய்யவில்லையென்றும்எப்படிச்சொல்லுவேன் மகாராஜனே

இரண்டாவது-மந்திரி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

பத்துபேர்சொல்லின்முன்னோர்பாவைசொற்பலிப்பதுண்டோ
சுற்றியேயனேகர்கூடித்தோகையைக்கொண்டுவந்தார்
கைத்தலந்தன்னிற்பிள்ளைகண்டனமென்றுசொன்னார்
வித்தகாவிவள்செய்தீங்கின்வினைவழியறிகிலேனே.

வசனம்.

கேளும்மகாராஜசக்ரேஸ்வராபத்துபேர்ஆமென்றுசொல்ல ஒரு ஸ்திரீ அல்லவென்றுசொன்னதினாலேதீருமா அப்படியுமல்ல அனே கம்பேர்கூடிஒருஸ்திரீயைப்பிடித்து அவள்கையிலே பிள்ளையுடனே சேர்த்துக்கட்டிஇவள்தான்கொன்றவளென்றுகொண்டுவந்துவிட்டி ருக்கஆமென்றும்அல்லவென்றும் நாங்களெப்படிசொல்லுவோம்இவி திவசமெப்படியிருக்குமோமகாராஜனே.

காசிராஜன்-விருத்தம்-இ-ம்-நாதநாமக்கிரியை.

அரக்கிநானென்றுயம்மா அடிபட்ட வருத்தமோநான்
பொத்திருற்பெற்றெடுத்தமகனையுங்கொன்றேனென்றுய்
யிருக்கும்மன்சமுகந்தன்னிலினியொருடாயமுமில்லை
பெருக்கமேன்மெய்யைச்சொன்னால்நீதப்பிப்போவாயம்மா.

வசனம்.

நானென்றுசொல்லுகிறேன் கேளம்மா நீராக்ஷசியென்றுங்கொன்றவள் நான்தானென்றுஞ்சொல்லுகிறாய் நீ சொல்லுகிறதைப்பார்த்தால் அடிபட்ட வருத்தத்தினாலேசொல்லுகிறதுபோலக் காணுகின்றது உனக்கிந்தராஜசபையிலே ஒருடாயமுமில்லை எதார்த்தஞ்சொன்னால்தப்பிப்போவாய்உள்ளத்தைச்சொல்லுமம்மா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-தோடி.

ஒடித்ததுகழுத்தைநானேயுன்மகன்வயிற்றைக்கீறிக்
குடித்திட்டேனுதிரமள்ளிக்குடலொடுசதையுந்தின்றேன்
பிடித்தனர்கைமெய்யாகப்பிணந்தின்னும்பூச்சிநானே
முடித்திடவேணுநீதிமுறைப்படியெனக்கோராக்கினை.

வசனம்.

சேனைமையானநானெதார்த்தஞ்சொல்லுகிறேன் உன்பிள்ளையைக் கழுத்தையொடித்து வயிற்றைச்கீறி இரத்தமுங்குடித்துமாமிசமுந்தின்றேன்நானெப்போதும்பிணந்தின்கிறபூச்சிதான்கையுமெய்யாக இந்தக்காவலாளர்பிடித்துவந்திருக்கிறோம்சந்தேகப்படுகிறீர்உம்முடையநீதியின்படியே இந்தபாவிக்கொருஆக்கினைகட்டளை யிடும்மகாராசனே.

காசிராஜன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

மதியுள்ளமந்திரிமாரேமகன்மாண்டான்விதிவசத்தாற்
சதிவினைதெரியாதிந்தத்தையலாள்சொல்லைக்கேட்டால்
வதைசெய்வாளல்லவென்றேமனதிற்றோன்றலாலே
உதையமாமின்னே இந்தவூர்விட்டுப்போகச்சொல்வீர்.

வசனம்.

கேளும் மந்திரிமார்களே என்பிள்ளை இறந்துபோனதுவிதிவசமேயல்லதுவேறில்லை இவள் வதைசெய்தாளென்று யெவ்வளவும் என்

மனதிற்றேன்றவில்லே இதுயாராலேவிளேந்தசதியோ பொழுவிதுவி டியமுன்னமேஇவளேவூர்கடக்கத் துரத்திவிடுகிறதேயுத்தமம் அந்த ப்படிவிட்டுவிடச்சொல்லுங்கள்மந்திரிகளே.

பாளேயக்காரர்கள்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

ஊரைவிட் டோட் டினுலுமுலகைவிட் டோட்டினுலும்
பாரமிசையெங்கள்ப்ராணன்பண்புடனிற்காதையா
சேரவேகொலேசெய்தோளைத்துரத்திவிட்டாலதன்பின்
ஊர்காவற்காக்கமாட்டோமோடிப்போய்விடுவோமையா.

வசனம்.

இவளே இந்தவூரை விட்டோட்டினுலும்இந்தவுலகத்தை விட் டோட்டிவிட்டாலும்இவள்பயப்படுகிறவளாநாங்களித்தனேபேர்கண் ணுற்கண்டபோது இராக்ஷசியாயிருந்து மனுஷியானுள் அப்படிப்ப ட்டவளேவிட்டுவிட்டால் எங்கள் பிராணன்கிற்குமா கொலேசெய்தவ ளேவிடலாமாயெங்கள்பேச்சைநம்பாமல் இவளே விட்டுவிட்டால்நாங் களிந்தவூர்க்காவலேவிட்டுஓடிப்போகிறேம்இந்தஅனியாயமுண்டாம ஹாராஜனே.

காசிராஜன்-விருத்தம்-இ-ம்-பந்துவாராளி.

நல்லதுமந்திரிமாரேநாடிப்போயவ்விடத்தில்
மெல்லிதன்னடியேயல்லால்வேறுள்ளோரடிகளுண்டோ
வல்லதில்வெளிச்சத்தாலேவகையாகப்பரிசோதித்து
நல்லேயில்வந்நீர்மேலேகியுரைக்றேனிதற்குநியாயம்.

வசனம்.

ஆனல் நானென்றுசொல்லுகிறேன்மந்திரிமார்களே இந்தம்மா ளிந்தப்பிள்ளேயைக்கொன்றுளென்கிறவிடமிருக்கின்றதே அந்தஇட முதல்நம்மிடஅரண்மனேவரைக்கும்அந்தஅம்மாளுடைய அடிகளிரு க்கின்றதாஅதைதீவட்டிவெளிச்சங்களுடனே நன்றாய்ப்பரிசோதித் துத்தெய்வந்துச்குப்பொதுவாய்ப்பார்த்துவந்துசொல்லுங்கள்அதற் குமேலேதீர்ப்புச்சொல்லுகிறேன்மந்திரிமார்களே.

மந்திரி-வசனம்.

அப்படியே போய்ப்பரிசோதித்துப் பார்த்துவந்து சொல்லுகி றேம்மகாராஜனே.

பொது-விருத்தம் இ-ம்-தோடி.

வேந்றடியிருந்தாலந்தமெல்லிமேற்பழிவாராமற்
காத்திடச்சிலரைவேவிக்காசிமன்னவன்விடுக்கச்
சூத்திரமுனிவணங்கேதோன்றியவடிகளெல்லாம்
மாற்றியதாலேமங்கைமலரடிகண்டுவந்தார்.

வசனம்.

இந்தப்பிரகாரமாகக்காசிராசனைவர் சந்திரமதியம்மனேத் தப்பு விக்கவேணுமென்றுகாவலாளர்சொல்லுக்குவிரோதமில்லாமல் மந்தி ரிமுதலாகியசிலபேரை இந்தம்மாளுடைய அடிகளோ மற்றெவர்களு டையஅடிகளோப்பார்த்துவந்துசொல்லுங்களென்று அனுப்ப அங்கே

விசுவாமித்திரர்மற்ற அடிகளையெல்லாமாற்றிச் சந்திரமதியம்ப னுடைய அடிகள்தோன்றச்செய்வித்தார அதைக்கண்டுவெந்தவர் இராஜாவுக்ுச்சொல்லுகிறவிதங்காண்க.

மந்திரிகள்-விருத்தம்-இ-ம்-தோடி.

எப்படிச்சொல்வோமிந்தவேந்திவ யடியேயல்லால்
தப்படிவேறேகாணேஞ்ச துர்முகன் விதியோஐயா
தப்பிதமில்லையென் றுதடைசொல்லவழியைக்காணேம்
அப்புறமுனதுசித்தமரசனேநாமென்செய்வோம.

வசனம்.

இந்தப்பாவத்தைநாங்களென்னென்று சொல்லுவோனமயாதேவரீருடையஅரண்மனைமுதல் இந்தஅம்மாளைப்பிடித்த இடம்வரைக்கும் இந்தஅம்மாளுடையகாலடியேயல்லாமல் குறுக்கே வேறேமனுஷஅடியுமில்லைஇந்தஅம்மாள்பேரில்தப்பிதமில்லையென்று சொல்லுவதற்குயாதொருவழியுங்காணேம் அப்பால்தேவரீர்சித்தம் நாங்களென்ன செய்வோம்மகாராசனே.

பாளையக்காரர்-வசனம்.

கைப்புண்ணுக்குக்கண்ணாடிவேணுமா இதற்குமேலொருதிருஷ்டாந்தமென்னத்துக்குஇதிலேயுமிஞ்சியிவள்பேரில் பட்சமாய் விட்டால்நாங்கள்இந்தவூரையும்விட்டுவிடுகிறோம்எங்கள்பிராணனையும்விட்டுவிடுகிறோம்மகாராசனே.

காசிராசன்-விருத்தம்-இ-ம்-தோடி.

உனக்கென்னகர்மமோதானூழ்வினைப்பயனோவிந்த
மனக்கவடதனைவிட்டுவெழிப்படவுண்மைசொன்னால்
சினக்கடுங்காவலாளர்செப்பியவார்த்தைகேளேன்
வினைக்குள்ளாகாமற்போவாய் விளைந்தவாறுரைசெய்வாயே.

வசனம்.

ஆனாலின்னமுஞ்சொல்லுகிறேன்கேளுமம்மா இனியாகிலும்உண்மையைச்சொன்னால்நீஉயிர்தப்பிப்போவாய்காவற்காரர்சொல்லையுங்கேளேன் அப்பால்உன்விதிப்படியேமுடியும் என்பேரில் குற்றமில்லைகபடத்தைவிட்டுச்சொல்லுமம்மா.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

கபடமேதையாவுன்றன்காதல்சேர்மகனைக்கொன்றேன்
உபயபாரிசமுஞ்சாட்சியுறுதியாயுரைக்கின்றார்கள்
தபனன்வந்துதிக்குமுன்னேசட்டமாயாக்கினைசெய்வாய்
தடையுளோர்தடுத்திட்டாலுந்தடைவேண்டாமரக்கினானே.

வசனம்.

ஐயாநீரேன்சந்தேகப்படுகிறீர்கொன்றவள்நானேகண்ணிற்கண்டதற்குச்சாட்சியிவர்களேநானிராக்ஷசிமெய்யேயிதிலேசந்தேகமென்னஆர்தடுத்தாலுந்தடையில்லாமலென்னை யாக்கினை செய்யும்படியாகக்கட்டளையிடும்மகாராசனே.

காசிராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.
இசைபெறுமந்திரிமாரேஇதற்குநாமென்னசெய்வோம்
நிசமதாய்நானேகொன்றேன்நின்மகன்றனையென்றுளே
விசயஞ்சேர்காவலாளர்மெய்யென்றார்விதிவசத்தால்
வசையின்றிவதைக்கும்வீரவாகுவைவரச்செய்வீரே.

வசனம்.

இந்தக்கர்மத்துக்கென்னசெய்வோம்மந்திரிகளே எத்தனைவிதத்திற்சொன்னாலும் அந்தம்மாள்நானேகொலைசெய்தேனென்று சொல்லுகிறாள் இந்தக்காவலாளர்களும்அப்படியே அவளேகொன்றாளென்றுசத்தியமாய்ச்சொல்லுகிறார்கள் இதுவும்விதிவசந்தான் ஆகையால் ஆக்கினைப்பண்ணுகிறவீரவாகுவைவரச்செய்யுங்கள் மந்திரிகளே.

மந்திரி-வசனம்,

அப்படியேவரச்செய்கிறோம்மகாராசனே.

மந்திரி-விருத்தம்-இ-ம்-நாட்டை.
உத்தமக்காசிவேந்தனுயர்சபைதனைக்காக்கும்
வித்தகக்கட்டியக்காராவிரைவுடன்போய்பந்த
நித்தமுமயானந்தன்னில் நின்றுதான்பிணஞ்சுட்டோங்கும்
மத்தனும்புசிதவீரவாகுவையழைத்துவாராய்.

வசனம்.

ஆரடா? ஆசாரவாசற்கட்டியக்காரா நம்முடைய ஆண்டவரழைத்தாரென்றுசுடலைகாக்கும்வீரவாகுவையழைத்துவாடா.

கட்டியக்காரன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.
ஓர்நொடிக்குள்ளே-சீர்பெறச்சென்றே
வீரவாகுவைநான்-பாரழைத்திடுவேன்.

கட்டியக்காரன்-விருத்தம்-இ-ம்-நாட்டை.
சேரியிற்குடியிருந்தேசெத்திடும்பிணத்தையெல்லாம்
வாரியேகொளுத்தும்வீரவாகுவேசொல்லக்கேளாய்
தாரணிபுகழுமன்னன்சபைதனில்வரவேயுன்னைச்
சீருடனழைத்தார்நீயுஞ்சீக்கிரமாய்வருகுவாயே.

வசனம்.

ஆரடாஅடாதோட்டிவீரவாகுஉன்னை இராசா அழைக்கிறார்சீக்கிரமாய்வாடா.

வீரவாகு-வசனம்.

எனக்கென்னவேலையில்லையா சும்மா அழைக்கிறதுதான்வேலைவாரேன்சுவாமி.

தோட்டி-கொலுவுக்குவருகிற-தரு-இ-ம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்
சொல்லுகிறேன்கேளுங்களாண்டை மார்களே-தோட்டிசாமி
தோட்டிநானேயென்னாண்டை மார்களே
கல்லும்காவினமும்புல்லும்பூமியிலுள்ள
காலமெல்லாம்காணியாச்சி காசியிலேயுண்டுமிக்கச் (சொல்லு)
கூசாமலெருமைத்தோ லுரிப்பேன்-தினம்

கூடினதெல்லாஞ்சே கரிப்பேன்
வாசலெல்லாந்தோலை விரிப்பேன்-செத்த
மாட்டடையாளமும் தரிப்பேன்
ஆசாரமாய்ப்பசுந்தோலெல்லாம்வேறே சேர்ப்பேன்
ஆண்டைமாரமிஞ்சிக்கு அழுகத்தோலைத்தேடிப் பார்ப்பேன்
அந்தலைதோட்டிசிறிக்கிக் கதுமேலை
சந்தோசமாகுமறைக்குள் ளதினாலே
ஆடிப்பாடிஅங்கே கூடுவேன்
ஆண்டைமார்கூப்பிட்டாலுடனே யோடுவேன் (சொல்)

வீரவாகு-விருத்தம்-இ-ம் ஆனந்தபைரவி.

மகிதலந்தன்னையாளும்மன்னவர்மன்னேபோற்றி
பகைவரைவென்றவீரபராக்கிரமதீரபோற்றி
முகிலெனப்பேரிகாளுமுழங்கிடும்சபையிலென்னை
மகிழ்வுடனழைத்ததென்னவந்தேனுன்தோட்டிசாமி.

வசனம்.

சரணஞ்சரணமையா ஆண்டைகளே வந்தேன் நான்வந்தேன் தோட்டிசாமி.

காசிராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வலுமைசேர்தோட்டிவீரவாகுவேவிவளையுந்தன்
நிலைபெறுகொலைக்களத்தில்நிமிஷத்திற்கொண்டுபோய்நீ
கொலைசெய்ததாகச்சொன்ன கொடுமையோர்வார்த்தையாலே
தலைபதுவிழவேவீசிச்சபையில்வந்துரைசெய்வாயே.

வசனம்.

ஆரடாஅடாதோட்டிவீரவாகுவே இந்தம்மாள் நம்முடைய பிள்ளையைக்கொன்றுவென்று இவர்களெல்லாஞ்சாதிக்கிறத்தினாலேகொலைக்களத்தினிற்கொண்டுபோய்ச்சிரச்சேதம்பண்ணிநமக்குவந்து அறிக்கைபண்ணடா.

வீரவாகு-வசனம்.

அப்படியே செய்கிறேன்சுவாமிவாடியம்மாவா.

சந்திரமதி-தரு-கண்ணி-இ-ம்-கண்டா-தாளம்-ஆதி.

பார்க்கவரும்பிரசைகளேபாவிநானென்னைநீங்கள்
பார்த்தாலும்பாவம்பாவம் அகல்வீரே
ஆர்க்குவருமிந்தவிதியார்படிவாரிந்தத்துன்ப
மாரைநோந்தழுவதினி அகல்வீரே
பெண்ணென்றுநினைக்கின்றீர்கள்பெண்ணல்லபெண்ணல்லநானோர்
பிரமராட்சசிதானென்னை அறியீரோ
கண்ணிற்கண்டபிள்ளைகளைக்கழுத்தைமுறித்துக்கொல்லுங்
கள்ளிபழிகாரியென்று குறியீரோ
இந்தநகர்மன்னன்பெற்றவிளந்தழந்தையுபிரையுண்ட
என்னைவந்துபார்க்கின்றீர் வெகுபோரம

விந்தைவிந்தையாய்க் கொலைகள் வேணதெல்லாஞ் செய்தவென்னை
விட்டிடாங்குவாரோநெஞ்சம் லவலேசம்
ஞானவிசாலாட்சிமகிழ்நாயகரேகாசிவிஸ்வ
நாதரேயுமக்கிதெல்லாந் தெரியாதோ
தீனமானவேழையர்க்குத்திக்கில்லாப்பரதேசியர்க்குந்
திருவுளமிரங்கியருள் புரியாதேயு

வீரவாகு-விருத்தம்-இ-ம்-நாட்டை.

காட்டியவேவல்செய்து கனிவுடன்சுடலைகாக்குந்
தோட்டியாமனிச்சாகாசித் துரைசொன்னபடியேகேளாய்
பேட்டிளமயிலாளிந்தப் பேதையைக்கொடுபோய்ந்த
நாட்டிப்கொலைக்களத்தில்நாணுமல்வதைசெய்வாயே.

வசனம்.

டா அனிச்சத்தோட்டிநம்மிட ஆண்டவனுத்தாரப்படியேஇவளை க்கொலைக்களத்திற்கொண்டுபோய் சிரச்சேதம்பண்ணடாஇந்தகத்தி யினாலேவெட்டுஇந்தா.

இதுவும்-வீரவாகு-விருத்தம்-இ-ம்- ஆனந்தபைரவி.

கள்ளியாமிந்தக்காசிமன்னவன்றன்பெற்ற
பிள்ளைமிவல்தாயைக்கொன்றுதின்ற பெருத்தராட்சசியாமப்பா
நள்ளிருட்பதிவிருந்துநகரிகாவலர்கண்டாராம்
துள்ளவேயிவளைவெட்டச்சொன்னாரப்படிசெய்வாயே.

வசனம்.

இன்னமிவளுடையகாரியத்தைச்சொல்லுகிறேன் கேளடாகள் ளியாகிய இவள்பிள்ளைகளைத்தின்கிறஇராக்ஷசியாம்நம்முடையஆண்ட வராகிய காசிராஜாவினுடைய பிள்ளையைநிசிவேளையிலே யெடுத்துக் கொண்டுபோய்க்கொலைசெய்துசதைநயைப்பிடிங்கித்தின்கிறபோதுநக ரிசோதிக்கிறகாவலாளர்கள்கண்ணிஞலே கண்டுபிடித்துக்கொண்டுவ ந்தார்களாம்ஆகையால்துள்ளத்துள்ளத்தலையைவெட்டியெறியச்சொ ன்ஞர்அப்படியேசெய்யடா.

அனிச்சத்தோட்டி-வசனம்.

ஆண்டைவார்த்தைக் கொருதடையா அப்படியேசெய்கிறேனை யாவீரவாகுவே.

அனிச்சத்தோட்டி-விருத்தம்-இ-ம்-கண்டா.

கோலவல்விழியாய்காலக்குறுகியநெறியினலே
சிலமாம்விஸ்வாமித்திரர்செய்திடுமாய்கைக்குள்ளாய்
பாலனைக்கொன்றுவென்னும்பழிக்குநீயகப்பட்டாயோ
நீலகண்டேசாநித்தம்நிறைந்ததோவிதியேஞயோ.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

பண்டுநங்கதிர்குலதிற்பார்தனையாண்டமன்னர்
பெண்ணுடன்பிள்ளைசுற்றம்பெரிதென்றுநினைந்திட்டாரோ
உண்டிடனுமோட்சந்தன்னைபுறுதியாய்ச்சத்யத்தாலே
அண்டருமதிக்கவாழ்ந்தாரறிந்துநீதளரலாமோ.

வசனம்.

கேளும்மகாராஜனேநம்முடையவம்சமாகியஇந்த சூரியகுலத்திலேபிறந்துஇராச்சியபாரம்பண்ணஇராஜாக்களெல்லாம்மோக்ஷத்தைவிரும்பிசத்தியத்தைபரிபாலனம்பண்ணினார்களேயல்லதுபெண்சாதிபிள்ளைசுற்றத்தாரென்றுமயங்கிஅசத்தியவீனாராயினார்களாஇதுதேவரீருக்குத்தெரியாதாவென்மயங்குகிறீர்விசனப்படாமல்நடத்தும் மகாராஜனே.

சத்தியகீர்த்தி- விருத்தம் இ-ம்-ஆனந்தபைரவி.

கொடுமைதானிதனைப்போலுங்குவலயந்தன்னிலுண்டோ
அடிமையாய்மகனுமாண்டேயறிவையைக்கொலைநீசெய்ய
விடுமிந்தப்பாழுந்தெய்வவினையிதுதானோஐயா
கடுமைசேர்விசுவாமித்ரன்காலனோநமக்குமன்னா.

வசனம்.

ஐயையோவென்னாண்டவனுக்குவந்தகொடுமையாகியஇதனைப் போலும் லோகத்திலுண்டா இப்படியுந்தெய்வஞ்சோதிக்குமா அடிமைப்படச்செய்ததேபோதுந்தெய்வம் அத்தோடுவிட்டதா மகனைப்பறிகொடுக்கவந்ததே அதுவும்போதாதென்றுபெண்சாதியையும்வெட்டவந்ததாநம்முடையபங்குக்குவிஸ்வாமித்திரனமனோமகாராஜனே.

அனிச்சத்தோட்டி-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

நித்யமோபூமிவாழ்வுநிலைமையோதேகமாவி
சத்தியகீர்த்திநீதான்தளர்வதுநெறியோவப்பா
சித்தசன்றன்னைவென்றசிவனருளல்லால்வேறே
மற்றுமாமனிதர்செய்யும்வகையுண்டோதயங்கவேண்டாம்.

வசனம்.

ஆஹா இதென்னமந்திரியாகியசத்தியகீர்த்தி இப்படியுமுண்டா இந்ததேசம்நிலையா இதைநம்பிசத்தியவிரதந்தப்பலாமா நீ இப்படிதளரலாமாஎல்லாஞ்சசிவிஸ்தாராதருடையகிருபையேயல்லதுமற்றவராலேவரப்பட்டதாவிசனப்படவேண்டாமந்திரி.

சந்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-முகாரி.

முழுதுஞ்சோதிக்கத்தெய்வமூர்க்கமாயெதிர்த்துநின்றால்
பழுதொன்றும்வராமலிந்தப்பார்த்திபன்றன்னைக்காக்க

அருதி ...ாரமென்ன அரகராவிஸ்தாரா
தொழுகின்றேன்விதியேயிந்தகோஷம்நான்பார்க்கமாட்டேன்.

வசனம்.

அரகராகாசிவிஸ்வநாதாஇந்தமகாராசன் சத்தியத்துக்குக்குறைவுவராமல்காப்பாற்றவேணும்தெய்வமே நீசோதித்தால்நானழுதுசாரமென்ன இந்தக்கோரத்தைநானெப்படிபார்ப்பேன்ஐயையோவிதியே.

பொது-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

சந்திரமதியைச்சந்திரமதிபன்றன்கொலைசெய்யக்கொடுபோக
அந்தநற்காசிநகருளோர்கூடியவரவழுதுபின்வரவே
முந்தியவினையைமுடிக்கவேவினைத்தமூர்க்கனுங்கோசிகமுனிவன்
தந்திரசாலச்சமர்த்துடன்பேசத்தருக்குடனெதிரில்வந்தனனே.

வசனம்.

இந்தப்பிரகாரமாசச்சந்திரமதியம்மனைவெட்டுவதற்காக அரிச்சந்திரமகாராசன்கொலைக்களத்திற்குக் கொண்டுபோகஅதைக்கண்டு அந்தக்காசிப்பட்டணத்திலுள்ளபிரசைகளெல்லாம் இரக்கமாயழுது கொண்டுபின்னேவரஅத்தருணத்தில் விஸ்வாமித்திரமகாரிஷிவருகிற விதங்காண்க.

விஸ்வாமித்திரர்-வருகிற-தரு.

இ-ம்-மத்தியமாவதி-திரிபுடைதாளம்.

சாபானுக்கிரகசாமர்த்தியம்படைத்தோனே-மகா
மகத்வதவத்தில்மிகுந்தவிஸ்வாமித்திரனே
கோபாக்கினியில்காலருத்தான்போல்கொதிப்பேன்
அண்டங்குலுங்கக்குத்திப்பேன்பிரமத்தைமதிப்பேன் (சாபா)
பஞ்சாக்கினியில்நடுவுநிலையாய்நின்று-பிரணவம்புகன்று
பந்தபாசக்கட்டைவிட்டகன்று
அஞ்சாமலெந்தவினைகள்வரினும்வென்றுசெயமென்றும்
அடல்கொள்ளென்முன்எவர்நிற்பார்பயமகன்று (சாபா)
செஞ்சாமாருதம்போல்வீசிச்
சிவமுனிவர்திகைக்கப்பேசி
பஞ்சாய்ப்பறக்கும்வசிஷ்டன்கூசிப்
பதறவிடுக்கிறேன்விடவிடப்பேசி (சாபா)

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-தோடி.

ஐயையோமன்னவிணுபவதியேன்படுகின்றாய்நீ
மெய்யனென்றுலகோருன்னைமெச்சிடுங்கொள்கைபோதுமே
வையகந்தன்னிற்பிராணன்வைத்தல்லோவாழவேணும்
பொய்யல்லவென்சொற்கேட்டாற்புனிதராய்வாழலாமே.

சரு

வசனம்.

ஓய் ஓய் அரிச்சந்திரமகாராசனே நீரேன்காணும் வீணாயிந்தஅவ திப்படுகிறீர் நீர்மெய்யனென்றுபேர் எடுக்கிறதினாலேலாபமென்னவி ராஜ்யமிருந்தல்லவோநல்லவன்பொல்லாதவனென்றாகவேணும் இனி யாகிலும்நான்சொன்னபடிகேட்டீரேயானால்சுகப்படலாம்.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ ம்-மோகனம்

வயமானபரத்தைநாடுமாதவமுனியேபோற்றி
உயிரிருந்துலகில்வாழ்வதுறுதியென்றுரைத்தீரையா
பயனறிந்தோருக்கிந்தப்பண்பில்லாவார்த்தையாமோ
அயர்பறவுன்சொற்கேளேனகலப்போம்விதிவிடாதே.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமிவிஸ்வாமித்திரரே மெய்யைவிட்டுப்பொய் யனாகியுயிருடனேயுலகிலிருந்துவாழவேணுமா இப்படிப்பட்டவார்த் தைதேவரீர்வாயிலேவரலாமாநீரினிச்சொல்லவேண்டியதில்லைநடவும சுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

உள்ளத்தைச்சொல்லவந்தாலுனக்கென்மேல்சலிப்பேனிந்த
வள்ளைவார்குழலாளுந்தன் மனைவிதன்துயரத்தாலும்
பிள்ளையுமடிந்ததாலும்பெருந்துயரடைந்திட்டாயே
மெள்ளவோர்பொய்யென்காதில்விரைந்துரைமகிழச்செய்வேன்.

வசனம்.

ஐயையோஅரிச்சந்திரமகாராசனேநீபடுகிறதுக்கத்தினாலேசலித்துக் கொள்ளுகிறாய்சரியேபிள்ளைபிறந்துபோனதாலும்பெண்சாதியைவெ ட்டநேரிட்டதாலும் இப்படிப்பட்டதுன்பப்படுகிறாயே கொடுத்தநா ட்டையில்லையென்றுமாத்திரம்இரகசியமாசஎன்காதிலேசொல்லிவிடு ம்மர்மம்வேண்டாம்மகாராசனே.

அரிச்சந்திரன்-விருத்தம்- இ-ம்- ஆனந்தபைரவி.

ஊழ்வினைவிடுவதுண்டோவுமக்கிதுபொருமலென்னை
வாழவைத்திடநினைத்துமயங்கிநீர்மயங்கவேண்டாம்
தாழ்வென்றாலருஞ்சுவேனேதலைவிதியனுபவிப்பேன்
சூழ்தவமுனிவரேநீர் தூரப்போம்கோபம்வேண்டாம்

வசனம்.

கோபமில்லாமற் கேளும் சுவாமி விசுவாமித்திரரே யென்னைவாழ வைக்கவேணுமென்று நினைக்கிறீர்பிசகில்லையென்விதியைநானனுபவி ப்பேன்நீர்போம்சுவாமி.

விஸ்வாமித்திரர்பிரலாபிக்கிற-தரு-இ-ம்

ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

இனியென்னசெய்குவேன் முடிவாச்சே நான்
எண்ணினவெண்ணமிப் படியாச்சே
சனிபிடித்தல்லோஇந்த்ரன்சபைக்குநான் போனேனே
சண்டிபோல்வசிஷ்டனோடுசாமர்த்தியம் பேசினேனே (இனி)
ஐயையோவீண்வேலைக்காளாகிப் போனேனே
ஆண்மையால்நானேயிந்த அவதிக்குள் ளானேனே
செய்யங்கபடமெல்லாந்திரமாகச் செய்தேனே
சித்தம்நொந்தவர்மனந்திடுக்கிடச் செய்தேனே
துய்யபதிவிரதைதோஷந்தான் விணுமோ
வையவுதைத்துமெள்ளநயஞ்சொன்னால்பாவம்போமோ (இனி)
நான்செய்ததந்த்ரகபடநாடக சூத்திரம்
நடுங்குமேயண்டங்கள்நரர்களெம் மாத்திரம்
வான்முகில்சூழ்ந்தகடலைமலைகளை முழுங்குவேன்
மாறுக்கோபத்தால்வடவாக்கினிபோல் புழுங்குவேன்
ஓஹோவென்றோர் தாம்உன்னினால் மூவர்களும்
ஏனென்றெதிர்வருவாரிளைத்துச்செய்த பலன்களும் (இனி)
பஞ்சைவசிஷ்டன்சொல்மேலாச்சுதென்ன காலம்
பார்த்தபேருக்குநானிளைக்கவந்ததேஇந்தக் கோலம்
தஞ்சமென்றும்பிரங்காமற்கெடுத்தேனே அளியாயஞ்
சலித்தோர்பொய்சொல்லாமலேசாதித்தானே வாலாயம்
அஞ்சாமலவன் மனையாளுமப்படி தானே
சஞ்சலப்படாமற்சாகத்துணிவாளென் றறியேனே (இனி)

பொது-விருத்தம் இ-ம்-ஆனந்தபைரவி.

காதலாய்விஸ்வாமித்ரன்கலங்கியேமறைந்துபோக
வேதனையெல்லாமன்னன்விஸவேசர்செயலென்றெண்ணி
மாதையோர்கையிற்பற்றிவாள்வலக்கையிலேந்தி
மேதகுகொலைக்களத்தில்வெட்டவேதுணிந்திட்டானே

வசனம்.

இந்தப்பிரகாரமாக விஸ்வாமித்திரானவர் மெத்தவும்விசனப்ப
டுக்கொண்டுமறைந்துபோனபின்புவருகிறவிதியெல்லாம் விஸ்வேச
ருடையசெயலென்றெண்ணி யரிச்சந்திரமகாராராசனானவர் சந்திரம
தியையிட்டுகையிலேபிடித்துக்கொண்டுவாளையுருவி வலதுகையிலே
பிடித்துக்கொண்டு கொலைக்களத்திற்குக் கொண்டுபோய் வெட்டுகிற
தங்காண்க.

அரிச்சந்தோட்டி-விருத்தம்-இ-ம்-தோடி.

வழக்கமாய்நீமுன்வழிபடுதெய்வத்தைவணங்கி
கிழக்குநோக்கியேகிரிகைசேர்தலைதனைநீட்டு
வழுப்படாதநம்மரபினிற்சத்தியம்வளர்
முழக்குஞ்செக்கலியிட்டுனைவெட்டுவேனுன்முனிந்தே.

வசனம்.

இந்தவார்த்தையைச்சந்தோஷமாகக் கேளும்பெண்ணே நீஎப்போதும்வணங்காநின்ற உன்னிஷ்டதேவதையை மனதிலேநினைந்து வணங்கிக்கிழக்குமுகமாயிருந்து தலையைநீட்டுமோசிலாதநம்மிடமரபிற்சத்தியம்சாஸ்விதமாய்நிலைக்கும்படியாகக்கொர்ச்சித்துஓரேவெட்டாய் வெட்டிப்போடுகிறேன்பெண்ணே.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

நீரின்மேற்குமிழியிந்தநீணிலவாழ்விதெல்லாஞ்
சீர்பெறுமுயிர்போனாலுஞ்சிதையாமலுண்மைநாடி
சேர்பெறுமோட்சஞ்சேரவெனைத்தென்னையிரண்டாய்வீசித்
தாரணிதனிலேகீர்த்திதழைத்திடச்செய்வாய்மன்னா.

வசனம்-

கேளும்மகாராசனே இந்தவாழ்வெல்லாம் நீரின்மேற்குமிழியேயல்லாமல்வேறில்லைபிராணன்போனாலுஞ்சத்தியத்துக்குக்குறைவுவராமலென்னைவெட்டியெறிந்துபூமியிலேகீர்த்திநிலைக்கச்செய்யும் மகாராசனே.

அரிச்சந்தோட்டி-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

பொய்யுரையதர்மம்பிறருயிர்க்கிறுதிபூமியிலிரப்பவர்க்கீயா
கைவினைவஞ்சமிவைநவைமன்றினூடிலனுமிலென்வீசுங்
கையுடைவாள்தான்பட்டென்றனையுநுகக்காரணமறிகிலேனேதுந் (யே
தெய்வமேயின்றுநானிதோவெட்டிச் சிதைக்கிறேன்சிவன்செயற்படி.

வசனம்.

ஓகோதெய்வமேநான்பாதகங்கொலைகளவுசூதுவாது தருமதானமிடாதகுணம்இப்படிப்பட்டநடக்கைகளிலேதுமில்லாதவனாயிருப்பனேயாகில்யானுங்கைப்பற்றியஇந்தக்கத்திபயன்பெறக்கடவது இதுஈஸ்வரசெத்தனப்படிவெட்டுகிறேன்பாருங்கள்.

பொது-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

இன்னவாறுண்மைபேசியெதிர்நின்றேவலினையாக
மன்னவனரிச்சந்திரன்றன்மனைவியைவாளால்வீச
முன்மணமாலையாகவீழ்ந்தது கழுத்திலாங்கே.
துன்னியவசிஷ்டரோடிந்தரெல்லாஞ்சூழ்கின்றாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக அரிச்சந்திரமகாராசனானவன் சத்தியத்தைநி லைநாத்துத்தன்மனைவியாகியசந்திரமதியம்மனை ஒரேவெட்டாகவெட்ட அந்தவாளாகப்பட்டதுமுன் மணமாலையாக அவள்கழுத்திலேவிழபா மசிவன்முதலாகியமும்மூர்த்திகளும்இந்திராதிதேவர்களும் அரிச்சந் திரமகாராசனிடத்திற்குவருகிறவிதங்காண்க.

தேவர்கள்வருகிற-தரு இ-ம் மத்தியமாவதீ-ஆதிதாளம்.

தேவர்களிதோ வந்தார்களே-அந்த
தேவர்களிதோ வந்தார்களே

காவலனரிச்சந்த்ரன்றன்காதலியை வாளால்விசுக்
தாவியேமாலையாய்விழத்தளர்ந்துவிஸ்வா மித்ரனமுச்
சதுருசதுர்மறைமுதலிய நெறிமுறை
த்ருமமுநிலையுறைபெருமை யழகுநிறை
சத்தியமானவர்களென்று மகிழ்ந்து
நித்தியம்வாழ்கவெனநின்று புகழ்ந்து
வெள்ளைரிஷபமேறி- தளதளென்று-மெய்யெலாம்விபூதி துலங்க
பிள்ளைவெண்மதியிலங்கக்-சூலகபாலம்-பெருத்தகரத்தி லிலங்க
கள்ளவிழ்குழலுமைபாகத்துறையு மீசர்
கருடவாகனந்தன்னில்வைகுந்தபுர வாசர்
கதிதருபலபலவுயிர்களையுதவிய
கமலமென்மலர்மிசைவருசதுர்முகனொடு
காணாத அதிசயமென்று புகல
நீணிலத்தினில்நிஜமென்று சகல தேவர்)
மயில்வாகனத்தி லேறி-அசுரர்படை
மாளப்பொடிபொடியாய் நூறி
செயங்கொள்முருகேசர்வரச் சீறி-நடக்குந்திக
மாகுவாகனன்மகிழ் மீறி
நயமாய்வாரத்தும்புரு நாரதர்முதலானோரும்
இயல்சேரிசைகள்பாடி இலகத்தவத்துள்ளோரும்
இகபரமெனுமொரு மகிமையினெறிசொலு
மிவரிவர்பொருளென வருமோடைவையிலும்
இசைமேவியபலபதவிக ளுறைதரு
பிசகாநெறிமுறையறிவோ மெனவரு (தேவர்க)
வசிஷ்டவிசுவாமித்ரர் சூழ-திக்குப்பாலகர்கள்
வரிசையுடனேவந்து தாழ
விசித்ர அயிராவத வேழ-வாகனந்தன்னில்
விளங்கமரர்பதி வாழ

இசைத்தரம்பையர்ஆசி இயம்பதேவேந்த்ரன்வர
ச்சித்திரதுந்துமபேரி மேகம்போலேயொலிதர
விருதுகவரியணிமிகுதிபாவி வர
விழையுமுகிலிலிதுவிசையுமென வுயர
மேவியந்தாமுழுதிலு மறைபத
தாவிமணிமிசைஎங்கிலு நிறைய (தேவர்ச)

பொது-வசனம்.

இந்தப்பிரகாரமாகத் தேவர்கள்வந்திருக்குந்தருணத்தில் காசிராஜன் இறந்துபோனதன்பிள்ளையைத்தகனஞ்செய்யச்சுடலைக்கலாக்குப்பிள்ளையுடன்வந்துசேர்ந்தாரென்றறிக.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ- ம்-ஆனந்தபைரவி.

என்றனலரிச்சந்த்ரன்றன்னியல்குணம்விளங்கிநன்றாய்
ஒன்றுமேபிசகிலாவெனன்றோங்கியேபுகழுண்டாச்சு
நன்றியாரெனைப்போற்செய்தார்நானுமே ஆஹாவந்தேன்
குன்றுபோல்வருந்தேவேந்த்ராகோவேநின்சமுகத்திற்கே.

வசனம்.

இந்தஅரிச்சந்திரமகாராசனுடையசத்தியமுங்குணாதிசயங்களும் என்னாலேயல்லவோவெளிப்பட்டு எந்தஉலகங்களிலும் சாஸ்வதமானகீர்த்திப்பிரகாசித்தது என்னைப்போலே இந்தராசனுக்குநன்றிசெய்தவர்களார் ஆஹாஆஹா நானும்வந்துவிட்டேன் உங்கள்சமுகந்திற்குதேவேந்திரமகாராசனே.

வசிஷ்டர்-விருத்தம்-இ-ம்-தோடி.

என்னிடசீஷனைவெழிலரிச்சந்த்ரமன்னன்
தன்மையுநிறையுந்தன்மஞ்சத்தியம்விரதமான
நன்மைகள்யாவுஞ்செய்துநானிலம்புகழதேவர்
முன்னிட்டாசீர்வதிக்கமுயற்சியுமெனக்கேதந்தான்.

வசனம்.

ஆஹாஎன்னிடசீஷனாகிய அரிச்சந்திரமகாராசனுடைய பொறுமையுஞ்சத்தியமுந்தருமமுமநிலையும் இன்னம் எல்லாநன்மைகளும் ஆசீர்வதிக்கப்பெற்றகீர்த்தி என்னையடைந்ததேயல்லது வேறில்லைசபாசுசபாசு அரிச்சந்திரமகாராசனேசிஷியனிருந்தாலிப்படியல்லவோயிருக்கவேணும்.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ ம்-சங்கராபரணம்.

செப்பரும்பொருளாய்நின்றசிவபரஞ்சுடரேபோற்றி
துப்புறுமயிலிலேறுந்தூயவேலவனேபோற்றி
ஒப்பரும்பொருளாய்நின்ற ஒளிர்மணிவண்ணாபோற்றி
தப்பிலாவமரர்நாட்டிற்றங்குந்தேவேந்திராபோற்றி.

வசனம்.

சரணஞ்சரணஞ் சுவாமிகளே.

தேவர்கள்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

நலமெலாந்திரண்டோருருவமாய்வந்தநற்குண சீலனேவாழி
உலகினிலுன்னைப்போலுமுண்மையாயுணர்ந்தோரில்லை
இலகியசத்யங்கீர்த்தியியம்பொறுசருமம்புண்யம்
சலனமில்லாமற்காச்குந்தனியரிச்சந்த்ராவாழி.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-பைரவி.

என்னமாதவங்கள்செய்தேனென்னிலும்பாவியுண்டோ
என்னையோர்பொருளாயெண்ணி யென்னையாண்டிடவந்தீர்கள்
அன்னையும்பிதாவுமற்றுமாருயிர்க்குறுதியான
நன்னிலையோர்களேபுன்னையினேற்கிரங்கலாமோ.

வசனம்.

சரணஞ்சரணம்சுவாமிகளே பொல்லாதபாதகனை அடியேனை யொருபொருளாகயெண்ணித்தெரிசனங்கொடுக்கத்திருவுளம்வருமா இந்தநாயேனையாளக்கிருபையுண்டாகலாமாசுவாமிகளே.

தேவர்கள்-விருத்தம்-இ-ம் காம்போதி.

புண்ணியமுன்னைப்போலும் பூமியிற்செய்வாருண்டோ
மண்முதலுலகிலுள்ளமலைகளுமுருகிடாதோ
எண்ணுமுன்கருத்துக்கேதுமிடர்கள்வாராதுசொன்னோம்
புண்ணியவுலகுமாள்வாய்பூமியுமாள்வாய்மன்னா.

வசனம்.

நாங்களொன்றுசொல்லுகிறோம் கேளுமரிச்சந்திர மகாராசனே சத்தியத்திலேயும்புண்ணியத்திலேயும் உன்னைப்போ லொருவருண்டாகி இந்தவுலகையுமாள்வாய் மோட்சசாம்பிராச்சியமுங்கைக்கொள்வாய்விசனப்படவேண்டாம்மகாராசனே.

பார்வதியம்மன்-விருத்தம்-இ-ம்-தோடி.

பெண்களிற்பெருமையெல்லாம்பிறந்ததுன்னாலேயிந்த
மண்ணுலகத்திலுன்போல்வடிவழகருணமிக்கி
ஒண்ணமாங்கற்புசத்யம்வளர்த்திடுந்தருமசிந்தை
பண்ணிவைத்தாற்போல்வாய்த்தபைங்கிளியெழுந்திரம்மா.

வசனம்.

கேளாயம்மாசந்திரமதிபூலோகத்திலேஉன்னைப்போலும் அழகு சத்தியம்பதிவிரதாதருமம் இதுகளெல்லாம் பண்ணிப்பதித்தாற்போ லிருக்கிறஸ்திரீகளுண்டோ எழுந்திரம்மாஎழுந்திரு.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-கண்டா.

அம்மம்மாயென்னைப்போலுமணியாயசென்மமுண்டோ
இம்மையிற்பிறந்துபட்டவிடர்களும்போதுந்தாயே

விம்முதேமனதிற்றுக்கம்மேனியில்வருத்தங்கண்ணுற
செம்மையாய்ப்பாருந்தாயேதிருவுளச்செயலோவம்மா.

வசனம்.

ஓமாதேவிசர்வேஸ்வரிசாம்பவிஇந்தப்பாவியைத்தொடவும்மனம்வருமாபூமியிலேநான்பெண்ஜென்மமெடுத்தபோதிலுமினனுதேகத்தைக்கண்ணிறைப்பாருமம்மாதாயே.

பார்வதியம்மன்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

எப்போதும்போலேவாழ்வாயிடரெல்லாந்தொலைந்ததுந்தன்
ஒப்பிலாக்கணவனோடுமுகந்துவாழ்ந்ததற்குமேலே
இப்புவியுள்ளோர்நாடுமிணையிலாப்பதத்தைமேவி
தப்பாமல்வாழ்வாயேதுஞ்சஞ்சலப்படவேவேண்டாம்.

வசனம்.

கேளாயம்மாசந்திரமதிஇதுவரைக்கும் நீபட்டசங்கடமெல்லாந்தொலைந்தது எப்போதும்போலேஉன்புருஷனோடுகூடிச்சகலசாம்பிராச்சியமுமனுபவிப்பாய் இதோபரிசுத்ததேகமானாய்விதனத்தைவிட்டுவிடம்மாகடைசியில் எங்கள்பதத்தையுஞ் சேரக்கடவீர்களம்மா.

சுப்பிரமணியர்-விருத்தம்-இ-ம்-தோடி.

உள்ளாரும்வினைகள்செய்யுமுபத்திரவிசுவாமித்ரன்
தள்ளாடயிழுத்துவிட்டசங்கடந்தனிலேசிக்கி
விள்ளாதவிதியாற்பாம்பின்விஷத்தினால்காட்டில்மாண்ட
பிள்ளாய்நீயெழுந்துவாடாபிரியமாந்தேவதாசா.

வசனம்.

பொல்லாதவிசுவாமித்திரனிட மாய்கையினாலே இறந்துபோன அப்பாதேவதாசா எழுந்துவாடா.

இதுவும்-சுப்பிரமணியர்-விருத்தம்-இ-ம்-சௌராஷ்டிரம்.

வாசியோடிரதமேறிவலிமையாயரசுசெய்யும்
பூசிதவரசர்போற்றும்புண்ணியகுலத்தில்வந்தோய்
பேசியவிஸ்வாமித்ரன்புரட்டினால்வீணாய்மாண்ட
காசிராசேந்திரன்மைந்தாகடுகியேயெழுந்துவாடா.

வசனம்.

அநியாயமாய்விஸ்வாமித்ரன் மாய்கையினாலேயிறந்தகாசிராசன் குமாரனேயேலோகதாசா எழுந்துவாடா.

தேவதாசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

மயிலேறிவிளையாடிவரையுருவவேல்விட்ட
வல்லகுமரேசகுருவே
பயிலாதமழலையாகிமொழிகண்டுசொலவல்ல
பரிவானவறுமுகவனே

செயிரானவினையேனையுயிரோடுபுவிமீது
 திகழ்வாகவைத்தமுதலே
செயமாகவசுரர்தமைவென்றகுமரேசனே
 சிறியேனையாள்விஞ்சிநிதே.

வசனம்.

சரணஞ்சரணஞ்சுவாமி தேவரீர்கடாட்சத்தினாலே உயிர்பெற்றெழுந்திருந்தேனே என்னையெப்போதும் காப்பாற்றியிரட்சிக்கவேணும் சண்முகநாதா.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

அன்றந்தமார்க்கண்டேய ராவியைக்காப்பதற்கு
வென்றிகொளமனைப்பாரில் விழவுதைத்திட்டபாதா
இன்றென்னையாளவந்தா யெனக்கொருகுறைதானுண்டோ
மன்றலந்துளவினானே மண்பொறுத்தன்றைபோற்றி.

வசனம்.

ஆகாசகாலகண்ட திரிநேத்திரசடாதரசாம்பவமூர்த்தியே மார்க்கண்டேயரை இரட்சிக்கத்தக்கதாகஎமனையுதைத்த பாதாரவிந்தத்தையுடையகர்த்தனே யென்னையிரட்சிக்கும்பொருட்டாய்த் திருவுளம்வந்ததேசுவாமிசரணம் துளபமாலையையுடைய வைகுந்தவாசசரணம் சிருஷ்டிகர்த்தாவாகியபிர்மதேவரேசரணம்.

சந்திரமதி-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

மூலகாரணமாய்நின்ற முதற்பெருந்தாயேபோற்றி
ஆலமர்கடலில்வந்த அருந்திருவனையேபோற்றி
சீலமார்பிரமனாவிற் றிகழ்ந்திடுமணியேபோற்றி
பாலனையெனக்களித்தீர் பாக்கியமெல்லாம்பெற்றேன்.

வசனம்.

செகத்துக்குமூலகாரணமாய்நின்ற பார்வதித்தாயேபோற்றி திருப்பாற்கடலில்அவதரித்தஸ்ரீமகாலட்சுமித்தாயே போற்றி பிரமதேவருடையநாவில்வீற்றிருக்கின்ற சரஸ்வதிதேவியேபோற்றி என்னிடத்தில்மனதிரங்கி யிறந்துபோனபிள்ளைக்குயிர்கொடுத்திரட்சித்திர்களே யினாலேநான்வாழ்வடைந்தேன் தாய்மார்களே.

சத்தியகீர்த்தி-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

உலகைப்படைத்துமந்தக்காத்தும்ஒடுக்கும்பரமவெளியாகி
நிலைமைப்படைத்தமூவரெனநெறியாய்நின்றமூலவரே
யிலகச்சுரர்நாடாள்வேனையிமையோர்தமைத்தோரெல்லோர்க்கும்
நலமெய்ப்புவியிலடிவணங்காயேனடியேன்பொறுத்தாள்வீர்.

வசனம்.

சரணஞ்சரணம்அடியேன்பேரில்கிருபைவைத்து இரட்சிக்கவேணுந்தேவர்களே.

ஈஸ்வரர்-விருத்தம்-இ-ம்-அடாணா.

எங்காளுந்தவமுயன்றே யிடைவிடாதவமகற்று
மின்னொளிவிஸ்வாமித்திரவிற்பனமுனியேகேளாய்
இங்கிலையரிச்சந்திரற்கே விடரெலாம்விளையச்செய்த
கன்மமேதெவருங்கேட்கக் கருதியேயுரைசெய்வாயே.

வசனம்.

வாரும்வாரும் விஸ்வாமித்திரமகாரிஷியேயிந்தஅரிச்சந்திரமகாராசனை இப்படிக்கெல்லாம் வருத்தப்படுத்த உமக்கிவர்பேரில்விளைந்த அடமென்னநடந்தவரலாறென்ன யாவற்றும் விபரமாகத்தெரியச்சொல்லும்முனிவரே.

விஸ்வாமித்திரர்-அகவல்-இ-ம்-எதுகுலகாம்போதி.

கைலாசவாசக்கடவுளேகேளாய்
நயமானவிந்திரநற்சபைதனிலே
மாதவமுனிவர்கள்வந்திருந்தார்களே
போகவேநானும்போயங்கிருந்தேன்
பூமியிலுள்ளபூவலர்தம்மில்
நேமம்நன்னீதிநிறைமொழியுண்மை
வழுவாதவர்யார்மாதவத்தோரே
மொழிகுவீரென்றுமொழிந்தனனிந்திரன்
அம்மொழிகேட்டயாவருமிருக்க
நம்மொருதாசனவின்றிடான்பொய்யை
என்றிந்தவசிஷ்டரிவையேசொன்னார்
அன்றிவன்பொய்யனுமெனவடியேன்
இவனுளமறியாதியம்பினேனதற்கோ
ரவதியாய்ப்பந்தயமவர்சொன்னார்யானும்
தலத்தினிற்பாதிதருகிறேனென்று
புவனியில்வந்துபுகுந்திவனிடத்தில்
ஆனைமேற்கவண்கலதுபோனதூரம்
தானமாய்ப்பொன்னைத்தருக்குடன்வாங்கி
அந்நகர்தனிலேயடைக்கலமாக
மன்னனுமிவன்றன்வசத்தினில்வைத்தே
நலந்திகழுந்நாட்டினிற்பயிரின்
பலன்களையழிக்கப்பரவவேமிருகக்
கூட்டமுண்டாக்கிக் கொடுமையாய்விடுத்தேன்
வேட்டைக்கேயேகிவிரைந்திவன்சென்றான்

பன்றியைவிடுத்தேன் பராக்கிரமமாகக்
குன்றெனும்பன்றிகுலையவேயெய்தான்
நீச்சமாதர்களைநிமிஷத்திற்படைத்தும்
பூச்சக்ரக்குடையைப்புரவலன்கையில்
வாங்குவீர்கொடுக்கான்மருகுவீரென்றே
பாங்குடனுரைத்தபரிவினலவர்போய்ப்
பாடியேகேட்டபரிசதைமறுத்தான்
கூடுகவென்றார்கோபமுற்றடித்தான்
கண்டுநான்வெகுண்டேன்கைப்பிழையென்றான்
வண்டணிகுழலார்மணம்புணரென்றேன்
நாடுநகரமுநானளித்திடுவேன்
வாடியவிடையார் மணந்தனைவிரும்பேன்
என்றெனக்கொடுத்தான்நான்முன்னேவைத்த
பொன்தனைக்கேட்டேன்புகழானகாசி
நன்னகரடைந்தேநாற்பத்தெட்டா
நாளிற்குட்பொன்னைநானேதருவேன்
ஆள்விடுவென்றானனுப்பினேன்கூட
வழியினிற்பாம்புவகையெலாம்விடுத்தேன்
காட்டெரிநெருப்புக்கல்மழைமுதலாஞ்
சேட்டைகளெல்லாந்திறமுடன்செய்தேன்
தப்பியேகாசிதன்னிலேவந்து
ஒப்பியேமனைவியையற்றதோர்மகனை
விற்றிடச்செய்தேன்விடுக்கிலனிவனைக்
குற்றமாம்புலையன்கொள்ளவேவைத்தேன்
பாம்பினாலிவன்றன்பாலனைக்கொன்றேன்
வீம்பாயிப்பதிவேந்தன்மகனைக்
கொன்றிவன்மனையாட்கொன்றதாயமைத்தேன்
இன்றிப்பழியாலிவனையுங்கொல்லச்
சங்கடங்காட்டித்தயங்கவும்வைத்தேன்
மங்கைதன்பாகாமணதிந்தப்
பொல்லாங்குகளெல்லாம்பொறுத்தனனிவன்பொய்
சொல்லறியாதொருதோஷமுமறியான்
ஈதுதான்செய்தஇடுக்கங்கள்சூழ்ச்சி
வேதவேதாந்தவிமலனேபோற்றி

ஈஸ்வரர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

நன்றுநன் றிந்தப்பாவம்நாவினாலுரைக்கொணாது
வென்றிகொள்தவத்தின் மிக்கவிஸ்வாமித்திரரேகேளீர்
அன்றிந்திரன்சபையிற்சொன்னவவமதிபாம்பந்தயத்தை
வென்றதாரேதோற்றதாரோவிவரமாய்ப்புகலுவீரே.

வசனம்.

ஆகா இந்தப்பாவமானவார்த்தைகளை நாவினாலே வசனிக்கக்கூடாது அதுஇருக்கட்டும் ஓவிசுவாமித்திரமகாரிஷியே அன்றுஇந்திரன் சபையிலேநீரும்வசிஷ்டரும்பண்ணியபிரதிக்கினையிலேதோற்றதார்செயித்ததார்விவரமாகச்சொல்லும்விசுவாமித்திரரே.

விசுவாமித்திரர்-விருத்தம்-இ-ம்-தோடி.

மனதறிந்துரைத்தஅந்தவசிஷ்டரேவென்றாரிந்தப்
புனிதனைப்பொய்யனென்றுபுகன்றவனானேதோற்றேன்
புனைமுடிநாடுதந்தேன்போற்றியஅடிமைவிட்டேன்
கனமுடன்றவத்திற்பாதிகர்த்தனேயளிப்பேன்சுவாமி

வசனம்.

கேளும்புவனகர்த்தாவாகியபரமேஸ்வரரே வசிஷ்டரேவென்றார் இந்தப்புனிதனைப்பொய்யனென்றுசொன்னவனானேதோற்றேன் ஆதலால்நானருமையாய்ச்செய்ததவத்திற்பாதி இந்த அரிச்சந்திரமகாராசாவுக்குக்கொடுக்கிறேன் தானம்வாங்கினபூமியுங்கொடுத்தேன் அடிமைத்தனத்தையும்விலக்கிவிட்டேன்சுவாமிமகாதேவரே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

இரந்தவர்க்கீந்தநாட்டையானினிப்பெறுவதுண்டோ
சிரந்தாழடிமையான செறிமுறைதவறலாமோ
வரந்தருமுதல்வர்முன்னேமனமுவந்துரைத்தீராயா
சுரந்தபால்கறந்தால்பின்புகுழ்ந்துதான்முலைக்கேறுதே

வசனம்.

நன்றாய்ச்சொன்னீர்விசுவாமித்திரமகாரிஷியேயாசித்தவர்களுக்குக்கொடுத்தநாட்டைமறுபடியும்வாங்குவேனோவிதிவழிபாவடிமைப்பட்டநான் மீண்டுபோவேனோகறந்தபால்முலைக்கேறுமோசுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-மோகனம்.

இரந்தவர்க்கீந்தநாட்டை இனிவாங்கேனென்றும்பாரில்
நிரந்தரமடிமையானநெறிமுறைபிசகேனென்றும்
வருந்தவேவேண்டாம்பூமிவாழ்வெல்லாமொழித்துநானே
பிரிந்தொருதுறவியானேன்பேதித்தேன்வசிஷ்டராலே.

வசனம்.

ஓய் அரிச்சந்திரமகாராசனே பூலோகவாஞ்சையெல்லாம்வெறுத்துதபசியான எனக்குநாடென்னசெய்ய இந்தவசிஷ்டராலேஉன்னைப்பேதித்தனேயல்லது வேறில்லை சுகமாய் நாட்டையாண்டுகொள்ளும் மகாராசனே.

அரிச்சந்திரன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

மறையவன்றனக்கேயெந்தன் மனைவியைமகனைவிற்றேன்
பறையனுக்கடிமையாகிப்படுசுடுகாடுகாத்தேன்
நிறைமதிக்குடைக்கீழ்நின்றுநெடுமணிமகுடஞ்சூட்டி
பொறையுடனுலகையாளப்பொறுக்குமோதருமனையா.

வசனம்.

கேளும்சுவாமி பெண்சாதியையும் பிள்ளையையும் பிராமணனுக்குவிற்றேன் நானொருபறையனுக்கடிமையாகிச் சுடாதபிணங்களையெல்லாஞ்சுட்டுப் புலையன்கூலிகொடுக்கவாங்கிப் பொசித்தேன் அப்படிப்பட்டநான் இராஜகிரீடம்பூண்டு பூச்சக்கிரக்குடையின்கிழிருந்துஅரசாண்டால் நகைப்பார்களே தர்மதேவதைபொறுக்குமாசுவாமி.

விஸ்வாமித்திரர்-விருத்தம்-இ-ம்-தோடி.

மனையாளைமகனைக்கொண்டமறையவனக்கினிதேவன்
உனைவிலையாகக்கொண்டோனுயர்ந்ததென்றிசைமன்னன்றான்
விளையங்கள்வசிஷ்டருக்குமெனக்குமேவிளைந்ததாலே
இனையசங்கடங்கள்செய்தேனிதிலொருப்பழுதுண்டாமோ.

வசனம்.

கேளும் அரிச்சந்திரமகாராசனே உன்பெண்சாதியையும்பிள்ளையையும் அடிமையாய்க்கொண்டவர் அக்கினிதேவன் அதோநிற்கிறார் உன்னைவிலையாய்க்கொண்டவர் எமதருமராசன் இதோநிற்கிறார் வீணாய் வசிஷ்டருக்குமெனக்கும் வந்தவிரோதத்தினாலே உன்னைபரிசோதித்ததேயல்லது உண்மையாய் நானொருகாரியமுஞ் செய்ததில்லை பொறுத்துக்கொள்ளு மிதனாற்பழியுண்டாகமாட்டாது மகாராசனே.

அக்கினிதேவன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வாதுசெய்யிவராலுந்தன்மனைவியைமகனைவிற்கப்
பேதகம்வருமென்றெண்ணிப் பிரியமாய்முன்னமேதான்
தீதிலாக்காசிதன்னில்செனித்திட்டேன்மறையோனாகச்
சாதனமிந்தாவேதுஞ்சஞ்சலப்படாதேமன்னா.

வசனம்.

கேளாய் அரிச்சந்திரமகாராசனே இந்தவசிஷ்டருக்கும் விஸ்வாமித்திருக்கும்வாதுவரப்போகிறதுதெரிந்து முன்னமேநான் இந்தக் காசியிலேவந்து பிராமணனாகப்பிறந்திருந்தேன் இந்தாரும் நீயெழுதிக் கொடுத்த அடிமைச்சாதனம்பாரும் இதனாலொரு தோஷமுமில்லை மகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

பார்த்தேன் நானெழுதிக்கொடுத்தசாதனந்தான் சுவாமி.

எமதருமராசன்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வேதனேயிந்தவிஸ்வாமித்ரரால்விளையுமென்றே
ஆதியிலறிந்துநானேவரியதோரிந்தக்காசி
மாதலந்தனிலுதித்து வளர்ந்திட்டேன்புலையனாகச்
சாதனமிந்தாயேதுஞ்சந்தேகப்படாதேமன்னா.

வசனம்.

கேளாய அரிச்சந்திரமகாராசனே ஆதியிலேசானே இந்தவசிஷ்டருக்கும் விஸ்வாமித்திருக்கும் இப்படிவாதுவிளையப் போகிறதென்றுதெரிந்து இந்தக்காசிப்பட்டணத்தில் நான்பறையனாகப்பிறந்தேன் இந்தாரும் நீயெழுதிக்கொடுத்தசாதனம்பாரும் இதிலொருதாழ்ச்சியுமில்லை மகாராசனே.

அரிச்சந்திரன்-வசனம்.

பார்த்தேன் நானெழுதிக்கொடுத்தசாதனந்தான்சுவாமி.

எமதருமராசன்-விருத்தம்-இ-ம்-பந்துவராளி.

என்னுநீசுடலைகாத்தேனென்றெண்ணியிரக்கவேண்டாம்
வண்ணமாஞ்சுடலைபல்லவனொக்யாகருண்டம
பண்ணியமுனிவர்வாழும்பருக்கவாசிர்மமாய்
அண்ணல்சொற்படிநீகேட்டோமகிழ்ந்திருந்துவாழ்வாய்.

வசனம்.

ஓய் அரிச்சந்திரமகாராசனே நீ சுடலைகாத்தேனென்று எண்ண வேண்டாம் அதுசுடலையல்ல யாகங்களும் யக்ஞங்களும் பண்ணப்ப

ட்டஇடம் இங்கேவாசம்பண்ணப்பட்டவர்கள் முனிவர்கள் தபோதனர்கள்தான் இந்தஆசிரமங்களை நன்றாயுடற்றுப்பார்.

அரிச்சந்திரன்-வசனம்.

பார்த்தேன்மெய்தான் தாங்கள் சொன்னபடியே யிருக்கின்றது சுவாமி.

எமதருமராசன் -வசனம்.

இனிமேல்சந்தேகப்படாமல் அண்ணலாகிய கைலாசவாசர்கட்டளைப்படி நடந்துகொள்ளும் அரிச்சந்திரமகாராசனே.

ஈஸ்வரர்-விருத்தம்-இ-ம்-கேதாரகௌளம்.

புகழ்பெறுமரிச்சந்த்ராவுன்புண்ணியமென்னசொல்வேன்
தகைபெறுமெய்யுடனே தக்னிதாங்களேபுவியில்வந்து
வகையுடனமர்ந்துநீதிவழுவாமலுனைக்காத்தார்கள்
மகிழ்வுடன்மௌலிசூடிவையகமாள்வாய்மன்னா.

வசனம்.

ஓஹோஹோ அரிச்சந்திரமகாராசனே உன்னுடைய புண்ணியமேபுண்ணியம் நீ உத்தமனானதா லுனக்கு இப்படிதுன்பம் வருமென்முன்னமேயறிந்து அக்கினிதேவனும் எமதருமராசனும் பூமியில்வந்துபிறந்தார்கள் ஆனதால் குறைவில்லை சுகமாய்மகுடந்தரித்துக்கொண்டு உன்னுடையநாட்டையாளும் தடைசொல்லவேண்டாம்.

வசிஷ்டர்-விருத்தம்-இ-ம்-தோடி.

என்னுடன்விசுவாமித்ரரிடக்காகவாதுபேசி
உன்னையிவ்வாறுசெய்தாரூழ்வினையனுபவித்தாய்
மின்னியகயிலைவாசர் விளம்பியநெறியேசென்று
மன்னியநாட்டையாள்வாய்மாமுடிதரித்தமன்னா.

வசனம்.

கேளாய் அரிச்சந்திரமகாராசனே என்னுடையசிஷ்யனென்றுநான்சொன்னபடியினாலே இந்தவிசுவாமித்திரர் என்னுடனேவாதுபேசி என்பேரில்அடமாய் உன்னை இப்படிசங்கடப்படுத்தினார் இதுநீயனுபவிக்கவேண்டியஊழ்வினையாதலால்அனுபவித்தாய்இனிஸ்ரீகைலாசவாசர் கட்டளைப்படியே கிரீடந்தரித்து இராச்சியபரிபாலனம்பண்ணலாம் சம்மதித்துக்கொள்ளப்பா.

ஈஸ்வரர்-விருத்தம்-இ-ம்-ஆனந்தபைரவி.

வானவர்க்கரசேநீயும்வாரணவாசிவேந்தன்
றானுமேயிந்தமன்னன்றனையயோத்தியினிற்சேர்த்துத்
தேனெனுமொழியாளோடுசிங்காதனத்தில்வைத்தே
நீணிலமகுடஞ்சூட்டிக்கலையினுக்கேகுவீரே.

வசனம்.

கேளுந்தேவராசனே நீரும்காசிராசனும் வசிஷ்டர் விசுவாமித்திரரும் இவனையழைத்துப்போய் அயோத்தியாபுரியைச்சேர்ந்துதம்பதிசமேதராகச் சிங்காதனத்தில்வைத்து மகுடாபிஷேகஞ்செய்து விசுவாமித்திரருடைய தவத்தில் பாதிதத்தம்பண்ணுவித்து பின்பு உம்முடையலோகத்துக்குப்போய்ச்சேரும்.

தேவேந்திரன்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி-

தேவரீருரைத்தசொல்லைசிரமாகவகித்துக்கொண்டு
யாவருமகிழவிந்தவரிவையிச்சிறுவனோடு
தாவியபுகழ்சேர்மன்னன்றன்னையுமழைத்துநான்போய்
ஆவலாய்மகுடஞ்சூட்டியழைத்துப்பின்போவேன்சுவாமி.

வசனம்.

கேளுஞ்சுவாமி கைலாசவாசரே தேவரீர்சொன்னபடியே இந்தமாதையும இந்தப்பிள்ளையையும் இந்தராசனையும் அழைத்துக்கொண்டுபோய் அயோத்தியாபுரியிலே பட்டாபிஷேகஞ்செய்வித்து பின்பு நான்தெய்வலோகத்துக்குப்போகிறேன் கர்த்தனே.

ஈஸ்வரர்-வசனம்.

இனிநாம்நம்மிடலோகத்துக்குப்போவோம்வாருங்கள்தேவர்களே.

தேவேந்திரன்-வசனம்.

ஓய் அரிச்சந்திரமகாராசனே அம்மாசந்திரவதி அப்பா தேவதாசா ஓய்மந்திரிசத்தியகீர்த்தி இனிநாம் அயோத்தியாபுரிக்குப் போவோம் வாருங்கள்.

தேவேந்திரன் -வசனம்.

ஓய் காசிராசனே உம்முடையரதகஜதுரகங்கள்முதலானபரிவட்டணைகளுடன் இவர்களையும வசிஷ்டர்விசுவாமித்திரரையும் அழைத்துக்கொண்டுபுறப்படும்.

காசிராசன்-வசனம்.

அப்படியேயாவருக்கும்வாகனம் இரதம்சேனைசமுத்திரங்கள்யா வும்வந்ததுபுறப்படலாஞ்சுவாமி.

பொது-வசனம்.

அகோதெப்படியென்றால் யாவரும் அயோத்தியாபுரியில்வந்து சேர்ந்து அரிச்சந்திரமகாராசனும்சந்திரமதியும்தேவதாசனும் சத்திய கீர்த்தியும் நவரத்தினகசிதமான சபாமண்டபத்தில் எழுந்தருளித்தே வர்கள்புட்பமாரிபொழியவும்குடிகள்போற்றிசெய்யவும்நடனமாதர்க ள்கடனமாடவும்கட்டியங்கள்கூறவும் இத்தியாதிவைபவத்துடன்தே வேந்திரன்வசிஷ்டர் விஸ்வாமித்திரர்மூவர்களாலும் மகுடந்தரித்துக் கொள்ளுகிறவிதங்காண்க.

வசிஷ்டர்மகுடந்தரிக்கிற-விருத்தம்.

தப்பிலாதயோத்தியாண்ட சத்திய அரிச்சந்த்ராமூவர்
செப்பியபடியேவிஸ்வாமித்திரர்சொற்படிக்கும்
இப்போதுதேவர்காணவெழில்ரத்நமகுடந்தன்னை
அப்பனேசூட்டுவேனுன் அன்புடன்தரித்துக்கொள்வாய்.

வசனம்.

அப்பாசத்தியபாஷி அரிச்சந்திரமகாராசனே தேவர்மூவர்யாவரு ஞ்சொல்லியபடிக்கும் விஸ்வாமித்திரன்மனதின் படிக்கும் முன்னம் உன்சிரசில்விளங்கும் நவரத்நமகுடத்தையேதரிக்கிறேன் நீ சந்தோஷ மாய்தரித்துக்கொள்ளுமையா சத்தியபாஷி அரிச்சந்திரமகாராசனே.











# அரிச்சந்திரமகாராசன்பட்டாபிஷேகம்.



விருத்தம்.

சித்திரவிசித்திரஉள்ளங்கொண்டு தேவர்மாமுனிவரைப்போற்றிசெய்து
சத்தியகீர்த்தியருளில்பணியக்கண்டு சகலவேதக்கவிகள்போற்றக்கண்டு
சத்தியமும்நீதியுமேற்கொண்டுதுள்ளச் சகலமுங்கைக்கொண்டரிச்சந்த்ரராஜன்
பத்தினிசந்த்ரமதியுடனேயலகையாளும் படிகொண்டான் அபிஷேகமுடிகொண்டானே.

தரு-இ-ம்-அடாணா-திரிபுடை தாளம்.

பல்லவி.

மகுடாபிஷேகங்கொண்டானே-அரிச்சந்த்ராராஜன்-மகுடாபிஷேகங்கொண்டானே.

அனுபல்லவி.

மகதர்குருதர்கர்னடர்சோனகர் மகிழ்வுற்றிருபுறமும்வணங்கிட - விகிதத்துடன்குடிகளிணங்கிட
மந்திரிதந்திரிமார்கள்அந்தணர்சைவர்கள்மேலோர்ஆசீர்வாதம்தான்கொடுக்கமாசிலாக்கொலுவிரு
மகுடாபிஷேகங்கொண்டானே-அரிச்சந்த்ராசன்-மகுடாபிஷேகங்கொண்டானே. (கக

கொங்கணர்வங்கணர் குடகதேசத்தோர் கூடித்திரிபுரமும் வணங்கிட
நாடித்துதி செய்துஇணங்கிடக் கோசிலாத மாதவரனைவரும்
வேதமோதிட் நீதியுடனே இதோ (மகுடா) வீரசூர ரமைச்சர்வேந்தர்கள்
வெற்றிபெற்றராசராசர் சுற்றமுற்றபேர்களெல்லாம்
வேண்டிவந்தருகிருக்க வீரகெம்பீரத்துடனே (மகுடா)
தேவதேவர்பூமாரிபொழிந்திடத் தித்திமிதிமியெனநாடகர்
தத்திமிதிமியென ஆடிட
சீருடன்பரதப்பெண்கள் வீருடன்சங்கீதம்பாட-தேவதுந்துபிமுழங்க மூவருமறிந்திடவே (மகு)
ஓசையாகவேபேரிஅடிபட உலகத்தோரெவர்களுமறியவே
சகலவைபவ போகமதாகவே
மாசிலாததிருக்கொலுவிலிருந்திட தேசமன்னர்கள்யாவருமறிந்திட (மகுடா)
நடனமாதர்கள்நடனம்நடிக்கவே நானிலமெல்லாந்துதிசெய்திட
வானவரெல்லாம் இதோபுகழ்ந்திட
நாடித்தவஞ்செய்திடும்-அமரர்கள் கூடிஅரிச்சந்த்ரனைப்புகழ்ந்திட (மகுடா)
வேதவேதியர்வேதமோதிட விற்பனமுளவெவர்களும்வாழ்த்திட
அற்புதமிகுந்தியாகியமன்னவன்நீதியுடனேவித்தைசெங்கோல்செலுத்திட
பூதலமெல்லாம்இதைப் புகழ்ந்திட (மகுடா)

அரிச்சந்திரமகாராசன்கொலுவிலிருந்துசொல்-போற்றி

விருத்தம்-இ ம்-மத்தியமாவதி.

தர்மமேதர்மமிந்த தாரணிதழைக்கவேணும்
தர்மமாய்மாரிபெய்துசதாகாலம்வாழவேணும்
தர்மமாயெனதுசெங்கோல்தாழ்விலாதிருக்கவேணும்
தர்மமேபெருகவேணும்சதாசிவமைந்தாபோற்றி.

சந்திரமதி கொலுவிலிருந்துசொல்-போற்றிவிருத்தம்-

இ-ம்-மத்தியமாவதி

சூர்முகத்தடிந்துமுந்நாள்சுரர்பதிக்கரசுநல்கிச்
சீர்பெறும்தேவர்சேனாபதியெனதெய்வலோகத்
தாரிடர்தீர்த்ததுக்காததசண்முகன்தனக்குமுன்னோர்
கார்முகக்கடவுளென்னுங்கணபதிமலர்த்தாள்போற்றி.

தேவதாசன்-கொலுவிலிருந்துசொல்-போற்றி-கவி-

இ-ம்-மத்தியமாவதி.

திருவளர்கயிலைச்
சிவனிடமைந்தா
வரமருள்விநாயகா
மலரடிபோற்றி.

சத்தியகீர்த்திசொல்-முச்சீரடி-விருத்தம்.

இ-ம்-மத்தியமாவதி.

அலைகடலீரேழுலோகமதனில்பயிர்பச்சையோகம்
ஆசேஉன்தேசயோகம்
நிலவுகதிர்போல்விளங்கிநெறிகுடிகள்மன்னர்பொங்கி
நிலைவுரிதானங்களெங்கும்
மலர்விழிமடந்தையாரும்வளர்மனைகுடும்பமேலும்
மகிமையாலோங்குமென்றே
பலகலைபுணர்ந்தவேதாபகிரதீசுபேக்ஷமுண்ட
பார்த்திபாசரணம்சரணம்.

சற்குணமந்திரிசொல்-முச்சீரடி-விருத்தம்இ-ம்-மத்தியமாவதி.

அன்னதானமிகவஸ்திரதானமுதலாவுதானமேன்மேலுமாய்
இந்நிலத்தில்வெகுஉன்னிதத்துடனே யேழைசாதிகளுக்கின்பம
யன்னசத்திரமடங்களெங்குமதிகாரமாகசெயமாகவே
நிண்ணயப்படிநடக்குதும்முடையநீதியாலரசர்வேந்தனே.

கட்டியக்காரன்சொல்-விருத்தம்.

அத்திமுகனைத்துதித்தன்புடன்வாழ்கின்ற அரசனேவெகுபராக்கு
ஆனைபரிசதுரங்கசேனையோட மைந்தஅகளங்கனேவெகுபராக்கு
கத்தியொடுகட்டாரிகார்முகமணிந்தசெங்கையனேவெகுபராக்கு
கருதரியசூர்யகுலம்வர்த்திக்கவேவந்தகாவலாவெகுபராக்கு
வெற்றிபெறுராசாதிராசர்துதிசெய்கின்றவேந்தனேவெகுபராக்கு
மேலிட்டபகைஞரைக்கூறிட்டுநின்றசெய வீரனேவெகுபராக்கு
நந்திவருநண்பரையும்சுத்தமுளவோர்களைரட்சிப்பவனே வெகுபராக்கு
நாற்றிசையிலுங்கீர்த்திபெற்றரிச்சந்த்ரமகாராசனேவெகுபராக்கு.

அரிச்சந்திரமகாராசன்சொல்-லோகதிட்டம்-கவி.

அண்டம்புரக்கின்றயிந்த்ரனுக்கிடையூறி
லாமலரசாட்சிசெலுதா

சத்தியகீர்த்தி-சற்குணமந்திரிசொல்-கவி.

அளவற்றபாக்கியத்துடனமரர்கொண்டாட
அநுதினம்பவனிவாரார்

அரிச்சந்திரமகாராசன்-கவி.

கொண்டன்மும்மாரியுங்குவலயத்திடையூறில்
குறைவிலாமலேபெய்யுதா

சத்தியகீர்த்தி-சற்குணமந்திரிசொல்- கவி.

குதிகொண்டுமும்மாரிபெய்துபயிர்பச்சைகள்
குறைவின்றிநிறையுதையா

அரிச்சந்திரமகாராசன்-கவி.

எண்டிசைமுனிவர்சள்யாகாதிகிரமங்கள்
இயல்பாய்நடந்துவருதா

சத்தியகீர்த்தி-சற்குணமந்திரி- கவி.

எக்கியங்களெப்பொழுதும்முசியாமல்முனிவோர்கள்
இனிமைநிறைவேறுதையா

இராசன்-கவி.

மன்றடளத்திலுள்ளதேவாலயப்பூசைமகிழ்வாழ்நடந்துவருதா

சத்தியகீர்த்தி-சற்குணமந்திரிசொல்-கவி.

வரையாகமங்கனொடுஞமவிதிதேபூசைவலுவாநடந்துவருகுதையா.

அரிச்சந்திரமகாராசன்சொல்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

வந்திடாய்சத்தியகீர்த்திவரிசையாய்நாமுமிப்போ
சந்தயமில்லாச்சொர்ணதானமேசெய்யவேணும்
தொந்தமாய்வரனுலோகம்தொல்புவியறியவெந்தன்
சிந்தையுமகிழ்வதாகச்செயசண்டியார்ப்பிப்பாயே.

சத்தியகீர்த்திசொல்-விருத்தம்-இ-ம்-மத்தியமாவதி.

கட்டியக்காராகேளாய்கணதிரிச்சங்குமைந்தன்
இட்டமதாகத்தானமீயவேநினைவுகொண்டார்
எட்டுத்திக்கினிலுமுள்ளயேவழைகளறியப்பேரி
சட்டமாயறைந்துவாராய்தரணியோரறியத்தானே.

கட்டியக்காரன்-வசனம்.

அகோதெப்படியென்றால்காசியாத்திரைபோயிருந்த அரிச்சந்திரமகாராசர்மோட்சம்பெற்றுமறுபடியும் அயோத்தியாபுரி பட்டணம்வந்துகொலுவிருந்து அரசுசெலுத்தித்தானங்கொடுக்கப்போறார்தானம்வேண்டியபேர்கள்வந்துசேருங்கள் தாம்தாம்தாம்- தமதமதமதம தாம்தாம்தானபேரிசாற்றிவந்தேன் வந்தேன் மகாராசனேசரணம் சரணம்.

சோபனம்-

இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

சோபனம் நித்யசோபனம்

பூபதியரிச்சந்திரன் புகழுக்கிரங்கிவந்த
புவிதனில்விலாசமோதுந்தவகணநாதர்க்கும் (சோப)

பஞ்சாயுதபாணிக்கும்பாக்கியஇந்திர னுக்கும்
கஞ்சமலர்வேதனுக்குங்கலைவளர்கந்த னுக்கும் (சோப)

செம்பதுமமலருறைதிருவெனு மாதினுக்கும்
செழித்தவிமயகிரியரசன் புதல்விக்கும்
நம்பும்பாவலர்கள் நாவிலுரைத்திடும்
நாயகிவெண்கமலாசமேவிவரு
நங்கைக்குஞ்சகியெனு மங்கைக்கேசிதம் (சோப)

தத்துவமுதலாகத்தழைக்குஞ்சதுர்மறை
தாவிவருமதிகதிராகுஞ்சுடர் களுக்குஞ்
சத்யஅரிச்சந்திரன்புகழ் தன்னைவிரும்பினோர்க்கும்
தவறுநெறியிலேதங்கவே வாழ்வோர்க்கும்
தாணிக்குமாகாச வாணிக்கும் (சோப)

வாழ்த்து-கவி.

சீர்பெருகுமரிச்சந்த்ரன்திகழ்கதையை
விலாசமெனச்செழிக்கஇந்தப்
பார்மிசைச்செந்தமிழாலேபுனிதமாகப்
பாடினேன்கவிரங்கநாதனென்போன்
ஏர்பெறுமிச்சரிதைதனையெழுதினோர்க
ளின்பமாய்ப்படித்தோர்களிதமாய்க்கேட்டோர்
கார்முகில்மெய்ம்மலர்க்கண்ணனருளினாலே
கருதுமிருநிதியெனவேசுதிப்பர்தாமே.

அரிச்சந்திரவிலாசம்



